[Scudder, Henry Martyn

# THE BAZAAR BOOK,

OR

## Vernacular Preacher's Companion.

## கிரணமாலிகை.



பல புஷ்பங்களை ஒழுங்காகத் தொடுத்தது

பூமாலை என்னப்படுவது போல,

பல பிரிவுகளாகிய கிரணங்களை ஒழுங்குபடத் தொடுத்ததால்,

இந்த நூல்

கி ர ண மா லி கை

என்று

பேர் பெற்றது.

MADRAS:

PRINTED AT THE AMERICAN MISSION PRESS,

FOR THE AMERICAN ARCOT MISSION.

1865.

# அட்டவணை—CONTENTS.


| | | | | | |
|---|---|---|---|---|---|
| ௧. | குரு ........ | ௧— ௨௮ | 1. | Guru ............ | 1— 28 |
| ௨. | சாஸ்திரம் .... | ௨௯— ௬௬ | 2. | S'a'stra ........ | 29— 66 |
| ௩. | பாவம் ........ | ௬௭— ௯௰ | 3. | Sin ............ | 67— 90 |
| ௪. | மனுஷன் .... | ௯௧—௱௰௮ | 4. | Man ............ | 91—118 |
| ௫. | தெய்வம் .... | ௱௰௯—௱௫௨ | 5. | God ............ | 119—152 |
| ௬. | பாபநிவிர்த்தி .... | ௱௫௩—௱௭௯ | 6. | Expiation ........ | 153—179 |
| ௭. | மந்திரம் ........ | ௱௮௧—௨௱௮ | 7. | Mantras ........ | 181—208 |
| ௮. | ஜென்மம் .... | ௨௱௯—௨௩௬ | 8. | Transmigration...... | 209—236 |
| ௯. | விதி ............ | ௨௩௭—௨௬௩ | 9. | Fate ............ | 237—263 |
| ௰. | துர்ப்பூசை .... | ௨௬௫—௨௮௮ | 10. | Idolatry Sinful.... | 265—288 |
| ௰௧. | நாசபூசை .... | ௨௮௯—௩௱௩ | 11. | Idolatry Ruinous | 289—313 |
| ௰௨. | சாதி ............ | ௩௱௫—௩௪௭ | 12. | Caste ............ | 315—347 |
| ௰௩. | பிராமணன் .... | ௩௪௯—௩௭௫ | 13. | Braminism .... | 349—375 |
| ௰௪. | பலபொருள் மஞ்சரி ........ | ௩௭௭—௪௱௩ | 14. | Various Topics.... | 377—413 |

# PREFACE.

WHEN the Rev. H. M. SCUDDER, D. D. had completed four numbers of his Bazaar Book or Vernacular Preacher's Companion, he was prostrated by a severe illness and obliged to return to America. The remaining numbers, though written out, were left in an unfinished state. None of the explanations to the Tamil, Telugu and Sanscrit poetical quotations had been prepared. Dr. SCUDDER, on his departure, delivered over his manuscripts to the Publishing Committee of the American Arcot Mission who have bestowed much time and labor in supplying what was needed to complete the work. The design of this treatise will be best explained in the author's own words:

"It contains addresses to heathen audiences, on the following subjects;

I. THE GURU.
II. THE S'A'STRA.
III. SIN.
IV. MAN.
V. GOD.
VI. EXPIATION.
VII. MANTRAS.
VIII. TRANSMIGRATION.
IX. FATE.
X. IDOLATRY SINFUL.
XI. IDOLATRY RUINOUS.
XII. CASTE.
XIII. BRAMINISM.

"Each address is likewise intended to serve as a separate tract, complete in itself, and fit for independent distribution. Most of these addresses assume, as a starting point, some prominent falsity in Hinduism, which is exhibited and refuted as an introduction to the opposite truth; and such truth is, in each instance, displayed in connection with Him who said 'I am the way, the truth, and the life.' Each ad-

dress contains, woven into its texture, a few poetical quotations, selected with great care from Hindu works. These quotations are explained, word for word, in foot notes. Each address is also supplimented by an appendix, in which are gathered such materials as one would not wish to find omitted, though they could not be allowed in the body of the address, without marring its unity, or too greatly increasing its bulk. Into these appendices Telugu and Sanscrit, as well as Tamil citations are admitted. These too are analyzed and expounded, so that the reader shall have no need to apply to others for aid in their interpretation. While these addresses are constructed to stand as individual tracts, they constitute a series which, bound in a volume, shall furnish the Vernacular Preacher with many arguments and illustrations."

The author wishes it to be stated that in the numbers entitled CASTE and BRAMINISM there is large indebtedness to the little Sanscrit treatise called VAJRA SUCHI.

A supplementary Appendix, No XIV, has been added in which are gathered those poetical quotations which could not be elsewhere classified, but which will prove useful to the Vernacular Preacher.

VELLORE, *May*, 1865.



# குரு.



குரு வேண்டுமென்று யாவரும் சொல்லுகிறார்கள். அப்படிச் சொல்வது சரியென்று பல நியாயங்களினாலே நிச்சயிக்கலாம். சில எடுத்துக் காட்டுகிறோம்: கேளுங்கள்.

## க—வது. இங்கே நமக்கு நிலை இல்லை.

* நெருநலுளனொருவ னின்றில்லையென்னும்
பெருமையுடைத்திவ் வுலகு.

ஒருவன் நேற்றுப் பிறந்தான், இன்றைக்கு அவன் இறந்தானென்று சொல்லும்படியான பெருமையை உடையதாயிருக்கிறது இந்தப் பூலோகம்.

நம்முடைய சரீரம் செத்து நாசமாய்ப் போகும். அதற்குள்ளே வாசம்பண்ணுகிற ஆத்துமாவோ சரீரத்தோடே இறந்து நாசமாய்ப் போகாது. ஆத்துமாவுக்குச் சாகாப் பொருளென்று பேர். அது தன்னுடைய தேகத்தையும், இவ்வுலகத்தையும் விட்டுத் தாண்டி, அப்பாலே போகவேண்டும்.

---

குறள், நஉ. அதி: கூ.

* இ—ள். ஒருவன்—ஒருவன். நெருநல்—நேற்றைக்கு. உளன்—பிறந்தான். இன்று—(அவனே) இன்றைக்கு. இல்லை—இறந்தான். என்னும் பெருமை—என்று சொல்லத்தக்க பெருமையை. உடைத்து—உடையதாயிருக்கிறது. இவ்வுலகு—இந்த உலகமானது. எ—று.

சரீரத்தைக் குறித்துத் தாயுமானவர் சொன்னதைக் கேளுங்கள்.

*செங்கிருமியாதி செனித்தசென்மபூமி.

சரீரமானது பலவிதமான பூச்சிகளும் புழுக்களும் பிறக்கிற சென்ம பூமியாயிருக்கிறதென்றார். அது மெய்தான். அதிலிருந்து சீவன் புறப்பட்டமாத்திரத்திலே அந்தப் புழுக்கள் பெருகி, பலுகி, அந்தச் சரீரத்தின் உள்ளான அறைகள் தோறும் நிறைந்து, கொழுத்து, அந்தப் பிணத்தைத் தின்றுவிடுமல்லவா?

பூலோகத்திலே தங்கவேண்டுமென்று நாம் எவ்வளவு ஆசைப்பட்டாலும், அது நம்மாலே முடியாது.

†இருப்பதுபொய்போவதுமெய் யென்றெண்ணிநெஞ்சே
ஒருத்தருக்குந்தீங்கினைநீ யுன்னாதே—பருத்ததொந்தி
நம்மதென்றுநாமிருப்ப நாய்நரிகள்பேய்கழுகு
தம்மதென்றுதாமிருக்குந் தான்.

இதை எப்போது பட்சிக்கலாமென்று இந்தச் சரீரத்துக்குள்ளே புழுவும் பூச்சியும் காத்திருக்கிறதுபோல, இதற்

---

*இ—ள். செம்—சிவந்த. கிருமி—புழுக்கள். ஆதி—முதலானவைகள். செனித்த—பிறக்கிறதற்குக் காரணமான. சென்ம பூமி—இடமாயிருக்கிறது.

பட்டணத்துப் பிள்ளை.

†இ—ள். நாம்—நாம். பருத்த—பெருத்த. தொந்தி—வயிற்றை. நம்மதென்று—நம்முடையதென்று. இருப்ப—எண்ணிக்கொண்டிருக்கும்போது. நாய்—நாய்களும். நரிகள்—நரிகளும். பேய்—பேய்களும். கழுகு—கழுகுகளும் (ஆகிய இவைகள்). தம்மதென்று—தம்முடையதென்று. இருக்கும்—எண்ணிக்கொண்டிருக்கும் (ஆகையால்). நெஞ்சே—மனதே. இருப்பது—சாகாமலிருப்பது. பொய்—பொய்யென்றும். போவது—இறந்துபோவது. மெய்யென்று—மெய்யென்றும். நீ—நீ. எண்ணி—நினைத்து. ஒருத்தருக்கும்—யாதாமொருவருக்கும். தீங்கினை—தீமையை. உன்னாதே—நினைக்காதே. எ—று. (தாம், தான், அசைகள்.)

குப் புறத்திலே நாயும் நரியும் காக்கையும் கழுகும் காத்திருந்து, இவன் செத்துப்போகிற நாளே நமக்கு விருந்து நாள் ஆகுமென்று ஆவலோடே பார்த்துக்கொண்டிருக்கிறது.

பிரியமானவர்களே, நீர்மேல் குமிழிபோல் நிலையில்லாக் காயமென்கிற பழமொழியை நீங்களெல்லாரும் கேட்டிருப்பீர்கள்.

இங்கே நமக்கு நிலை இல்லையே:(க.) அங்கே நம்முடைய ஆத்துமாவுக்கு நல்ல நிலை கிடைக்கும்படி இப்போதே நாம் பரம குருவைத் தேடி அடையவேண்டும். மரணத்துக்குத் தப்ப வழியில்லை. கடக்கவேண்டிய ஒரு பெரிய ஆற்றங்கரையிலே துறை தெரியாமல் அஞ்சிநிற்கிற ஒருவனுக்கொப்பாயிருக்கிறோம். மரணமே அந்த ஆறு. என்ன செய்வோம்? நட்டாற்றிலே குதித்துவிட, பயமாயிருக்கிறதே. ஆனாலும், தாண்டத்தான் வேண்டும். துறைகாட்டி, கைலாகு கொடுத்து, கால் நிலைக்காத ஆழத்திலே நம்மைத் தாங்கி, கரை சேர்க்க, மெய்யான குரு வேண்டாமோ? அப்படிப்பட்டவரே நமக்கு வேண்டும்.

## உ—வது. நமக்கு ஞானம் இல்லை.

நம்முடைய ஆத்துமா இப்படிப்பட்டதென்றும், தேவன் இத்தன்மையானவரென்றும், மோட்சலோகம் இவ்விதமானதென்றும், நரகம் இவ்வகையானதென்றும், நாமே கண்டுணரும்படி நமக்குத் தெளிவான அறிவில்லை. யோசிக்க யோசிக்க, மனமயங்கி மருண்டு கலங்குகிறோம். நம்முடைய ஆத்துமாவானது விளக்கில்லாத வீட்டைப்போலே இருண்டிருக்கிறது. அப்படிப்பட்ட வீட்டிலே வவ்வால் திரளாகக் கூடி, எங்கும் பறந்து, எச்சமிட்டு, அழுக்குப்படுத்துவது

(க.) இதைக் குறித்துப் பின்னும் உ௩, உ௪-ம் பக்கங்களிலே காண்க.

போல, நம்முடைய ஆத்துமாவிலே பெரிய சந்தேகங்களும் கெட்ட நினைவுகளும் நெருங்கி நிறைந்து, நம்மை மயக்கி, அசுத்தப்படுத்துகின்றது. ஆத்துமாவென்னும் இருளான வீடு தனக்குத் தானே விளக்கேற்றிவைக்குமா? வெளியி லிருந்தல்லவா தீபம் கொண்டுவந்து வைக்கவேண்டியது? மெய்யான குருவே நம்முடைய நெஞ்சுக்குத் தீபம். அப் படிப்பட்டவர் நமக்குக் கிடைத்தால், நமக்கு வெளிச்சம் வீசுவார். சத்தியமான உபதேசஞ் செய்வார். சந்தேகங்க ளை அறுப்பார். தகாத எண்ணங்களை ஓட்டுவார். தெளிவு தருவார். அப்படிப்பட்ட குரு நமக்குப் பொன் மணி முத் துகளைப் பார்க்கிலும் அருமைப் பொருளாயிருப்பார் அல் லவா?

* பொய்மதங்கள்போதனைசெய் பொய்க்குருக்களைப்
புத்திசொல்லிநன்னெறியிற் போகவிடுக்கும்
மெய்ம்மதந்தானின்னதென்று மேவவிளம்பும்
மெய்க்குருவின்பதம்போற்றி யாடாய்பாம்பே.

கள்ள மார்க்கங்களைப் போதிக்கிற பொய்க் குருக்களுக் குப் புத்திசொல்லி, அவர்களை நல்ல வழியிலே சேர்க்கத் தக்க மெய்யான மதம் உண்டே; அந்தச் சத்திய மதம் இன் னதென்று உபதேசிக்கிற சற்குருவின் பாதத்தைத்தான் நீ சேரவேண்டியது, என் மனமாகிய பாம்பே.

---

பாம்பாட்டி சித்தர் பாடல்.

* இ—ள். பொய் மதங்கள்—அபத்தமான மதங்களை. போதனை செய் — போதிக்கிற. பொய்க்குருக்களை — பொய்யான குருக்க ளுக்கு. புத்திசொல்லி — புத்திசொல்லி. நன்னெறியில் —(அவர் களைச்) சன்மார்க்கத்திலே. போகவிடுக்கும் — போகப்பண்ணும். மெய்ம்மதம்—சத்தியமான மதம். இன்னதென்று—இப்படிப்பட்ட தென்று. மேவ — மனங்கொள்ள. விளம்பும் — உபதேசிக்கிற. மெய்க்குருவின்—மெய்யான குருவினுடைய. பதம்—திருவடியை. போற்றி—ஸ்துதித்து. பாம்பே—மனமாகிய பாம்பே. ஆடாய்— ஆடக்கடவாய். எ—று. (தான், அசை.)

## ௩—வது. நமக்குப் புண்ணியம் இல்லை.

ஆதியிலே தேவன் பூலோகத்தையும் அதிலுள்ளவர்களை யும் நன்றாகவே படைத்தார். பின்பு மனுஷர்கள் அவரு டைய கட்டளையைத் தள்ளி, பாவஞ் செய்து, தங்களையும் தாங்கள் இருக்கிற இந்தப் பூமியையும் கெடுத்தார்கள். உல கமெங்கும் பாவமே பரம்பியிருக்கிறது. கிரமமெல்லாம் அக்கிரமமாய் விட்டது. எவ்விடத்திலே பார்த்தாலும், சகல மும் ஒழுங்கில்லாமையாய், தாறுமாறாகக் கிடக்கிறது. இது வே பூபாரம். பாவமே நிலச்சுமை. சமஸ்த மனுஷர்களும் பாவிகளாயிருக்கிறார்கள். அவர்களுடைய நெஞ்சுக்கே அது திட்டமாய்த் தெரிந்திருக்கிறது. பாவிகளாயிருக்கிறோமென் கிற உணர்ச்சி அவர்களுக்குள்ளே இருக்கிறதென்று அவர் களே காண்பிக்கிறார்கள். நம்முடைய மனசிலே இருக்கிற எண்ணத்தை நாம் ஒரு கடுதாசியிலே எழுத்தினாலே எழுதி வைத்தால், எல்லாரும் அதைப் படித்து நம்முடைய நினைப்பு இன்னதென்று அறியும்படி, அதைக் காண்பிக்கிறோமல்லவா? அப்படியே உலகத்து மனுஷர் யாவரும் தாங்கள் பாவிகளா யிருக்கிறோமென்கிற தங்கள் நினைப்பை எழுத்துரூபமாக வெளிப்படுத்தியிருக்கிறார்கள். அது எப்படியென்று விசா ரிக்கிறீர்களா? மனுஷர்கள் கோவிலையும், குளத்தையும், ஸ்த லத்தையும், தீர்த்தத்தையும், ஏன் ஏற்படுத்தினார்கள்? பாவத் தைத் தொலைக்கவேண்டுமென்கிற ஆசையினாலேயல்லவா? பாவம் அவைகளினாலே போகமாட்டாது. ஆனாலும் மனு ஷர்கள் அந்தக் குளம் ஸ்தலம் முதலானவைகளைப் பெரிய எழுத்தாக எடுத்து, பூமியைக் கடுதாசியாக வைத்து, பாவிக ளாயிருக்கிறோமென்கிற கருத்தை ஒரு வாக்கியமாக எழுதி யிருக்கிறார்கள். எங்கே போனாலும், நம்முடைய கண் ணுக்கு அது தோன்றுகிறது. இப்படியிருக்க, பாவம் இல் லையென்று பைத்தியக்காரனேயல்லாமல், வேறே யார் மறுத் துச் சொல்லுவான்?

சகோதரரே, பாவிகளாயிருக்கிற நமக்கு நம்முடைய பாவத்தை நீக்கத் திராணியில்லை. பாவம் நீங்காமலிருந்தால், நரகமே நமக்கு நித்திய கதி ஆகும். யாரிடத்திலே அடைக்கலம் புகுவோம்? மெய்யான தேவகுரு நமக்குத் தஞ்சமானால், அவருடைய புண்ணியத்தினாலே நம்முடைய பாவம் தொலையுமே. நம்முடைய பாவச் சுமையை இறக்கவும், அசுசிப்பட்ட நம்முடைய ஆத்துமாவைப் பரிசுத்தமாக்கவும், அப்படிப்பட்ட குருவே நமக்கு வேண்டும்.

## ச–வது. நமக்கு மனமகிழ்ச்சி இல்லை.

மகிழ்ச்சி இல்லாத மனம், ஏரி இல்லாத கழனியும் கிணறில்லாத தோட்டமும் போலே இருக்கிறது. அப்படியே நாம் இருக்கிறோம். பூலோகத்தில் நமக்குக் கவலைகள் அனேகம்: விசாரங்களும் விசனங்களும் விஸ்தாரம்: துயரங்களும் துக்கங்களும் மிகுதி. இவ்வுலகத்துப் பொருள்களை எவ்வளவு சம்பாதித்தாலும், அதினாலே நெஞ்சானது திருப்திபடவில்லை. நிலையான சந்தோஷமும் பிறக்கவில்லை. மனமுடைந்து, கலங்கி, ஏங்கி, தவித்து, நடக்கிறோம். இனிமேல் வரப்போகிறதையும் நினைத்துப் பயப்படுகிறோம். நம்முடைய துக்கத்தை மாற்றி, ஆத்தும சுகத்தைத் தரும்படிக்கு நேசமுள்ள திவ்விய குரு நமக்கு வேண்டுமே. நம்முடைய நெஞ்சைத் தேற்றி, நமக்கு மனசவுக்கியத்தை அருளி, நாம் முழுகியிருக்கிற துன்பக் கடலிலிருந்து நம்மைத் தூக்கி, இன்பக் கரையின்மேல் நம்முடைய பாதங்களை நிறுத்தி, நம்மைக் காக்கத் தக்க குருவானவரே நமக்கு வேண்டியது. அப்படிப்பட்டவரை நாம் சேர்ந்தால், மேகத்தைக் கண்ட மயிலைப்போல மகிழுவோம் அல்லவா? வறண்ட நிலத்துக்குப் பனியும் மழையும் எப்படியோ, அப்படியே அவருடைய கிருபை நமக்கு இருக்கும்.

இத்தனை குறைவு நமக்கு இருக்கிறதினாலேயும்; இந்தக் குறை தீர்க்க, பரம குரு ஒருவரே வல்லவராயிருக்கிறதினா

லேயும்; சகல தேசங்களிலும் சமஸ்த சனங்களுக்குள்ளும் குரு வேண்டுமென்கிறார்கள். இதுவே பூமியிலுள்ளோர் புலம்புகிற புலம்பல்.

நம்முடைய ஆபத்துக்கு உதவும்படியான குரு எப்படிப் பட்டவராயிருக்க வேண்டுமென்று ஆலோசித்துப் பாருங் கள். நம்மைத் தாங்கி, தெளிவித்து, பாவத்துக்குத் தப்பு வித்து, சந்தோஷப்படுத்துவது தேவனுடைய செய்கை அல் லவா? தேவனல்லவா பரம குருவாய் வரவேண்டியது?

இந்த உண்மை தெரியாமல், அனேகர் பொய்யான குருக் களை அனுசரிக்கிறார்கள். அது பலத்த மோசம். நம்மைப் போல மனுஷனாகமாத்திரம் இருக்கிற எவனையும் பரம குரு வென்று நம்பவேண்டாம். சனங்களை வஞ்சிக்கும்படி, தங் களைக் குருக்களென்று சொல்லுகிறவர்கள் பூமியில் அனேகர் உண்டு. அவர்கள் பொய்யான போதனைகளைப் போதிக்கி றார்கள். தகாத மார்க்கத்தைக் காட்டுகிறார்கள். வெகு சனங்களை ஏய்க்கிறார்கள். வெகு பணங்களையும் பறிக்கிறார் கள்.(உ.) அப்படிப்பட்டவர்களை நீங்கள் நம்பி, பற்றிக்கொ ண்டால், நீங்களும் அவர்களும் கூடவே கெட்டுப்போவது நிச்சயமான காரியம்.

கரடியும் இடையனும் கட்டிக்கொண்டு செத்ததை நீங்கள் கேள்விப்படவில்லையா?

* குட்டித்திரட்கரடி யாறொழுகக்கோன்குதித்துக்
கட்டிப்புதைந்த கதையாகுந்—துட்டமலப்
பித்திலேமூத்தவர்கள் பேய்பிதற்றும்பேதையர்க்குப்
புத்திபோற்காட்டும் பொருள். (௪.)

ஒழிவிலோடுக்கம்: பொதுவிலுபதேசம்.

*இ-ள். துட்ட—கெட்ட. மலப்பித்திலே—மலமாகிய பைத் தியத்திலே. மூத்தவர்கள் — முதிர்ந்தவர்களாகிய கள்ளக்குருக்கள். பேய்—பேயைப்போல. பிதற்றும்—பிதற்றுகிற. பேதையர்க்கு—

(உ.) இதைக் குறித்து உ௫-ம் பக்கத்திலே காண்க.

வெள்ளத்திலே ஒரு கரடியானது தன் குட்டிகளோடே விழுந்து, அடிபட்டு, ஆற்றோடே போகும்போது, இடையன் ஒருவன் அந்தக் கரடியைக் கண்டு, ஆடென்று நினைத்து, லாபமாக அதை எடுத்துக்கொள்ளலாமென்று யோசித்து, பிரவாகத்திலே குதித்தான். கரடியும் இடையனைக் கண்டு, தெப்பமென்று நினைத்து, கரையேறலாமென்று யோசித்து, அவனைச் சேர்ந்தது. இடையன் கரடியைப் பிடிக்கவும், கரடி இடையனைப் பிடிக்கவும், அவனும் அதுவும் ஒன்றாக வே ஆழத்தில் முழுகிப் புதைந்து செத்தார்கள்.

அந்த இடையனைப்போல, கள்ளக் குருக்கள் தங்கள் லாபத்தைத் தேடுகிறார்கள். அந்தக் கரடியைப்போல, அநேகர் பொய்க்குருக்களைத் தெப்பமாக எண்ணுகிறார்கள். அந்த பொய்யான குருக்களும், அவர்களை நம்பிப் பற்றிக்கொள்ளுகிற அஞ்ஞானிகளும் ஏகமாய்க் கெட்டு, நரகத்திலே அமிழ்ந்திப்போவார்கள். ஆகையினாலே, கள்ளக் குருக்களைச் சேராமல், தூர விலகுங்கள். தேவனே நமக்காக, பூமியில் இறங்கிவந்து, சத்திய குருவாய், திரு அவதாரஞ் செய்யவேண்டியது. இல்லாவிட்டால், நம்முடைய பாவம் தொலையவே மாட்டாது.

விஷ்ணுவானவன் குருமூர்த்தியாக மாட்டானோ என்று சொல்லுவீர்களேயானால், அந்த விஷ்ணுவைக் குறித்து உங்கள் சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிற சில சங்கதிகளைச் சிந்தித்துப் பாருங்கள். அந்த விஷ்ணு பத்தவதாரம் செய்ததாக உங்கள் சாஸ்திரம் சொல்லுகின்றது. மீனாய்ப் பிறந்

---

மூடர்களுக்கு. புத்திபோல — உபதேசத்தைப்போல. காட்டும் பொருள்—சொல்லுகிற பொருளானது (எதையொக்குமென்றால்). திரள்—கூட்டமான. குட்டி—குட்டிகளையுடைய. கரடி—கரடியானது. ஆறு—ஆற்றிலே. ஒழுக—போக. கோன்—இடையன். குதித்து—அந்த ஆற்றிலே குதித்து. கட்டி—அந்தக் கரடியைக் கட்டிக்கொண்டு. புதைந்த—முழுகிப்போன. கதை—கதையை. ஆகும்—ஒக்கும். ஏ—று.

தான். ஆமையாய்ப் பிறந்தான். பன்றியாய்ப் பிறந்தான். பாதி மனுஷனும் பாதி சிங்கமுமாய்ப் பிறந்தான். வாமனன் என்கிற குள்ளப் பாப்பானாய்ப் பிறந்து, மாவலியை மோச சம்பண்ணினான். பரசுராமனாய்ப் பிறந்து, அனேக இராசாக்களைத் தலையறுத்தான். இராமனாய்ப் பிறந்து, சீதையைப் பறிகொடுத்து, குரங்கு சேனைகளைச் சேர்த்து, இராவணனைக் கொன்றான். கிருஷ்ணனாய்ப் பிறந்து, திருடனென்று பேரெடுத்தான். புத்தனாய்ப் பிறந்து, கடவுளும் இல்லை ஆத்துமாவும் இல்லை என்று துர்ப்போதனை போதித்தான். இனிமேல் கற்கியாய்ப் பிறப்பானாம். அவதார புருஷனாய் வந்தபோது இத்தன்மையான துஷ்டத்தனங்களைச் செய்தவன் குருமூர்த்தியாய் வந்தால், அவனை நம்பலாமா? மீனும் பன்றியுமாய்ப் பிறந்தானென்றும், கள்ளனும் தூர்த்தனுமாய்த் திரிந்தானென்றும், உங்கள் சாஸ்திரம் சொல்லுகிற அந்த விஷ்ணுவைத் தேவனென்றும் குருவென்றும் ஒப்புக்கொண்டால், அதுவே ஒரு பெரிய துன்மார்க்கமாயிருக்கும். இப்படியிருக்க, விஷ்ணுவானவன் எக்காலத்திலும் குருமூர்த்தியாக மாட்டான்.

சிவனானவன் கல்லால விருட்சத்தின் கீழே உளுக்கார்ந்து குருவுபதேசம் பண்ணவில்லையோ, அந்தச் சிவனைக் குருமூர்த்தியென்று ஒப்புக்கொள்ளக் கூடாதோ என்று கேட்பீர்களேயானால், அந்தச் சிவனைக் குறித்து, சிவபுராணமாகிய கந்தப்புராணத்தில் சொல்லியிருக்கிறதைக் கேளுங்கள்.

* நராரியினுருவைநீத்து நக்கனேயாகிமுக்கட்
பராபரன்சூலத்தோடு பலிக்கலனங்கைகொண்டு
முராரிதன்பாங்கர்செல்ல முனிவருக்கிருக்கையாகித்
தராதலமதிக்கநின்ற தாருகாவனத்திற்புக்கான்.

---

**கந்தப்புராணம்: தட்சகாண்டம்: உத்தரபடலம்: (௩௭, ௩௮.)**

*இ—ள். முக்கண்—மூன்று கண்களையுடைய. பராபரன்—சிவனானவன் (விஷ்ணு பெண்ரூபம் எடுக்கும்படி). நராரியின்—அந்த விஷ்ணுவினுடைய. உருவை—யதாரூபத்தை. நீத்து—

புக்கனன்மாலேநோக்கிப் போந்துநீநமையெண்ணுது
தொக்குறுமுனிவர்வைகுஞ் சூழல்கடோறும்நண்ணி
மிக்கமால்பூட்டியன்னோர் விரதங்கண்மாற்றிநந்தம்
பக்கனீவருதியென்னுப் பகர்ந்தனன்விடுத்துச்சென்ருன்.

விஷ்ணு பெண்ரூபம் எடுக்க வேண்டுமென்று சிவன் அவனுக்குக் கட்டளையிட்டு, தாருகாவனத்திலுள்ள இருஷிகளை மயக்கிக் கெடுக்கும்படி அந்த விஷ்ணுவை அனுப்பினுன். அதுவுமல்லாமல், சிவன் தானும் நிருவாணியாகி, கையிலே பிச்சைப் பாத்திரத்தை ஏந்தி, அந்தத் தாருகாவனத்திலே புகுந்தானென்று இதிலே சொல்லப்பட்டது. பின்வரும் பாடல்களிலே, சிவன் அந்த இருஷிகளுடைய பெண்சாதிகளைக் கெடுத்த விவரம் சொல்லியிருக்கிறது. அது மெத்தவும் வம்பும் தும்புமான கதையானதினுலே, அதை அதிகமாய் எடுத்துக் காட்ட மனமில்லை.

வஸ்திரம் களைந்து, வெட்கம் இழந்து, நிருவாணியாய்ப் போய், மோகப் பாடல்களைப் பாடி, ஸ்திரீகளைக் கெடுக்கிறவனும், மற்றொருவன் அப்படிப்பட்ட குற்றங்களைச் செய்யும்

---

நீக்கி. நக்கனேயாகி—தானும் நிருவாணியாகி. சூலத்தோடு—சூலாயுதத்தோடே. பலிக்கலன்—பிச்சை வாங்குகிற பாத்திரத்தை. அங்கை—உள்ளங்கையினுலே. கொண்டு—தாங்கி. முராரி—விஷ்ணு. தன்பாங்கர்—தன்னுடைய பக்கத்தில். செல்ல—வர. முனிவருக்கு—இருஷிகளுக்கு. இருக்கையாகி—இடமாக. தராதலம் மதிக்க—உலகத்தார் மதிக்கும்படியாய். நின்ற—இருக்கிற. தாருகாவனத்தில்—தாருகாவனத்துக்குள்ளே. புக்கான்—போனுன்.

புக்கனன்—(அப்படித் தாருகாவனத்திலே) போன அந்தச் சிவனவன். மாலை—விஷ்ணுவை. நோக்கி—பார்த்து. நீ போந்து—நீ போய். நமையெண்ணுது—நம்மை நினைக்காமல். தொக்குறு—கூடியிருக்கிற. முனிவர்—இருஷிகள். வைகும்—தங்குகிற. சூழல்கடோறும்—இடங்களிலெல்லாம். நண்ணி—சேர்ந்து. மிக்க—மிகுந்த. மால்—மோகத்தை. பூட்டி—அவர்களுக்கு உண்டாக்கி. அன்னோர்—அவர்களுடைய. விரதங்கள்—தவங்களை. மாற்றி—கெடுத்து. நந்தம்—நம்முடைய. பக்கல்—பக்கத்திலே. நீ வருதி—நீ திரும்பிவா. என்னு—என்று. பகர்ந்தனன்—சொல்லி. விடுத்துச் சென்ருன்—அவ்விடத்தில் விட்டுப்போனுன். எ-று.

படி தூண்டி எழுப்பிவிடுகிறவனுமாகிய இந்தச் சிவஞான வன் கல்லால விருட்சத்தின் கீழே உளுக்கார்ந்து போதித் தால் என்ன? வேறே எந்த மரத்தின் கீழே குந்திப் போ தித்தாலும் என்ன? அவனைக் குருவென்று ஒப்புக்கொள்வ தெப்படி? வம்பான பாட்டுகள் புறப்பட்ட அவனுடைய வாயிலேயிருந்து வருகிற உபதேசத்தையும் குருவுபதேச மென்று ஏற்றுக்கொள்வதெப்படி? ஒருபோதும் கூடாது. ஆகையினாலே, சிவஞானவன் எக்காலத்திலும் குருமூர்த்தி யாக மாட்டான்.

அப்படியிருக்க, நம்பத்தக்க ஒரு குருமூர்த்தமும் இல் லையோ என்று விசாரித்தால், மெய்யானதொன்று இருக்கி றது. சகத்துக்கெல்லாம் பொதுவான சத்திய சற்குருவா னவர் ஒருவரே இருக்கிறார். நமது குறைவுக்கெல்லாம் அவரே நிறைவு. இயேசுக்கிறிஸ்துவென்பது அவருடைய நாமதேயம். நமது நிலையாமைக்கு அவரே நிலை. நம்மு டைய அறிவீனத்துக்கு அவரே ஞானம். நம்முடைய பாவத்துக்கு அவருடைய திருச்செய்கையே புண்ணியம். நம்முடைய துக்கத்துக்கு அவரே மகிழ்ச்சி. இந்த விசே ஷங்களை விவரித்துச் சொல்லுவோம்.

## க-வது. அவர் நித்திய தேவகுருவாயிருக்கிறார்.

அவர் வானத்தையும் பூமியையும் படைத்து, சமஸ்த லோகங்களையும் ஆளுகிறவர். அவர் அனாதியும் ஆதியுமா னவர். அவர், தமக்கு ஆதியில்லாமல், தாமே எந்தப் பொ ருளுக்கும் முன் இருக்கிறவர்: ஆகையினாலே, அவர் அனா தியானவர். அவர் சகல பொருள்களையும் சிருஷ்டித்தவர்: ஆகையினாலே, அவர் எல்லா வஸ்துக்களுக்கும் ஆதியான வர். அத்தன்மையுள்ளவராகிய அவர் பரலோகத்தை விட்டு, இந்தப் பூலோகத்தில் இறங்கி, மனுஷனாய்ச் ஜென்மித்து, இவ்வுலகத்தில் தேவ குருவாக அவதரித்தார். நித்திய கட வுளும் நல்ல குருவுமாயிருக்கிற இந்த இயேசுக்கிறிஸ்துவே

நிலையில்லாத நமக்கு நிலையாயிருக்கிறார். அவரை விசுவாசிக்கிறவன் செத்தாலும், அவருடைய கிருபையினாலே முத்தியுலகத்திலே சேர்ந்து, பிழைப்பான். மரமானது தன்னைச் சுற்றிச் சுற்றிப் பிடித்தேறுகிற கொடியைத் தாங்குவது எப்படியோ, அப்படியே கிறிஸ்துநாதர் தம்மை நம்பிக்கையோடே பிடித்துக்கொள்ளுகிறவர்களைத் தாங்கி, காப்பாற்றி, இரட்சிப்பார். நிலையற்ற நமக்கு நிலையுள்ள இப்படிப்பட்ட குரு கிடைப்பது பரம பாக்கியம் அல்லவா?

* வணங்குவாய்சகசோதியொருவனாகி
  மாநிலத்தையொருநொடியில்வகுத்தேமண்ணில்
குணமானமனிதரையும்படைத்தபின்பு
  குவலயத்திற்றானுதித்துக்குருவாய்வந்து
சனமானசமுசாரமொன்றில்லாமல்
  சந்நாசிபோலிருந்துதவத்தைக்காட்டி
அன்பானசித்தர்களையிருத்திப்பின்பு
  அகண்டதலஞ்சென்றவரையண்டுவாயே.

என்று அகஸ்தியர் பாடினதாகச் சொல்லுகிறீர்கள். அவர் பாடின அப்படிப்பட்ட குருவானவர் யார் இருக்கிறார்? இயேசுக்கிறிஸ்து ஒருவரே, அவர். அப்படிப்பட்டவர் வேறே எவரும் இல்லை. ஓ பாபாத்துமாவே, அவரை நினை.

* இ-ள். சகசோதி—மிகுந்த ஞானப்பிரகாசமாகிய கடவுள். ஒருவனாகி—ஆதிகாலத்திலே தான் ஒருவனாயிருந்து. ஒரு நொடியில்—ஒரு க்ஷணநேரத்தில். மா—பெருமை பொருந்திய. நிலத்தை—பூமியை. வகுத்து—சிருஷ்டித்து. மண்ணில்—அந்தப் பூமியில். குணமான—நல்லகுணமுள்ள. மனிதரையும்—மனுஷர்களையும். படைத்தபின்பு—உண்டாக்கின பின்பு. தான்—தானே. குவலயத்தில்—பூமியில். குருவாய்—குருவாக. வந்து உதித்து—அவதரித்து. சனம்—சனமும். மானம்—பெருமையும். சமுசாரம்—குடும்பமுமாகிய இவைகளிலே. ஒன்றில்லாமல்—யாதொன்றுமில்லாமல். சந்நாசிபோலிருந்து—தவசியைப்போலிருந்து. தவத்தைக் காட்டி—தவத்தைக் காண்பித்து. அன்பான—அன்புள்ள. சித்தர்களை—ஞானவான்களை. இருத்தி—இருக்கச்செய்து. பின்பு—பின்பு. அகண்ட—அழியாத. தலம்—மோட்சஸ்தலத்துக்கு. சென்றவரை—திரும்பிப்போனவரை. வணங்குவாய்—வணங்கி. அண்டுவாய்—சேருவாயாக. எ-று.

நித்திய குருவே, எனதுயிரும் உடலும் எனக்குள்ள எது வும் உமதாகவே என்னை வசப்படுத்துமென்று வேண்டிக் கொள்.

## ௨-வது. அவர் ஞான சற்குருவாயிருக்கிறார்.

சத்திய சாஸ்திரமாகிய கிறிஸ்து வேதமே அவருடைய திவ்விய வசனம். நமக்குத் தெரியவேண்டியதெல்லாம் அதின் வழியாய்த் தெரிவித்திருக்கிறார். நம்முடைய ஆத்துமாவைக் குறித்தும், தேவனைக் குறித்தும், மோட்சமும் நரகமுமாகிய லோகங்களைக் குறித்தும், நமக்கு அறிவைத் தந்திருக்கிறார். கிறிஸ்துவின் பரிசுத்த வார்த்தையே மெய்யான குருவுபதேசம்.

* குருமொழியேமலையிலக்கு மற்றைமொழியெல்லாம்
கோடின்றிவட்டாடல் கொள்வதொக்குங்கண்டாய்.

ஒரு ஊர் கண்ணுக்குத் தெரியாத தூரத்தில் இருந்தாலும், அந்த ஊரண்டை இருக்கிற பெரிய மலையானது அந்த ஊரை நோக்கி நடக்கிறவனுக்கு எப்படி அசையாத அடையாளமாய் நின்று அவனை வழி நடத்துமோ, அப்படியே சத்தியகுருவின் வார்த்தையானது கண்ணுக்குத் தென்படாத மோட்சலோகத்துக்கு நம்மை நடத்திக்கொண்டு போய்ச் சேர்க்கும். மற்றுமுள்ள வார்த்தைகளெல்லாம் எப்படி இருக்கிறதென்றால்: சொக்கட்டான் ஆடப்போய், அறைகளை வகுக்காமல், காய்களைச் சும்மா உருட்டுகிற வீண்வேலையைப்போல் பலனில்லாத வார்த்தைகளாம். இயேசுக்கிறிஸ்துவின் வார்த்தையே மலையைப்போல ஸ்திரமாயும் வழி

---

தாயுமானவர் பாடல்.

* இ-ள். குரு—குருவினுடைய. மொழியே—உபதேசவார்த்தையே. மலையிலக்கு—மலையைப்போலிருக்கிற அடையாளமாம். மற்றை மொழியெல்லாம்—இதர வார்த்தைகளெல்லாம். கோடின்றி—வீடில்லாமல். வட்டாடல்—சொக்கட்டானாட்டத்தை. கொள்வது—கொள்வதற்கு. ஒக்கும்—ஒப்பாயிருக்கும். எ-று. (கண்டாய், அசை).

காட்டியாயும் இருக்கிறது. ஞானமில்லாத நமக்கு ஞானமுள்ள இப்படிப்பட்ட குரு சொந்தப் பொருளாவது மேலான சிலாக்கியமல்லவா? ஓ பாபாத்துமாவே, அவரை நோக்கு. ஞானநாயகனே, என் நெஞ்சமானது உமக்குத் திருக்கோவிலாகும்படி, என்னில் குடியிருந்து வாழுமென்று பிரார்த்தித்துக்கொள்.

## ௩-வது. அவர் புண்ணிய சொரூபியான குருவாயிருக்கிறார்.

பூமியிலே வந்து பிறந்த அவர் முப்பத்துமூன்று வருஷம் பூமியிலே இருந்தார். அவர் மனுஷர்கள் நடுவே வாசம்பண்ணினார். ஆனாலும், பாவிகளுடைய கெட்ட பழக்கங்கள் அவருக்கு ஏறவில்லை. அவர் மாசும் களங்கமும் குற்றமுமில்லாதவர். அவர் பரிசுத்தராய் நடந்து, தேவபக்தி இன்னதென்றும், சன்மார்க்கம் இப்படிப்பட்டதென்றும், வெளிப்படுத்தினார். மனுஷர்கள்மேல் மனமிரங்கி, அவர்களுடைய பாவங்களைத் தீர்க்கும்படி அவர் ஏற்பட்டார். மனுஷர் மீறின தேவகட்டளைகளை அவர் மனுஷர்களுக்காகக் கைக்கொண்டு நிறைவேற்றினார். அந்தத் தேவ கட்டளைகளை மீறினதினாலே மனுஷர்களுக்கு வரவேண்டிய தண்டனையை நீக்கும்படி அவர்தாமே மனுஷர்களுக்காகத் தண்டனைப்பட்டார். இதற்காகவே அவர் சிலுவை மரத்தில் அறையப்பட்டு, மிகுந்த வேதனை அனுபவித்து, தம்முடைய சீவனைப் பலியாக ஒப்புவித்து, மரித்து, மூன்றாம் நாளிலே திரும்பவும் உயிர்த்து எழுந்து வந்தார். அவர் செய்த அந்தச் செய்கைதான் பாவிகளை இரட்சிக்கிற புண்ணியம்.(க.) அவரை நாம் விசுவாசித்துக்கொண்டால், அவர் நம்முடைய பாவத்தைத் தீர்ப்பார். தம்முடைய புண்ணியத்தை நமக்குக் கொடுப்பார். நம்முடைய ஆத்துமாவைச்

(க.) உ௬-ம் பக்கத்திலே காண்க.

சுத்தமாக்கும்படி தம்முடைய பரிசுத்த ஆவியையும் தரு வார்.

அவர் இப்படிப்பட்ட வேதனைகளை ஏன் அனுபவித்தார்? தம்மைச் சிலுவையிலே அறைந்து கொல்லும்படி துணிந்த துஷ்டர்களை அழிக்க அவரிடத்திலே வல்லமை இல்லையோ என்று கேட்பீர்களேயானால், அவரிடத்தில் வல்லமை உண் டென்று அறியுங்கள். அவர் சர்வசக்தியுள்ள கர்த்தர். ஒரு வார்த்தை சொன்னாரேயானால், அது பனையின்மேல் விழுந்த இடிபோலே ஒரு நொடியிலே அவர்களை நாசப்படுத்திப் போடும். பின்னை அப்படிப்பட்ட பாடுகளைப் படும்படி ஏன் தம்மை ஒப்புக்கொடுத்தார்? ஓ சனங்களே, அவர் அப்படிச் செய்யாவிட்டால், நம்முடைய பாவம் நிவிர்த்தி யாகமாட்டாது. நம்முடைய பாவத்தை நிவிர்த்திசெய்ய வேண்டுமென்று அவர் விரும்பி, நமதுமேல் வைத்த அன்பி னாலே நமக்காகப் பிராணதானஞ் செய்தார்.

* அன்பிலாரெல்லாந் தமக்குரியரன்புடையா
ரென்புமுரியர் பிறர்க்கு.

அன்பில்லாதவர்கள் எல்லாவிதத்திலும் தங்களுடைய சொந்த காரியத்தைப் பார்த்துக்கொண்டு போகிறார்கள். அன்புள்ளவர்களோ, மற்றவர்களுக்காகத் தங்கள் பொருளை யல்லாமல், தங்களுடைய சரீரத்தையும் கொடுப்பார்கள்.

பிரியமானவர்களே, இந்த அன்பின் அதிசயத்தை நன் றாய் நோக்குங்கள். கோதானம், பூதானம், வஸ்திரதானம்,

---

**குறள், அ-ம் அதி: உ.**

*இ-ள். அன்பிலார்—அன்பில்லாதவர்கள் (மற்றவர்களுக்கு உத வாமல்). எல்லாம்—எல்லாப் பொருள்களினாலும். தமக்கு—தங்க ளுக்கே. உரியர்—உரியவர்களாயிருப்பார்கள். அன்புடையார்— அன்புள்ளவர்கள். (தங்களுடைய பொருள்களினாலேமாத்திரமல் லாமல், தங்கள்) என்பும்—உடம்பினாலேயும். பிறர்க்கு—மற்றவர் களுக்கு. உரியர்—உரியவர்களாயிருப்பார்கள். எ—று.

அன்னதானம், கிரகதானம், சுவர்ணதானம் முதலாகிய பல விதமான தானங்களை மனுஷர் செய்வார்கள். அவையெல்லாம் சொற்பமான தானங்கள். பசுவையும், நிலத்தையும், துணியையும், சாதத்தையும், வீட்டையும், பொன்னையும் கொடுக்கிறது பெரிய காரியமல்ல. பிராணதானமோ முக்கியமாயிருக்கிறது. அதை யார் செய்வான்? ஒருவன் தன் சிநேகிதனுக்காகவும் தன் பிராணனைக் கொடுப்பது மிகவும் அரிதல்லவா? ஆனாலும், ஒருவன் தனக்குத் துரோகியாயிருக்கிற வேறொருவனை இரட்சிக்கும்படி தன் பிராணனைக் கொடுப்பானா? அப்படிப்பட்ட அன்பு பூலோகத்திலே உண்டா? இல்லையே. பரம குருவாகிய இயேசுக்கிறிஸ்துவென்னும் ஒருவரிடத்திலேமாத்திரம் உண்டு. மனுஷர்கள் யாவரும் பாவிகளும் தேவ துரோகிகளுமாயிருக்கிறார்கள். இப்படித் துரோகிகளாயிருக்கிற மனுஷர்களுக்காக இயேசுக்கிறிஸ்து தம்முடைய உயிரைத் தந்த அன்பின் அதிசயத்தை யார்தான் சொல்லக்கூடும்? அந்த அன்புக்கு உயர்வுமில்லை, அதற்கு உவமையுமில்லை.(௪.)

* அன்பைப்பெருக்கியென தாருயிரைக்காக்கவந்த
இன்பப்பெருக்கே யிறையேபராபரமே.

என்று அவரொருவரைக் குறித்தே சொல்லலாம். நம்மை இரட்சிக்கவும், நமக்குள்ளே அன்பை உண்டாக்கவும், வந்த ஆனந்த வெள்ளமாயிருக்கிற குருவும் நாதனும் தேவனுமானவர் இயேசுக்கிறிஸ்துவேயன்றி, அந்தத் தன்மையை உடையவர் வேறொருவரும் இல்லை.

---

தாயுமானவர் பாடல்.

* இ-ள். அன்பை—(எனக்குள்ளே) அன்பை. பெருக்கி—பெருகச்செய்து. எனது—என்னுடைய. ஆர்—அருமையான. உயிரை—ஆத்துமாவை. காக்க — இரட்சிக்கும்பொருட்டு. வந்த—(குருமூர்த்தமாய்) எழுந்தருளின. இன்பப்பெருக்கே — ஆனந்த வெள்ளமே. இறையே—கர்த்தாவே. பராபரமே—பராபரமே. எ-று.

(௪.) உரு-ம் பக்கத்திலே காண்க.

ஓ சனங்களே, நம்முடைய பாவங்களைப் போக்கடிக்கத் தக்க புண்ணியம் அவருக்குள்ளே இருக்கின்றது. நமது ஆத்துமாவென்கிற பூமியை நனைத்துச் செழிப்பாக்குகிற புண்ணிய மேகம் அவரே. அவருடைய தயவை நினைத்து மனம் கரையாமலிருக்கலாமா? அவருடைய மட்டில்லாத கிருபையை எண்ணும்போது நெருப்பைக் கண்ட மெழுகைப்போல நம்முடைய கல்நெஞ்சு உருகவேண்டியதல்லவா?

* சிந்தைகுழைந்துசுகஞ் சேரக்குருவருளால்
வந்தவழி நல்லவழி.

நம்முடைய இருதயம் இளகி இரங்கவும், நாம் மோட்ச சுகத்தை அடையவும் தக்கதாக, பரம குருவினாலே உண்டான வழியே நல்லவழி.

சகோதரரே, புண்ணியமில்லாத நமக்குப் புண்ணிய மூர்த்தியான இப்படிப்பட்ட குரு சகாயமாவது அளவில்லாத நன்மையல்லவா? பழம் நழுவிப் பாலில் விழுந்ததுபோலிருக்குமல்லவா? ஓ பாபாத்துமாவே, அவரைப் பார். நிர்மலனான குருவே, என்னைப்போல் உருவமெடுத்து வந்து என்னைத் தேடி என்னிமித்தம் உயிர் தந்தருளிய நாதனே, என்னை மீட்டிரட்சியுமென்று மன்றாடிக்கொள்.

## ௪—வது. அவர் இன்பவடிவமான குருவாயிருக்கிறார்.

தம்மைப் பற்றிக்கொள்ளுகிறவர்களுக்கு அவர் பாவமன்னிப்பை அருளுகிறார். தம்முடைய ஆவியினாலே அவர்களை

---

தாயுமானவர் பாடல்.

* இ—ள். சிந்தை—(நம்முடைய) மனமானது. குழைந்து—இளகி. சுகம்—மோட்ச சுகத்தை. சேர—சேரும்படியாக. குரு—குருவினுடைய. அருளால்—அருளினாலே. வந்த—கிடைத்த. வழி—வழியே. நல்லவழி—நல்ல வழியாயிருக்கிறது. எ-று.

ஆற்றி, தேற்றி, நடத்துகிறார். தம்முடைய அருளை அவர்களுடைய நெஞ்சிலே விளங்கச் செய்கிறார். மோட்சம் கிடைக்குமென்கிற நிச்சயத்தையும் அவர்களுடைய இருதயத்திலே உண்டாக்குகிறார். இதினாலே அவர்களுடைய மனக்கவலை தீருகின்றது.

அவர்களுக்கு ஸ்திரமான சந்தோஷம் உண்டாகின்றது. இந்தப் பொல்லாத உலகத்திலே அவர்களுக்கு அனேக துன்பங்கள் நேரிட்டாலும், தங்களுக்கு இன்பம் தருகிற இயேசுக்கிறிஸ்துவை நினைத்துக்கொண்டு, அவர் தரப்போகிற வீடாகிய மோட்சலோகத்தையும் நோக்கிக்கொண்டு, எந்தத் துக்கத்தையும் பொறுமையோடே சகிப்பதற்குப் பெலன் அடைகிறார்கள். அவர்களுடைய நினைவு இவ்விதமாயிருக்கிறது. இயேசுக்கிறிஸ்துவே, என் குருவே, என் தேவனே, என் ஆத்தும நேசரே, என் பாவ நாசரே, என்னைத் தாங்கிவருகிற என் அன்பரே, உலகமெல்லாம் என்னைக் கைவிட்டாலும், நீர் என்னை எந்நாளும் கைவிடமாட்டீர் என்று நினைத்து, பாடிக்கொண்டே நடக்கிறார்கள். கிறிஸ்துவின் திவ்விய வசனமாகிய சத்திய வேதத்தைப் படித்து, நம்பி, தியானித்து, திருப்தியடைந்து, மனம் மகிழ்ந்து, முகம் மலர்ந்து, அவர் போதித்த மார்க்கத்தை அனுசரிக்கிறார்கள். அவருடைய திருவாக்கு அவர்களுடைய ஆத்துமாவிலே எப்போதும் இன்பப்பிரவாகமாகப் பாய்ந்துகொண்டிருக்கிறது. அவருடைய வார்த்தையை எதற்கு ஒப்பிடலாம்? தேனுக்கு ஒப்பிடப்போனால், தேனுக்குத் தித்திப்பில்லையே. பொன்னுக்குச் சமானமென்று சொல்லப்புகுந்தால், பொன்னுக்கு அருமை இல்லையே. மணி ரத்தினங்களுக்குச் சமமென்று உரைக்க நினைத்தால், எந்த முத்துக்கும் மணிக்கும் காந்தி இல்லையே. அவருடைய வாக்கை அறிந்து ஏற்றுக்கொண்ட நெஞ்சானது வெயிலைக் கண்டு மலர்ந்த தாமரைப்புஷ்பத்தைப்போல் இருக்கின்றது. ஓ பாபாத்துமாவே, அவரைத் தழுவு. ஆனந்த சோதியே, ஆடையாபரணங்களைப்பார்க்கிலும், தந்தை தாயைப்பார்க்கி

லும், மனைவி மக்களைப்பார்க்கிலும், அருமையானவரே, என் உயிர்த்துணையே, கரையில்லாத இன்பக்கடலே என்று ஸ்துதித்துக்கொள்.

ஓ சனங்களே, மெய்யான இந்தக் குருவை அறியாததினாலேதான், நீங்கள் கல்லுகளையும் பொம்மைகளையும் கும்பிடுகிறீர்கள்.

* சற்குருவையறியாமலுலகிலேதான்
சண்டாளர்கல்லுகளைத்தெய்வமென்று
பொய்க்குருக்கள்சொன்னபுத்திதன்னைக்கேட்டுப்
பூசைசெய்துகல்லுகளைப்போற்றிசெய்வார்
சொற்குருக்கள்தங்களுடைசொல்லைக்கேட்டால்
சொர்க்கமுண்டோநரகமல்லாற்சொல்லும்போது
சற்குருவையறிந்தவருக்குடனேமோட்சஞ்
சார்வதென்றேமுன்னோர்கள்சாற்றினாரே.

சகோதரரே, கல்லும் கட்டையுமான உங்கள் விக்கிரகங்களையும், வீணும் விருதாவுமான உங்கள் மதாசாரங்களையும் தள்ளிவிடுங்கள். நித்தியத்தையுடைய, ஞானமுள்ள, புண்ணியம் நிறைந்த, இன்பரூபமான குருவாயிருக்கிற இயேசுக்கிறிஸ்துநாதரைச் சேருங்கள். அவரைச் சேராதேபோனால், தீ

---

சங்கராசாரியர்.

* இ-ள். உலகிலே—பூமியிலே. சண்டாளர்—நீசர்கள். சற்குருவை — மெய்யான குருவை. அறியாமல் — அறிந்துகொள்ளாமல். பொய்க்குருக்கள்—பொய்யான குருக்கள். சொன்ன—சொன்ன. புத்திதன்னை—கள்ளஞானத்தை. கேட்டு—உபதேசமாகக் கேட்டு. கல்லுகளை—விக்கிரகங்களை. தெய்வமென்று—சுவாமியென்று நினைத்து. பூசைசெய்து—பூசித்து. கல்லுகளை—அந்தக் கல்லுகளை. போற்றிசெய்வார் — ஸ்துதிசெய்வார்கள். சொல்லும்போது — யோசித்துச் சொல்லுங்காலத்திலே. சொல்—பொய்யைப்போதிக்கிற. குருக்கள் தங்களுடைய—கள்ளக் குருக்களுடைய. சொல்லை—வார்த்தையை. கேட்டால் — கேட்டுக்கொண்டால். நரகமல்லால் — நரகமேயல்லாமல். சொர்க்கமுண்டோ—சுவர்க்கம் உண்டாகுமா. சற்குருவை—மெய்யான குருவை. அறிந்தவருக்கு—அறிந்தவர்களுக்கு. உடனே—உடனே. மோட்சம்—மோட்சம். சார்வதென்று—கிடைக்குமென்று. முன்னோர்கள்—முன்னோர்கள். சாற்றினார்—சொன்னார்கள். எ-று.

நரகத்தில் விழுவீர்கள். அவரைச் சேர்ந்தால், அவராலே உங்கள் பாவதோஷமும் மன அழுக்கும் நீங்கும். அவராலே உங்களுக்கு ஆத்துமசுத்தியும் மோட்சகதியும் கிடைக்கும்.

* ஊரங்கணநீ ருரவுநீர்ச்சேர்ந்தக்காற்
பேரும்பிறிதாகித் தீர்த்தமா—மோரும்
குலமாட்சியில்லாருங் குன்றுபோனிற்பர்
நலமாட்சிநல்லாரைச் சார்ந்து.

ஊரினிடத்திலே சாக்கடையிலிருக்கிற கெட்ட சலம் பெரிய ஆற்றிலே போய் விழுந்தால், அது தன் அழுக்கு நீங்கிச் சுத்தமாகும். அதினுடைய பேரும் வேறுபட்டு, தீர்த்தமென்று சொல்லப்படும். அதுபோல, மேன்மையில்லாதவர்கள் நல்லவரைச் சேர்ந்தால், தாங்களும் நல்லவர்களாகி, மலையைப்போல மேன்மையும் ஸ்திரமுமாக நிற்பார்கள்.

பூவோடு சேர்ந்த நாரும் மணம்பெற்றதுபோலே என்கிற பழமொழியையும் அறிவீர்கள்.

பிரியமானவர்களே, மனுஷர்கள் கெட்டவர்களாயிருக்கிறார்கள். நல்லவர் இயேசுக்கிறிஸ்து ஒருவரே. அவரை விசுவாசித்தால், நாம் பாவநிவிர்த்தியையும், பரிசுத்தத்தையும், பரலோக மேன்மையையும் அடைவோம்.

---

நாலடியார், ௰௮-ம் அதி: ரு.

* இ-ள். ஊர்—ஊரிலுள்ள. அங்கணநீர்—சாக்கடை நீரானது. உரவு—மிகுந்த. நீர்—(ஆற்றுச்) சலத்தை. சேர்ந்தக்கால் — சேர்ந்தால். பேரும்—தன்னுடைய பேரும். பிறிதாகி—வேறாகி. தீர்த்தமாம்—தீர்த்த சலமென்று சொல்லப்படும். (அதைப்போல) குலம்—சிரேஷ்டமான. மாட்சியில்லாரும் — மேன்மையில்லாதவர்களும். நலம்—சிரேஷ்டமான. மாட்சி—மேன்மையையுடைய. நல்லாரை—நல்லோரை. சார்ந்து—சேர்ந்து. குன்றுபோல — மலையைப்போல. நிற்பர்—உயர்ந்தும் ஸ்திரப்பட்டும் நிற்பார்கள். எ-று.

(ஒரும் என்பது அசைச்சொல்).



# உபகிரந்தம்.

---

## APPENDIX TO No. I.

---

## முன் சொன்னவைகளுக்குச் சில உதாரணங்கள்.

### (க.) இவ்வுலகத்தில் நமக்கு நிலை இல்லை என்பது.

**வேமனர் பாடல்.**

ఎన్నాళ్లును దానుండును
యెన్నాళ్లును దాను నేర్చి యెన్నిట వెలయుఁ
గొన్నాళ్లకు దాఁ జన్నను
మన్నాయెను విద్యలెల్ల మహిలో వేమా.

**இதன் பதவுரை.**

ఎన్నాళ్లును—எத்தனை நாள். తాను—தான். ఉండును—இருப்பா(னாலும்). ఎన్నాళ్లును—எத்தனை நாள். తాను—தான். నేర్చి—படித்து. ఎన్నిట—எவ்வளவு. వెలయును—பிரகாசிப்பா(னாலும்). కొన్నాళ్లకు—கொஞ்ச நாளுக்குள்ளே. తా—தான். చన్నను—சாவான். మహిలో—பூமியிலே. విద్యలెల్ల—வித்தைகளெல்லாம். మన్నాయెను—மண்ணாய்விட்டது. వేమా—ஓ வேமனரே. எ-று.

### கருத்துரை.

ஓ வேமனரே, ஒருவன் பூலோகத்திலே எத்தனை நாள் இருந்தாலும், எத்தனை நாள் படித்து எவ்வளவு மேன்மை யோடே பிரகாசித்தாலும், கொஞ்ச நாளிலே செத்துப்போ வான். அப்போது அவனுடைய வித்தையெல்லாம் மண் ணாய்விடுமல்லவா ?

### பட்டணத்துப் பிள்ளை.

எரியெனக்கென்னும் புழுவோவெனக்கென்னு மிந்தமண்ணுஞ்
சரியெனக்கென்னும் பருந்தோவெனக்கென்னுந் தான்புசிக்க
நரியெனக்கென்னும் புன்னாயெனக்கென்னு மிந்நாறுடலைப்
பிரியமுடன்வளர்த்தே னிதனாலென்ன பேறெனக்கே.

### இதன் பதவுரை.

எரி—நெருப்பானது. எனக்கென்னும்—என்னுடையதென்று சொல்லும். புழு—புழுவானது. எனக்கென்னும்—என்னுடைய தென்று சொல்லும். இந்த மண்ணும்—இந்தப் பூமியும். சரி— அவைகளைப்போலவே. எனக்கென்னும்—என்னுடையதென்று சொல்லும். பருந்து—பருந்தானது. எனக்கென்னும்—என்னுடைய தென்று சொல்லும். நரி—நரியானது. தான் புசிக்க—தான் புசிக்கிற தற்கு. எனக்கென்னும்—என்னுடையதென்று சொல்லும். புன்— அற்பமான. நாய்—நாயானது. எனக்கென்னும்—என்னுடையதென் று சொல்லும். இந் நாறு—இந்தத் துர்வாசனை வீசுகிற. உடலை— சரீரத்தை. பிரியமுடன்—வெகு அன்போடே. வளர்த்தேன்—வளர் த்தேன். இதனால்—இதினாலே. எனக்கு—எனக்கு. என்ன பேறு— என்ன நன்மை உண்டு? எ—று.

### கருத்துரை.

என்னுடைய சரீரத்தை, நெருப்பும் புழுவும் பூமியும் பருந் தும் நரியும் நாயும் பார்த்து, புசிக்கிறதற்கு இது எங்களு டையதென்று சொல்லும். நிலையில்லாத இந்தச் சரீரத்தின் மேல் மெத்தவும் பிரியப்பட்டேனே; இதினாலே எனக்கு என்ன நன்மை உண்டு ?

## (௨.) பணத்தைப் பிடுங்குகிற குருக்கள் அனேகர்: துக்கத்தை மாற்றுகிற மெய்யான குருவே வேண்டுமென்பது.

గురవో బహవః సంతి శిష్యవిత్తాపహారకాః
దుర్లభః సద్గురుర్దేవి శిష్యసంతాపహారకః.

*இதன் பதவுரை.*

*దేవి—மனமாகிய பெண்ணே. శిష్య—சிஷ்யர்களுடைய. విత్త—திரவியத்தை. అపహారకాః—பறித்துக்கொண்டுபோகிற. గురవః—குருக்கள். బహవః—வெகுபேர். సంతి—இருக்கிறார்கள். శిష్య—சிஷ்யர்களுடைய. సంతాప—துக்கத்தை. హారకః—பறித்துக்கொண்டு போகிற. సద్గురుః—நல்ல குருவானவர். దుర్లభః—கிடைப்பது மிகவும் அருமை. எ-று.*

### கருத்துரை.

*ஓ மனமென்கிற பெண்ணே, சிஷ்யர்களுடைய பணத்தை வாரிக்கொண்டுபோகிற குருக்கள் அனேகர் உண்டு. சிஷ்யர்களுடைய துயரத்தை அடித்துக்கொண்டுபோகிற நல்ல குருவானவரோ கிடைப்பது எவ்வளவு அருமை!*

## (௩.) கடத்தேறுவது நம்முடைய செய்கையினாலேயல்ல: குருவினுடைய செய்கையினாலே தானே என்பது.

நிஷ்டானுபூதி, ௩-ம் பாட்டு.

*சரிதையின்றொழிலினாலுஞ் சற்கிரியையினும்யோகம்*
*புரிதருமுயற்சியானும் பொருந்தொணாதென்பர்மேலோர்*
*உரியதேசிகனுரைக்கு மொருமொழியுண்மையாலே*
*அரியமெய்ஞ்ஞானவீடுங் கடைவதுதிண்ணமாமே.*

*இதன் பதவுரை.*

*மேலோர் — பெரியோர்கள். சரிதையின் றொழிலினாலும் — சரிதையென்கிற தொழிலினாலும். சற்கிரியையினும்—கிரியையினாலும். யோகம்—யோகத்தை. புரிதரு—செய்கிற. முயற்சியானும்—*

அப்பியாசத்தினுலும். அரிய—அருமையான. மெய்ஞ்ஞான வீடு—உண்மை ஞான சம்பந்தமான மோட்சம். பொருந்தோனுது—கிடைக்க மாட்டாது. என்பர்—என்று சொல்லுவார்கள். உரிய—சத்தியத்தை உபதேசிக்கிறதற்கு உரிய. தேசிகன்—குருவானவர். உரைக்கும்—சொல்லுகிற. ஒரு—ஒப்பற்ற. மொழியுண்மையாலே—சத்திய வார்த்தையினுலே. இங்கு—இங்கே. அடைவது—மோட்சங்கிடைப்பது. திண்ணமாம்—நிச்சயமாகும். எ—று.

## கருத்துரை.

சரிதையினுலும், கிரியையினுலும், யோகத்தினுலும் மோட்சஞ் சேருவதில்லையென்று பெரியோர் சொல்லியிருக்கிருர்கள். சற்குருவானவர் சொல்லுகிற சத்திய வார்த்தையினுலே மோட்சம் அடைவது நிச்சயமாயிருக்கிறது.

உலகத்திலே அப்படிப்பட்ட வார்த்தையைச் சொன்னவர் இயேசுக்கிறிஸ்துவேயல்லாமல், அதைச் சொல்வதற்கு அதிகாரமும் சக்தியும் வேறெருவரிடத்திலும் இல்லை. அவர் அருளிச்செய்த அந்த வார்த்தை என்னவென்று கேட்டால்: பாவியே, உன் பாவத்தை நான் சிலுவையில் சுமந்தேன்; என்னை நம்பி நேசித்து, நான் காட்டின வழியே நடந்துகொள்; அப்போது உனக்கு முத்தி தருவேனென்பதே அந்த வார்த்தை.

## (ச.) காரணமில்லாமல் செய்த உபகாரம் மிகவும் சிறந்ததென்பது.

### குறள், ௰௨-ம் அதி: க.

செய்யாமற்செய்த வுதவிக்குவையகமும்
வானகமுமாற்ற லரிது.

### இதன் பதவுரை.

செய்யாமல்—(தனக்கு முன்னே ஒரு நன்மையும்) செய்யாமலிருக்க. செய்த—(ஒருவன் வேறெருவனுக்குச்) செய்த.

உதவிக்கு—நன்மைக்கு. வையகமும்—மண்ணுலகத்தையும். வானகமும்—விண்ணுலகத்தையும். மாற்றல்—ஈடாகக் கொடுப்பதும். அரிது—ஒப்பாகாது. எ-று.

## கருத்துரை.

ஒருவன் வேறொருவன் தனக்கு முன்னே ஒரு உபகாரமும் செய்யாமலிருக்கும்போதே, தான் அந்த வேறொருவனுக்கு உபகாரம் செய்தால், அப்படிப்பட்ட உபகாரத்துக்குப் பூவுலகத்தையும் வானுலகத்தையும் சரியென்று கொடுத்தாலும், அது சரியாகமாட்டாது.

பிரியமானவர்களே, மெய்க்கடவுளும் சற்குருவுமாயிருக்கிற இயேசுக்கிறிஸ்துவுக்கு உபகாரம் செய்வது யாராலே ஆகும்? மூவுலகத்திலும் ஒருவராலும் ஆகாது. மேலும், பாவிகளாகிய நாம் அவருக்குத் துரோகஞ் செய்திருக்கிறோம். அவரோ, பாவிகளும் துரோகிகளுமான நமக்காகத் தம்முடைய ஜீவனைத் தந்தார். இந்த அளவில்லாத உபகாரத்துக்கு வானத்தையும் பூமியையும் ஈடாகுமென்று சொல்லிக் கொடுத்தாலும், அது ஒப்பாகுமா? ஒப்பாகமாட்டாதே. ஓ சனங்களே, இவ்வளவாய் உங்களை நேசித்த அந்த அன்புள்ள தேவகுருவை நீங்களும் நேசித்து, உங்கள் இருதயத்தை அவரிடத்திலே காணிக்கையாக வைக்கமாட்டீர்களா?



# வேதவாக்கியம்.

(க.) உலகமீட்பராகிய இயேசுக்கிறிஸ்துநாதர் சகலத்தையும் படைத்து, தாங்கி, காக்கிறவர்.

கொலோசெயர், க. அதி: ௰சு, ௰எ.

(உ.) அவர் மனுஷனாய் அவதரித்த தேவனானவர்.

ரோமர், கூ. அதி: ௫.
க. தீமோத்தேயு, ங. அதி: ௰கூ.
க. யோவான், ௫. அதி: உ௰.

(ங.) அவர் பாவிகளுக்காக மரித்தெழுந்தவர்.

ரோமர், ௫. அதி: சு—அ.
ரோமர், அ. அதி: ஙச.
க. பேதுரு, உ. அதி: உச.

(ச.) அவர் நித்திய தேவகுரு.

ஏசாயா, கூ. அதி: சு.
வெளிப், உஉ. அதி: ௰ங.
எபிரேயர், ௰ங. அதி: அ.

(ரு.) அவர் ஞான சற்குரு.

கொலோசெயர், உ. அதி: ங.
கொலோசெயர், உ. அதி: கூ.
யோவான், உ. அதி: உச, உ௫.

(சு.) அவர் புண்ணிய சொரூபியான குரு.

எபிரேயர், எ. அதி: உசு.
க. பேதுரு, ங. அதி: ௰அ.
க. யோவான், ங. அதி: ௫.
எரேமியா, உங. அதி: சு.

(எ.) அவர் இன்ப வடிவமான குரு.

மத்தேயு, ௰க. அதி: உஅ.
யோவான், ௰. அதி: ௰க.
யோவான், சு. அதி: ங௫.
கலாத்தியர், உ. அதி: உ௰.
மல்கியா, ச. அதி: உ.
வெளிப், ௫. அதி: ௰க—௰ச.

(அ.) அவரேயல்லாமல், வேறே இரட்சகர் இல்லை.

அப்போஸ், ச. அதி: ௰உ.
எபிரேயர், ச. அதி: ௰ச.

# சாஸ்திரம்.



மனுஷர்கள் மெய்யான கடவுளை விட்டு விட்டு, பாவ மார்க்கங்களில் திரிகிறார்கள். அஞ்ஞானமென்கிற இருளிலே சிக்கிக்கொண்டு, மயங்கி, திக்குத் தெரியாமல் தடுமாறி, அலைகிறார்கள். இதை யார்தான் ஒப்புக்கொள்ளமாட்டார்கள்?

இப்படியிருக்கிறதினாலே, இருளை நீக்கவும், வழியைக் காட்டவும், தேவனிடத்தில் சேர்க்கவும் தக்கதாக, மெய்யான சாஸ்திரமாகிய தீபமே மனுஷர்களுக்கு வேண்டும்.(௧.)

உங்களுக்குள்ளே ஒருவர் சொன்னதாவது:

* ஏதுந்தெரியா தெனைமறைத்தவல்லிருளை
நாதநீநீக்கவொரு ஞானவிளக்கில்லையோ.

நான் ஒன்றும் அறியாதபடி நெருங்கின இருட்டிலே இருக்கிறேன்; கர்த்தாவே, அந்த இருட்டை நீக்கும்படியான ஒரு

தாயுமானவர்.

* இ-ள். நாத—கர்த்தாவே. ஏதும்—யாதொன்றையும். தெரியாது—(நான்) பார்க்கக் கூடாதபடிக்கு. எனை—என்னை. மறைத்த—மூடின. வல்—வல்லமையான. இருளை—(அஞ்ஞானமென்கிற) இருட்டை. நீ—தேவரீர். நீக்க—போக்கும்படியாக. ஒரு—ஒப்பற்ற. ஞானவிளக்கு—ஞானமாகிய தீபம். இல்லையோ—இல்லையா? எ-று.

(௧.) சாஸ்திரம் வேண்டுமென்பதற்கு, ௯௧-ம் பக்கத்திலுள்ள ஒரு சுலோகத்தைக் காண்க.

ஞானவிளக்கு இல்லையோ என்று தாயுமானவர் புலம்பினார்.

அப்படிப்பட்ட ஒரு ஞான விளக்கு இருக்கவேண்டியது. தேவன் அருளிச்செய்த சத்திய சாஸ்திரம் நமக்குக் கிடைத்தால், அதுவே அந்த விளக்காக இருக்கும்.

உலகத்திலே நாம் விசாரிக்கப் போனாலோ, அனேக சாஸ்திரங்கள் உண்டு. அவையெல்லாம் சத்தியமாயிருக்குமா? மெய்யென்றும் பொய்யென்றும் பாராமல், எந்தச் சாஸ்திரமானாலும் சரிதானென்கிறவர்கள் மோசப்பட்டுப் போவார்கள். ஆய்ந்தோய்ந்து பாராதான் தான்சாகக் கடவன் என்கிற பழமொழியை நீங்கள் கேள்விப்பட்டதில்லையா? உலகத்திலே செல்லுகிற பணமும் உண்டு; செல்லாத பணமும் உண்டு; இரண்டையும் சரிசமானமென்று எவர்கள் எடுத்துக் கொள்ளுவார்கள்? சோதித்து, நல்லதையல்லவா எடுத்துக் கொள்ள வேண்டியது?

* கல்விகரையில கற்பவர்நாள்சில
மெல்லநினைக்கிற் பிணிபல—தெள்ளிதின்
ஆராய்ந்தமைவுடைய கற்பவேநீரொழியப்
பாலுண்குருகிற் றெரிந்து.

படிக்கப்பட்ட சாஸ்திரங்கள் அனேகம். படிக்கிறவர்களுடைய நாளோ கொஞ்சம். அவர்களுக்கு வருகிற வியாதிகளும் விஸ்தாரம். ஆகையினாலே, அன்னப்பட்சியானது

---

* இ—ள். கல்வி—சாஸ்திரங்களுக்கு. கரையில—அளவில்லை. கற்பவர் — வாசிப்பவர்களுக்கு. நாள் சில—வயது கொஞ்சம். மெல்ல—மெதுவாக. நினைக்கில்—யோசித்தால். பிணி பல—நோய்களும் அனேகம். (ஆகையால்) நீரொழிய—சலம் நீங்க. பால்—பாலைமாத்திரம். உண்—புசிக்கிற. குருகில்—அன்னத்தைப்போல. தெள்ளிதின்—தெளிந்த புத்தியினாலே. ஆராய்ந்து—(சேர்க்கவேண்டியது எதுவென்றும், நீக்கவேண்டியது எதுவென்றும்) விசாரித்து. தெரிந்து—(தள்ளவேண்டிய சாஸ்திரங்களைப்) பிரித்துத் தள்ளி. அமைவுடைய—நன்மை நிறைந்தவைகளை. கற்ப—படிக்கக் கடவர்கள். எ—று.

தண்ணீரையும் பாலையும் வேறு வேருகப் பிரித்து, பாலைமாத்திரம் சாப்பிடுவதுபோல; நன்ருய் விசாரித்துப் பார்த்து, கெட்ட சாஸ்திரங்களைத் தள்ளி, நல்லவைகளை மாத்திரம் ஏற்றுக்கொண்டு படிக்கவேண்டுமென்று நாலடியாரிலே சொல்லப்பட்டது.

இப்படி ஆராய்ந்து பார்க்கும்போது, பூலோகத்தில் சத்திய சாஸ்திரம் ஒன்றே இருக்குமென்று நிதானிக்க வேண்டியது. சகலரையும் உண்டாக்கின தேவன் ஒருவரே. அவர் ஒன்றுக்கொன்று விரோதமாக, பலபல சாஸ்திரங்களைக் கொடுப்பாரா? அப்படிக் கொடுக்கமாட்டார். சமஸ்த தேசத்தாருக்கும் பொதுவாய் வெளிச்சம் வீசும்படி ஒரே சூரியனை அவர் ஏற்படுத்தினதுபோல, எல்லாருக்கும் பொதுவான ஒரே சாஸ்திரத்தையும் ஏற்படுத்துவார். அந்த ஒன்ருன சத்திய சாஸ்திரம் இன்னதென்று கண்டுபிடிக்கவேண்டும். சனங்களே, அந்தச் சத்திய சாஸ்திரம் எதுவென்று விசாரித்து அறியுங்கள்.

சமஸ்கிருத பாஷையிலே எழுதியிருக்கிற நாலு வேதமே சத்திய சாஸ்திரமென்று சாதிப்பீர்களா? எவ்வளவு சாதித்தாலும் பொருந்தாது.

அந்த நாலு வேதங்களைக் குறித்து உங்கள் நூல்களில் பல விதமாய்ச் சொல்லியிருக்கிறது. அந்த நாலு வேதம் எந்தக் காலத்திலும் உண்டாகாமல், அநாதியாயிருக்கிறதென்று சில நூல்களில் சொல்லப்பட்டது.(உ) வேறு சில நூல்களிலே, அந்த நாலு வேதம் பிரமாவினுடைய நாலு முகங்களிலிருந்து பிறந்ததென்று சொல்லப்பட்டது.(ஈ) அப்படி முகத்திலே பிறந்ததுண்டானல், அந்த நாலு வேதம் அநாதியல்லவே.

இதுவுமல்லாமல், ஆதியிலே ஒரே வேதம்மாத்திரம் இருந்ததென்றும், பின்பு திரேதாயுகத்திலே புரூரவன் என்கிற

(உ), (ஈ), இவைகளைத் தெரிவிக்கிற பாட்டுகளையும் சுலோகங்களையும் ௫௨, ௫௧-ம் பக்கங்களிலே காண்க.

இராசாவினுலே வேதம் மூன்ருகச் செய்யப்பட்டதென்றும், பாகவதத்திலே சொல்லியிருக்கிறது.[௪] விஷ்ணுபுராணத்திலேயோ, விஷ்ணுவானவன் துவாபரயுகத்திலே வேதவியாசனுக ரூபமெடுத்து, ஒன்ருயிருந்த வேதத்தை நாலு வேதமாகப் பிரித்தானென்று சொல்லப்பட்டது.[௫] இதற்கெல்லாம் எதிரிடையாக, சிவனுனவன் பிரமாவைப் பிறப்பித்து, அந்தப் பிரமாவுக்கு வேதங்களைப் போதித்தானென்று பிரமோத்தரகாண்டத்திலே சொல்லப்பட்டது.[௬]

இதைக் குறித்துப் பின்னும் கேளுங்கள். ஹரிவம்சமென்கிற நூலிலே, பிரமாவானவன் காயத்திரிமந்திரத்தை உண்டாக்கி, அதிலிருந்து நாலு வேதங்களைத் தோன்றச் செய்தானென்று சொல்லப்பட்டிருக்கிறது.[௭] மானவ தரும சாஸ்திரத்திலேயோ, பிரமா இருக்கு வேதத்தை அக்கினியிலிருந்தும், யசுர் வேதத்தை வாயுவிலிருந்தும், சாம வேதத்தைச் சூரியனிலிருந்தும், கறந்தானென்று சொல்லப்பட்டிருக்கிறது.[௮] இந்த இரண்டு கதைகள் ஒவ்வாமல் விரோதப்பட்டிருப்பதுமல்லாமல், நெருப்பிலும், காற்றிலும், சூரியனிலுமிருந்து வேதம் கறக்கப்பட்டதென்ருல், சிரிக்கத்தகுமேயொழிய, நம்பலாமா?

ஓ சனங்களே, நாலு வேதங்களைக் குறித்து இப்படி ஒன்றுக்கொன்று மாறுபாடாக உங்கள் நூல்களில் சொல்லப்பட்ட இந்தப் பல பேச்சுகளுக்குள்ளே எதைத்தான் சரியென்று ஒப்புக்கொள்ளுகிறது? நாலு வேதம் ஒருகாலத்திலும் பிறப்பில்லாமல், எப்போதும் இருந்ததென்று ஒரு நூல் சொல்லுகின்றது. அப்படியல்ல, அந்த நாலு வேதம் பிரமாவின் நாலு முகத்திலே பிறந்ததென்று வேறொரு நூல் தெரிவிக்கின்றது. அந்த இரண்டு வார்த்தைகளையும் நம்பாதே; ஆதியிலே வேதம் ஒன்றே இருந்தது; பின்பு ஒரு இராசா

(௪.), (௫.), (௬.), (௭.), (௮.), இவைகளைத் தெரிவிக்கிற பாட்டுகளையும் சுலோகங்களையும் ௱௪, ௱௫, ௱௬, ௱௭, ௱௮-ம் பக்கங்களிலே காண்க.

அதை மூன்று வேதமாகச் செய்தானென்று வேறே ஒரு நூல் சாதிக்கின்றது. சீ சீ, அதுவும் சரியல்ல, ஒரு இரா சா செய்யவுமில்லை, மூன்ருக்கவுமில்லை; ஒன்ருயிருந்த வேதத்தை விஷ்ணு நாலு வேதமாக்கிவிட்டானென்று வேருெரு நூல் கூவுகின்றது. அதுவும் தப்புத்தான், சிவன் ஒருவனே பிரமாவைச் சிருஷ்டித்து, அவனுக்கு வேதங்களைக் கற்பித்தானென்று வேறே ஒரு நூல் கதறுகின்றது. அதெல்லாம் வேண்டியதில்லை, பால் கறக்கிறதுபோல, பிரமா வேதங்களைக் கறந்தானல்லவா என்று பின்னுெரு நூல் கத்துகின்றது. உங்கள் நூல்கள் இப்படிப் பல வகையாய்ச் சொல்லவே, எல்லாம் மயக்கமாக இருக்கிறதல்லவா? அந்த நாலு வேதமும் தீராத பெரிய சந்தேகத்திலேதான் கிடக்கிறது.

மேலும், அந்த நாலு வேதம் பிரமாவினுடைய வாயிலே பிறந்ததாக உங்கள் சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறதே: பிரமா பொய்சொன்னதினுலே, அவனுக்குப் பூசை இல்லையென்று உங்களெல்லாருக்கும் தெரியவில்லையா? பொய் சொன்னவனுடைய வாயிலே உற்பத்தியான வேதம் மெய்யாவது எப்படியோ, விளங்கவில்லை.

இன்னும் பாருங்கள். வேதமானது பூணூலைத் தரிக்கிற பிராமணர் முதலானவர்களுக்கே உரியதென்றும்,(க.) ஸ்திரீகளும் சூத்திரர்களும் அந்த வேதங்களைப் படிக்கவும் கேட்கவுங் கூடாதென்றும்,(உ.) உங்கள் சாஸ்திரத்திலே விதிக்கப்பட்டிருக்கிறது. தேவன் ஒரு வேதத்தைக் கொடுத்தால், சூத்திரர்களை நீக்கி, பூணூலைத் தரிக்கிறவர்களுக்குமாத்திரமா கொடுப்பார்? மழையையும் காற்றையும் வெயிலையும் அவர்களுக்குமாத்திரமா கொடுத்துக்கொண்டுவருகிருர்?

இதுவுமன்றி, சாதாரணமான சனங்களுக்குச் சுத்தமாய்த் தெரியாத சமஸ்கிருத பாஷையிலே அந்த நாலு வேதம்

(க.), (உ.), இவைகளை நிச்சயிக்கிற சுலோகங்களை ௫௰, ௫௩-ம் பக்கங்களிலே காண்க.

எழுதப்பட்டது. கடினமான சந்திகளினாலேயும் கட்டப்பட்டது. மகா கருகலாகவும் மறைவாகவும் செய்யப்பட்டது. பிராமணர்களுக்குள்ளேயும் ஆயிரத்தில் ஒருவன் அந்த வேதங்களை வாசித்து, பொருள் சொல்லமாட்டான். அப்படிப்பட்ட வேதம் உலகத்துமனுஷர்களுக்கு எவ்வளவும் உதவமாட்டாது. உதவாத அந்த நாலு வேதம் தேவனாலே உண்டானதென்று நினைக்கிறதற்கு இடம் உண்டா? இல்லையே. பிராமணர்கள் உருட்டும் புரட்டுமாகச் செய்ததேயல்லாமல், அந்த நாலு வேதம் தேவன் தந்த சாஸ்திரமல்ல.

நாலு வேதம் உதவாதே போனாலும், மகா பாரதமென்றும், இராமாயணமென்றும், சொல்லப்பட்ட இதிகாசங்கள் உண்டு: பதினெட்டுப் புராணங்களும் உண்டு; அந்த இதிகாச புராணமே ஐந்தாம் வேதமாயிருக்கிறது ;(௰௩) அதுவே மெய்யான சாஸ்திரமென்று சொல்லுவீர்களேயானால், அப்படியும் சொல்லத்தகாது: கேளுங்கள்.

நாம் வாசம்பண்ணுகிற இந்தப் பூமியைக்குறித்தே அந்த இதிகாச புராணங்களில் அனேகம் பொய் சொல்லியிருக்கிறது. இரண்டொன்றைமாத்திரம் இங்கே எடுத்துக் காட்டுகிறோம். ஒரு பானைச்சோற்றிற்கு ஒரு சோறு பதம்.

**நல்லாப்பிள்ளை பாரதம்: ஆதிபருவம்: சலந்தாரச் சருக்கம்.**

* மாசறுபணமணி வயந்தருசிரங்கள்
ஆசகலவாயிர மடுத்தவனுமங்கண்
வாசமலர்வள்ளறரு மாறுலகமெல்லாம்
ஓசையொருசென்னியி னிருத்தியவனுற்றான். (அ.)

* இ-ள். மாசு—குற்றம். அறு—இல்லாத. பணமணி—முடியில் உள்ள இரத்தின(மாகிய). வயம்—வளப்பத்தை. தரு—

(௰௩.) இதிகாச புராணம் ஐந்தாம் வேதமென்பதற்கு, ௬௬-ம் பக்கத்திலுள்ள சுலோகத்தைக் காண்க.

## இதன் பொருள்.

ஆயிரம் தலைகளையுடைய பாம்பாகிய ஆதிசேஷன், தனக்குப் பிரமா கொடுத்த வரத்தின்படியே, எல்லா லோகங்களையும் தன் தலையின்மேல் வைத்து, தாங்கிக் கொண்டிருக்கிறான்.

ஓ சனங்களே, ஆயிரம் தலையுள்ள பாம்பு இருக்கிறதாக எங்கேயாவது கண்டதும், கேட்டதும் உண்டா? மேலும், சூரியன் யாதொரு ஆதரவுமில்லாமல், ஆகாசத்தில் தொங்குகிறதை நாம் கண்ணினாலே காண்கிறோம். அப்படியே பூமியும் தொங்குகிறது.

சர்வ சக்தியுள்ள கடவுள் பூமியைத் தம்முடைய வல்லமையினாலே வானத்திலே தாங்குகிறார். அப்படியிருக்க, ஒரு பாம்பின் தலைமேலே அந்தப் பூமி ஆடுகிறதென்று சொன்னால், யார்தான் நகைக்கமாட்டார்கள்?

இந்தப் பிரமாண்டமான அபத்தம் போதாமல், பூமியைக்குறித்துப் பின்னும் உங்கள் புராணம், அச்சமும் கூச்சமுமில்லாமல், புளுகுகிறதைக் கேளுங்கள்.

---

கொடுக்கிற. சிரங்கள் ஆயிரம்—ஆயிரந்தலைகளை. ஆசு—குற்றம். அகல—நீங்க. அடுத்தவனும்—உடையவ(னாகிய ஆதிசேஷன்). அங்கண்—(தான் தவஞ்செய்த) அவ்விடத்தில். வாசம்—பரிமளத்தையுடைய. மலர்—தாமரைப் புஷ்பத்தில் (இருக்கிற). வள்ளல்—பிரமா. தருமாறு—(தனக்குக்) கொடுத்தபடி. ஓசை—புகழ்ச்சியையுடைய. ஒரு—ஒப்பற்ற. சென்னியின்—(தன்னுடைய)சிரசிலே. உலகமெல்லாம்—எல்லா உலகங்களையும். இருத்தி—வைத்துக்கொண்டு. அவண்—அந்த இட(மாகிய நாகலோகத்திலே). உற்றான்—பொருந்தினான். எ-று.

கந்தப்புராணம்: அசுரகாண்டம்: அண்டகோசப்படலம்.(௧௨.)

*பரவுமிவ்வுலகினுப்புப் பாறயிர்நெய்யேகன்னல்
இரதமாமதுநீராகு மெழுகடலேழுதீவும்
வரன்முறைவிரவிச்சூழு மற்றதற்கப்பாற்சொன்னத்
தனையதுசூழ்ந்துநிற்குஞ் சக்கரவாளச்சையம். (உ௰.)

## இதன் பொருள்.

இந்த விசாலமான பூமி ஏழுதீவுகளாயிருக்கிறது. அந்த ஏழுதீவுகளை ஏழு சமுத்திரமும் சூழ்ந்துகொண்டிருக்கிறது. உப்புக்கடலும், பாற்கடலும், தயிர்க்கடலும், நெய்க்கடலும், கருப்பஞ்சாற்றுக்கடலும், கள்ளுக்கடலும், நல்லநீர்க்கடலும் ஆகிய இவைகளே அந்த ஏழு சமுத்திரங்களாம். அந்த ஏழு கடலுக்கப்பாலே எல்லாவற்றையும் சுற்றி நிற்கிறது சக்கரவாளமென்கிற மலையானது.

ஓ சனங்களே, உப்புக்கடல் ஒன்றேதவிர, பூலோகத்தில் வேறு கடல் இல்லையே. பாலாகவும், கள்ளாகவும், நெய்யாகவும், வேறு பல வகையாகவும், அனேக சமுத்திரங்கள் உண்டென்று சொல்லுவதெல்லாம் சிறு பிள்ளைகள் பரியாசமாகப் பேசுகிற அலப்புதலைப்போலே இருக்கிறது.

---

*இ-ள். பரவும்—விசாலமான. இவ்வுலகின்—இந்த உலகத்திலே. உப்பு—உப்புக்கடலும். பால்—பாற்கடலும். தயிர்—தயிர்க்கடலும். நெய்—நெய்க்கடலும். கன்னல்—கருப்பஞ்சாற்றுக்கடலும். இரதமாம்—சுவையையுடைய. மது—தேன் கடலும். நீர்—நல்ல தண்ணீர்க்கடலும். ஆகும்—ஆகிய. எழுகடல்—ஏழு சமுத்திரம். ஏழு தீவும்—ஏழு தீவுகளையும். வரன்முறை—கிரமமாக. விரவி—பொருந்தி. சூழும்—சுற்றிக்கொண்டிருக்கிறது. அதற்கப்பால்—அந்தச் சமுத்திரங்களுக்கப்பாலே. சொன்ன—பொன்மயமான. தனையது—பூமியை. சக்கரவாளச்சையம்—சக்கரவாளமென்னப்பட்ட மலை. சூழ்ந்துநிற்கும்—சுற்றிக்கொண்டிருக்கிறது. எ-று. (மற்று, அசை).

(௧௨.) ஏழு கடலைக்குறித்துச் சமஸ்கிருதத்திலே சொல்லியதை ௬௰-ம் பக்கத்திலே காண்க.

இந்தப் பூமியைப்பற்றி உங்கள் இதிகாச புராணம் சொல்லுகிற பொய் இவ்வளவிலே அடங்கவில்லை. இதைப்போலவே, பின்னும் வெகு விஸ்தாரமாய்ப் பிதற்றுகின்றது. இன்னும் ஒன்று இவ்விடத்திலே காண்பிக்கிறோம்.

**கந்தப்புராணம்: அசுரகாண்டம்: அண்டகோசப்படலம்.**

* விண்ணுயர்சம்புத்தீவினடுவணின்ற
  மேருவரைசெங்கமலப்பொகுட்டுப்போல
நண்ணுமதற்கியோசனையுன்னதமெண்பத்து
  நான்குளவாயிரமாகுஞாலமாழ்ந்த
எண்ணிரண்டாயிரஞ்சென்னியகலமுப்பா
  னீராயிரமாம்பாரெல்லையிதனிற்பாதி
வண்ணமிகுமேகலைமூன்றதனிலுச்சி
  வாய்த்திடுமேகலையிற்பல்சிகரமல்கும். (௨௧.)

*இ-ள். விண்—சுவர்க்கம்போல. உயர்—சிறப்பாயிருக்கிற. சம்புத்தீவின்—நாவலந்தீவின். நடுவண்—மத்தியில். நின்ற—இருக்கிற. மேருவரை—மேருமலையானது. செம்—சிவந்த. கமலம்—தாமரைப்புஷ்பத்தின். பொகுட்டுப்போல—கொட்டையைப்போல. நண்ணும்—பொருந்தியிருக்கிறது. அதற்கு—அந்த மேரு மலைக்கு. உன்னதம்—உயரம். எண்பத்துநான்குளவாயிரம்—எண்பத்துநாலாயிரம். இயோசனையாகும்—யோசனை தூரமாயிருக்கிறது. [ஒரு யோசனை பத்தரை நாழிகை வழி: ஆகையால், இதற்குக் காதம் லட்சத்துப் பதினேழாயிரத்து அறுநூறு]. ஞாலம்—பூமியில். ஆழ்ந்த—அழுந்தின அந்த மலையின் அடியானது. எண்ணிரண்டாயிரம்—பதினாறாயிரம் யோசனை தூரமாயிருக்கிறது. [இது இருபத்திராயிரத்து நானூறு காதம்]. சென்னி—அந்த மலையினுடைய தலையின். அகலம்—விசாலம். முப்பானீராயிரமாம்—முப்பத்திராயிரம் யோசனைதூரமாயிருக்கிறது. [இது நாற்பத்து நாலாயிரத்து எண்ணூறு காதம்]. பார்—பூமியிலிருக்கிற. எல்லை—அந்த மலையின் அளவானது. இதனில்—இந்த முப்பத்திராயிரத்தில். பாதி—பாதியாகிய பதினாறாயிரம் யோசனை தூரமாயிருக்கிறது. [இது இருபத்திராயிரத்து நானூறு காதம்]. வண்ணம்—அழகு. மிகு—மிகுந்த. மேகலை—முடிகள். மூன்று—மூன்று உண்டு. அதனில்—அந்த முடிகளுக்குள். உச்சி—மத்தியில். வாய்த்திடும்—பொருந்தியிருக்கிற. மேகலையில்—முடியிலே. பல்—பல. சிகரம்—சிகரங்கள். மல்கும்—நிறைந்திருக்கிறது. எ-று.

## இதன் பொருள்.

இந்தப் பூலோகத்தின் நடுவிலே மகாமேரு என்கிற ஒரு பெரிய மலை நிற்கிறது. அந்த மலையானது ஆகாசத்திலே ஏறுகிற உயரம் லட்சத்துப் பதினேழாயிரத்து அறுநூறு காதம். அது பூமியிலே இறங்குகிற ஆழம் இருபத்தீராயிரத்து நானூறு காதம். அந்த மலையினுடைய தலை யகலம் நாற்பத்து நாலாயிரத்து எண்ணூறு காதம். அதின் அடிச்சுற்றளவு இருபத்தீராயிரத்து நானூறு காதம்.

இந்த அதிசயமான மலையைக்குறித்துக் கந்தப்புராணத்திலே சொன்னதை இன்னும் கேளுங்கள்.

* கடிகமழுநாவலொன்றுதென்பானின்ற
  காரணத்தாற்பாரதன்றன்கண்டமுற்றும்
இடனுடையநாவலந்தீவென்னப்பெற்ற
  தித்தருவின்றீங்கனிநீராறுய்மேருத்
தடவரையைப்புடைசூழ்ந்துவடபாற்சென்று
  சாம்புனதப்பேர்பெறுமச்சலிலந்துய்த்தார்
உடன்முழுதும்பொன்மயமாயயுதமேலு
  மொருமூவாயிரமாண்டங்குறுவரன்றே. (௩௩.)

---

* இ-ள். கடி—வாசனை. கமழும்—பரிமளிக்கிற. நாவலொன்று—ஒரு நாவல் மரமானது. தென்பால்—(அந்த மேரு மலையின்) தென் பக்கத்தில். நின்ற — இருக்கிற. காரணத்தால் — நிமித்தத்தினாலே. பாரதன் — பாரதனென்கிற இராசாவினுடைய. கண்டமுற்றும்— கண்டம் முழுவதும். இடனுடைய — விசாலமான. நாவலந்தீவு— நாவலந்தீவு. என்ன — என்று. பெற்றது—பேர் அடைந்தது. இத் தருவின்—இந்த மரத்தின். தீம்—தித்திப்பான. கனி—பழத்தினுடைய. நீர்—இரசமானது. ஆறாய்—நதியாகி. மேரு—அந்த மேருவாகிய. தட—விசாலம் பொருந்திய. வரையை—மலையை. புடை—பக்கத்தில். சூழ்ந்து—சுற்றிக்கொண்டு. வடபால்—வடக்குப்பக்கமாக. சென்று—போய். சாம்புனதம்—சாம்புனதமென்கிற. பேர்—பேரை. பெறும்—அடையும். அச்சலிலம்—அந்த இரசமாகிய சலத்தை. துய்த்தார் — சாப்பிட்டவர்கள். உடன்முழுதும் — சரீரமெல்லாம். பொன்மயமாய்—பொன் உருவமாய். அயுதமேலும்—பதினாயிரத்தின்மேலும். ஒரு—ஒரு. மூவாயிரமாண்டு—மூவாயிரம் வருஷம். அங்கு—அவ்விடத்திலே. உறுவர்—இருப்பார்கள். எ-று. (அன்று, ஏ, அசைகள்).

## இதன் பொருள்.

அந்த மகாமேரு என்கிற மலையின் தென்புறத்திலே ஒரு நாவல் மரம் இருக்கிறது. அந்த மரத்தில் தொங்குகிற பழங்களின் இரசமானது ஒரு ஆறுகப் பாய்ந்து, அந்த மலையின் அடியைச் சுற்றிக்கொண்டு வடபக்கமாக ஓடுகிறது. பழத்தின் இரசமாயிருக்கிற அந்த ஆற்றுச் சலத்தைச் சாப்பிடுகிறவர்கள் உடம்பெல்லாம் பொன் உருவமாவார்கள். அதுவுமல்லாமல், அவர்கள் பதின் மூவாயிரம் வருஷகாலமும் சாகாமல் உயிரோடே இருப்பார்கள்.

ஓ சனங்களே, லட்சத்துப் பதினேழாயிரத்து அறுநூறு காதம்மட்டுக்கும் உயர்ந்திருக்கிற ஒரு மலை பூமியிலே எங்கேயாவது உண்டா? பழத்தின் இரசம் ஒரு ஆறுக ஓடும்படிக்கு, அவ்வளவான பெரிய ஒரு மரம் உண்டா? அந்தப் பழத்தின் சாறு குடித்து, பொன் சரீரத்தைப் பெற்றுக்கொண்டு, பதின் மூவாயிரம் வருஷகாலம் பிழைக்கிறவர்களும் உண்டா? அப்படிப்பட்ட சாறு ஒரு இடத்திலே இருந்தால், உலகத்தாரெல்லாரும் அங்கே கும்பாக ஓடி, அதைக் குடிப்பார்களல்லவா? இதெல்லாம் ஒரு பலத்த பொய்யேயல்லாமல், வேறல்ல. பூமியின் சகல இடங்களையும் வெள்ளைக்காரர் போய்ப் பார்த்திருக்கிறார்கள். அப்படிப்பட்ட மலையும் இல்லை, மரமும் இல்லை; அப்படிப்பட்ட சாறும் இல்லை, பொன் உடம்புமில்லை; பதின் மூவாயிரம் வருஷம் சாகாமலிருக்கிற ஒரு வாழ்வும் இல்லை.

நாங்கள் எடுத்துக் காட்டின இந்த மூன்று காரியங்களையும் நன்றாய் யோசியுங்கள். பூமியின்கீழே பாம்பு தாங்குகிறதாம். பூமிக்குள்ளே ஏழு கடல் பொங்குகிறதாம். பூமியின் மேலே மகாமேரு உயருகிறதாம். இவ்விதமாக, பூமியின் கீழும், உள்ளும், மேலுமானதைக் குறித்து இத்தனை மகத்தான அபத்தங்களைச் சொல்லுகிற உங்கள் இதிகாச புராணங்களைப் பார்த்தால், பொய்யின்மேல் பொய்யை அடுக்குகிறது

அந்தப் புராண கர்த்தாக்களுக்கு ஒரு விளையாட்டாக இருந்த தென்று தோன்றுகிறது.

நாம் கண்ணாலே பார்வையிடுகிற இந்தப் பூமியைக் குறித்து உங்கள் இதிகாச புராணங்கள் இவ்வளவு வஞ்சனையாகச் சொல்லியிருக்க, நாம் காணாத கடவுளைக் குறித்தும், நாம் பாராத உலகங்களைக் குறித்தும், அந்தப் புராணங்கள் சொல்லுகிற வியர்த்தமான வசனங்களை எப்படி ஏற்றுக்கொள்ளலாம்? அபத்தமென்று தள்ளவேண்டுமேயல்லாமல், ஏற்றுக் கொள்ளக் கூடாது.

வேதங்களும் இதிகாசங்களும் புராணங்களும் தள்ளுண்டு போனாலும், ஆகமங்கள் சித்தாந்தங்கள் வேதாந்தங்கள் முதலான வேறனேக நூல்களும் உண்டே: அவைகளைச் சத்திய சாஸ்திரமென்று சொல்லலாகாதோ என்பீர்களேயானால், கேளுங்கள்.

கடவுள் கிருபைசெய்த ஒன்றான சத்திய சாஸ்திரத்திலே எல்லா மனுஷர்களுக்கும் உதவும்படியான ஒரே ஒரு மோட்சமார்க்கம் தெளிவாய் விளங்கும். உங்களுடைய அந்த நூல்களிலேயோ அப்படிப்பட்ட மார்க்கம் இல்லை: மனுஷர் பாவநிவிர்த்தியையும், மோட்ச கதியையும் அடைவதற்குத் தகுந்த வழி அவைகளிலே தோன்றவில்லை. இதற்கென்று அந்த நூல்களில் சொல்லியிருக்கிற வழிகள் அனேகமாகவும், ஒன்றுக்கொன்று விரோதமாகவும், உதவாத விதமாகவும், இருக்கிறது. ஒரு பெரிய காட்டிலே மிருகங்கள் இங்குமங்கும் திரிந்து மிதித்த அனேக வீண்பாதைகளைப்போல் இருக்கிறது. அந்தப் பாதை ஒரு ஊரை நோக்கிப் போகிற பாதையல்ல. அதிலே நடக்கப் புகுந்தால், காட்டிலே சிக்கிச் சிக்கி, கலங்கி, தள்ளாடி, பள்ளத்திலே விழுந்து, சாவதேயல்லாமல், ஊரிலே சேருகிறதில்லை. அதைப்போலவே, அந்த நூல்கள் ஒரு பெரிய காடாக இருக்கிறது. அவைகளில் சொல்லியிருக்கிற வழிகளைப் பிடித்து நடக்கிறவர்கள் நரக

பள்ளத்திலே விழுவார்கள்: மோட்சமென்கிற நல்ல நாட்டை ஒருபோதும் காணமாட்டார்கள். இப்படி மனுஷரை மயக்கிக் கெடுக்கிற அந்த நூல்களைச் சத்திய சாஸ்திரமென்று நினைக்கவுங் கூடுமா?

ஓ சனங்களே, உங்கள் சாஸ்திரங்கள் மனுஷர் சூதாய்ச் செய்த கள்ள சாஸ்திரமேயல்லாமல், தேவன் அருளிச்செய்த தல்லவென்கிறதற்கு, இன்னும் நியாயம் சொல்லவேண்டிய தானால், சொல்லுகிறோம்.

சகல லோகங்களுக்கும் அதிபதியாக, கடவுள் ஒருவரே இருக்கிறார். உங்கள் சாஸ்திரமோ அவரை அறிவிக்காமல், முப்பத்து முக்கோடி தேவர்களுக்குப் பூசைசெய்யும்படி சொல்லுகிறது. அப்படி முப்பத்து முக்கோடி தேவர்கள் உண்டென்பது முப்பத்து முக்கோடி பொய்யல்லவா?

மேலும், உங்கள் சாஸ்திரம் ஒன்றான கடவுளுடைய பரிசுத்த தன்மையை அறியாமல், அவர் பாவத்தோடே கூடியிருக்கிறவரென்று தூஷிக்கிறதற்கும் துணிந்ததே. அநேக தேவர்கள் உண்டென்று உங்கள் சாஸ்திரம் சொல்லுகிறதுமல்லாமல், அந்தத் தேவர்கள் பூமியிலே வந்து அக்கிரமமாய் நடந்தார்களென்றும், சொல்லுகிறது. பிரமா என்கிற ஒரு தேவன் பொய் சொன்னானென்றும், விஷ்ணு என்கிற ஒரு தேவன் வெண்ணெய் திருடினானென்றும், சிவன் என்கிற ஒரு தேவன் இருஷிகளுடைய பெண்டுகளைக் கெடுத்தானென்றும், சொல்லி; இப்படிப்பட்ட கெட்ட சரித்திரங்களை ஏற்படுத்தி, இந்தத் தேசத்துச் சனங்கள் கடவுளுடைய சரியான தன்மையை அறியாமல்போகும்படி அவர்களைக் கலக்கிவிட்டது. தேவன் அப்படிப்பட்டவரல்ல. அப்படிப்பட்டவராயிருக்கிறாரென்று சொல்லுகிற சாஸ்திரத்தை வம்பான கட்டுக்கதையென்றே தீர்க்கவேண்டும்.

இதுவுமன்றி, மனுஷர்களுக்குள்ளே பொல்லாத இச்சை

களை எழுப்பி, அவர்களுடைய மனசைக் கெடுத்து, அவர்களை விபசாரம் வேசித்தனம் முதலான துன்மார்க்கங்களிலே இழுக்கும்படிக்கு, உங்கள் சாஸ்திரங்களில் அநேக அசுத்தமான கதைகளும் உண்டு. அப்படிப்பட்ட நாற்றமான கதைகள் பாரதத்திலும், பாகவதத்திலும், கந்தப்புராணத்திலும் விரிவாயிருக்கிறது. அவைகளை எடுத்து உச்சரிக்கிறதும் யோக்கியக்கேடென்று வெட்கப்பட்டு, இங்கே சொல்லாமல் விட்டோம். கெட்ட கதைகளுள்ள சாஸ்திரம் தேவன் தந்த சாஸ்திரமென்று சொல்ல, வாய் வருமோ?

இன்னும் ஒரு பொதுவான நியாயத்தைக் கேளுங்கள்.

நாலு வேதங்களும், பதினெட்டுப்புராணங்களும், இருபத்தெட்டு ஆகமங்களும், அறுபத்துநாலு கலைஞானங்களும், மனுவிக்கியான நூல்களும், பல வேதாந்த நூல்களும், சித்தாந்த நூல்களுமாகிய இவைகளெல்லாம் தேவனாலே உண்டான சத்திய சாஸ்திரமென்று சொல்லுகிறீர்களே: அப்படியானால், அவைகளையெல்லாம் படித்து, சிந்தித்து, பொருள் அறிய வேண்டுமல்லவா? அப்படிச் செய்கிறதற்கோ, எவனுக்கும் ஆயுசுகாலம் போதாது. மேலும், அந்தச் சாஸ்திரங்கள் சனங்களுக்கு உபயோகப்படாதபடிக்கு, கடினமான பாடல்களாகப் பாடப்பட்டிருக்கிறது. அவைகளைப் படிக்கவும், அவைகளின் கருத்தைக் கண்டுபிடிக்கவும், வெகு கஷ்டமாயிருக்கிறது. தேவன் கொடுத்த சாஸ்திரம் இப்படி இருக்குமா? எல்லாருக்கும் இலேசாகத் தெரியும்விதமாய் அல்லவா கொடுப்பார்? வாசிக்கத்தக்க அளவிலேயும் அல்லவா அடக்கிக் கொடுப்பார்?

ஓ சனங்களே, மோசக்காரராலே செய்யப்பட்டதென்று கண்டு, உங்கள் சாஸ்திரங்களைத் தள்ளிப்போடுங்கள். சங்கராசாரியர் சொன்னதை உங்கள் சாஸ்திரத்துக்குச் சரியென்று ஒத்துக்கொள்ளுங்கள்.

* உலகிலேபிறந்துமுன்னோ ரோதியகலைகளெல்லாம்
நிலையதாஞ்சோதிதன்னை நிசமதாய்ச்சொன்னதில்லை
பலபலபேதமாகப் பங்கமாய்க்கூறுசெய்தே
அலகைபோற்பொய்யைப்பேசி யருநரகழுந்திப்போனார்.

சகோதரரே, மெய்யான சாஸ்திரம் ஒன்று உண்டு. அதிலுள்ள பொருள் சத்தியமாகவும், திவ்வியமாகவும் இருக்கிறது. அதிலே பொய்யும் கலப்பும் இல்லை. அது நல்ல உபதேசத்தையும், மெய்ஞ்ஞானத்தையும் வெளிப்படுத்துகிறது. காற்றானது மேகத்தை ஓட்டுவதுபோலே, அது அஞ்ஞானமென்கிற மந்தாரத்தை ஓட்டுகிறது. கிறிஸ்துவேதமே அந்தச் சத்திய சாஸ்திரம்.

அது யாவரும் வாசிக்கும்படி அளவுள்ளதாயிருக்கிறது. அது உலகத்திலுள்ள சமஸ்த தேசத்துப் பாஷைகளிலும் திருப்பி, பிரசித்தப்படுத்துவதற்குத் தகுதியாயிருக்கிறது: அது வசனரூபமாயும், சகல சனங்களும் படிப்பதற்கு ஏற்றதாயும் இருக்கிறது.

இதுவுமல்லாமல், அது தெளிவாக இருக்கிறது. எவனும் வாசிக்கலாம்; உணரலாம்; தியானிக்கலாம்; படிக்கத் தெரியாதவனும் காதாலே கேட்டு, பொருள் அறிந்து, நல்ல வழியைக் காணலாம்.

மெய்யான தேவன் ஒருவரே இருக்கிறாரென்றும், அவர் இத்தன்மையானவரென்றும், அந்தச் சத்திய சாஸ்திரம் அறி

* இ-ள். உலகிலே — பூலோகத்திலே. பிறந்து — தோன்றின. முன்னோர்—முன்னோர்கள். ஓதிய—சொன்ன. கலைகளெல்லாம்—சாஸ்திரங்களெல்லாம். நிலையதாம்—நித்தியமாகிய. சோதிதன்னை—கடவுளை. நிசமதாய் — உண்மையாக. சொன்னதில்லை—சொல்லவில்லை. (அந்த முன்னோர்களும் அந்தச் சாஸ்திரங்களை) பல பல பேதமாக—ஒன்றுக்கொன்று வெகு வித்தியாசமாக. பங்கமாய்—குற்றமாய். கூறுசெய்து — பிரிவுபடுத்தி. அலகைபோல் — பிசாசைப்போல. பொய்யைப்பேசி—பொய்களைச் சொன்னபடியினாலே. அரு—கொடிய. நரகு—நரகமாகிய குழியிலே. அழுந்திப் போனார்—முழுகிப்போனார்கள். எ-று.

விக்கிறது. கண்ணுடியிலே ஒருவன் பார்த்தால், தன்னுடைய முகரூபத்தை அறிவது எவ்விதமோ, அவ்விதமே அந்தச் சத்திய வேதத்தை விசுவாசத்தோடே படித்தால், தேவனை யும், அவருடைய பரிசுத்த தன்மையையும் அறியலாம்.

காமத்துக்கும் மோகத்துக்கும் உரிய அசுத்தமான கதை கள் அந்தக் கிறிஸ்துவேதத்திலே கிடையாது. மனதைக் கெடுக்கத் தக்கது அதிலே ஒன்றுவதும் இல்லை. மனுஷர்கள் தங்கள் பாவத்தைக் குறித்து நினைத்துத் துக்கித்து, அதை விட்டு, தேவனிடத்திலே அன்போடே சேருவதற்குத் தகுதி யான போதனையோ அதிலே நிறைந்திருக்கிறது.

மேலும் அந்தச் சாஸ்திரம் பாவநிவிர்த்தியையும், மோ ட்ச பாக்கியத்தையும் அடைகிற மார்க்கத்தைத் தெரிவிக்கி றது. இதைக் கொஞ்சம் விவரித்துச் சொல்லுகிறோம்: உற் றுக் கேளுங்கள்.

நாமெல்லாரும் தேவனுடைய கட்டளைகளை மீறி, பாவஞ் செய்தோம். நம்முடைய பாவத்தைத் தீர்க்கவும், நரகத்துக் குத் தப்பவும், மோட்சத்தை அடையவும், நமக்குத் திராணி யில்லை. இவ்வளவாய்க் கெட்டுப்போன நம்மை இரட்சிக்கும் படியாக, இயேசுக்கிறிஸ்துவானவர் இவ்வுலகத்திலே அவ தரித்தார். அந்த இயேசுக்கிறிஸ்துவே கர்த்தாதி கர்த்தர். வானலோகத்தை அவர் விட்டு, இந்தப் பூலோகத்துக்கு இற ங்கிவந்து, மனுஷனாய்ப் பிறந்தார். முப்பத்து மூன்று வரு ஷம் பூமியிலே தங்கினார். பரம குருவாய்ப் பிரகாசித்தார். சத்தியத்தை உபதேசித்தார். வெளிச்சத்தைப் போலே தம் முடைய அருளை வீசினார். நம்முடைய பாவத்தையும் சுமந்தார். ஒரு மலையைப் பேர்த்து, உங்கள் தலையின்மேல் வைத்தால், அதைத் தாங்குவீர்களா? தாங்கமாட்டீர்களே. அது உங்களை நசுக்கிவிடுமல்லவா? அதைப்போல, உங்கள் பாவம் உங்களை நரகத்திலே அமுக்கி, உங்களை அந்த நித்திய தண்டனைக்குட்படுத்தும்படியாக இருக்கிறது. மலைகளைப்

பார்க்கிலும் பளுவாயிருக்கிற நம்முடைய பாவங்களைச் சுமந்து தீர்க்கிறதற்கே இயேசுக்கிறிஸ்து வந்தார். நாம் அடையவேண்டிய நரக தண்டனைக்குப் பதிலாக, அவர் இந்தப் பூமியிலே நமக்காகத் தண்டனைப்பட்டார். அதினிமித்தம் சிலுவைமரத்தில் அறையப்பட்டார். மன்னுயிருக்காகத், தம் முயிரை விடுத்தார். மறுபடியும் உயிரோடே எழுந்தார். திரும்பிப் பரலோகத்துக்குப் போனார். அவர் பாவமில்லாத பரிசுத்தர். அவர் பூமியிலே செய்ததெல்லாம் புண்ணியமே. அவரை நாம் விசுவாசித்தால், அவர் பட்ட பாடுகளினாலே நமக்குத் தண்டனை வராதபடி தொலையும். அவர் செய்த புண்ணியத்தினாலே நம்முடைய பாவம் தீரும்; நமக்கு மோட்சமும் கிடைக்கும். இதுவே வழி. வேறே இல்லை.

இந்தச் சத்திய சாஸ்திரத்திலே போதிக்கப்பட்ட வழியும் ஒன்றுதான். எல்லாப் பாவத்தையும் விட்டு, லோகரட்சகராகிய இயேசுக்கிறிஸ்துவை நம்பி, அன்போடே நடப்பதே அந்த வழி. அந்த வழியிலே சேர்ந்து நடக்கிறவர்கள் இயேசுக்கிறிஸ்துவினாலே நித்திய மோட்ச சுகத்தை அடைவார்கள். அந்த வழியிலே சேராதவர்களெல்லாரும் நித்திய நரகத்திலே விழுவார்கள்.

இப்படி இந்தச் சத்திய சாஸ்திரமானது, வழியைவிட்ட நமக்கு வழிகாண்பித்து, இருளிலே சேர்ந்த நமக்குப் பரம வெளிச்சமாய்ப் பிரகாசித்து, காட்டிலே அகப்பட்ட நம்மை அதிலிருந்து தப்புவித்து, பெலன் இழந்த நமக்குக் கைலாகு கொடுத்து, தேவதுரோகிகளாய்த் திரிந்த நம்மை மறுபடியும் தேவனிடத்திலே சேர்க்கின்றது. இப்படிப்பட்ட சாஸ்திரமே நமக்கு வேண்டும். இந்தக் கிறிஸ்துவேதமே தேவன் திருவாய்மலர்ந்தருளின சத்திய சாஸ்திரம்.

பிரியமானவர்களே, பொய்யான சாஸ்திரம் விஷத்தைப் போல் இருக்கிறது. அதை உட்கொள்ளுகிறவன் பிழைக்க மாட்டான். உங்கள் சாஸ்திரம் அப்படியிருக்கிறதினாலே,

அதை நீக்கிவிடுங்கள். கிறிஸ்துவின் சத்திய வேதமோ அமிர்தத்தைப்போல் இருக்கிறது. அவருடைய வசனமே சஞ்சீவி மருந்து. அதை உட்கொள்ளுகிறவன் முத்தியுலகத்திலே பிழைப்பான். அதை நீங்கள் ஏற்றுக்கொள்ளாமல்போனால், நீங்கள் உங்களைக் கெடுத்துக் கொள்ளுகிறவர்களாக இருப்பீர்கள்.

* அருமறைசோரு மறிவிலான்செய்யும்
பெருமிறைதானே தனக்கு.

## இதன் பொருள்.

அருமையான வேதத்தைத் தள்ளிவிடுகிற மூடாத்துமா தனக்குத்தானே பெரிய தீமையைச் செய்துக்கொள்ளுகிறான்.

எங்களுடைய சாஸ்திரம் எங்களோடே பிறந்தது: அதை எப்படி விடுவோமென்று பிடிவாதமாய்த் தர்க்கம்பண்ணுகிறீர்கள்.

† உடன்பிறந்தார்சுற்றத்தா ரென்றிருக்கவேண்டாம்
உடன்பிறந்தேகொல்லும் வியாதி—யுடன்பிறவா
மாமலையிலுள்ள மருந்தேபிணிதீர்க்கும்
அம்மருந்துபோல்வாரு முண்டு.

---

குறள். அரு. அதி: எ.

* இ-ள். அரு—பெறுகிறதற்கு அருமையான. மறை—வேதத்தை. சோரும்—தனக்கு நன்மையென்று அறியாமல் விட்டுவிடுகிற. அறிவிலான்—புத்தியில்லாதவன். பெரு—மிகுந்த. மிறை—துன்பத்தை. தானே—தானே. தனக்குச் செய்யும்—தனக்குச் செய்துக்கொள்ளுவான். எ-று.

மூதுரை.

† இ-ள். உடன்பிறந்தார் — கூடப்பிறந்தவர்கள். சுற்றத்தாரென்று—துணையாவோரென்று. இருக்கவேண்டாம்—நம்பியிருக்க வேண்டாம். (ஏனெனில்) வியாதி—வியாதியானது. உடன் பிறந்தே—கூடப்பிறந்தே. கொல்லும்—கொன்றுவிடும். மா—

இந்தப் பாட்டிலே கண்ட கருத்து மெத்தவும் நல்லது. நம் மோடேகூடப் பிறந்த வியாதியானது நம்மைக் கொல்லும். நம்மோடேகூடப் பிறவாமல், தூரமான மலைகளில் உண்டான மருந்தானது நம்முடைய வியாதியைத் தீர்க்கும்.

உங்களோடே பிறந்த வியாதி உங்கள் சாஸ்திரமே. தூர தேசத்திலிருந்து உங்களிடத்தில் இப்போது வந்திருக்கிற கிறிஸ்துவேதமே உங்கள் வியாதியைத் தீர்க்கத்தக்க அவிழ்தமாயிருக்கிறது. ஆதலால், அதை ஆசையோடே ஏற்றுக்கொள்ளுங்கள்.

வர வர இந்தக் கிறிஸ்துவேதம் இந்தத் தேசத்திலே நிலைகொள்ளும். அதினுடைய நன்மையை மனுஷர்கள் கண்டு, களிப்பார்கள். அப்போது பொய்யான சாஸ்திரங்கள் ஓடிப்போகும். போன வழியும் புல்லு முளைத்துப்போம். அங்கே நடப்பார் யாருமில்லாமலிருக்கும்.

காட்டிலே இராத்திரி காலத்தில் கொள்ளிவாய்ப் பிசாசு தோன்றுகிறதென்று சிலர் சொல்லுவார்கள். அது பிசாசல்ல. அது சேற்று நிலங்களில் எழும்புகிற ஒருவிதமான காற்று. அது இரவிலே நெருப்பு ரூபமாய் விளங்கும். அது பள்ளங்களிலும், சேறும் உளையுமான இடங்களிலும், ஆடிக்கொண்டிருக்கும். அப்படிப்பட்ட காட்டில் அகப்பட்டவர்கள் சிலவேளை அந்தப் பொய் வெளிச்சத்தைக் கண்டு, அது ஊர் வெளிச்சமென்று நினைத்து, மயங்கி, அதைத் தொடர்ந்துபோய், பள்ளத்திலே விழுந்து, சேற்றிலே புதைந்து, சாகிறார்கள். அப்படியே பொய்யான சாஸ்திரம் கள்ள வெளிச்சமாய் மனுஷர்களை நரகபள்ளத்திலே அகப்படுத்தும். மெய்

பெரிய. மலையிலுள்ள—மலையிலே தோன்றின. மருந்து—மருந்தானது. உடன்பிறவா—கூடப்பிறவாமலிருந்தும். பிணி—அந்த வியாதியை. தீர்க்கும்—நீக்கிவிடும். அம்மருந்துபோல்வாரும்—அப்படிப்பட்ட மருந்தை ஒத்தவர்களும். உண்டு—உலகத்திலே உண்டு. எ-று.

யான சாஸ்திரமோ வீட்டுவெளிச்சத்தைப் போலிருக்கிறது. வழிதப்பினவன் அப்படிப்பட்ட வெளிச்சத்தைக் கண்டால், அதை நோக்கி நடந்து, வீட்டைச்சேர்ந்து, துன்பமெல்லாம் தீர்ந்து, சுகத்தை அனுபவிப்பானல்லவா? அதைப்போல, இந்தக் கிறிஸ்துவேதத்தைக் கண்டடைந்து, படித்து, நம்பி, இதின்படி நடக்கிறவன் மோட்சமென்னும் நித்திய பேரின்ப வீட்டைச்சேர்ந்து, பரமானந்த சவுக்கியத்தைப் பெற்றுக் கொள்ளுவான்.



# உபகிரந்தம்.

## APPENDIX TO No. II.

## முன் சொன்னவைகளுக்கு உதாரணங்கள்.

### (க.) மனுஷர்களுக்குச் சாஸ்திரம் வேண்டுமென்பது.

ஹிதோபதேசம்.

అనేకసంశయోచ్ఛేది పరోక్షార్థస్యదర్శకం
సర్వస్యలోచనంశాస్త్రం యస్యనాస్త్యంధఏవసః.

இதன் பதவுரை.

*అనేక—அனேக. సంశయ—சந்தேகங்களை. ఉచ్ఛేది—அறுக்கிறது. పరోక్ష—காணப்படாத. అర్థస్య—பொருளை. దర్శకం—காட்டுகிறது. సర్వస్య—எல்லாருக்கும். లోచనం—கண். శాస్త్రం—சாஸ்திரம். యస్య—எவனுக்கு. నాస్తి—இல்லையோ. సః—அவன். అంధ, ఏవ—குருடனே.*

கருத்துரை.

*அனேக சந்தேகங்களை அறுக்கிறதும், காணப்படாத வஸ்துவைக் காண்பிக்கிறதும், எல்லாருக்கும் கண்ணாயிருக்கிற*

துமான சாஸ்திரம் எவனுக்கு இல்லையோ, அவனே குருடனு யிருக்கிறான்.

(௨.) இந்துக்களுடைய நாலு வேதமும் ஒரு காலத்தில் உண்டாகாமல், அனாதியாயிருக்கிறதாகச் சொல்லப் பட்டது.

**வேதாந்த சித்தாந்த சமவாதம்: வஸ்து நிச்சயம்.**

*அன்னநான்மறைய னாதியாமம்மறை தாமும்*
*சொன்னநற்பொருண் மெய்ப்பொருளப்பொரு டுணிந்தோர்*
*இன்னலின்றியெந் நாளுமோரியல்பின ராக*
*மன்னிவேறிலாப் பேரின்பந்தன்னில்வாழ் குவரே.* (சுரு.)

இதன் பதவுரை.

அன்ன—அப்படிப்பட்ட. நான்மறை—நான்கு வேதங்களும். அனாதியாம்—அனாதியாகும். அம்மறைதாமும்—அந்த வேதங்களும். சொன்ன — சொல்லிய. நற்பொருள் — நல்லபொருள். மெய்ப் பொருள்—உண்மைப்பொருளாம். அப்பொருள்—அந்தப்பொருளை. துணிந்தோர்—உறுதியாகக்கொண்டவர்கள். இன்னலின்றி—துன் பமில்லாமல். எந்நாளும்—எப்போதும். ஓரியல்பினராக—ஒரே தன்மையை உடையவர்களாக. மன்னி—நிலைபெற்று. வேறிலா— தனக்குமேல் வேறில்லாத. பேரின்பந்தன்னில்—பேரானந்தத்தில். வாழ்குவர்—வாழ்வார்கள். எ-று.

கருத்துரை.

அந்த நாலு வேதமும் அனாதியாயிருக்கிறது. அந்த வே தங்களும் சொன்ன நல்ல பொருள் உண்மைப் பொருளா யிருக்கிறது. அந்தப் பொருளை உறுதியாகக் கொண்டவர்கள் துன்பமில்லாமல், எப்போதும் ஒரே தன்மையுள்ளவர்களாய் நிலைத்து, பேரானந்தத்திலே வாழுவார்கள்.

(௩.) இந்துக்களுடைய நாலு வேதமும் பிரமாவினுடைய நாலு முகத்திலுமிருந்து உண்டானதாகச் சொல்லப் பட்டது.

**பாகவதம்: மூன்றாவது ஸ்கந்தம்: பன்னிரண்டாம் அத்தியாயம்.**

కదాచిద్ధ్యాయత స్స్రష్టు ర్వేదా ఆసంశ్చతుర్ముఖాత్
కథంస్రక్ష్యామ్యహంలోకాన్ సమవేతాన్యథాపురా.

ఋగ్యజుస్సామాథర్వాఖ్యాన్ వేదాన్పూర్వాదిభిర్ముఖైః
శస్త్రమిజ్యాంస్తుతిస్తోమం ప్రాయశ్చిత్తంవ్యధాత్క్రమాత్.
(௩௪, ௩௭.)

### இதன் பதவுரை.

పురా—முன்னே. యథా—எவ்விதமாய் (இருந்ததோ, அவ்வித மாகவே). సమవేతాన్—திரளான. లోకాన్—உலகங்களை. అహం—நான் (மறுபடியும்). కథం—எப்படி. స్రక్ష్యామి—சிருஷ்டிப்பேன் (என்று). ధ్యాయతః—தியானித்துக்கொண்டிருக்கிற. చతుర్ముఖాత్—நான்முகனாகிய. స్రష్టుః—பிரமாவினாலே. వేదాః—வேதங்கள். కదాచిత్—ஒருகாலத்திலே. ఆసన్—உண்டாயின.

ఋక్—இருக்கு. యజుః—யசுர். సామ—சாமம். అథర్వ—அதர்வணம். ఆఖ్యాన్—என்று சொல்லப்பட்ட. వేదాన్—வேதங்களை. పూర్వాదిభిః—(தன்னுடைய) கிழக்குமுகம் முதலான. ముఖైః—முகங்களிலிருந்து. క్రమాత్—கிரமமாய். వ్యధాత్—உண்டாகச் செய்தான். శస్త్రం—மந்திரஸ்தோத்திரத்தையும். ఇజ్యాం—யாகத்தையும். స్తుతిస్తోమం—கீதத்தையும். ప్రాయశ్చిత్తం—பிராயச்சித்தத்தையும் (உண்டாகச் செய்தான்).

### கருத்துரை.

முன்னே எவ்விதமாயிருந்ததோ அவ்விதமாகவே திரளான உலகங்களை நான் மறுபடியும் எப்படிச் சிருஷ்டிப்பேனென்று

தியானித்துக்கொண்டிருந்த நான்முகனாகிய பிரமாவினாலே வேதங்கள் உண்டானது.

அந்தப் பிரமாவானவன் தன்னுடைய நாலு முகங்களிலுமிருந்து கிரமமாய் இருக்குவேதத்தையும், யசுர்வேதத்தையும், சாமவேதத்தையும், அதர்வணவேதத்தையும் உண்டாகச் செய்தான். அதுவுமல்லாமல், மந்திரஸ்தோத்திரத்தையும், யாகத்தையும், கீதத்தையும், பிராயச்சித்தத்தையும் உண்டாக்கினான்.

(௪.) வேதம் ஆதியிலே ஒன்றாயிருந்ததென்றும், பின்பு புரூரவன் என்கிற இராசாவினாலே வேதம் *மூன்றாய் உண்டானதென்றும், சொல்லப்பட்டது.

**பாகவதம்: ஒன்பதாம் ஸ்கந்தம்: பதினாலாம் அத்தியாயம்.**

ఏకఏవపురావేదః ప్రణవస్సర్వవాఙ్మయః
పురూరవసఏవాసీ త్త్రయీత్రేతాముఖేనృప. (௰௧, ௰௨.)

### இதன் பதவுரை.

నృప—ஓ அரசனே. పురా—முன்னே. వేదః—வேதமானது. ఏక ఏవ—ஒன்றாகமாத்திரம் இருந்தது. సర్వ—எல்லா. వాఙ్మయః—வாக்குமயமான. ప్రణవః—பிரணவ மந்திரமே (அந்த வேதம்). త్రేతా—திரேதாயுகத்தின். ముఖే—ஆரம்பத்திலே. పురూరవసఏవ—புரூரவனாலேயே. త్రయీ—மூன்று வேதமும். ఆసీత్—உண்டானது.

### கருத்துரை.

ஓ அரசனே, ஆதியிலே ஒரே வேதம் இருந்தது. எல்லா வாக்குமயமான †பிரணவ மந்திரமே அந்த வேதம். திரே

* இந்துக்களுடைய நூல்களில் வேதங்களை மூன்றாகத் தொகைப் படுத்துகிறதுமுண்டு.

† ஓம் என்பதே பிரணவ மந்திரம்.

தாயுகத்தின் முதலிலே புரூரவன் என்கிற இராசாவினலே தான் மூன்று வேதமும் உண்டானது.

(ரு.) விஷ்ணுவானவன் துவாபரயுகத்திலே வேதவியாசனாக ரூபமெடுத்து ஒன்றாயிருந்த வேதத்தை நாலு வேதமாகப் பிரித்தானென்று சொல்லப்பட்டது.

விஷ்ணுபுராணம்.

వేదమేకంచతుర్భేదం కృత్వాశాఖాశతైర్విభుః
కరోతిబహులంభూయో వేదవ్యాసస్వరూపధృక్.

இதன் பதவுரை.

విభుః—விஷ்ணு. భూయః—பலமுறையும். వేదవ్యాస—வேதவியாசனாக. స్వరూపధృక్—ரூபமெடுத்து. వేదమేకం—ஒன்றான வேதத்தை. చతుర్భేదం—நாலுபேதமாக. కృత్వా—செய்து. శాఖా—வேதப் பிரிவு. శతైః—நூறினாலே. బహులం—விஸ்தாரம். కరోతి—ஆக்கினான்.

கருத்துரை.

விஷ்ணுவானவன் வேதவியாசனாக ரூபமெடுத்து, ஒன்றாயிருந்த வேதத்தை நான்கு வேதமாகப் பிரித்து, அனேக உட்பிரிவுகளினாலே விஸ்தாரமாக்கினான்.

(சு.) சிவனானவன் பிரமாவைப் பிறப்பித்து, அந்தப் பிரமாவுக்கு வேதங்களைப் போதித்தானென்று சொல்லப்பட்டது.

பிரமோத்தர காண்டம்: சீருத்திரமகிமையுரைத்தது.

ஆதலால்வருந்தல்கேட்டி யரூபியாயமலனாகிச்
சோதியாய்நின்றவீசன் சுவேச்சையாங்குணங்கண்மூன்றுள்
ஓதுராசதத்திலாதி விரிஞ்சனையுதிப்பித்தன்றே
வேதநூலனைத்துமந்த விரிஞ்சனுக்கமைத்துப்பின்னும். (ம.)

### இதன் பதவுரை.

ஆதலால்—ஆகையினாலே. வருந்தல்—(அரசனே, நீ) வருந்தாதே. கேட்டி—(சொல்வதைக்) கேட்பாயாக. அருபியாய்—அருபியுமாய். அமலனாகி—நிர்மலனுமாய். சோதியாய்—சோதியுமாய். நின்ற—இருக்கிற. ஈசன்—சிவனானவன். சுவேச்சையாம்—தன்னுடைய இச்சையினாலே எடுத்துக்கொண்ட. குணங்கள் மூன்றுள்—(சாத்துவிகம், இராசதம், தாமதம் என்கிற) மூன்றுகுணங்களுக்குள்ளே. ஓது—சொல்லப்பட்ட. ராசதத்தில்—ஒன்றாகிய இராசத குணத்தில். ஆதிவிரிஞ்சனை—பிரமதேவனை. உதிப்பித்து—சிருஷ்டித்து. வேதநூலனைத்தும்—வேதசாஸ்திரங்களையெல்லாம். அந்த விரிஞ்சனுக்கு—அந்தப் பிரமதேவனுக்கு. அன்றே—அப்பொழுதே. அமைத்து—அருளிச்செய்து. பின்னும்—பின்னும். எ-று.

### கருத்துரை.

சிவனானவன் தன்னுடைய இச்சையினாலே எடுத்துக்கொண்ட மூன்று குணங்களுக்குள்ளே ஒன்றாயிருக்கிற இராசத குணத்தினாலே பிரம தேவனைச் சிருஷ்டித்து, வேத சாஸ்திரங்களையெல்லாம் அந்தப் பிரமாவுக்கு அப்போதே போதித்தான்.

**(எ.) பிரமாவானவன் காயத்திரி மந்திரத்தை உண்டாக்கி, அதிலிருந்து நான்கு வேதங்களைத் தோன்றச் செய்தானென்று சொல்லப்பட்டது.**

### ஹரிவம்சம்.

తతో௦సృజద్వై త్రిపదాం గాయత్రీం వేదమాతరం
అకరోచ్చైవచతురో వేదాన్ గాయత్రిసంభవాన్. (௰௯௩௫௰௬.)

### இதன் பதவுரை.

తతః—பின்பு. వేదమాతరం—வேதங்களுக்குத் தாயாயிருக்கிற. త్రిపదాం—மூன்று அடிகளையுடைய. గాయత్రీం — காயத்திரி மந்

திரத்தை. అసృజత్—சிருஷ்டித்தான். గాయత్రీసంభవాః—காயத்திரியி லிருந்து பிறந்த. చతురః—நான்கு. వేదాన్,చైవ—வேதங்களேயும். అకరోత్—செய்தான்.

### கருத்துரை.

வேதங்களுக்குத் தாயாகவும், மூன்று அடிகளேயுடைய தாகவும் இருக்கிற காயத்திரிமந்திரத்தைப் பிரமா உண் டாக்கினுன். அந்தக் காயத்திரியிலிருந்து நாலு வேதங்க ளேயும் உண்டாகச்செய்தான்.

**மேற்சொன்னதற்கு முழுவதும் எதிர்ப்பேச்சாக, மானவ தரும சாஸ்திரத்திலே, பிரமாவானவன் மூன்று வேதங் களிலிருந்தே காயத்திரிமந்திரத்தைக் கறந்தானென்று சொல்லப்பட்டது.**

**மானவதருமசாஸ்திரம்: இரண்டாம் அத்தியாயம்: எஎ-ம் சுலோகம்.**

త్రిభ్యఏవతు వేదేభ్యః పాదంపాదమదూదుహత్
తదిత్యృచోஉస్యాస్సావిత్ర్యాః పరమేష్ఠీప్రజాపతిః.

### இதன் பதவுரை.

తదితి—தத் என்கிற (சொல்லே முதலில் உடைய). అస్యాః—அந்த. సావిత్ర్యాః—காயத்திரி மந்திரத்தினுடைய. ఋచః—அடிகளே. పరమేష్ఠీ—மேலான. ప్రజాపతిః—பிரமாவானவன். త్రిభ్యః—மூன்று. వేదేభ్యః,ఏవ—வேதங்களிலிருந்தே. పాదంపాదం—பாதம் பாதமாக. అదూదుహత్—கறக்கச் செய்தான். (తు என்பது அசைநிலே.)

### கருத்துரை.

தத் என்கிற சொல்லே முதலில் உடைய காயத்திரிமந் திரத்தினுடைய மூன்று அடிகளேப் பிரமாவானவன் மூன்று வேதங்களிலிருந்தே ஒழுங்காகக் கறந்தான்.

(அ.) பிரமாவானவன் மூன்று வேதங்களைக் கறந்தானென்று சொல்லப்பட்டது.

**மானவதருமசாஸ்திரம்: க-ம் அத்தியாயம். உ௩-ம் சுலோகம்.**

అగ్నివాయురవిభ్యస్తు త్రయంబ్రహ్మసనాతనం
దుదోహయజ్ఞసిద్ధ్యర్థ మృగ్యజుస్సామలక్షణం.

*இதன் பதவுரை.*

*యజ్ఞ—யாகம். సిద్ధ్యర్థం—சித்தியாகும்பொருட்டு. ఋగ్యజుస్సామ—இருக்கு, யசுர், சாமம் (என்கிற). లక్షణం—பேரையுடைய. సనాతనం—நித்திய. త్రయంబ్రహ్మ—மூன்று வேதங்களை. అగ్ని, వాయు, రవిభ్యః—அக்கினி, வாயு, சூரியன்களிலிருந்து. దుదోహ—கறந்தான்.*

**கருத்துரை.**

*யாகங்களை நிறைவேற்றும்படியாக, பிரமாவானவன் நெருப்பிலேயிருந்து இருக்கு வேதத்தையும், காற்றிலேயிருந்து யசுர் வேதத்தையும், சூரியனிலேயிருந்து சாம வேதத்தையும் கறந்தான்.*

(க.) பூணூலைத் தரித்த பிராமணர் முதலானவர்களுக்கே வேதம் உரியதென்று வேதார்த்த பிரகாசமென்கிற நூலிலே சொல்லப்பட்டது.

తస్మాదుపనీతైరేవ త్రైవర్ణికైర్వేదస్యసంబంధః.

*இதன் பதவுரை.*

*తస్మాత్—ஆகையினாலே. వేదస్య—வேதத்தினுடைய. సంబంధః—சம்பந்தம். త్రైవర్ణికైః—(பிராமணர், க்ஷத்திரியர், வைசியர் என்கிற) மூன்று சாதிகளாயிருக்கிற. ఉపనీతైః,ఏవ—பூணூலைத் தரித்தவர்களுக்கே.*

**கருத்துரை.**

வேதமானது பூணூலைத் தரித்த பிராமணர் க்ஷத்திரியர் வைசியர் என்னப்பட்ட மூன்று சாதிகளுக்கேயல்லாமல், வேறே யாருக்கும் உரியதல்ல.

(௰.) ஸ்திரீகளும் சூத்திரர்களும் வேதங்களைக் கேட்கவுங் கூடாதென்று சொல்லப்பட்டது.

స్త్రీ శూద్రద్విజబంధూనాం త్రయీనశ్రుతిగోచరా.

**இதன் பதவுரை.**

స్త్రీ—ஸ்திரீகளும். శూద్ర—சூத்திரர்களும். ద్విజబంధూనాం—சாதி கெட்ட துவிசர்களும்* (ஆகிய இவர்களுடைய). శ్రుతి—காதுக்கு. న,గోచరా—விஷயமாகாது. త్రయీ—மூன்றாகிய வேதம்.

**கருத்துரை.**

இருக்கு, யசுர், சாமம் என்கிற மூன்று வேதங்களையும், ஸ்திரீகளும் சூத்திரர்களும் சாதிகெட்ட துவிசர்களும் காதினாலே கேட்கவுங்கூடாது.

(௰௧.) இதிகாசபுராணம் ஐந்தாம் வேதமாகச் சிருஷ்டிக்கப் பட்டதென்பது.

பாகவதம்: மூன்றாவது ஸ்கந்தம்: பன்னிரண்டாம் அத்தியாயம்.

ఇతిహాసపురాణాని పంచమంవేదమీశ్వరః
సర్వేభ్యఏవముఖేభ్య స్ససృజేసర్వదర్శనః. (௩௯.)

* துவிசரென்பதற்கு, பூணூலைத் தரித்த பிராமணர் க்ஷத்திரியர் வைசியரென்பதே பொருள்.

### இதன் பதவுரை.

ఇతిహాసపురాణాని—இதிகாச புராணங்களை. పంచమం—ஐந்தாம். వేదం—வேதமாக. సర్వ—சகலத்தையும். దర్శనః—பார்க்கிறவனாகிய. ఈశ్వరః—ஈசுரன். సర్వేభ్యః—(தன்னுடைய) எல்லா. ముఖేభ్యః, ఏవ—முகங்களிலுமிருந்தே. ససృజే—சிருஷ்டித்தான்.

### கருத்துரை.

சகலத்தையும் பார்க்கிற ஈசுரன் தன்னுடைய எல்லா முகங்களிலுமிருந்து இதிகாச புராணங்களை ஐந்தாம் வேதமாகப் பிறப்பித்தான்.

## (௰௨.) உப்புக்கடல் முதலான ஏழு சமுத்திரம் உண்டேன்பது.

క్షారోదేక్షురసోదసురోదఘృతోదక్షీరోదదధి
మండోదశుద్ధోదాఃసప్తసింధవఃపరితఉపకల్పితాః.

### இதன் பதவுரை.

క్షార—உப்பு. ఉద—சலம். ఇక్షు—கரும்பு. రస—சாறு. ఉద—சலம். సురా—கள்ளு. ఉద—சலம். ఘృత—நெய். ఉద—சலம். క్షీర—பால். ఉద—சலம். దధిమండ—தயிரேடு. ఉద—சலம். శుద్ధ—நல்ல. ఉదాః—சலங்களையுடைய. సప్త—ஏழு. సింధవః—சமுத்திரங்கள். పరితః—சூழ. ఉపకల్పితాః—உண்டாக்கப்பட்டன.

### கருத்துரை.

உப்பு, கருப்பஞ்சாறு, கள்ளு, நெய், பால், தயிர், நல்ல நீர் என்னப்பட்ட சலங்களையுடைய ஏழு சமுத்திரம் சூழ உண்டாக்கப்பட்டது.



# இந்துக்களுடைய சாஸ்திரம் பொய்யென்பதற்கு வேறு சில உதாரணங்கள்.

## எட்டுயானைகள் பூமியைத் தாங்கிச் சுமக்கிறதாகச் சொல்லப்பட்டது.

### பாகவதம்: நரசிங்கப்படலம்.

வஞ்சனையவுணரழைத்திடநடுங்கி மாதிரந்தாங்கிடுங்கரிகள்
அஞ்சனங்குமுதம்வாமன மைராவதநிகரற்றபுண்டரீகம்
விஞ்சியகிரிநேர்புட்பதந்தம் மெய்விளங்கியசுப்பிரதீபம்
அஞ்சவேயடருஞ்சாருவபூம மிவையெட்டுமெண்வரையெனவந்த.
(௩௨௧.)

### இதன் பதவுரை.

வஞ்சனை — மோசத்தையுடைய. அவுணர் — அசுரர். அழைத்திட — கூப்பிடவே. மாதிரம் — திக்குகளை. தாங்கிடும் — சுமக்கிற. அஞ்சனம்—அஞ்சனமென்றும். குமுதம்—குமுதமென்றும். வாமனம்—வாமனமென்றும். ஐராவதம்—ஐராவதமென்றும். நிகரற்ற—ஒப்பற்ற. புண்டரீகம்—புண்டரீகமென்றும். விஞ்சிய—(புகழ்) மிகுந்த. கிரிநேர்—மலையையொத்த. புட்பதந்தம்—புட்பதந்தமென்றும். மெய்விளங்கிய—உண்மையாகப் பிரகாசிக்கிற. சுப்பிரதீபம்—சுப்பிரதீபமென்றும். அஞ்ச—சத்துருக்கள் பயப்பட. அடரும்—அவர்களை நெருக்குகிற. சாருவபூமம்—சாருவபூமமென்றும் (சொல்லப்பட்ட). இவையெட்டும்—இந்த எட்டு. கரிகள்—யானைகளும். எண்—எட்டு. வரையென—மலையென்று சொல்லும்படி. நடுங்கி—பயந்து. வந்த—வந்தன. எ-று.

### கருத்துரை.

அசுரர் கூப்பிட்டார்கள். அப்போது பூமியைத் தாங்கிச் சுமக்கிற எட்டு யானையும் பயந்து வந்தது. அந்த எட்டு யானையினுடைய பேர்கள் என்னவென்றால், அஞ்சனமென்

றும், குமுதமென்றும், வாமனமென்றும், ஐராவதமென்றும், புண்டரீகமென்றும், புட்பதந்தமென்றும், சுப்பிரதீபமென்றும், சாருவபூமமென்றும் சொல்லப்படும்.

## எச்சரிப்பு.

ஓ சனங்களே, முன்னே எடுத்துக்காட்டின ஒரு பாட்டிலே, ஆயிரம் தலையுள்ள பாம்பு பூமியைத் தன் படத்தின் மேல் தாங்குகிறதாகச் சொல்லியிருக்கிறது. இந்தப் பாட்டைப்பார்த்தால், எட்டு யானை முதுகு கொடுத்து, பூமியைச் சுமந்து, அந்தப் பாம்புக்கு உதவிசெய்வதுபோலே தோன்றுகிறது. அந்தக் கதையும் பொய். இந்தக் கதையும் பொய். இப்படிப்பட்ட அபத்தங்களைப் போதிக்கிற உங்கள் சாஸ்திரங்களை ஏன் நம்பிக் கைக்கொள்ளுகிறீர்கள்?

**பிரமா ஒரு முட்டைக்குள்ளே பிறந்து, பின்பு அதை இரண்டாகப் பிளந்து, அந்த முட்டைத்துண்டுகளிலே வானத்தையும் பூமியையும் ஏற்படுத்தினதாகச் சொல்லப்பட்டது.**

**மானவதருமசாஸ்திரம்: முதலாம் அத்தியாயம்.**

సోభిధ్యాయశరీరాత్ స్వాత్ సిసృక్షుర్వివిధాః ప్రజాః
అపఏవససర్జాదౌతాసువీజమవాసృజత్ ॥ (அ.)

తదండమభవద్ధైమంసహస్రాంశుసమప్రభం
తస్మిన్ జజ్ఞేస్వయంబ్రహ్మాసర్వలోకపితామహః॥ (கூ.)

తస్మిన్నండేసభగవానుషిత్వాపరివత్సరం
స్వయమేవాత్మనోధ్యానాత్ తదండమకరోద్ద్విధా॥ (௰.)

తాభ్యాంసశకలాభ్యాంచదివంభూమించనిర్మమే
మధ్యేవ్యోమదిశశ్చాష్టావపాంస్థానంచశాశ్వతం॥ (௧௩.)

இதன் பதவுரை.

సః—அந்தக்(கடவுள்). అభిధ్యాయ—தியானித்து. వివిధాః—பலவித மான. ప్రజాః—பிரசைகளை. స్వాత్—தன்னுடைய. శరీరాత్—சரீ ரத்திலிருந்து. సిసృక్షుః—சிருஷ்டிக்க ஆசைப்பட்டு. ఆదౌ—முத லிலே. అపః—சலங்களை. ససర్జ—சிருஷ்டித்தான். (பின்பு) తాసు— அவைகளிலே. బీజం—ஒருவித்தை. అవాసృజత్—வைத்தான். (ఏవ அசை.)

తత్—அந்த (வித்தானது). హైమం—பொன்மயமாயும். సహస్రాంశు—சூரியனு(க்கு). సమ—சமானமான. ప్రభం—பிரகாசமுள்ளதா யும் (இருக்கிற). అండం—ஒருமுட்டை. అభవత్—ஆயிற்று. తస్మిన్— அதிலே. స్వయం—(அந்தக்கடவுள்) தானே. సర్వలోక—சர்வலோ கத்து(க்கும்). పితామహః—பிதா(வாகிய). బ్రహ్మా—பிரமாவாய். జజ్ఞే— பிறந்தான்.

సః—அந்த. భగవాన్—பகவான். తస్మిన్—அந்த. అండే—முட்டை யிலே. పరివత్సరం—ஒரு வருஷம். ఉషిత్వా—வாசம்பண்ணி. స్వయమేవ—தானே. ఆత్మనః—தன்னுடைய. ధ్యానాత్—தியானத்திலே. తదండం—அந்த முட்டையை. ద్విధా—இரண்டு துண்டாக. అకరోత్—செய்தான்.

సః—அவன். తాభ్యాం—அந்த. శకలాభ్యాం—துண்டுகளிலே. దివం,చ—வானத்தையும். భూమిం,చ—பூமியையும். నిర్మమే—ஏற்படுத் தினன். మధ్యే—நடுவிலே. వ్యోమ—ஆகாசத்தையும். అష్టౌ—எட்டு. దిశః,చ—திக்குகளையும். అపాం—சலங்களின். శాశ్వతం—நித்திய. స్థానం,చ—ஸ்தானத்தையும் (ஏற்படுத்தினன்).

## கருத்துரை.

கடவுள் தியானஞ்செய்து, பலவிதமான பிரசைகளைச் சிருஷ்டிக்கவேண்டுமென்று ஆசைப்பட்டு, முதலிலே சலங்களைச் சிருஷ்டித்தான். பின்பு அந்தச் சலங்களுக்குள்ளே ஒரு வித்தை வைத்தான்.

அந்த வித்தானது பொன் ரூபமாயும் சூரியப்பிரகாசமாயும் இருக்கிற ஒரு முட்டை ஆயிற்று. அந்த முட்டையிலே அந்தக் கடவுள் பிரமாவாகிப் பிறந்தான்.

அந்தப் பகவான் அந்த முட்டையிலே ஒரு வருஷம் வாசம்பண்ணி, பின்பு தன்னுடைய தியானத்தினாலே அந்த முட்டையை இரண்டு துண்டாகப் பிளந்தான்.

அந்த இரண்டு முட்டைத் துண்டுகளினாலே வானத்தையும் பூமியையும் ஏற்படுத்தினான். நடுவிலே ஆகாசத்தையும், எட்டுத் திக்குகளையும், சலங்களின் இடத்தையும் ஸ்தாபித்தான்.

## எச்சரிப்பு.

ஓ சனங்களே, இதிலே சொல்லியிருக்கிறதைச் சிந்தித்துப் பாருங்கள். கடவுள் தண்ணீரிலே வைத்த ஒரு வித்து பெரிய முட்டையாய் வளர்ந்ததென்றும், அந்த முட்டைக்குள்ளே கடவுள் போய்ப் பிரமாவாய்ப் பிறந்தானென்றும், பிரமா அங்கே ஒரு வருஷம் சும்மா இருந்து, பின்பு அந்த முட்டையை இரண்டாகக் கிழித்து, வெளியே வந்து, பாதி முட்டையை வானமாக நிறுத்தி, பாதி முட்டையைப் பூமியாக வைத்தானென்றும், சொல்லுகிறது எவ்வளவு புத்தியீனமாயிருக்கிறது! வானமும் பூமியும் இவ்விதமாய் உண்டாக்கப்பட்டதென்று நினைக்கவும் கூடுமா? இப்படிப்பட்ட வீணான வார்த்தைகளைச் சொல்லுகிற உங்கள் சாஸ்திரங்களை என்னத்தினாலே விசுவாசிக்கிறீர்கள்?

## ஆட்சேபசமாதானம்.

கிறிஸ்துவேதம் மெய்யானால், அதைத் தெருத் தெருவாய்ப் பிரசங்கிக்கிறதென்ன என்று சிலர் ஆட்சேபிக்கிறதுண்டு. அது சரியான ஆட்சேபமல்ல. சாராயக்கடை மிகவும் கெட்டதல்லவா? ஆனாலும், அது இன்ன இடத்திலே இருக்கிறதென்று தெரிவிக்க வேண்டியதில்லை. எப்படிப்பட்ட இரகசியமான இடத்திலே வைத்தாலும், துஷ்ட மனுஷர்கள் அதைத் தேடிக்கொள்ளுவார்கள். தயிரானது மெத்தவும் நல்ல பதார்த்தமல்லவா? ஆனாலும், அதைத் தெருத்தெருவாய்க் கூறித்திரிவார்கள். அப்படியே பொய்யான சாஸ்திரத்தைப் பிரசங்கிக்க வேண்டியதில்லை. பொய்யை விரும்புகிற மனுஷர்கள் அதைத் தேடிக்கொள்ளுவார்கள். மெய்யான சாஸ்திரத்தையோ தயிரைப்போலவே வீதிவீதியாய்த் தெரிவிக்கலாம்.



## வேதவாக்கியம்.

(க.) சத்திய சாஸ்திரமாகிய கிறிஸ்து வேதம் மனுஷர்களாலே உண்டாகாமல், தேவனாலே உண்டானது.

உ. பேதுரு, க. அதி: உக.
உ. தீமோத்தேயு, ௩. அதி: ௰௬.

(உ.) அது பரிபூரணமும், நிச்சயமும், செவ்வையும், பரிசுத்தமும், சத்தியமும், நீதியுமானது. அது ஆத்துமாவை உயிர்ப்பித்து, ஞானத்தைத் தந்து, இருதயத்தைச் சந்தோஷப்படுத்தி, பரிசுத்தமாக்கும்.

௰௯. சங்கீதம்: எ—௯.
யோவான், ௰எ. அதி: ௰எ.

(௩.) அது மோட்சமார்க்கத்தைக் காட்டுகிற திவ்விய தீபம்.

௱௰௯. சங்கீதம்: ௱௫.
நீதிமொழி, ௬. அதி: ௨௨, ௨௪.

(௪.) அது துர்க்குணத்தை எரிக்கிற அக்கினியும், கல் நெஞ்சைப் பிளக்கிற சம்மட்டியுமானது.

எரேமியா, ௨௩. அதி: ௨௯.

(௫.) அது மனதை உருவக்குத்துகிற இருபுறமும் கூருள்ள கத்தியானது.

எபிரேயர், ௪. அதி: ௰௨.

(௬.) அது ஆத்துமாவை நனைத்துச் செழிப்பாக்குகிற மழையானது.

ஏசாயா, ௫௫. அதி: ௰, ௰௧.

(௭.) அது இருதயத்திலே விதைக்கப்படுகிற விதையானது.

லூக்கா, ௮. அதி: ௰௧—௰௫.

(௮.) அது இரட்சிப்பைத் தருவதற்குத் தேவ பலமுள்ளதாயிருக்கிறது.

ரோமர், ௧. அதி: ௰௬.

(௯.) அது பொன்னிலும் அருமை; தேனிலும் இனிமை.

௰௯. சங்கீதம்: ௰.

(௰.) அது என்றைக்கும் ஒழியாமல், நிலைநின்று நிறைவேறுவதாயிருக்கிறது.

௧. பேதுரு, ௧. அதி: ௨௪, ௨௫.
மத்தேயு, ௫. அதி: ௰௮.



# பாவம்.



சர்வத்துக்கும் மேலானவராயிருக்கிற தேவன் மனுஷர்களை உண்டாக்கி, அவர்களைப் பராமரித்து, காப்பாற்றிவருகிறார். ஆகையினாலே, அவர் எல்லாருக்கும் எசமானாயிருக்கிறார். மனுஷர்கள் நடக்கவேண்டிய ஒழுங்கை அவரே கட்டளையிடவேண்டும். அவர் இட்ட கட்டளைகளுக்கு யாவரும் அடங்கி நடக்கவேண்டும்.

தேவன் தம்முடைய சித்தத்தை வெளிப்படுத்தியிருக்கிறார். தம்முடைய கட்டளைகளை மனுஷருடைய நெஞ்சிலே தானே எழுதிவைத்திருக்கிறார். பொய் சொல்லுகிறதும், களவெடுக்கிறதும், கொலைசெய்கிறதும், கெட்ட செய்கையென்று எல்லாருக்கும் தெரியாதா? நன்றாய்த் தெரியும். கோபமும், லோபமும், மோகமும், பெருமையும், பொறாமையும், பகையும் கெட்டகுணமென்று யாவருக்கும் தெரியாதா? அதுவும் நன்றாய்த் தெரியும். எப்படித் தெரியும்? அந்தக் கெட்டவிதமாய் நடக்கப்படாதென்கிற கட்டளையைத் தேவன் எல்லாருடைய புத்தியிலும் எழுதியிருக்கிறபடியினாலேயல்லவா?

இதுவுமல்லாமல், தமது பரிசுத்த சத்திய வேதத்திலே தம்முடைய கட்டளைகளைத் தெளிவாகவும் விவரமாகவும் பிரசித்தப்படுத்தியிருக்கிறார். அந்தக் கட்டளைகளை, அவர்

தெரிவித்த கிரமப்படியே, சொல்லுகிறோம்: கேளுங்கள். அவைகள் பத்து:

க-வது. பொய்த்தேவர்களை வணங்காதிருங்கள்.

உ-வது. விக்கிரகங்களைக் கும்பிடாதிருங்கள்.

ங-வது. தேவனுடைய திரு நாமத்தை வீணாய்ப் பேசாதிருங்கள்.

ச-வது. ஓய்வுநாளைப் பரிசுத்தமாய் ஆசரியுங்கள்.

ரு-வது. தந்தை தாயாரைக் கனம்பண்ணுங்கள்.

சு-வது. ஒருவரையொருவர் கொலைசெய்யாதிருங்கள்.

எ-வது. விபசாரம் பண்ணாதிருங்கள்.

அ-வது. களவெடுக்காதிருங்கள்.

கூ-வது. பொய் சொல்லாதிருங்கள்.

௰-வது. பிறனுடைய பொருளை இச்சியாதிருங்கள்.

பாவம் இன்னதென்று இவைகளினாலே திட்டமாய் விளங்கும். தேவன் அருளிச்செய்த இந்தக் கட்டளைகளுக்கு இணங்கிநடப்பதே சரி. விரோதமாய் நடப்பதே பாவம்.

இந்தக் கட்டளைகளைத் தப்பாமல் கைக்கொண்டவன் எவனாவது ஒருவன் பூலோகத்தில் உண்டா? அப்படிப்பட்டவன் ஒருவனும் இல்லை. வேண்டாமென்று தேவன் விலக்கினதை மனுஷர்கள் செய்கிறார்கள். வேண்டுமென்று தேவன் விதித்ததைச் செய்யாமல் விடுகிறார்கள். இந்தப் பிரகாரம் நடந்து, எல்லாரும் கெட்டுப்போனார்கள்.

* செய்தக்கவல்ல செயக்கெடுஞ்செய்தக்க
செய்யாமையானுங் கெடும்.

---

குறள்: சஎ-ம் அதி: கூ.

* இ-ள். செய்-செய்ய. தக்கவல்ல—தகாதவைகளை. செய—ஒருவன் செய்வதினாலே. கெடும்—கெட்டுப்போவான். (அதினாலே

இப்படியே உலகத்திலுள்ள சகல மனுஷர்களும் தேவனுடைய கட்டளைகளை மீறி, பாவிகளாயிருக்கிறார்கள்.

ஓ சனங்களே, இது நிச்சயமான வார்த்தையல்லவா? மனுஷர்களுடைய நடத்தைகளைப் பாருங்கள். அனேகர் ஒன்றான மெய்த்தேவனை விட்டுவிட்டு, இல்லாத பல தேவர்களை உள்ளபொருள்போலே பாவனைசெய்து, வீணான பத்தியும் பொய்யான பூசையும் செலுத்துகிறார்கள். அனேகர் சிலைகளையும் கட்டைகளையும் நிறுத்திவைத்து வணங்கி, பசுவையும் பாம்பையும் குரங்கையும் கருடனையும் கூடக் கையெடுத்துக் கும்பிடுகிறார்கள். அனேகர் குலஸ்திரீக்குத் துரோகஞ் செய்து, பரஸ்திரீயின் முகத்தைப் பார்க்கிறார்கள். அனேகர் திருடுகிறார்கள். அனேகர் பொய் பேசுகிறார்கள். அனேகர் பல வஞ்சனைகளைச் செய்கிறார்கள். மனுஷர்கள் நாளுக்கு நாள் நம்முடைய கண்ணுக்குமுன்பாக நடக்கிற பல விதங்களைப் பார்த்தால், யாவரும் வழி தப்பினார்களென்றும், தேவ கட்டளையைக் கடந்துபோன பாபிஷ்டர்களாயிருக்கிறார்களென்றும், பிரத்தியட்சமாகத் தோன்றவில்லையா? கைப்புண்ணுக்குக் கண்ணாடி வேண்டுமா?

மனுஷர்களுடைய புறம்பான நடத்தைகளையல்லாமல், அவர்களுடைய உள்ளான குணங்களையும் சிந்தனைசெய்யுங்கள். அவர்கள் தங்களுக்குள்ளே எத்தனையோ கெட்ட இச்சைகளை வளர்க்கிறார்கள். தேவனுடைய கட்டளையைத் தங்களுக்கு மார்க்கமாக வைக்காமல், அதைத் தள்ளிப்போட்டு, தங்கள் இச்சையே தங்களுக்கு வழியாக வைத்துக்கொண்டு, அதின்படி ஓடுகிறார்கள். ஐயோ! நம்முடைய இருதயத்திலே நாம் குடியேற்றுகிற துரிச்சையே நமக்குப் பெரிய பகையாளி.

---

மாத்திரமல்லாமல்) செய்தக்க — செய்யத்தக்கவைகளை. செய்யாமையானும் — செய்யாமல் விடுவதினாலேயும். கெடும் — கெட்டுப்போவான். எ—று.

* புறப்பகைகோடியின் மிக்குறினுமஞ்சார்
அகப்பகையொன்றஞ்சிக் காப்ப.

புறத்திலுள்ள சத்துருக்கள் கோடாகோடி இருந்தாலும், பெரியோர்கள் அஞ்சமாட்டார்கள். உள்ளத்திலே ஒரே ஒரு சத்துரு இருந்தால், அதற்கே பயப்படுவார்களென்று இதிலே சொல்லியிருக்கிறது. மனுஷசாதி பாவஞ்செய்து கெட்டுப்போனதினாலே, அவர்களுடைய ஆத்துமா ஒரு புற்றுப்போலவும், துரிச்சைகள் அதிலே புகுந்து கிடக்கிற விஷப் பாம்புகள்போலவும், இருக்கிறது. இந்த இச்சைகளை அற்பமாய் எண்ணவேண்டாம். பாம்பு சிறிதானாலும், பெரிய யானையையும் கடித்துக் கொல்லும். அதைப்போலே, நம்மிலுள்ள பொல்லாத இச்சை தலையெடுத்து, படம் விரித்து, சீறி, கடித்து, நரகக் கொலையாக நம்மைக் கொல்லுவதற்கு வல்லமையுள்ளது. இப்படிப்பட்ட தகாத இச்சைகள் மனுஷர்களுடைய உள்ளத்தில் உண்டாயிருக்கிறபடியினாலே, அவர்களெல்லாரும் பாபாத்துமாக்களென்பது நிசமே.

இதுவுமல்லாமல், பாவிகளாயிருக்கிறோமென்பதற்கு நம்முடைய மனமும் சாட்சியிடுகின்றது. குற்றமுள்ள நெஞ்சு குறுகுறென்னும், குறும்பியுள்ள காது தினவு தின்னுமென்கிற பழமொழியைக் கேட்டிருப்பீர்கள். உலகத்திலே யாருக்குத்தான் அப்படி மனம் குறுகுறென்னுமலிருக்கும்? தீமை செய்தபின் நம்முடைய மனமானது நம்மைக் கண்டிக்கவில்லையா? நெஞ்சே, நீ குற்றஞ்செய்தாய்: கடவுள் இருக்கிறார்: பார்க்கிறார்: விசாரணைசெய்வார்: தண்டிப்பார்: நரகத்திலே தள்ளு

நீதிநெறிவிளக்கம்: ருரு.

* இ—ள். (அறிவுடையவர்கள் தங்களுக்கு) புறப்பகை—வெளியிலுள்ள சத்துருக்கள். கோடியின்—கோடியென்கிற கணக்கைப் பார்க்கிலும். மிக்குறினும்—அதிகமாக இருந்தாலும். அஞ்சார்—பயப்படமாட்டார்கள். அகப்பகை—உள்ளான சத்துரு. ஒன்று—ஒன்றுமாத்திரம் இருந்தால், அதற்கு. அஞ்சி—பயந்து. காப்ப—காப்பார்கள். எ—று.

வார் என்று அது ஈட்டியினுலே குத்துவதுபோல, நம்மைக் குத்தி, வாளினுலே அறுப்பதுபோல நம்மை அறுக்கவில்லையா? நாம் அக்கிரமஞ்செய்தால், இருதயம் கொதிக்கவில்லையா? நாம் பாவத்துக்கும் பழிக்கும் உட்பட்டால், நெஞ்சு சுடவில்லையா? சரசரென்று பக்கத்திலே ஒரு எலி ஓடினுலும், காற்றிலே ஒரு துரும்பு ஆடினுலும், குற்றஞ்செய்தவன் நடு நடுங்கவில்லையா? மேகம் கெர்ச்சித்து, இடிமுழங்கும்போது மனுஷர் தாங்கள் செய்த அநியாயங்களை நினைத்து, பயப்படுகிறதில்லையா? இப்படியிருக்க, மனுஷர்கள் பாவிகளாயிருக்கிருர்களென்பதற்கு மனமும் ஒரு பலத்த சாட்சியல்லவா?

மனுஷர்கள் பாவத்திலே செத்துக் கிடக்கிருர்களென்று சத்திய வேதம் சொல்லுகின்றது. அது என்னவென்ருல், செத்த பிணத்திலே எப்படி அறிவும் அசைவும் இல்லையோ, அப்படியே மனுஷர்களிடத்தில் பரிசுத்த குணமும் பரிசுத்த நடத்தையும் இல்லை. பாவஞ்செய்வதற்கோ, அவர்கள் பிணம் போலிராமல், உயிருள்ளவர்களாயிருக்கிருர்கள். அதையே நாடி, அதையே தேடி, அதையே செய்கிருர்கள்.

* முடிப்பமுடித்துப்பின் பூசுவபூசி
உடுப்பதுடுத்துண்ப துண்ணு—விடித்திடித்துக்
கட்டுரைகூறிற் செவிகொளாகண்விழியா
நெட்டுயிர்ப்போடுற்ற பிணம்.

தலைக்குப் புஷ்பத்தை முடிப்பார்கள். தைலத்தையும் பூசுவார்கள். வஸ்திரத்தைத் தரிப்பார்கள். சாதத்தைப் புசிப்

நீதிநெறிவிளக்கம்: ௧௧.

* இ-ள். உண்பது — புசிப்பதாகிய அன்னத்தை. உண்ணு— புசித்து. பூசுவ—பூசுவதாகிய தைலத்தை. பூசி — பூசிக்கொண்டு. முடிப்ப—முடிப்பதாகிய புஷ்பத்தை. முடித்து — தலையில் சூடிக்கொண்டு. பின்—பின்பு. உடுப்பது—உடுப்பதாகிய வஸ்திரத்தை. உடுத்து — தரித்துக்கொண்டு. (அறிவுள்ளவனொருவன்) இடித்திடித்து—கண்டித்து. கட்டுரை—உறுதியான வார்த்தைகளை. கூறில்

பார்கள். இந்த விஷயங்களிலெல்லாம் உயிருள்ளவர்களாய்த் தான் இருப்பார்கள். ஆனாலும், அவர்களைக் கண்டித்து, புத்தி சொன்னால், செவிகொடுக்கமாட்டார்கள். நல் வழியைக் கண்விழித்துப் பார்க்கமாட்டார்கள். அப்படிப்பட்டவர்கள் மூச்சோடே சேர்ந்த பிணங்களல்லவா?

இந்த உண்மையை உங்களுக்குள்ளேயும் சிலர் கண்டு, பாவத்தினாலே கெட்டுப் போனோமென்று அழுகையோடே புலம்பியிருக்கிறார்கள்.(க.)

* உனக்குவமையாக்கருணை யுள்ளவரும்வன்மைக்
கெனக்குவமையானவரு மில்லைபராபரமே.

கடவுளே, உமக்கு ஒப்பாக, கிருபையுள்ளவர் யாரும் இல்லை. எனக்கு ஒப்பாக, கெட்ட நெஞ்சுள்ளவன் எவனும் இல்லை.

தேவன் உங்கள் பாவங்களைப் பாராதபடிக்கு, நீங்கள் மறைத்துவைக்கலாமென்று எண்ணாதேயுங்கள். மனுஷர்களுடைய பார்வைக்கும் மறைக்கிறது வெகு கஷ்டம். வெளியாகிறதே பாவத்தின் தன்மையாயிருக்கிறது.

---

சொன்னால். செவி — தங்கள் காதிலே. கொளா — கொள்ளாமலும். கண்—மனக்கண். விழியா—திறவாமலும் (இருக்கிற மனுஷர்கள்). நெட்டுயிர்ப்போடு—நீண்ட மூச்சோடே. உற்ற—பொருந்திய. பிணம் — பிணமென்றே சொல்லப்படுவார்கள். எ-று.

**தாயுமானவர் பாடல்.**

* இ-ள். பராபரமே — பராபரவஸ்துவே. உனக்கு—தேவரீராகிய உமக்கு. உவமையா — ஒப்பாக. கருணையுள்ளவரும் — கிருபையுள்ளவரும். இல்லை—எங்கும் இல்லை. எனக்கு—எனக்கு. வன்மைக்கு உவமையானவரும் — ஒப்பாகக் கல்நெஞ்சுள்ளவர்களும். (இல்லை)—ஒருவரும் இல்லை. எ-று.

(க.) அஎ-ம் பக்கத்திலுள்ள மூன்று சுலோகங்களைக் காண்க.

* மறைவழிபட்ட பழிமொழிதெய்வம்
பறையறைந்தாங்கோடிப் பரக்குங்—கழிமுடைப்
புன்புலானாற்றம் புறம்பொதிந்துமூடினுஞ்
சென்றுதைக்கும்சேயார் முகத்து.

அழுகிப்போன மாமிசத்தை ஒரு வஸ்திரத்திலே மூடி வைத்தாலும், தூரமானவர்களுடைய முகத்திலேயும் அதினுடைய நாற்றம் போய் வீசும். அப்படியே, இரகசியத்திலே செய்த குற்றமும், தேவன் பறை அடித்து அறிவித்தாற் போலே, எங்கும் வெளிப்படும்.

மனுஷருக்குத் தெரியாதபடி மறைக்கிறது வருத்தமானால், சர்வ ஞானமுள்ள கடவுளுக்கு எந்த விதத்திலே மறைக்கப்போகிறீர்கள்? அப்படி மறைக்கப் பார்த்தால், முழுப் பூசினிக்காயைச் சோற்றோடே மறைக்கிறதுபோலிருக்குமே. அவர் எல்லாவற்றையும் பார்க்கிறார். பின்பு அவர் யாதொன்றையும் மறந்துபோகிறவருமல்ல: விசாரிக்காமல் விடுகிறவருமல்ல.

ஓ சனங்களே, நீங்கள் பாவஞ்செய்ததைக் குறித்துப் பயப்படுங்கள்.

---

நீதிநெறிவிளக்கம் : கூரு.

* இ—ள். கழி—மிகவும். முடை—நாற்றமான. புன்—அழுகிப்போன. புலால்—மாமிசத்தை. பொதிந்து—ஒருவன் உள்ளே வைத்து. புறம்—வெளியே. மூடினும்—வஸ்திரத்தினாலே மூடினாலும். நாற்றம்—அதின் கெட்ட வாசனையானது. சேயார்—தூரத்திலிருக்கிறவர்களுடைய. முகத்து—முகத்திலே. சென்று—போய். தைக்கும்—படும். (அதுபோல) மறைவழி—இரகசியமான இடத்தில். பட்ட — செய்த. பழிமொழி — பழிச்சொல்லுக்குக் காரணமாகிய பாவமானது. தெய்வம் — தேவன். பறை — மேளத்தை. அறைந்தாங்கு—அடித்துத் தெரிவித்ததுபோல. ஓடி—தூரத்தில் ஓடி. பரக்கும்—பரம்பும். எ—று.

* தீயவைதீய பயத்தலாற்றீயவை
தீயினுமஞ்சப் படும்.

தீமையான நடத்தை நரகமாகிய தீராத துன்பத்தை வருவிக்கும். ஆதலால் நெருப்பைப் பார்க்கிலும் பாவம் கொடியதென்று அஞ்சி நடக்கவேண்டும். நீங்கள் இலேசாகப் பாவஞ்செய்கிறீர்கள். அதைச் செய்யும்போது, அது உங்களுக்கு மணலத்தனையாகத் தோன்றுகிறது. ஆனாலும், இனிமேல் அது மலையத்தனையாக எழும்பி, உங்களை நரகத்திலே நசுக்கிவிடுமென்று திடுக்கிட்டு, உடலும் உயிரும் அதிருங்கள்.

பிரியமானவர்களே, நாம் செய்த பாவம் நிவிர்த்தியாகாவிட்டால், நித்திய நரகதண்டனை நமக்குக் கதியாகுமே. ஆகையினாலே, காலதாமசம்பண்ணாமல், பாவத்தை நிவிர்த்திபண்ணுகிறதற்கு யாதாம் ஒரு வழி உண்டோ என்று நாம் உடனே விசாரித்துத் தேடிக்கொள்ள வேண்டியது.

இனிமேல் பாவஞ்செய்யாமல் புண்ணியம் பண்ணினால், இதற்கு முன் செய்த பாவம் நிவிர்த்தியாய்விடுமென்று சிலர் சொல்லுவார்கள். அது மெய்யான வார்த்தையல்ல. அதைக் கொஞ்சம் விவரித்துச் சொல்லுகிறோம்: கேளுங்கள்.

புண்ணியமாய் நடக்கிறதாவது என்ன? மனசிலும், வாக்கிலும், செய்கையிலும் யாதொரு குற்றமுமில்லாமல் தேவகட்டளைகளை எப்போதும் சரியாய்க் கைக்கொள்வதே புண்ணிய நடத்தையாம். அப்படிப்பட்ட புண்ணியவான் ஒருவன்

குறள்: உ௬-ஃ அதி: உ.

* இ-ள். தீயவை—(இப்போது இன்பத்துக்காகச் செய்த) தீவினைகள். (பின்பு) தீய—துன்பங்களை. பயத்தலால்—தருவதினாலே. தீயவை—அந்தத் தீவினைகள். தீயினும்—நெருப்பைப் பார்க்கிலும் அதிகமாக. அஞ்சப்படும்—ஒருவனாலே அஞ்சப்படும். பரி-ரு.

பூமியிலே இருந்தால், அவனுக்குப் பாவம் இராது. அவன் மோட்சலோகத்துக்கு உரியவனுயிருப்பான்.

பூலோகத்திலே அப்படிப்பட்டவன் ஒருவனும் இல்லை. மனுஷரெல்லாரும் மனசிலும் வாக்கிலும் செய்கையிலும், பலவிதமாகவும் பலமுறையாகவும் குற்றஞ்செய்து, தேவகட்டளைகளை மீறியிருக்கிருர்கள். ஆகையினுலே எல்லாரும் பாவிகளாயிருக்கிருர்கள்.

இதுவரைக்கும் பாவஞ்செய்தவன் இனிமேல் புண்ணியஞ்செய்யக் கூடுமானுல், முன் செய்த பாவம் அதினுலே தீரமாட்டாதா என்று கேட்டால், தீரமாட்டாது. ஏனென்ருல், எப்போதும் தப்பில்லாமல் புண்ணியமாய் நடக்கிறதே மனுஷனுடைய கடமை. அப்படியே தேவன் கட்டளையிட்டிருக்கிருர். ஆகையினுலே இனிமேல் பிசகாமல், புண்ணியமாய் நடந்தாலும், அது அவன் செய்யவேண்டிய கடமையாயிருக்குமேயல்லாமல், அது முன் செய்த பாவத்தைத் தீர்க்கமாட்டாது. ஒருவன் திருடினுனென்று வைத்துக்கொள்ளுங்கள். அவன் இனிமேல் திருடாமலே சரியாய் நடக்கவேண்டும். அப்படிச் சரியாய் நடந்தாலும், அந்தச் சரியான நடத்தை அவன் செய்யவேண்டிய கடமையாயிருக்குமேயல்லாமல், அது மிஞ்சாது. முன் செய்த திருட்டுக் குற்றத்தையும் தீர்க்காது.

மேலும், புண்ணியஞ் செய்ய மனுஷருக்குத் திராணி உண்டோ என்றல்லவா முதல் முதல் விசாரிக்க வேண்டியது. அவர்கள் புண்ணியமென்று மெச்சிக்கொள்ளுகிற தங்களுடைய செய்கை மெய்யான புண்ணியந்தானே? அதைக் கடவுள் புண்ணியமென்று ஒத்துக்கொள்ளுவாரோ? இதை நன்ருய் நிதானித்துப் பாருங்கள். மனுஷன் பாபாத்துமாவாயிருக்கிருனென்று முன்னே ரூபித்தோம். பாபாத்துமாவிலிருந்து புண்ணியம் எப்படி உண்டாகும்? புண்ணியம் பிறக்கிறதற்குப் பாவமா இடமாயிருக்கிறது? நீரூற்றிலே

இருக்கிற சலம் கசப்பானல், கால்வாயிலே பாய்கிறது தித்திப்பாகுமா? உள்ளத்துக்குணம் பாவரூபமாயிருக்கிறபோது, அப்படிப்பட்ட உள்ளத்திலிருந்து வெளிப்படுகிற செய்கை புண்ணியரூபமாயிருக்குமா? ஒருபோதும் இருக்கமாட்டாதே.

ஆனாலும், உலகத்திலே மனுஷர் அனேக நல்ல காரியங்களைச் செய்கிறார்களே, அப்படிப்பட்ட காரியத்தைப் புண்ணியமென்று ஒத்துக்கொள்ளக் கூடாதோ என்று கேட்பீர்களேயானல், அதையும் சொல்லுகிறோம். ஒரு கிண்ணியிலே நிறைய, சாதம் போட்டால், அந்தச் சோறு நல்லதல்லவா? பார்த்தவர்கள், இது ருசியுள்ள அன்னம்; பசிக்கு உதவும்; நன்றாயிருக்கிறது என்று சொல்லலாமல்லவா? அப்படியிருந்தும், அந்தச் சோற்றிலே கொஞ்சம் பாஷாணம் கலந்து வைத்ததுண்டானல், அதை நல்லதென்று சொல்லலாமா? ஒருவன் அதை எடுத்துச் சாப்பிடப்போனல், பக்கத்தில் நிற்கிறவர்கள் அவனை நோக்கி: ஓகோ, அப்பா, இது பார்வைக்கு நல்ல சாதமாய்த்தான் இருக்கிறது; உள்ளேயோ பாஷாணம் சேர்ந்திருக்கிறது; சாப்பிட்டால் செத்துப்போவாய் என்று எச்சரிப்பார்களல்லவா? எச்சரித்தபின் அவன் அதை நஞ்சென்று தள்ளிப்போடுவானேயல்லாமல், அதை நல்லதென்று எடுக்கவும் மாட்டான், தீண்டவும் மாட்டான். மனுஷர் செய்கிற அனேக செய்கையும் அந்தச் சோற்றைப் போலவே, ரூபத்திலும் பார்வைக்கும் நல்லதாகத் தோன்றும். அப்படித் தோன்றினலும், அவர்களுடைய பாவகுணம் அந்தச் செய்கையிலே கலந்திருக்கிறது. எதைச் செய்தாலும், அதைச் செய்கிற மனுஷன் பாபாத்துமாவே. ஆகையினலே, அவனுடைய செய்கை சாதத்தைப்போல, கண்ணுக்கு நல்லதாயிருந்தாலும், அதனேடே பாவகுணம் கலந்திருக்கிறதினலே, பாஷாணவிஷம் ஏறின சோற்றைப்போலவே இருக்கிறது. இப்படியிருக்க, மனுஷருடைய செய்கையெல்லாம் பாவசம்பந்தமேயல்லாமல், பாவகலப்பில்லாமல் சுத்த புண்

ணிய செய்கை எதுவும் இல்லை. மனுஷர் புண்ணியஞ் செய்யத் திராணியில்லாத பாபாத்துமாக்களாயிருக்கிறார்கள்: ஆகையினாலே, புண்ணியத்தைக்கொண்டு பாவத்தைக் கழித்துத் தீர்த்துப்போடலாமென்றால், அது வீண் கர்வமும் பிதற்றுமாகவே இருக்கிறது.

ஓ சனங்களே, நம்முடைய பாவத்தை மறைக்கிறதும் நம்மாலே கூடாது. நீக்குகிறதற்கும் நம்மிடத்திலே உபாயம் இல்லை. என்னத்தைச் செய்வோம்? அளவில்லாத புண்ணியங்களைச் செய்வதற்கு வல்லமையுள்ள தேவகுருவானவர் நமக்கு வேண்டுமல்லவா? அப்படிப்பட்டவர் நமக்காக ஏற்பட்டு, பூமியிலே வந்து, நம்முடைய பாவத்துக்கேற்ற தண்டனையைச் சுமந்து தீர்த்து, நமக்காக வேண்டிய புண்ணியஞ் செய்தால், அவராலே நம்முடைய பாவம் தீரும். அப்படிப்பட்டவர் நமக்கு இல்லாவிட்டால், நமது பாவம் எக்காலத்திலும் தீராது.

சகோதரரே, அப்படிப்பட்ட பாவநாசர் ஒருவர் இருக்கிறார். இயேசுக்கிறிஸ்து என்கிறதே அவருடைய திருநாமம். இயேசுவென்றால், லோகரட்சகராயிருக்கிறவர். கிறிஸ்துவென்றால், நமக்குப் போதகனும் குருவும் அரசனுமாயிருக்கிறவர். நமக்கு உபதேசிக்கவும், நமது பாவத்தை நீக்கவும், நம்மை நடத்தவும், நம்மை முத்தியில் சேர்க்கவும், தகுந்தவர் அவரே. அவர் மெய்யான கடவுளாயிருக்கிறார். ஆதியிலே அவர் சர்வலோகங்களையும் படைத்தார். இப்போதும் அவர் சமஸ்தமான வஸ்துக்களையும் தம்முடைய வாக்கினாலே தாங்கி, பரிபாலித்துவருகிறார். அவர் மூன்று காலத்திலும் இருக்கிறவர். எவ்விடத்திலும் வியாபித்திருக்கிறவர். அளவற்ற மகிமையுள்ள அவர் மோட்சலோகத்திலேயிருந்து இவ்வுலகத்துக்கு வந்து, மனுஷனாகப் பிறந்தார். இப்படித் தேவத்தன்மையும் மனுஷத்தன்மையும் ஆகிய இரண்டையுமுடையவராய் இவ்வுலகத்திலே காணப்பட்டு, முப்பத்துமூன்று வருஷம் இங்கே

வாசம்பண்ணினர். அவர் பூமியிலே நடந்தார்: பேசினர்: படுத்தார்: எழுந்தார்: சாப்பிட்டார்: இவை முதலானவை களினலே தம்மை மனுஷனென்று காண்பித்தார். குருடருக்குக் கண்ணைக் கொடுத்தார்: செவிடருக்குக் காதைத் தந்தார்: ஊமைகளுக்கு வாயை ஈந்தார்: செத்தவருக்கு உயிரை அருளினர்: மெய்ஞ்ஞானத்தைப் போதித்தார்: முத்திவழியை உண்டாக்கினர்: இவைமுதலானவைகளினலே தம்மைத் தேவனென்று காட்டினர்.

அவர் தம்மிடத்திலே வந்து அண்டின எல்லாருக்கும் கிருபை செய்தார். குழந்தைகளையும் ஆசீர்வதித்தார். தாமே பரிசுத்தமாய் நடந்து, மனுஷர்கள் நடக்கவேண்டிய பரிசுத்த கிரமம் இன்னதென்று தெளிவித்தார். மனுஷர் செய்கிற அக்கிரமங்களை அவர் கண்டித்தார். அவர்கள் தங்கள் பாவங்களை நினைத்து, துக்கித்து, விட்டுவிட்டு, தேவனிடத்திலே மனந்திரும்பி, விசுவாசத்தோடும் சன்மார்க்கத்தோடும் நடக்க வேண்டுமென்று உபதேசித்தார். மனுஷர்களோ பாவத்தின் மேல் ஆசையுள்ளவர்களானதினலே, அவருடைய நல்ல உபதேசத்தை வெறுத்தார்கள். அவரையும் பகைத்தார்கள். அவரைக் கொல்லும்படி யோசித்தார்கள். அவர் அதைக் கண்டு, அவர்களை நாசப்படுத்தவில்லை. அவர்களுடைய கைக்கு அவர் தம்மை ஒப்புக்கொடுத்தார். அவர்கள் தங்கள் துஷ்ட கரங்களினலே அவரைப் பிடித்தார்கள். சிலுவை மரத்திலே வைத்து, ஆணிகளினலே அவரை அறைந்தார்கள். அங்கே அவர் மரணம் அடைந்தார். அதைப் பார்த்து சூரியன் சகிக்கக்கூடாமல் இருள் அடைந்தது: தேசத்திலெங்கும் அந்தகாரம் உண்டானது: கல்மலைகள் பிளந்தது. பூமியும் அதிர்ந்தது. அவர் மரித்த பின்பு பூமியிலே புதைக்கப்பட்டார். மூன்றும் நாளோ அவர் தாம் ஏற்றுக்கொண்ட மரணக்கட்டைத் தாமே அவிழ்த்து உயிரோடே எழுந்துவந்தார். அநேகருக்குத் தரிசனையானர். தம்முடைய சீஷர்கள் உலகமெங்கும் போய், தம்முடைய மரணத்தையும், அதி

ளுலே உண்டான இரட்சிப்பையும் சகல சனங்களுக்கும் பிர சங்கிக்கும்படி கட்டளையிட்டார். பின்பு ஆகாசத்தின் வழி யாய் ஏறி, தாம் விட்டுவந்த மோட்சலோகத்துக்குத் திரும் பிப்போனுர். அவர் ஏறிப்போகும்போது அந்த மோட்ச லோகத்திலுள்ள தேவதூதர்கள் புறப்பட்டு வந்து எதிர்கொ ண்டு வணங்கி, முன்னும் பின்னும் மேலும் கீழும் தோரணங் கட்டுவதுபோல வரிசைகளாகச் சேர்ந்து, பாடி, ஸ்துதித்துக் கொண்டே கூடப்போனுர்கள். அவர் அங்கே சர்வலோகங் களையும் ஆளுகிற மேன்மையோடே வீற்றிருக்கிறுர்.

ஏன் இப்படி மரிக்கிறதற்குச் சம்மதித்தார் என்று கேட் டால், மனுஷருடைய பாவத்தைச் சுமந்து தீர்க்கும்படியாக, அவர் மரணமடைந்தார். இதற்காகவே அவர் பூலோகத்தில் வந்தார். இதை அவர் எத்தனையோதரம் முன்னதாக அறி வித்தார். அவர் சொன்ன ஒரு *வசனத்தைக் கேளுங்கள். ஒருவனும் அதை என்னிடத்திலிருந்து எடுக்கமாட்டான். நானே அதைக் கொடுக்கிறேன், அதைக் கொடுக்கவும் எனக் கு அதிகாரம் உண்டு, அதை மறுபடியும் அடைந்துகொள்ள வும், எனக்கு அதிகாரம் உண்டு, இந்தக் கட்டளையை என் பிதாவினிடத்தில் பெற்றுக்கொண்டேன் என்றுர். உலகத் தை இரட்சிக்கும்பொருட்டு, தாம் தம்முடைய உயிரைக் கொடுத்து, மரித்து, மூன்று நாளுக்குள்ளே மறுபடியும் எழுந் துவருவதாக அவர் முன்னே பூலோகத்தில் தெரிவித்து, பின்பு அந்த முடிவுக்குத் தம்மை ஒப்பித்தார்.

அவருடைய மரணமே பிராயச்சித்த பலி. பிராயச்சித் தமென்பதற்குப் பாவத்தைப் போக்கடிப்பதென்று அருத் தம். புண்ணிய மூர்த்தியாயிருக்கிற இயேசுக்கிறிஸ்து தம் முடைய திரு இரத்தத்தைப் பாவிகளுக்காகச் சிந்தினதே

* யோவான், ௰. அதி: ௰௮.

மெய்யான பலியானது. அதுதான் உதவும். அந்த மரணமே நமக்கு அடைக்கலம். அதிலே நமக்கு நித்திய மோட்ச பலன் முளைக்கும்.

அது எப்படியென்றால், அவர் அனுபவித்த மரணம் நமக்காகப் பட்ட தண்டனையாயிருக்கிறது. நரக தண்டனை நமக்கு வாராதபடி அவர் பூமியில் வந்து அவ்விதமாய் நமக்காகத் தண்டனைப்பட்டார். நாம் நரகத்தில் படவேண்டிய அந்த நித்திய ஆக்கினைக்கு அவர் பூமியில் பட்ட ஆக்கினை சரிவருமா என்று கேட்டால், அது சரிவரும். ஒரு கூலிக்காரனுக்கு நூறு அடி அடிப்பதிலும், ஒரு இராசாவுக்கு ஒரே ஒரு அடி அடிப்பது பெரிய தண்டனையல்லவா? ஆனாலும், கூலிக்காரன் மனுஷன்தான்: இராசாவும் மனுஷன்தான். மனுஷர்களுக்குள்ளே இப்படித் தாரதம்மியம் இருந்தால், மனுஷருக்கும் தேவனுக்கும் எவ்வளவு வித்தியாசம் இருக்கும்? அளவில்லாததல்லவா? நாம் அற்பமான மனுஷராயிருக்கிறோம். இயேசுக்கிறிஸ்து அனாதி தேவனாயிருக்கிறார். நமக்கு வரவேண்டிய நரக தண்டனைக்கு இயேசுக்கிறிஸ்து பூமியில் பட்டபாடு சரியாய் வரமாட்டாதோ? சரியாய் வருவதுமல்லாமல், அது மிஞ்சியும் விசாலிக்கும்.

ஓ சனங்களே, இதை நல்ல மனசோடே உற்றுப் பாருங்கள். உலக மீட்பரான இயேசுக்கிறிஸ்துவானவர் நமக்காக உலகத்திலே பிறந்து, பரிசுத்தமாய் நடந்து, தமது சீவனைத் தந்த புண்ணியத்தைப்போல் ஒரு புண்ணியம் உண்டோ? அது மட்டில்லாதது: புத்திக்கும் பேச்சுக்கும் எட்டாதது. அந்த இயேசுக்கிறிஸ்துவை விசுவாசிக்கிறவர்கள் அவருடைய புண்ணியத்தினாலே பாவநிவிர்த்தி அடைந்து, நரகத்துக்குத் தப்பி, முத்தியுலகத்திலே சேருகிறார்கள். இதுவே பாவநிவாரணமார்க்கம்.

அவர் அப்படியெல்லாம் பாடுபடுவதற்குக் காரணம் என்ன என்று பின்னும் ஒருவேளை கேட்பீர்கள். ஓ சகோ

தாரே, அதற்கு அன்பே காரணமென்று அறிந்து மனமுருகுங்கள். நம்மாலே அவருக்கு ஒரு பிரயோசனமும் இல்லை. நித்திய கேட்டுக்கும் நோவுக்கும் நம்மைத் தப்புவித்து இரட்சிக்கவேண்டுமென்று அவர் ஆசைகொண்டார். அவருடைய கிருபை சமுத்திரத்திலும் விஸ்தாரம்: வானத்திலும் உயர்வு: பாதாளத்திலும் ஆழம்: ஆகையினாலே நம்மை மீட்க வந்தார்.

இதற்கு ஒரு திருஷ்டாந்தம் சொல்லுகிறோம். ஒரு தாயானவள் இருந்தாள். அவளுடைய குழந்தைக்குப் பலமான ஒரு வியாதி கண்டது. வைத்தியன் வந்து பார்த்து, தாயை நோக்கிச் சொல்லுகிறான். அம்மா இது பொல்லாத வியாதி; இதற்கு மருந்து கொடுத்தால், குழந்தை அதைத் தாளமாட்டாது; அதற்குக் கேடு வரும். நீயானால், அதைச் சாப்பிடலாம்: அது உன்னுடைய இரத்தத்துக்குள் ஏறி, ஊறி, உன் முலைப்பாலோடும் கலக்கும்: அப்படியே அந்த மருந்து உன்னிடத்திலிருந்து பால்ரூபமாய் உன் குழந்தையினுடைய வாயிலே சொரிந்தால், அது சுகப்பட்டுப்போகும். ஆனாலும், அந்த மருந்து உன்னுடைய தேகத்துக்குப் பெரிய வருத்தம் உண்டாக்கும். உன் எலும்புகளையெல்லாம் நொறுக்குவதுபோல, உனக்கு வேதனை தரும். நோவெல்லாம் உனதாகும். சுகமெல்லாம் குழந்தையதாகும் என்றான். வைத்தியன் அப்படிச் சொல்லவே, அந்தத் தாய், சாப்பிடமாட்டேன் என்று மறுப்பாளா? செய்வதும் செய்யாததும் யோசிப்பாளா? வைத்தியனே, பத்துமாதம் நான் சுமந்த பிள்ளையல்லவா? எனக்கு முத்தும் கண்ணுமாயிருக்கிறது இதுதானே: நீ சொன்ன மருந்தைக் கொடு: அது என்னைக் கொன்றாலும், கொல்லட்டும்: அதைச் சந்தோஷமாய்ச் சாப்பிடுகிறேன் என்று சொல்லி, வாங்கிச் சாப்பிடுவாளல்லவா? அந்த

அவிழ்தத்தைத் தின்று, வருத்தப்பட்டு, பிள்ளையைச் சாவுக்குத் தப்புவித்து, சுகப்படுத்தின பின்பு, மனம் மகிழமாட்டாளா? பிள்ளையும் வளர்ந்து, தாயின் அன்பை அறிந்து, அவளை நேசிக்கமாட்டாதோ? அந்தத் தாயானவள் ஏன் சாப்பிட்டாளென்றும், ஏன் வருத்தப்பட்டாளென்றும், கேட்கலாமா? கேட்டால், அன்பினாலே அப்படிச் செய்தாளென்கிற ஒரே ஒரு வார்த்தையானது அப்படிப்பட்ட கேள்விக்குப் போந்த உத்தரவாயிருக்கும். சகோதரரே, நன்றாய்க் கேளுங்கள். நாமே அந்தச் சிறு குழந்தை. நாம் செய்த பாவமே நம்மைப் பிடித்திருக்கிற வியாதி. பாவத்தின் பலனாகிய நரக தண்டனையே நமக்கு வரப்போகிற கேடு. அது தீராத நித்தியமான கேடு. இயேசுக்கிறிஸ்துவென்னும் திவ்விய குருவே நமக்குத் தாயைப்போலிருக்கிறவர். தன்னுடைய குழந்தை தாங்கமாட்டாத வருத்தத்தை அந்தத் தாயானவள் தானே எடுத்துக்கொண்டு அனுபவித்ததுபோல, இயேசுக்கிறிஸ்து நமக்கு வரவேண்டிய தண்டனையைத் தாமே ஏற்றுக்கொண்டு அனுபவித்தார். குழந்தையானது தாயின் முலையைப் பிடித்ததுபோல, நாம் இயேசுக்கிறிஸ்துவை விசுவாசத்தோடும் அன்போடும் பற்றிக்கொள்ளவேண்டும். அந்தக் குழந்தை மருந்து ஊறின பாலைக் குடித்ததுபோல, நாம் இயேசுக்கிறிஸ்து நமக்காகப் பட்ட ஆக்கினைகளை நினைத்து, மனசிளகி, துக்கித்து, பாவத்தை வெறுத்துக் குணப்படவேண்டும். அப்போது அந்தக் குழந்தை சுகித்துப் பிழைத்ததுபோல, நாமும் நித்திய மோட்ச சுகத்தை அடைந்து வாழுவோம். ஓ சகோதரரே, கிறிஸ்து ஏன் நமக்காகப் பாடுபட்டாரென்று எவ்விதத்திலே கேட்கலாம்? அந்தத் தாய் ஏன் குழந்தைக்காக வருத்தப்பட்டாள்? அதைச் சொல்லுங்கள். அப்போது நாங்களும் அதையே உங்களுக்குத் திரும்பவும் சொல்லுவோம்.

உங்கள் வீணான ஆட்சேபங்களைத் தள்ளிவிடுங்கள்.

* தாயினுநல்லதயாளுவே நின்னைஉன்னித்
தீயின்மெழுகொத்துருகுஞ் சிந்தைவரக்காண்பேனோ.

பெற்ற தாயைப்பார்க்கிலும் தயையுள்ளவரே, உம்மைத் தான் நினைத்து, நெருப்பைக் கண்ட மெழுகு உருகுவது எப்படியோ, அப்படியே என் மனம் உருகும்படியான நாள் எப்போது வருமோ? இப்போதே வரப்பண்ணுமென்று சொல்லிக்கொண்டு, இயேசுக்கிறிஸ்துவை விசுவாசித்து, அவருடைய மார்க்கத்திலே சேருங்கள்.



தாயுமானவர் பாடல்.

* இ—ள். தாயினும்—பெற்ற தாயைப்பார்க்கிலும். நல்ல—மிகுந்த. தயாளுவே—கிருபையுடையவரே. நின்னை—உம்மை. உன்னி—தியானித்து. தீயின்—நெருப்பில் பட்ட. மெழுகொத்து—மெழுகைப்போல. உருகும்—உருகுகிற. சிந்தை—மனமானது. வர—(அடியேனாகிய எனக்குக்) கிடைக்க. காண்பேனோ—(எப்போதாவது நான்) பார்ப்பேனா? ப—று.

# உ ப கி ர ந் த ம்.

## APPENDIX TO No. III.

### முன் சொன்னவைகளுக்குச் சில உதாரணங்கள்.

(க.) பாவிகளாயிருக்கிறோமென்று துக்கித்துப் புலம்புகிற புலம்பல்.

పాపోహంపాపకర్మాహం పాపాత్మాపాపసంభవః
త్రాహిమాంకృపయాదేవ శరణాగతవత్సల.

*நித்தமும் ஸ்நானஞ்செய்யும்போது பிராமணர் இந்தச் சுலோகத்தைச் சொல்லுவார்கள்.*

#### இதன் பதவுரை.

పాపః—பாவத்தையுடையவன். అహం—நான். పాపకర్మా—பாவத்தைச் செய்கிறவன். అహం—நான். పాపాత్మా—பாபாத்துமா நான். పాప—பாவத்தோடே. సంభవః—பிறந்தவன் நான். శరణ—அடைக்கலம். ఆగత—புகுந்தவர்களுக்கு. వత్సల—தயவாயிருக்கிற. దేవ—தேவனே. కృపయా—கிருபையினாலே. మాం—என்னை. త్రాహి—இரட்சி. எ-று.

## கருத்துரை.

ஐயையோ, நான் பாவமுள்ளவன். என் நடத்தையெல்லாம் பாவசம்பந்தமாயிருக்கிறது. என் ஆத்துமாவும் பாபரூபமாயிருக்கிறது. பாவத்தோடே பிறந்தவனுமாயிருக்கிறேன். கர்த்தாவே, அடைக்கலம் புகுந்தவர்களுக்குத் தயவாயிருக்கிற கடவுளே, நீரே உம்முடைய கிருபையினாலே என்னை இரட்சியும்.

అపరాధసహస్రాణి క్రియంతేహర్నిశంమయా
దాసోహమితిమాంమత్వా క్షమస్వపరమేశ్వర.

## இதன் பதவுரை.

అపరాధ—குற்றங்கள். సహస్రాణి—ஆயிரங்கள். క్రియంతే—செய்யப்படுகின்றன. అహర్నిశం—பகலும் இரவும். మయా—என்னாலே. పరమేశ్వర—கடவுளே. అహం—நான். దాసః—(உம்முடைய) தாசன். ఇతి—என்று. మాం—என்னை. మత్వా—எண்ணி. క్షమస్వ—மன்னித்தருள். எ-று.

## கருத்துரை.

பகலிலும் இரவிலும் என்னாலே செய்யப்படுகிற குற்றம் ஆயிரம் ஆயிரமாகவே இருக்கிறது. கடவுளே, என்னை உம்முடைய தாசனாக ஏற்றுக்கொண்டு, என் பாவங்களை மன்னித்தருளும்.

పాపినామహమేవాగ్ర్యో దయాలూనాంత్వమగ్రణీః
దయనీయోమదన్యోస్తి తవకోత్రజగత్రయే.

## இதன் பதவுரை.

𑌪𑌾𑌪𑌿𑌨𑌾𑌂—பாவிகளுக்குள்ளே. 𑌅𑌹𑌮𑍇𑌵—நானே. 𑌅𑌗𑍍𑌰𑍍𑌯𑌃—பிரதானமானவன். 𑌦𑌯𑌾𑌵𑌤𑌾𑌂—தயவுள்ளவர்களுக்குள்ளே. 𑌤𑍍𑌵𑌂—நீ. 𑌅𑌗𑍍𑌰𑌣𑍀𑌃—பிரதானமானவன். 𑌤𑌵—உம்முடைய. 𑌦𑌯𑌨𑍀𑌯𑌃—தயவை அடைவதற்குத் தேவையுள்ளவன். 𑌮𑌤𑍍𑌤𑌃—என்னைப்பார்க்கிலும். 𑌅𑌨𑍍𑌯𑌃—வேறொருவன். 𑌕𑌃—எவன். 𑌅𑌸𑍍𑌤𑌿—இருக்கிறன். 𑌅𑌤𑍍𑌰—இந்த. 𑌜𑌗𑌤𑍍𑌰𑌯𑍇—மூவுலகத்திலே. எ-று.

## கருத்துரை.

கர்த்தாவே, பாவிகளுக்குள்ளே பிரதானமானவன் நானே. தயவுள்ளவர்களுக்குள்ளே பிரதானமானவர் நீரே. உம்முடைய கிருபையை அடைவதற்கு என்னைப்பார்க்கிலும் தேவையுள்ளவன் வேறே ஒருவன் மூவுலகத்திலும் உண்டா?



# வேதவாக்கியம்.

(க.) பாவம் இப்படிப்பட்டது.

க. யோவான், ௩. அதி: ௪.

(உ.) மனுஷர்களெல்லாரும் பாவிகளாயிருக்கிறார்கள்.

ரோமர், ௩. அதி: ௰—௰௮.

அவர்களுடைய நடத்தையினாலே விளங்குகிறது.

ரோமர், க. அதி: உ௯—௩உ.
கலாத்தியர், ௫. அதி: ௰௯—உக.
உ. தீமோத்தேயு, ௩. அதி: உ—௫.
தீத்து. ௩. அதி: ௩.

அவர்களுடைய குணத்தினாலே விளங்குகிறது.

மாற்கு, ௭. அதி: ௨௰—௨௩.
ரோமர், ௮. அதி: ௭.
எரேமியா, ௰௭. அதி: ௯.

அவர்களுடைய மனச்சாட்சியினாலும் விளங்குகிறது.

ரோமர், ௨. அதி: ௰௫.
ஆதியாகமம், ௪௨. அதி: ௨௧, ௨௨.

(௩.) மனுஷர்கள் பாவத்திலே செத்துக்கிடக்கிறவர்கள்.

எபேசியர், ௨. அதி: ௧—௩.

(௪.) தேவன் பாராதபடி, பாவங்களை மறைப்பது கூடாது.

எபிரேயர், ௪. அதி: ௰௩.
௯௰. சங்கீதம்: ௮.
எரேமியா, ௨௩. அதி: ௨௪.

(௫.) பாவஞ்செய்ததைக்குறித்துப் பயப்படவேண்டியது.

௧. கொரிந்தியர், ௯. அதி: ௯, ௰.
மத்தேயு, ௰௩. அதி: ௪௰—௪௨.
வெளிப், ௨௧. அதி: ௮.
௯. சங்கீதம்: ௭.

(௬.) புண்ணியஞ்செய்ய மனுஷருக்குத் திராணி இல்லை.

யோபு, ௰௪. அதி: ௪.
யோபு, ௨௫. அதி: ௪—௬.
ஏசாயா, ௬௪. அதி: ௬.
வெளிப், ௩. அதி: ௰௭, ௰௮.

(௭.) அளவில்லாத புண்ணியங்களைச் செய்ய வல்லவராகிய தேவ குருவானவர் நமக்கு வேண்டும்.

எரேமியா, ௩௩. அதி: ௰௬.
௧. கொரிந்தியர், ௧. அதி: ௩௰.
௧. யோவான், ௨. அதி: ௨.



# மனுஷன்.



மனுஷனுடைய தன்மையைச் சோதித்துப் பார்த்தால், அவனுக்குச் சரீரம் உண்டு: ஆத்துமாவும் உண்டு.

சரீரமானது சாகிற பொருளென்று யாவருக்கும் விளங்கும். அது பஞ்சபூதத்தின் சேர்க்கை. அந்தப் பஞ்சபூதங்களை உண்டாக்கி, சரீரமாகச் சேர்த்தவர் கடவுள். மரணகாலத்திலே கலைப்பார். அப்போது சரீரம் மறுபடியும் பஞ்சபூதமாகக் கலையும். இந்த உடம்பிலே இருக்கிற மண் திரும்பவும் மண்ணோடே சேரும். இதிலுள்ள நீர் நீரோடே கூடும். இதிலே உலாவுகிற காற்று காற்றோடே பறந்துவிடும். இப்படி இந்தத் தேகம் சாவுகாலத்திலே பிரிந்து சிதறிப்போகும்.

நம்முடைய உடலானது நிலையில்லாமல் சீக்கிரத்தில் கெடுமென்று பலரும் சொல்லுவார்கள்.

* காலெதிர்குவித்த பூளைகாலைக்
கதிரெதிர்ப்பட்ட கடும்பனிக்கூட்டம்
அந்தரத்தியங்கு மிந்திரசாபம்
அதிருமேகத் துருவினருநிழல்.

---

பட்டணத்துப்பிள்ளை.

* இ—ள். (சரீரம் எப்படிப்பட்டதென்றால்) கால்—காற்றுக்கு. எதிர்—முன்னே. குவித்த—சேர்த்துவைத்த. பூளை—இல்வம்பஞ்சே ஆம். காலை—உதயகாலத்து. கதிர்—சூரியனுக்கு. எதிர்பட்ட—முற்பட்ட. கடும்—மிகுதியான. பனிக்கூட்டம்—பனித்துளி

காற்றுக்கு முன் பறக்கிற பஞ்சைப்போலவும், வெயிலுக்குமுன் வற்றிப்போகிற பனித்துளியைப் போலவும், ஆகாசத்திலே தோன்றின உடனே வாடிப்போகிற வான வில்லைப் போலவும், பூமியின்மேல் ஓடுகிற மேகத்தின் நிழலைப் போலவும், மனுஷனுடைய சரீரம் இங்கே நிற்காமல், சீக்கிரமாய்ப் போய்விடும்.

மனுஷனுக்குச் சரீரம் இருப்பதுமன்றி, ஆத்துமாவும் உண்டு. இந்தத் தேகம் ஒரு வீட்டைப்போல் இருக்கின்றது. வீடு இடிந்து பாழாகும். ஆனாலும் இந்த வீட்டிலே குடியிருக்கிறவன் ஒருவன் இருக்கிறான். அவனே ஆத்துமா. அவன் இந்த வீட்டோடே இடிந்துபோகிறதில்லை. இந்த ஆத்துமா பஞ்சபூதத்தோடே சம்பந்தப்பட்ட வஸ்துவல்ல. நிலமும், நீரும், நெருப்பும், காற்றும், ஆகாசமும் ஆத்துமாவிலே சேர்ந்திருக்கவில்லை. ஆத்துமாவானது வேறு வேறாக உடைந்து சின்னபின்னப்பட்டுப் போகமாட்டாது. அது நிலமாக விழாது. அது நீராகப் பாயாது. அது நெருப்பாகப் புறப்படாது. அது காற்றாகப் பறக்காது. அது ஆகாசத்தில் கலவாது. இந்த ஆத்துமா அரூபமான வஸ்து. இது எக்காலத்திலும் அழியாது. இது தன்னுடைய தன்மையை இழந்து விடாமல் எப்போதும் தன் சுபாவத்தை உடையதாய் நிற்கும்.

சரீரத்துக்கு எசமானாய் நிற்கிற இந்த ஆத்துமா அறிவுள்ள வஸ்துவாயிருக்கிறது. இது பாவம் இன்னதென்றும், புண்ணியம் இன்னதென்றும், உணரும். நன்மையும் தீமையும்

---

களே ஆம். அந்தரத்து—ஆகாசத்திலே. இயங்கும்—விளங்குகிற. இந்திரசாபம் — வானவில்லே ஆம். அதிரும் — கெர்ச்சிக்கின்ற. மேகத்துருவின்—மேகரூபத்தினுடைய. அரு—நிலையாத. நிழல்—நிழலே ஆம். எ—று.

சீர்தூக்கிப் பார்க்கும். இது கடவுளையும் அறியும். மேலும் இந்த ஆத்துமாவானது நூல்களைப் படிக்கும். சாஸ்திரப் பொருளையும் ஆராய்ந்து கிரகிக்கும். முன் போனதையும், இப்போது நடக்கிறதையும், இனி வருவதையும் யோசிக்கும். கண் காணாத மோட்சநரகங்களையும் சிந்திக்கும். துர்க்கதிக்குப் பயந்து நல்ல கதியை இச்சிக்கும். இப்படிக்கெல்லாம் வல்லமையுள்ளது நமது ஆத்துமா.

அப்படியானால், இந்த ஆத்துமாதானா தேவனாயிருக்கிறதென்று கேட்டால், அப்படியல்ல. இந்தத் தேசத்திலே சிலர் பிரமித்து வீண் கர்வங்கொண்டு, தேவனும் நம்முடைய ஆத்துமாவும் ஒன்றுதான் என்று சாதிக்கிறார்கள்.(க.) அது பெரிய மயக்கம். தேவன் வேறே: நம்முடைய ஆத்துமா வேறே. அவர் தானாயிருக்கிற அநாதியானவர். நம்முடைய ஆத்துமா அவராலே உண்டாக்கப்பட்டது. அவர் அளவில்லாத பரமாத்துமா. நாம் அளவுள்ள சீவாத்துமா. அவர் எங்கும் நிறைந்திருக்கிறவர். நம்முடைய ஆத்துமா ஓரிடத்தில் இருக்கிறது. அவர் சர்வஞானம் உடையவர். நம்முடைய ஆத்துமா அற்ப ஞானமுடையது. அவர் சர்வவல்லமையுள்ளவர்; வானத்தையும் பூமியையும் படைத்தவர். நம்முடைய ஆத்துமா கிஞ்சித்து வல்லமையுள்ளது; ஒரு மணலையானாலும் படைக்கிறதற்குத் திராணியில்லை. அவர் சர்வத்துக்கும் மேலானவர். நம்முடைய ஆத்துமா அவருக்கு ஆதீனமானது. இப்படிப்பட்ட பேதங்கள் இருக்கிறதினாலே நம்முடைய ஆத்துமா தேவனல்லவென்பது நிச்சயமே.(உ.)

கடவுளும் மனுஷனுடைய ஆத்துமாவும் ஒரே வஸ்துவென்று சொல்லுகிறது நியாயவிரோதமும், தேவதூஷணமுமாயிருக்கிறது. அப்படிப் போதிக்கிறவர்கள் உலகத்திலே துன்மார்க்கத்தையே ஸ்தாபிக்கிறார்கள். எதைச் செய்தா

(க.), (உ.), ௩௰௧, ௩௰௨-ம் பக்கங்களிலே காண்க.

லும், அது கடவுளுடைய செய்கையேயல்லாமல், நம்முடைய செய்கையல்ல என்று போதித்தால், மனுஷர்கள் பயமில்லாமல் பாவஞ்செய்வதற்குத் துணிவார்களல்லவா? அப்படிப்பட்ட போதனையைத் துஷ்டர்களெல்லாரும் உத்தமமென்று மெச்சுவார்கள். ஓகோ, இது நல்ல உபதேசம்: மெத்தவும் நன்றாயிருக்கிறது: எந்தத் துஷ்டத்தனஞ் செய்தாலும், அஞ்சாமல் செய்யலாம். அந்தச் செய்கை நமதல்ல; அது கடவுளுடைய செய்கையாயிருக்கிறது என்று சொல்லி, சந்தோஷப்பட்டு, ஒரு தடையுமில்லாமல், எல்லா அக்கிரமங்களையும் செய்வார்கள். பூலோகத்திலே அப்படிப்பட்ட போதனை பிரபலியமானால், உலகம் முழுவதும் கொடுமையினாலே நிறைந்து, நிலைமாறி, நசித்துப்போகும். துன்மார்க்கத்தை விஸ்தாரமாய்ப் பெருகச்செய்கிற அந்தப் போதனை சத்தியமாயிருக்குமா? அது சத்தியமல்ல. அது மட்டில்லாத பெரிய பொய். பூமியை நரகலோகத்துக்குச் சமானமாக்கத்தக்க கள்ள உபதேசம். ஆனபடியினாலே அந்தத் துர்ப்போதனையைத் தள்ளிவிட்டு மனந்தெளியுங்கள். ஆத்துமா தேவனல்ல. அது ஒருபோதும் தேவனாகப் போகிறதுமில்லை.

நம்முடைய ஆத்துமா சரீரத்தை விட்டு, வெளிப்பட்டுப் போகவேண்டும். உடம்புக்குள்ளே சீவனைக் கட்டிவைக்கிறதற்கு ஒரு உபாயமும் இல்லை. சலத்தின்மேல் உண்டாகிற ஒரு குமிழி உடையாதபடி அதைக் காப்பாற்ற வேண்டுமென்று ஒருவன் எண்ணி, இருப்புப் பூண்களைப் பண்ணி, அந்தக் குமிழிக்குக் காப்பாக இட்டு, அதினாலே பூட்டிவைக்கலாமென்று யோசித்தாலும், அதைக் காப்பாற்றிவைக்க அவனாலே ஆகுமா? கொஞ்சநேரத்திலே அந்தக் குமிழி உடைபடும். அதிலிருக்கிற காற்றும் பறந்துபோகுமல்லவா? குமிழிக்குப் பூண் கட்டுவதுபோல, இந்தச் சரீரத்துக்கு அன்னம் ஊட்டி, வஸ்திரம் கட்டி, மருந்து கொடுத்து, அவைகளினாலே பத்திரப்படுத்தலாமென்று எவ்வளவு பிர

யாசப்பட்டாலும், அந்தச் சரீரம் பூமியிலே நிலைநிற்குமா? கொஞ்ச காலத்திலே அது விழுந்துபோகும். அதிலிருக்கிற ஆத்துமா புறப்பட்டுப் போகுமல்லவா? அப்படியே ஆகும். எல்லாருக்கும் மரணம் சம்பவிக்கும். பெரியோர் சிறியோர் யாவரும் சாகவேண்டுமேயல்லாமல், எவனும் தப்பமாட்டான். பூமியிலே எத்தனை நாள் வாழ்ந்தாலும், கடைசியிலே ஆறடி நிலமாவது, சுடுகாட்டுக் குப்பையாவது நம்முடைய சரீரத்துக்குக் கதியாகப் போகிறது.

இந்த உடலைவிட்டு ஆத்துமா எப்போது புறப்பட்டுப் போகுமென்றால், அது ஒருவருக்கும் தெரியாது. மரணகாலத்திலே அது போகும். மரணகாலம் வருவதையோ எவரும் முன் அறிந்து சொல்லமாட்டார்கள். ஆனதல்லாமல் ஆவதும் அறிவாரோ?

* இன்றைக்கிருந்தாரை நாளைக்கிருப்பரென்
றெண்ணவோ திடமில்லையே.

என்று உங்களில் ஒருவர் சொல்லவில்லையா?

ஆத்துமா தேகத்தை நீங்கி வெளிப்படும் சமயத்திலே, தன்னோடே கூட எதைச் சேர்த்துக்கொண்டு போகும்?

† இடம்பெறுவீடுமின்னார் சேய்சகமுமிருநிதியும்
உடம்பைவிட்டாருயிர் போம்போதுகூடி யுடன்வருமோ.

---

**தாயுமானவர் பாடல்.**

* இ—ள். இன்றைக்கு—இன்றைக்கு. இருந்தாரை—பிறந்தவர்களை. நாளைக்கு—நாளைக்கு. இருப்பரென்று—இருப்பார்களென்று. எண்ண—நினைக்கிறதற்கு. திடம்—நிச்சயம். இல்லையே—இல்லை. எ—று.

**தாயுமானவர் பாடல்.**

† இ—ள். ஆர்—அருமையான. உயிர்—ஆத்துமா. உடம்பைவிட்டு—சரீரத்தை விட்டு. போம்போது—போகுங்காலத்திலே.

விசாலமான வீடும், அழகான மனைவியும், அன்பான புத்திரனும், அருமையான வாழ்வும், பெருமையான ஆஸ்தியும் ஆத்துமாவுடனே கூடி வருமோ? அப்படிப்பட்டதொன்றும் வராதே.

* காதற்ற ஊசியும் வாராதுகாணுங் கடைவழிக்கே.

ஒருவன் உலகத்தில் எவ்வளவு சம்பாதித்தாலும், அவனுடைய ஆத்துமா ஒரு துரும்பையாலும் தூக்கி எடுத்துக்கொண்டுபோகாது. இவ்வுலகத்திலுள்ள பொருளெல்லாம் ஆத்துமாவுக்கு வேறாக இருக்கிறபடியினாலே அந்த ஆத்துமாவிலே ஒட்டிக்கொள்ளமாட்டாது. ஆனாலும், பாவமும் புண்ணியமும் ஆத்தும சம்பந்தந்தான்: ஆகையினாலே, அதனோடே சேர்ந்தே போகும்.

† அத்தமும்வாழ்வு மகத்துமட்டே விழியன்பொழுக
மெத்தியமாதரும் வீதிமட்டேவிம்மி விம்மியிரு
கைத்தலைமேல்வைத் தழுமைந்தருஞ்சுடு காடுமட்டே
பற்றித்தொடரு மிருவினைபுண்ணிய பாவமுமே.

---

இடம்பெறு—விசாலமான. வீடு—மனையும். மின்னார்—மனைவியும். சேய்—பிள்ளையும். சகமும்—உலக வாழ்வும். இரு—மிகுந்த. நிதியும்—பணமும். கூடி—சேர்ந்து. உடன்வருமோ—கூடவருமா. எ–று.

பட்டணத்துப் பிள்ளை.

* இ–ள். கடைவழிக்கு—இறந்துபோகும்போது. காதற்ற—காதில்லாத. ஊசியும்—ஊசியும். வாராது—கூடவரமாட்டாது. எ–று. (காணும் என்பது அசை.)

பட்டணத்துப் பிள்ளை.

† இ–ள். அத்தமும்—ஆஸ்தியும். வாழ்வும்—வாழ்வும். அகத்துமட்டே — வீட்டுவரையிலே (நிற்கும்). விழி — கண்ணிலிருந்து. அன்பு — அன்பினாலே உண்டாகிற சலம். ஒழுக—வடியும்படி. மெத்திய—மெத்தவும் (துக்கிக்கிற). மாதரும்—ஸ்திரீகளும். வீதி

ஒருவன் சாகிறபோது, அவனுடைய ஆஸ்தி வீட்டிலே நின்றுபோகும். தாய், மனைவிமுதலான ஸ்திரீகள் வீதிமட்டுக்கும் வந்து அங்கே நின்று போவார்கள். புத்திரர் சுடுகாடு மட்டுக்கும் வந்து அங்கே நின்று போவார்கள். அப்பாலே ஆத்துமாவோடே சேர்ந்துபோவது பாவமும் புண்ணியமுமேயல்லாமல், வேறொன்றுமல்ல, என்று இந்தப் பாட்டிலே சொல்லியிருக்கிறது. ஓ சனங்களே, மனுஷர் யாவரும் பாபாத்துமாக்களேயல்லாமல், புண்ணியாத்துமா ஒருவனும் இல்லை. பூமியிலே உயிரோடே இருக்கும்போது அவர்கள் லோகரட்சகராகிய இயேசுக்கிறிஸ்துவை விசுவாசித்தால், அவர்கள் அந்த இரட்சகருடைய புண்ணியத்தைத் தங்களுக்குச் சொந்தமாகப் பெற்றுக்கொண்டு, பாவம் நீங்கி, மரணகாலத்தில் புண்ணியாத்துமாக்களாய்ப் புறப்படுவார்கள். அந்த இரட்சகரை அவர்கள் இவ்வுலகத்திலே பற்றிக்கொள்ளாதேபோனால், தங்கள் பாவங்களாலே சூழப்பட்டு, மரணகாலத்தில் பாபாத்துமாக்களாகவே புறப்படுவார்கள். நாம் பூலோகத்திலே செய்த பாவத்தையாவது, இயேசு இரட்சகர் தந்த புண்ணியத்தையாவது, இந்த இரண்டிலே ஒன்று நம்முடைய ஆத்துமாவானது தனக்கு உடையதாய்ச் சேர்த்துக் கொண்டுபோகுமேயல்லாமல், வேறொன்றையும் தன்னோடே கூட்டிக்கொண்டுபோகமாட்டாது. இது சத்தியமான வார்த்தை.

ஆத்துமா உடலைவிட்டுப் பிரியுங்காலத்தில், அது எந்த இடத்திலே போய்ச்சேரும்? அது நல்ல கதி அடைந்து, சுகத்

---

மட்டே—வீதிவரையிலும் (வருவார்கள்). விம்மி விம்மி—மிகவும் ஏங்கி. இருகை—இரண்டு கைகளையும். தலைமேல் வைத்து—தலையின்பேரிலே வைத்து. அழும்—அழுகிற. மைந்தரும்—புத்திரரும். சுடுகாடுமட்டே—சுடுகாடுவரையிலும் (வருவார்கள்). இருவினை—இரண்டு வினைகளாகிய. புண்ணிய பாவமுமே—புண்ணியமும் பாவமுமே. பற்றி—பிடித்து. தொடரும்—தொடர்ந்துபோகும். எ–று.

திலே வாழுமா? அது துர்க்கதி அடைந்து, துக்கத்திலே முழுகுமா? இதுவே நமக்குப் பிரதானமாகத் தெரியவேண்டும். ஆத்துமா பல பல பிறப்புகளை அடையுமென்று உங்களில் வெகுபேர் சொல்லுகிறார்கள். அதை நம்பலாமா? மனுஷனுடைய ஆத்துமா தன்னுடைய மனுஷத் தன்மையைப் போக்கடித்துவிட்டு; மாடாகவும், குரங்காகவும், நத்தையாகவும், மீனாகவும், குருவியாகவும், பூச்சியாகவும், மரமாகவும், கொடியாகவும், புல்லாகவும், கல்லாகவும், மண்ணாகவும் பிறந்திறந்து, காலாகாலமாகச் சென்ம மரண மார்க்கங்களாய்ப் புரண்டுருண்டு, போகுமென்று நினைக்கவுங் கூடுமா? இது சிரிக்கவும் வெறுக்கவும் தக்கதான போதனையல்லாமல், வேறல்ல. மனுஷனுடைய ஆத்துமா மனுஷசுபாவத்தை இழந்து, மிருகமாகவும், மச்சமாகவும், பட்சியாகவும், புழுவாகவும், செடியாகவும், சென்மித்ததுமில்லை, இனி அப்படிச் சென்மிக்கப் போகிறதுமில்லை. மனுஷன் பூமியிலே பிறக்கிற பிறப்பு ஒன்றே. அவன் இறக்கிற இறப்பும் ஒன்றே.

அப்படியிருக்க, நம்முடைய ஆத்துமா எங்கே போகுமென்று கேட்பீர்களேயானால், அந்தக் கேள்விக்குச் சத்திய வேதமே உத்தரவு சொல்லுகின்றது. அதை எடுத்துக் காட்டுகிறோம். நன்றாய்க் கவனியுங்கள்.

அந்த விசேஷம் உங்களுக்குத் தெளிவாய் விளங்கும்படியாக, மூன்று உலகங்கள் உண்டென்று அறியுங்கள். அந்த மூவுலகத்தின் விவரங்களையும் கேளுங்கள்.

மேலே வானத்தில் மோட்சலோகம் இருக்கின்றது. அங்கே தேவன் தம்முடைய மகிமையையும் தயவையும் வெளிப்படுத்துகிறார். அது இருள் சேராத வெளிச்சரூபமான லோகம். அது பாவம் அடிவைக்காத பரிசுத்தமான ஸ்தலம். அது துன்பமும் துக்கமும் தோன்றாத இன்பமான இடம். அங்கே பசியும் பிணியும், மூப்பும் இறப்பும், பகையும் பழியும்

இல்லை. அங்கே சேருகிறவர்கள் கடவுளைத் தரிசிப்பார்கள். அவருடைய கிருபையை அனுபவிப்பார்கள். பேரானந்த சுகத்தை அடைவார்கள். தேவ சமுகத்திலே நித்தியமும் பிரகாசிப்பார்கள். அந்த மோட்சலோகத்தின் சவுக்கியமும் சிறப்பும் நமது வாக்குக்கும் நினைவுக்கும் எட்டாதது.

கீழே பாதாளத்தில் நரகலோகம் இருக்கின்றது. அங்கே பேயும் பிசாசும் பூதமும் உண்டு. சாத்தான் என்கிற பிசாசரசன் அவ்விடத்தைக் கொடுங்கோலோடே ஆளுகிறான். அந்த நரகமானது மிகுந்த இருள் மூடின அந்தகாரமான லோகம். அது பாவம் நிறைந்த அசுத்தமான ஸ்தலம். அது நோவும் துயரமும் நெருங்கின துன்பமான இடம். அங்கே சுகமும் சினேகமும் சந்தோஷமும் இல்லை. அது அக்கினி சமுத்திரமென்று சொல்லப்பட்டது. அங்கே சேருகிறவர்கள் பிசாசுகளுக்கு நித்திய அடிமையாவார்கள். அந்தப் பேய்களாலே வேதனைப்படுவார்கள். ஒரு சவுக்கியத்தையும் காணமல், தீராத தண்டனைகளுக்குட்படுவார்கள். அங்கேயே என்றென்றைக்கும் விம்மி, அழுது, மாரடித்து, பல்லுகளைக் கடித்துக்கொண்டே இருப்பார்கள். அந்த நரகலோகத்தின் துன்பமும் இழிவும் நமது வசனத்துக்கும் எண்ணத்துக்கும் எட்டாதது.

அந்த இரண்டு லோகங்களுக்கும் நடுவே இந்தப் பூலோகம் இருக்கின்றது. இங்கே சில நாள் நாம் சுகித்தும், துக்கித்தும், வாழ்ந்தும், தாழ்ந்தும் இருக்கிறோம். பின்பு நம்முடைய ஆத்துமாவானது தன்னுடைய சரீரத்தை மண்ணுக்கும் சாம்பலுக்கும் போட்டுவிட்டு, இந்தப் பூலோகத்தை நீங்கிப் புறப்படும்போது, அது எங்கே போய்ச் சேருமென்று விசாரித்தால், அது மோட்சலோகத்துக்காவது நரகலோகத்துக்காவது போய்ச் சேரும். அது எந்த லோகத்திலே போய்ச் சேருகிறதோ, அந்த லோகத்திலேதானே அது எப்போதும் தங்கும். ஆகையினாலே நாம் நரகலோகத்துக்குப்

போகாமல் தப்பி, மோட்சலோகத்தைச் சேரும்படியான மார்க்கத்தை இப்போதே ஆசையோடே தேடிக்கொள்ள வேண்டும். இதுவே நமக்குப் பூலோகத்தில் பெரிய அக்கறையும் வேலையுமாய் இருக்க வேண்டியது.

செத்துப்போகிற இந்த உடலுக்கு நாள்தோறும் கஷ்டப்பட்டு, சாகாத ஆத்துமாவுக்கு நல்ல கதி தேடாமல் போகிறது பைத்தியமல்லவா?(க.) தோலைத் தின்று பழத்தை உதவாதென்று காக்கைக்கு இடுகிறது புத்தியோ? சிப்பியை எடுத்துக் காத்து, முத்தைக் குப்பையிலே எறிந்துவிடுகிறது நல்லதோ?

* சென்றநாளெல்லாஞ் சிறுவிரல்வைத்தெண்ணலாம்
நின்றநாள்யார்க்கு முணர்வரி—தென்றொருவன்
நன்மைபுரியாது நாளுலப்பவிட்டிருக்கும்
புன்மைபெரிது புறம்.

சென்றுபோன நாள்கள் கொஞ்சம். அவைகளைச் சிறுவிரல்மேல் பெருவிரல் வைத்து, இத்தனையென்று எண்ணலாம். இனிமேல் வரப்போகிற நாள் எத்தனையோ அது யாருக்கும் தெரியாது. ஆகையினாலே, ஒருவன் நன்மைசெய்

---

**அறநெறிச்சாரம்.**

* இ-ள். ஒருவன் — ஒருவன். சென்றநாளெல்லாம் — கழிந்த நாள்களையெல்லாம். சிறுவிரல்—தன்னுடைய சிறுவிரலில். வைத்து—மற்றொரு விரலை வைத்து. எண்ணலாம்—எண்ணி இத்தனை நாளென்று பார்க்கலாம். நின்ற நாள்—போக நின்ற நாள் இத்தனையென்று. யார்க்கும் — எவர்களுக்கும். உணர்வரிது — தெரிவது அருமை. என்று — என்று நினைத்து. நன்மை — நன்மை. புரியாது—செய்யாமல். நாள்—இன்னும் இருக்கிற காலமும். உலப்ப—கெட்டுப்போகும்படியாக. விட்டிருக்கும் — விட்டுச்சும்மா இருக்கிற. புன்மை — மூடத்தனமானது. பெரிது — பெரிதாய்த் தோற்றும். எ-று. (புறமென்பது அசைச்சொல்.)

(க.) ௱௰௩-ம் பக்கத்திலே காண்க.

யாமல், இன்னும் உலகத்திலே தனக்கு இருக்கிற நாள்களையும் வீணாய்க்கழித்துவிட்டால், அதுவே மூடத்தனமென்று இந்தப் பாட்டிலே சொல்லியிருக்கிறது.

மோட்சம் நரகம் என்கிற இரண்டிலே ஒன்று நமக்குக் கிடைக்குமென்பது நிசமாகவே இருக்க, எப்படிப்பட்டவர்களுடைய ஆத்துமா மோட்சத்துக்கு ஏறுமென்றும், எப்படிப்பட்டவர்களுடைய ஆத்துமா நரகத்திலே விழுமென்றும், ஆராய்ந்து தெரிந்துகொள்ளவேண்டும். இதைக் கடவுள் தெளிவாய்த் தெரிவித்திருக்கிறார். எவர்களுடைய பாவம் இங்கே நிவிர்த்தியாகிறதோ, அவர்களுடைய ஆத்துமா மரணகாலத்திலே மோட்சலோகத்தை அடையும். எவர்களுடைய பாவம் இங்கே நிவிர்த்தியாகாமலிருக்கிறதோ, அவர்களுடைய ஆத்துமா மரணகாலத்திலே நரகலோகத்தை அடையும். இப்படியிருக்கிறபடியினாலே, பாவம் எவ்விதத்திலே நிவிர்த்தியாகுமென்றும், ஆத்துமாவுக்கு எப்படிப் புண்ணியம் கிடைக்குமென்றும், அறிந்து கொள்வதே மகா அவசியமாயிருக்கிறது. இந்தக் காரியத்தை மனுஷர்கள் தங்கள் சொந்த புத்தியினாலே எவ்வளவு ஆலோசித்தாலும், கண்டுபிடிக்கமாட்டார்கள். நாம் பாவஞ்செய்தது தேவனுக்கே விரோதமாயிருக்கிறது. ஆகையினாலே நமக்குள்ள அந்தப் பாவம் போகிற விதத்தையும், நமக்கில்லாத புண்ணியம் நமக்குண்டாகிற வழியையும், தேவனேயொழிய, வேறேயார் அறிவிக்கக்கூடும்? அதை அறிவிக்கும்படிக்கு அவர் சத்திய வேதத்தை அருளிச்செய்தார். அந்தச் சத்திய சாஸ்திரம் சொல்லுவதை வெளிப்படுத்துகிறோம்: உற்றுக் கேளுங்கள்.

பாவத்தைப் போக்கவும், புண்ணியத்தைச் சேர்க்கவும், நமக்கு எள்ளளவும் நிருவாகம் இல்லை. ஆனாலும் நம்முடைய பாவத்தை நீக்கவும், நமக்குப் புண்ணியத்தைக் கொடுக்கவும் வல்லவர் ஒருவர் இருக்கிறார். தேவனுடைய குமாரனாகிய இயேசுக்கிறிஸ்து என்று சொல்லப்பட்ட

வரே அவர். அவரே சர்வ சிருஷ்டி கர்த்தரும், சகல லோக ரட்சகருமாயிருக்கிறார். இவ்வுலகத்திலுள்ள ஆத்துமாக்களைப் பாவத்துக்குத் தப்புவிக்க வேண்டுமென்று அவர் விரும்பி, பரலோகத்திலிருந்து பூலோகத்துக்கு வந்து, மனுஷனாய் அவதாரஞ்செய்தார். முப்பத்து மூன்று வருஷமளவும் பூமியிலே சஞ்சரித்தார். அவர் போன இடங்கள்தோறும் அவருடைய அருள் பிரகாசித்தது. எல்லாருக்கும் நன்மை செய்தார். கண் தெரியாத குருடர் பார்வை அடையும்படிக்கு, அனுக்கிரகித்தார். காது கேளாத செவிடர் கேட்கும்படிக்கு, கடாட்சித்தார். நாவெடுக்காத ஊமைகள் பேசும்படிக்கு, உபகரித்தார். எவ்விதத்திலும் தீராத குஷ்டரோகம் முதலான பலத்த நோய்களைத் தீர்த்தார். செத்துக்கிடந்த பிணங்களை எழுப்பி, உயிர்ப்பித்தார். பேய்களையும் பிசாசுகளையும் பறக்கடித்தார். கொந்தளிக்கிற காற்றையும் கொர்ச்சிக்கிற கடலையும் அடக்கினார். இவையெல்லாம் அவர் தம்முடைய வாக்கினாலே நடத்தினார். ஆகாசத்திலும் பூமியிலும் சமுத்திரத்திலும் இவ்விதமான அற்புதங்கள் நடந்ததினாலே, சர்வத்தையும் ஆளுகிற கடவுளானவர் குருவாய் வந்தாரென்று விண்ணும் மண்ணும் கடலும் சாட்சி கொடுத்தது.

அவர் மனுஷர்களுடைய சரீரத்துக்கு இவ்விதமான உபகாரங்களைச் செய்ததுமல்லாமல், அவர்களுடைய ஆத்துமாவுக்கு உபயோகமான மெய்யுபதேசத்தையும் போதித்தார். இதுவுமன்றி, அன்புள்ள அந்த இயேசுக்கிறிஸ்து நம்முடைய பாவத்தைச் சுமக்கவும் சம்மதித்தார். பாவஞ்செய்த நாமே குற்றவாளிகள். நமக்குத்தான் தண்டனை வரவேண்டியது. குற்றமில்லாத அவர் நம்முடைய குற்றத்தைத் தமதாக எடுத்துக்கொண்டு, நமக்காகத் தண்டனை அனுபவித்தார். நமது நிமித்தம் அவர் இவ்வுலகத்திலே மிகவும் தாழ்மைப்பட்டார். அனேக நிந்தைகளையும் இகழ்ச்சிகளையும் அடைந்தார். சிலு

வைமரத்திலே அறையப்பட்டார். தம்முடைய பரிசுத்த இரத்தத்தைச் சிந்தினுர். தம்முடைய சீவனையும் விட்டார். மூன்று நாளுக்குள்ளே மறுபடியும் உயிர்த்து, எழுந்து, பூமியிலே தோன்றினுர். இவ்விதமாய் அவர் நம்முடைய பாவத்தைச் சுமந்தார். பின்பு உலகமெங்கும் தம்மைப் பிரசங்கிக்கும்படி சீஷர்களுக்குக் கட்டளையிட்டு, இந்த நிலத்தைவிட்டு, பரலோகம் சென்றுர்.

மனுஷர்களுக்காக மனுஷனுய்ப் பிறந்த இந்த இயேசுக்கிறிஸ்துவானவர் தேவனுடைய கட்டளைகளையெல்லாம் நமக்காக நிறைவேற்றி, நம்முடைய பாவத்துக்கேற்ற தண்டனையையும் சுமந்தபடியினுலே, அவர் அளவில்லாத புண்ணியத்தை உண்டாக்கிவைத்தார். அவர் உண்டாக்கின அந்தப் புண்ணியமே பாவிகளுக்குச் சரணம்.

ஓ சனங்களே, இயேசுக்கிறிஸ்துவின் புண்ணியத்தை யார் பெற்றுக்கொள்ளுகிறுர்களோ, அவர்களுடைய பாவம் தொலையும். அவர்கள் செத்துப்போகப் பயப்படவேண்டியதில்லை. கிறிஸ்துவின் புண்ணியமே அவர்களுடைய ஆத்துமாவோடே சேர்ந்துபோகும். அவர்களுக்காக மோட்சலோகத்தைத் திறக்கும். அவர்களை அந்த முத்தியுலகத்திலே கூட்டும். இங்கே கிறிஸ்துவின் புண்ணியத்தைப் பெற்றுக்கொள்ளாதவர்களோ தங்கள் பாவமென்கிற பெரிய சுமையோடே நரகத்திலே முழுகிப்போவார்கள்.

அவருடைய புண்ணியத்தை எப்படிப் பெற்றுக்கொள்ளலாமென்று கேட்கிறீர்களா? அவரை விசுவாசிக்கவேண்டும். அதுவே வழி. அவரை நினைத்துப் பிரார்த்தனை செய்யுங்கள். இயேசு இரட்சகரே, நான் வெகு பாவஞ்செய்தேன்: உமக்கு விரோதமாய் நடந்தேன்: இதுவே எனக்கு விசனமும் துக்கமுமாயிருக்கிறது. இனிமேலும் நான் பாவஞ்

செய்து, உமக்கு மாறுபாடாய் நடப்பது எனக்குச் சம்மதமல்ல. உம்மை அண்டுகிறேன். என்னுடைய தண்டனை நீர் சகித்தீர். என்னுடைய பாவத்தை நீர் தீர்த்தீர். எனக்காகப் புண்ணியம் நீர் முடித்தீர். நான் உம்மையே நம்பி, பற்றிக்கொள்ளுகிறேன். நீர் சிந்தின இரத்தமே என் ஆத்துமாவுக்குத் தீர்த்தம். உம்முடைய திருப்பாதமே எனக்குக் கதி. நீர் போதித்த வழியே நடப்பேன். மற்றெல்லா வழிகளையும் வெறுப்பேன். என்னை ஏற்றுக்கொள்ளும். என் பாவத்தை மன்னித்தருளும். உம்முடைய பரிசுத்த ஆவியை எனக்குத் தந்து, என் இருதயத்தைச் சுத்தம் பண்ணும். எனக்குள் தேவபத்தியை உண்டாக்கும். என்னைச் சன்மார்க்கத்திலே நடக்கச்செய்யும்: என்று சொல்லி அவரை வேண்டிக்கொள்ளுங்கள். அவரைத் தேவனென்றும், குருவென்றும், நம்பி, உறுதியாய்ப் பிடித்துக்கொள்ளுங்கள். உண்மையாக நீங்கள் இந்த இயேசுக்கிறிஸ்துவை விசுவாசித்துக் கொண்டால், அவர் உங்களைத் தள்ளமாட்டார். உங்களைத் தம்முடையவர்களென்று அங்கிகரித்து, ஆசீர்வதித்து, உங்கள் பாவங்களை மன்னித்து, தமது புண்ணியத்தை உங்களுக்கு நித்திய சுதந்தரமாகக் கொடுத்து, இரட்சிப்பார். மோட்ச பாக்கியமும் உங்களுக்கு நிச்சயமாகும்.

சனங்களே, இன்னும் ஒரு பெரிய காரியத்தைக் கேளுங்கள். மோட்சலோகத்துக்கு எழுந்தருளிப் போயிருக்கிற இயேசுக்கிறிஸ்துநாதர் மறுபடியும் இந்தப் பூலோகத்துக்கு வருவார். அவர் வரப்போகிற அந்தக் காலத்துக்கு நியாயத்தீர்ப்புநாளென்று பேர். அந்த நாளிலே அவர் தேவ மகிமையோடும், கோடா கோடி தேவதூதர்களோடும் வருவார். அவரைக் கண்டு சூரியன் இருளும். சந்திரன் இரத்தமயமாகும். நட்சத்திரங்கள் உதிரும். வானமும் அகலும். அது மிகவும் பயங்கரமான நாளாயிருக்கும்.

முன்னே இந்தப் பூமியிலே கிறிஸ்துவினாலே பாவநிவிர்த்தி அடைந்து மோட்சலோகத்துக்கு ஏறிப்போன ஆத்துமாக்களெல்லாம் அந்த நாளிலே அந்த முத்தியுலகத்திலிருந்து கிறிஸ்துவோடே புறப்பட்டு வரும். முன்னே இந்தப் பூமியிலிருந்து தங்கள் பாவச்சுமையோடே நரகத்திலே விழுந்துபோன ஆத்துமாக்களெல்லாம் அந்த நாளிலே கிறிஸ்துவின் கட்டளையைக் கேட்டு, தாங்கள் கிடக்கிற நரகலோகத்திலிருந்து புறப்பட்டு வரும். அப்படி மோட்சத்திலும் நரகத்திலுமிருந்து புறப்பட்டுவருகிற அந்த எல்லா ஆத்துமாக்களின் சரீரங்களையும் கிறிஸ்து அப்போது ஒரு நொடியிலே எழுப்புவார். ஒவ்வொரு ஆத்துமாவும், முன்னே பூமியிலே தன் தனக்கு இருந்த தன் தன் சரீரத்தை அப்போதே மறுபடியும் அடையும். பின்பு அவர்களெல்லாரும் இயேசுக்கிறிஸ்துவுக்கு எதிரே நிறுத்தப்படுவார்கள். ஓ சகோதரரே, அது மகா பெரிய கூட்டமாக இருக்குமல்லவா? பூலோகத்திலே, அதின் ஆதிமுதல் முடிவுவரைக்கும் சகலகாலங்களிலும் சகலதேசங்களிலும் பிறந்து இறந்த சமஸ்த மனுஷர்களும் எண்ணமுடியாத திரளாக அங்கே, ஒருவரும் தப்பாமல், நிற்பார்கள். அப்போது கர்த்தரும் சர்வநியாயாதிபதியுமாயிருக்கிற இயேசுக்கிறிஸ்துவானவர் நியாயம் விசாரிப்பார். மனுஷர் பூலோகத்திலே உயிரோடே இருந்தபோது அவர்கள் நினைத்ததும் பேசினதும் செய்ததுமாகிய யாவும் அந்த நியாயத்தீர்ப்புநாளிலே வெளிப்படும். அவனவன் நடந்த நடத்தையின்படியே அவனவனுக்குத் தீர்ப்பாகும். அந்தப் பெரிய கூட்டத்தைக் கிறிஸ்து இரண்டு பிரிவாகப் பிரிப்பார். பூமியில் இருந்தபோது எவர்கள் கிறிஸ்துவை விசுவாசித்து, அவரிடத்திலே பாவநிவிர்த்தியைப் பெற்றுக்கொண்டார்களோ, அவர்களை அந்த நாளிலே அவர் தம்முடைய வலது பக்கத்திலே சேர்ப்பார். மற்றவர்களெல்லாரையும் அவர்

தம்முடைய இடது பக்கத்திலே சேர்ப்பார். பின்பு தீர்ப்புக் கொடுப்பார். தமது இடது பக்கத்தில் நிற்கிறவர்களை நோக்கி, சபிக்கப்பட்டவர்களே, என்னை விட்டு நித்திய அக்கினிக்குப் போங்களென்று சொல்லி, அவர்களைச் சரீரத்தோடே நரகலோகத்திலே தள்ளுவார். அந்த நரகத்தின் வாசலையும் அடைப்பார். அதற்கு அவர்கள் ஒருபோதும் தப்பி வெளியே வரமாட்டார்கள். அங்கே என்றென்றைக்கும் வேதனைப்படுவார்கள். தமது வலது பக்கத்தில் நிற்கிறவர்களை அவர் அருட் பார்வையோடே நோக்கி, ஆசீர்வதிக்கப்பட்டவர்களே, இராச்சியத்தைச் சுதந்தரித்துக்கொள்ள வாருங்களென்று சொல்லி, அவர்களைச் சரீரத்தோடே மோட்சலோகத்திலே கூட்டுவார். அங்கே அவர்கள் என்றென்றும் வாழுவார்கள். மோட்சத்துக்கும் நரகத்துக்கும் நடுவே எவரும் தாண்டக்கூடாத பெரிய பிளப்பு நித்தியமாகவே இருக்கும்.

பிரியமானவர்களே, இந்தக் காரியங்களை உங்கள் இருதயத்திலே வைத்துக்கொள்ளுங்கள். உலகமீட்பராகிய இயேசுவினிடத்திலே சேருங்கள். காலம் போகின்றது. மரணமும் நியாயத்தீர்ப்பும் சமீபிக்கின்றது. உங்கள் நாளை வீணாய்ப் போக்கவேண்டாம். இவ்வுலகத்துப் பொருள் நிலையல்ல. ஊரும் நிலையல்ல. உற்றாரும் பெற்றாரும் நிலையல்ல. பெண் சாதி பிள்ளையும் நிலையல்ல. எந்தச் சீரும், சிறப்பும், செல்வமும் நிலையல்ல. பரம குருவாகிய கிறிஸ்துவின் திருவடியே நிலை.

* நீரிலெழுநீர்க்குமிழி நிலைகெடல்போல்
நில்லாதுடனீங்கிவிடு நிச்சயமென்றே
பாரிற்பலவுயிர்களைப் படைத்தவன்றனைப்
பற்றறவேபற்றித்தொடர்ந் தாடாய்பாம்பே.

---

**பாம்பாட்டிச்சித்தர் பாடல்.**

* இ—ள். நீரில்—சலத்திலே. எழும்—உண்டாகிற. நீர்க்குமிழி—குமிழியானது. நிலைகெடல்போல்—நிலைகெட்டு அழிந்து

இதின் பொருளைச் சிந்தித்துப் பாருங்கள். என் மனமாகிய பாம்பே, சலத்தில் தோன்றுகிற குமிழி நிலைக்காமல் கெட்டுப்போவதுபோல, உன்னுடைய உடலும் நில்லாமல் நீங்கிவிடுமென்று நீ கண்டுணர்ந்து, உலகத்துப் பொருளை நீ பற்றிக்கொள்ளாமல், எல்லா உயிர்களையும் படைத்த கர்த்தாவைப் பற்றிக்கொள்ளக் கடவாய்.

ஓ சகோதரரே, சகல உயிர்களையும் உண்டாக்கின கர்த்தரும், பாவிகளை மீட்க வல்லவருமானவர் இயேசுக்கிறிஸ்துவே. அவரேயல்லாமல், இரட்சகர் வேறே ஒருவரும் இல்லை. இதுதான் உங்களுக்கு நல்ல சமயம். இப்போதே அவரிடத்தில் அடைக்கலம் புகுந்துகொள்ளுங்கள். (௪.)



போகிறதுபோல. உடல் — சரீரமானது. நில்லாது—நிற்காமல். நீங்கிவிடும்—போய்விடும். நிச்சயமென்று—இது நிச்சயமென்று நினைத்து. பாரின்—பூமியையும். பலவுயிர்களை—அனேக ஆத்துமாக்களையும். படைத்தவன்றனை—சிருஷ்டித்த கர்த்தாவை. பற்றற—உலகப்பொருளின்மேல் உள்ள ஆசை நீங்கும்படி. பற்றி—பிடித்து. தொடர்ந்து—அனுசரித்து. ஆடாய்—ஆடுவாயாக. பாம்பே—மனமாகிய பாம்பே. எ-று.

(௪.) ௩௰௩-ம் பக்கத்திலே காண்க.

# உபகிரந்தம்.

## APPENDIX TO No. IV.

### முன் சொன்னவைகளுக்குச் சில உதாரணங்கள்.

(க.) கடவுளும் மனுஷனுடைய ஆத்துமாவும் ஒன்றாயிருக்கிறதென்று போதிக்கிற துர்ப்போதனையைக் குறித்துச் சொல்லுவது.

அந்தத் துர்ப்போதனையைத் தெரிவிக்கும்படி இந்துக்களில் ஒரு வாக்கியம் கட்டப்பட்டிருக்கிறது. அது சாமவேதத்தில் இருக்கிறதென்றும், மகா வாக்கியமென்பது அதற்குப் பேராக இருக்கிறதென்றும், சொல்லுவார்கள். அதாவது:

(தெலுங்கு எழுத்திலே). తత్త్వమసి.

(தமிழ் எழுத்திலே). தத் த்வம் அசி.

தத்—அது. த்வம்—நீ. அசி—இருக்கிறாய்.

நீ அதுவே இருக்கிறாய் என்பதே அந்த வாக்கியம்.

என் ஆத்துமாவே, நீதான் பரமாத்துமாவாய் இருக்கிறாய் என்பதே அதின் பொருள்.

சமஸ்த பொய்யிலும் இதுவே பெரிய பொய். எல்லா வஞ்சனையிலும் இதுதான் கெட்ட வஞ்சனை. இதை மகா வாக்கியமென்று சொல்லுகிறது ஒரு விளையாட்டுப்போலத் தோன்றுகிறது.

(உ.) கடவுளும் மனுஷனுடைய ஆத்துமாவும் ஒரே வஸ்து வல்ல என்பது.

సర్వజ్ఞాల్పజ్ఞతాభేదాత్ సర్వశక్త్యల్పశక్తితః
స్వాతంత్ర్యపారతంత్ర్యాభ్యాం సంయోగో నేశజీవయోః.

இதன் பதவுரை.

సర్వజ్ఞ—சர்வ ஞானம். అల్పజ్ఞతా—அற்ப ஞானம். భేదాత్—(என்கிற) வித்தியாசத்தினாலே. సర్వశక్తి — சர்வசக்தி. అల్పశక్తితః — அற்ப சக்தியினாலே. స్వాతంత్ర్య — யாருக்கும் ஆதீனமாயிராமல் சுயாதிபதியாயிருத்தலும். పారతంత్ర్యాభ్యాం—வேறொருவ(னாகிய தேவ)னுக்கு ஆதீனமாயிருத்தலும் (ஆகிய) இவைகளினாலே. ఈశ, జీవయోః—கடவுள், ஆத்துமா என்கிற இவ்விரண்டுக்கும். సంయోగః—ஒருமை. న—இல்லை. எ-று.

கருத்துரை.

தெய்வம் சர்வஞானமுள்ளது: மனுஷனுடைய ஆத்துமா கொஞ்சஞானமுள்ளது: ஆகையினாலே, அவ்விரண்டும் ஒன்றல்ல. தெய்வம் சர்வ வல்லமையுள்ளது: மனுஷனுடைய ஆத்துமா கொஞ்ச வல்லமையுள்ளது: ஆகையினாலே, அவ்விரண்டும் ஒன்றல்ல. தெய்வம் சர்வத்துக்கும் மேலானது: மனுஷனுடைய ஆத்துமா தெய்வத்துக்குக் கீழானது: ஆகையினாலே, அவ்விரண்டும் ஒன்றல்ல.

(௩.) சாகிற உடலுக்கு எந்நாளும் கஷ்டப்பட்டு, மோட்சம் அடைவதற்குப் பிரயாசப்படாமல்போவது புத்தியீன மென்பது.

నిత్యంబుకానియొడలికి
నిత్యముదుఃఖంబుబడునునిరతముధరలో
నిత్యానందపుపదవికి
నిత్యంబునుదుఃఖపడగనేరరువేమా.

இதன் பதவுரை.

నిత్యంబు — நித்தியம். కాని — ஆகாத. ఒడలికి — உடம்புக்கு. నిత్యము—எப்போதும். దుఃఖంబుబడును—கஷ்டப்படுவான். నిరతము—இடைவிடாமல். ధరలో—பூமியிலே. నిత్యానందపు—நித்தியானந்த மாகிய. పదవికి—மோட்சபதவியை அடையும்படிக்கு. నిత్యంబును—எப்போதிலும். దుఃఖపడగ—கஷ்டப்பட. నేరరు—மாட்டார்கள். వేమా—வேமனரே. எ-று.

கருத்துரை.

ஓ வேமனரே, அநித்தியமாயிருக்கிற இந்தச் சரீரத்துக்காக மனுஷர் எப்போதும் கஷ்டப்படுகிறார்கள். நித்தியமாயிருக் கிற மோட்சகதிக்கோ, கஷ்டப்படாமல் போகிறார்கள்.

(௪.) தாமசம்பண்ணாமல், இப்போதே ஆத்துமரட்சிப் பைத் தேடவேண்டுமென்பது.

యావత్ స్వస్థమిదం దేహం యావన్మృత్యుశ్చదూరతః
తావదాత్మహితంకుర్యాత్ ప్రాణాంతేకింకరిష్యతి.

### இதன் பதவுரை.

యావత్ — எப்போது. ఇదం — இந்த. దేహం — தேகம். స్వస్థం—சொஸ்தமோ. యావత్—எப்போது. మృత్యుః,చ—மரணமும். దూరతః—தூரமோ. తావత్—அப்போதே (ஒருவன்). ఆత్మహితం—ஆத்துமாவுக்கு நன்மையை. కుర్యాత్—செய்யக் கடவன். ప్రాణాంతే—மரணகாலத்திலே. కిం—என்னத்தை. కరిష్యతి—செய்வான்? எ—று.

### கருத்துரை.

இந்தச் சரீரம் எப்போது சொஸ்தமாயிருக்கிறதோ, மரணமும் எப்போது தூரமாயிருக்கிறதோ, அப்போதே ஒருவன் தன் ஆத்துமாவுக்கு நன்மையைத் தேடிக்கொள்ளவேண்டும். வியாதிப்பட்டு மரணம் அடையுஞ் சமயத்திலே என்ன செய்யலாம்?



## வேதவாக்கியம்.



(க.) சரீரம் அநித்தியமானது:

வாழ்நாள் நிழலுக்குச் சமானம்.

யோபு, ௮. அதி: ௮.

புல்லுக்கும் புல்லின் பூவுக்கும் ஒப்பு.

௱௩. சங்கீதம்: ௰௫, ௰௬.

க. பேதுரு, க. அதி: ௨௪, ௨௫.

மண்ணானது மண்ணாகும்.

ஆதியாகமம், ௩. அதி: ௰௯.

(௨.) ஆத்துமா எக்காலத்திலும் அழியாதது.

பிரசங்கி, ௰௨. அதி: ௭.

(௩.) தேவனும் மனுஷனுடைய ஆத்துமாவும் ஒன்றல்ல:

தேவன் ஆத்துமாவைச் சிருஷ்டித்தவர்.

சகரியா, ௰௨. அதி: ௧.

தேவன் அளவில்லாதவர்.

௧. நாளாகமம், ௨௯. அதி: ௰௧.

(௪.) சரீரத்துக்குள்ளே ஆத்துமாவை நிறுத்திவைப்பது நம்மாலே முடியாது.

பிரசங்கி, ௮. அதி: ௮.

(௫.) மரணகாலத்திலே ஆத்துமாவோடே இன்னது சேர்ந்து போகுமென்பது:

உலகப்பொருள் கூடிப்போகாது.

பிரசங்கி, ௫. அதி: ௰௫.
௧. தீமோத்தேயு, ௬. அதி: ௭.

விசுவாசியோடே கிறிஸ்துவின் புண்ணியமே சேர்ந்து போகும்.

௨௩. சங்கீதம்: ௪.
௧. தெசலோ, ௫. அதி: ௰.
ரோமர், ௰௪. அதி: ௮.

பாவியோடே அவனுடைய பாவமே சேர்ந்துபோகும்.

எசேக்கியேல், ௩. அதி: ௰௯.
யோவான், ௮. அதி: ௨௪.

(௬.) மூவுலகம்:

மோட்சலோகம்;

தேவமகிமையால் நிறைந்த வெளிச்சலோகம்.

வெளிப், ௨௧. அதி: ௨௩.

பரிசுத்தலோகம்.

வெளிப், ௨௧. அதி: ௨௭.

ஆனந்தலோகம்.

௰௬. சங்கீதம்: ௰௧.

எந்தத் துன்பமுமில்லாத லோகம்.

வெளிப், ௭. அதி: ௰௬, ௰௭.
வெளிப், ௨௧. அதி: ௪.

அங்கே சேருகிறவர்கள் தேவனைத் தரிசிப்பார்கள்.

வெளிப், ௨௨. அதி: ௪.

நித்திய சந்தோஷம் அடைவார்கள்.

ஏசாயா, ௫௧. அதி: ௰௧.

பிரகாசிப்பார்கள்.

மத்தேயு, ௰௩. அதி: ௪௩.

நரகலோகம்;

பேயும் பிசாசும் இருக்கிற லோகம்.

மத்தேயு, ௨௫. அதி: ௪௧.

அசுத்தமும் துன்பமுமாகிய இருள் மூடின லோகம்.

மத்தேயு, ௨௨. அதி: ௰௩.

அக்கினி சமுத்திரம்.

வெளிப், ௨௰. அதி: ௰௫.

அங்கே சேருகிறவர்கள் வேதனைப்படுவார்கள்.

லூக்கா, ௰௬. அதி: ௨௪.

விம்மி அழுது பற்கடிப்பார்கள்.

மத்தேயு, ௰௩. அதி: ௫௰.

பூலோகம்;

கிறிஸ்து வரும் நாளிலே, பூமியும் அதிலுள்ள கிரியைகளும் வெந்துபோம்.

௨. பேதுரு, ௩. அதி: ௰, ௰௧.

(எ.) ஆத்துமாவானது மரணகாலத்திலே மோட்சலோகத்துக்காவது, நரகலோகத்துக்காவது போய்ச் சேரும்.

லூக்கா, ௰௬. அதி: ௨௨, ௨௩.

(அ.) சாகிற உடலுக்கே உழைத்து, சாகாத ஆத்துமாவுக்கு நல்ல கதி தேடாமல் போவது புத்தியீனம்.

லூக்கா, ௰௨. அதி: ௰௬—௨௧.

(௯.) பாவநிவிர்த்தி அடையாதவன் மரணகாலத்திலே நரகத்தில் விழுவான். கிறிஸ்துவின் புண்ணியத்தினாலே நீதிமானானவன் மரணகாலத்திலே மோட்சத்தில் ஏறுவான்.

நீதிமொழி, ௰௪. அதி: ௩௨.
மத்தேயு, ௨௫. அதி: ௪௬.

(௰.) நியாயத் தீர்ப்புநாள்:

நியாயந்தீர்க்க, இயேசுக்கிறிஸ்து வருவார்.

மத்தேயு, ௨௫. அதி: ௩௧.
௧. தெசலோ, ௪. அதி: ௰௬.

சூரியன் இருளும்: நட்சத்திரங்கள் உதிரும்: வேறு பல அதிசயமும் நடக்கும்.

வெளிப், ௬. அதி: ௰௨—௰௭.

மரித்தோர் யாவரையும் இயேசுக்கிறிஸ்து எழுப்புவார்.

யோவான், ௫. அதி: ௨௮, ௨௯.

எல்லாரும் அவருக்கு எதிரே நிறுத்தப்படுவார்கள்.

வெளிப், ௨௰. அதி: ௰௨.
௨. கொரிந்தி, ௫. அதி: ௰.

மனுஷர் பூமியிலே நடந்த எல்லா நடத்தைகளும் அந்த நாளிலே வெளிப்படும்.

பிரசங்கி, ௰௨. அதி: ௰௪.
மத்தேயு, ௰௨. அதி: ௩௬.

அந்தப் பெரிய கூட்டத்தை இரண்டு பிரிவாகப் பிரிப்பார்.

மத்தேயு, உரு. அதி: ௩௨, ௩௩.

இடது பக்கத்தார் தள்ளப்படுவார்கள்.

மத்தேயு, உரு. அதி: ௪௧.

வலது பக்கத்தார் சேர்க்கப்படுவார்கள்.

மத்தேயு, உரு. அதி: ௩௪.

மோட்சலோகத்துக்கும் நரகலோகத்துக்கும் மத்தியிலே எவரும் தாண்டாத பெரிய பிளப்பு உண்டு.

லூக்கா, ௧௬. அதி: ௨௬.



# தெய்வம்.



ஓ சனங்களே, பிரமா, விஷ்ணு, சிவனென்பவர்கள் தேவர்களாயிருக்கிறார்களென்று நீங்கள் சொல்லுகிறீர்கள். இந்தத் தேசத்தில் அந்தப் பேச்சு நடக்கிறபடியினாலே அது மெய்யோ, பொய்யோ என்று நீங்கள் விசாரணைபண்ணாமல், அந்த மும்மூர்த்திகளைத் தெய்வமென்று நம்புகிறீர்கள். அப்படிச் செய்வது புத்தியுள்ளவர்களுக்குத் தகுமோ? யாதாம் ஒரு காரியத்தைச் சத்தியமென்றும், அபத்தமென்றும், சோதித்துப் பாராமல், அது உள்ளதுதான் என்று விசுவாசிக்கிறது விவேகமா? ஒருவன் நியாயத்தை யோசிக்காமல் உலகத்திலே சொல்லப்படுவதெல்லாம் சரியென்று நம்பினால், அவனுக்கு வெகு மோசம் நேரிடாதோ? தேராச் செய்கை தீராச்சஞ்சலமல்லவா? மெய்யான தேவனை நம்பி நடக்கிறது பரம பாக்கியம். அவரை விட்டுவிட்டு, பொய்யான தேவர்களைப் பற்றிக்கொண்டால், நாம் கெட்டுப்போகிற கேடு இவ்வளவென்று சொல்லவுங் கூடுமா? இப்படியிருக்க, நீங்கள் இந்த மும்மூர்த்திகளுடைய சங்கதியைக் கொஞ்சம் நுழைந்து பார்க்கவேண்டுமென்று உங்களை வேண்டிக்கொள்ளுகிறோம்.(௧.)

அவர்களைக் குறித்து உங்கள் சாஸ்திரத்திலே சொல்லியிருக்கிறதை எடுத்துக் காண்பிக்கிறோம். உங்கள் சாஸ்

(௧.) திரிமூர்த்திகளில் எவன் பெரியவனென்று சாஸ்திரங்கள் ஒன்றோடொன்று போராடுகிறதைக் குறித்து ௱௪௧-ம் பக்கம் முதல் ௱௪௭-ம் பக்கம் வரைக்குமுள்ள காரியங்களைக் காண்க.

திரமே சாட்சியிடட்டும். அந்தச் சாட்சியை நீங்கள் கவனித்து, நிதானித்து, இந்த விஷயத்திலே நியாயமான தீர்ப்புப் பண்ணுங்கள்.

## பிரமாவின் சங்கதி.

**கந்தப்புராணம்: மார்க்கண்டபடலம்.**

*கூன்முகத்திங்கணெற்றிக் கோதையர்குழுவுக்கெல்லாம்
தான்முதலிறைவியாகத் தன்கையாற்சமைக்கத்தக்க
மான்முகநோக்கிமுன்னோர் மலரயன்மையலாகி
நான்முகமானானென்ப நாமுணராததன்றே. (௩௰.)

பிரமாவானவன் தான் உண்டாக்கின தன் குமாரத்தியின் மேல் மோகங்கொண்டானென்றும், அவள் ஓடிப்போக, அந்தப் பிரமா அவளைக் கண்டுபிடிக்கும்படி நாலு முகத்தைக் கொண்டானென்றும் இந்தப் பாட்டிலே கண்டிருக்கிறது.

விபசாரத்தைக் குறித்து, திருவள்ளுவர் சொன்ன ஒரு குறளைப் பாருங்கள்.

* இ—ள். முன்—பூர்வத்தில். ஓர்—ஒப்பற்ற. மலர்—தாமரை மலரில் வாசஞ்செய்கின்ற. அயன்—பிரமன். கூன்—வளைந்த. முகம்—முகத்தினையுடைய. திங்கள்—சந்திரனையொத்த. நெற்றி—நெற்றியையுடைய. கோதையர்—பெண்களின். குழுவுக்கெல்லாம்—கூட்டத்துக்கெல்லாம். தான்—தானே. முதல்—முதன்மையான. இறைவியாக—(அழகில்) அரசியாக. தன் கையால்—தன்னுடைய கையினாலே. சமைக்கத்தக்க—தக்கவாறு சிருஷ்டித்த. மான்—மான் (போன்ற பார்வையையுடைய திலோத்தமையினது). முகம்—முகத்தை. நோக்கி—பார்த்து. மையலாகி—ஆசையாகி. நான்முகமானானென்ப—நான்கு முகங்களையுடையவனானானென்பது. நாம்—நாம். உணராததன்று—அறியாததல்ல. எ—று.

* அறன்கடைநின்றாரு ளெல்லாம்பிறன்கடை
நின்றாரிற்பேதையாரில்.

ஒருவனுடைய பெண்சாதியை இச்சித்து அவன் வீட்டின் வாசலிடத்திலே நிற்கிறவன் எவனோ, அவனுக்கொப்பான மூடன் எல்லாப் பாவிகளுக்குள்ளேயும் இல்லை.

வேறொருவனுடைய பெண்சாதியை விரும்புகிறது இவ்வளவு பாவமும் மூடத்தனமுமாயிருக்கிறதே. தன் சொந்த மகளை விரும்பின பிரமாவின் பாவத்தையும் பழியையும் யார் சொல்லக்கூடும்?

இப்படியிருக்க, உங்கள் திருவள்ளுவர் விதித்த பிரமாணத்தின்படியே, பிரமாவானவன் பாவியும் மூடனுமாயிருக்கிறானேயல்லாமல், அவன் தேவனல்ல. இப்படிப்பட்டவனைச் சர்வ சிருஷ்டி கர்த்தா என்று சொல்லுகிறது ஒரு பரியாசம்போலே இருக்கிறது.



## விஷ்ணுவின் சங்கதி.

**பாகவதம்: பத்தாவது ஸ்கந்தம்: சகடமுதைத்த அத்தியாயம்.**

†கட்டமைந்தசிறு கன்றுவிடுக்கும்
தொட்டுவெண்ணெயொடு தோய்தயிருண்ணும்
நெட்டுறிக்குரலி னின்றுகைந்நீட்டும்
எட்டுகின்றில துடைக்குமெறிந்தே. (௰எ.)

---

குறள், ௰௬. அதி: உ.

* இ-ள். அறன்கடை—பாவத்திலே. நின்றாருளெல்லாம்—நின்றவரெல்லாருள்ளும். பிறன்கடை—பிறனது வாசலினிடத்தே. நின்றாரின்—(அவன் பெண்சாதியை விரும்பி) நின்றவர்களைப்போல. பேதையார்—மூடர். இல்—இல்லை. எ-று.

† இ-ள். (கிருஷ்ணன்). கட்டு—கட்டானது. அமைந்த—பொருந்திய. சிறுகன்று—இளங்கன்றுகளை. விடுக்கும்—அவிழ்த்துவிடு

இடைச்சிகள் வந்து கிருஷ்ணனுடைய தாயாகிய அசோதையினிடத்திலே குற்றம் சாற்றுகிறார்கள். ஓ அசோதையே, கட்டியிருக்கிற சின்னக் கன்றுகளையெல்லாம் இந்தக் கிருஷ்ணன் கட்டவிழ்த்து விட்டுவிடுகிறான்: வெண்ணெயும் தயிரும் சாப்பிடுகிறான்: உறி அவனுக்கு உயரமாயிருந்தால், உரலை வைத்து அதின்மேல் ஏறி நின்று கை நீட்டி எடுக்கிறான்: அப்படியும் எட்டாதேபோனால், பானைகளின் மேல் தடியாவது கல்லாவது போட்டு, உடைத்து, வாரிக் கொண்டுபோகிறான் என்றார்கள்.

இப்படி அவன் பாலும் தயிரும் மோரும் வெண்ணெயும் வீடுவீடாய்த் திரிந்து திருடினதுமல்லாமல், அந்தத் திருட்டினிமித்தம் உரலோடே கட்டப்பட்டு, அடியும் பட்டான்.

திருடுகிறதைப் பற்றி திருவள்ளுவர் சொன்னதாவது:

* உள்ளத்தாலுள்ளலுந் தீதேபிறன்பொருளைக்
கள்ளத்தாற்கள்வே மெனல்.

மற்றொருவனுடைய பொருளைக் களவெடுப்போமென்று நினைக்காதே: அப்படிப்பட்ட குற்றத்தை மனசினாலே நினைப்பதும் பாவமே என்று சொன்னார்.

---

வான். வெண்ணெயொடு—வெண்ணெயுடனே. தோய்—தோய்ந்த. தயிர் — தயிரையும். தொட்டு — எடுத்து. உண்ணும்—புசிப்பான். நெடு—நீண்ட. உறிக்கு—உறியிலிருக்கிற பொருளையெடுக்க. உரலினின்று — உரலின்மேல் நின்று. கைந்நீட்டும் — கையை நீட்டுவான். எட்டுகின்றிலது—எட்டாததை. எறிந்து—(கல் முதலானவைகளால்) எறிந்து. உடைக்கும்—உடைப்பான். எ-று.

குறள், உகூ. அதி: உ.

* இ-ள். உள்ளத்தால்—மனதினால். உள்ளலும் — (தீயவைகளை) நினைத்தலும். தீதே—பாவம். (ஆதலால்) பிறன்—பிறனுடைய. பொருளை — பொருள்களை. கள்ளத்தால் — வஞ்சனையினால். கள்வேம் — திருடுவோம். எனல் — என்று நினையாதிருக்கக்கடவர். எ-று.

ஆகையினாலே உங்கள் திருவள்ளுவர் சொன்ன பிரமாணத்தின்படியே விஷ்ணு பாவியாயிருக்கிறானேயல்லாமல், அவன் தேவனல்ல.

இதுவுமல்லாமல், கிருஷ்ணன் அனேக இடைச்சிகளைக் கெடுத்தான். மாபலிச்சக்கிரவர்த்தியை வஞ்சித்தான். பாரத யுத்தத்திலே ஆயுதமெடுக்கிறதில்லையென்று வாக்குக் கொடுத்து, பின்பு வாக்கு மீறி, ஆயுதமெடுத்தான்: கஞ்சனுடைய வண்ணானைக் கொன்றான். அவன் செய்த எல்லாப் பாவங்களையும் இங்கே சொல்லப்புகுந்தால், மெத்தவும் விரியும். அவனுடைய நடத்தைகளைப் பார்த்தால், அவனைப் போலே ஒரு துன்மார்க்கன் இல்லையென்று சொல்லப்படுமல்லவா?

இவையெல்லாம் அவதாரத்திலே செய்தானென்று சிலர் சொல்லுவார்கள். அப்படிச் சொல்வது வீண்போக்கு. தேவன் எப்போதும் பரிசுத்தர். அவர் எந்தக் காலத்திலும் பாவத்துக்குட்படுகிறவரல்ல. ஆகையினாலே, விஷ்ணு அவதாரத்திலே பாவஞ்செய்தானென்று சொன்னால், அவன் பாவியேயல்லாமல், தேவனல்லவே. அவன் எடுத்தானென்று நீங்கள் சொல்லுகிற அவதாரமும் கள்ள அவதாரமேயொழிய, அது தேவ அவதாரமல்ல.

மேலும் அவதாரமில்லாத காலத்திலும் விஷ்ணு கெட்ட காரியங்களைச் செய்தான். ஒன்று சொன்னால், போதும். அவதாரமில்லாத காலத்திலே விஷ்ணு மோகினி என்கிற பெண்பிள்ளை ரூபமெடுத்து, சிவனுக்கு எதிரே வந்து நின்று, பலவிதமான அசுத்த மோகக் குறிப்புகளைக் காட்டினான். அந்தக் காரியத்தை விவரித்துச் சொல்லுகிறதற்கு வெட்கமாயிருக்கிறபடியினாலே இவ்வளவிலே சொல்லி விட்டுவிடுகிறோம்.

ஓ சனங்களே, இவனை எந்த விதத்திலே தேவனென்று சொல்லி, கும்பிடும்படி சம்மதிக்கிறீர்கள்? திருடனும், தூர்த்

தனும், பொய்யனும், கொலைபாதகனுமாயிருப்பது கடவுளுடைய தன்மையோ, நீங்களே சொல்லுங்கள்.

விஷ்ணுவானவன் சர்வத்தையும் காப்பாற்றுகிறவன் என்கிறீர்கள். ஆனாலும், இருட்டு வீட்டுக்குப் போனாலும் திருட்டுக்கை போகாது, என்பதுபோல, அவன் சனங்களுடைய வெண்ணெய் முதலான வீட்டுப் பதார்த்தங்களைத் திருடினான். அப்படியிருக்க, அவன் சர்வத்தையும் காப்பாற்றுகிறவனென்று சொல்லுகிறது ஒரு பரியாசமாயிருக்க வேண்டியதுபோலத் தோன்றுகிறது.



## சிவனுடைய சங்கதி.

**கந்தப்புராணம்: உத்தரபடலம்.**

*அங்கையிலோடொன்றேந்தி யையமேற்றிடுவான்போலச்
சங்கரன்போந்துமற்றித் தாருகாவனத்தில்வைகும்
மங்கையர்கற்புச்சிந்தும் வசையுனைக்கொழிவுமுண்டோ
செங்கதிர்மதியஞ்செல்லுந் திசையெலாம்பரவுமன்றே. (௯௪.)

பிச்சாண்டி வேஷம் தரித்து கையிலே ஓட்டைப் பிடித்து, சிவனானவன் தாருகாவனத்திலே பிரவேசித்து, அங்கேயிருக்கிற இருஷிகளுடைய மனைவிகளை மானபங்கஞ் செய்து,

* இ–ள். சங்கரன்—சிவன். ஐயம்—பிச்சையை. ஏற்றிடுவான் போல—எடுப்பவனைப்போல. அங்கையில்—அழகிய கையிலே. ஓடொன்று—ஓரோட்டை. ஏந்தி—தாங்கி. இத்தாருகாவனத்தில்—இந்தத் தாருகாவனத்திலே. வைகும்—இருக்கும். மங்கையர்—இருஷிபத்தினிகளின். கற்பு—கற்பை. சிந்தும்—கெடச்செய்த. வசையுனைக்கு—பழிச்சொல்லுக்கு. ஒழிவும்—நீக்கமும். உண்டோ—உண்டா. செங்கதிர்—சூரியனும். மதியம்—சந்திரனும். செல்லும்—போகின்ற. திசையெலாம்—திக்குகளெல்லாம். பரவும்—(அது) பரவும். எ–று.

அவர்களுடைய கற்பைக் கெடுத்தானென்று இந்தப் பாட்டிலே சொல்லப்பட்டது.

சிவநூலாகிய கந்தப்புராணத்திலே சிவன் வேறநேக துன்மார்க்கங்களையும் செய்ததாகச் சொல்லியிருக்கிறது. அவன் பார்வதியோடே சொக்கட்டான் ஆடினான். தான் தோற்றுப்போனபோது, தோற்றுப்போகவில்லை செயித்தேனென்று பொய் பேசினான். மேலும் பார்வதியை நோக்கி, நீ தோற்றுப்போனபடியினாலே, நீ பந்தயமாக வைத்த பூஷணங்களை எனக்குக் கொடுத்துவிடு என்று அவளோடே சொன்னான்.

இதுவுமல்லாமல் சிவன் ஒரு காலத்திலே விஷ்ணு எடுத்த மோகினியாகிய பெண் ரூபத்தைப் பார்த்து, இச்சித்து, வாயினாலே சொல்லவும் கூடாத அசுத்தங்களைச் செய்தான்.

இப்படிப்பட்ட நடத்தைகளைக் குறித்து மகா பாரதத்திலுள்ள ஒரு பாட்டைச் சொல்லுகிறோம்.

**நல்லாப்பிள்ளை பாரதம்: அநுசாசனிகபருவம்: உமாமகேஸ்வர சம்வாதம்.**

*பரதனம்பரதாரமுங் கைவயப்படுமா
றிரதமூறுநாவுடனுழ லியற்கையைப்பூண்டோன்
விரதவல்லியாழ் நிரயத்தில்வீழ்பவன்கண்டாய்
கருதுகென்றனன் கண்களோர்மூன்றுடைக்கடவுள். (௨௬௨.)

மூன்று கண்களையுடைய சிவன் பார்வதியோடே சொல்லுகிறான்: ஓ வல்லிக்கொடியைப் போலிருக்கிறவளே, ஆழமான நரகத்தில் விழுகிறவன் யாரென்றால், மற்றவர்களு

*இ-ள். விரதம்—விரதத்தையுடைய. வல்லி—கொடிபோன்ற (பார்வதியே). பரதனம்—பிறர் பொருளும். பரதாரமும்—பிறர் மனைவியும். கைவயப்படுமாறு — தன் கைவசப்படும்படி. இரதமூறும்—இனிமையான இரசமூறுகின்ற. நாவுடன் — வார்த்தையுடன். உழல்—உழலுகின்ற. இயற்கையை—சுபாவத்தை. பூண்டோன்—தரித்தவன். ஆழ்—ஆழமாகிய. நிரயத்தில்—நரகத்தில்.

டைய பொருளும் அவர்களுடைய பெண்சாதிகளும் தன் கைவசப்படும்படியாக, தித்திப்பான வசனத்தோடே கூடின சுபாவத்தையுடையவனே என்றான். சிவனே இப்படிப் பிரமாணம் விதித்திருக்கிறான். தனக்கும் விஷ்ணுவுக்கும் தீர்ப்புச் சொன்னாற்போலே இருக்கிறது. விஷ்ணு அல்லவா மற்றவர்களுடைய பொருளைத் தன் கைவசப்படுத்தினான்? சிவன் அல்லவா தாருகாவனத்திலே போய், தெருவிலே மதுரமான பாடல்களைப்பாடி, இருஷி பத்தினிகளைத் தன் கைவசப்படுத்தி, அவர்களுடைய கற்பைக் கெடுத்தான்? ஆகையினாலே, அந்தச் சிவனானவன் தானே ஏற்படுத்தின பிரமாணத்தின்படி நரகத்திலே விழத்தக்க பாவியாயிருக்கிறானேயல்லாமல், அவன் தேவனல்ல. ஸ்திரீகளுடைய கற்பை அழிக்கிறவனாகிய இந்தச் சிவன் சர்வ லோகங்களையும் அழிக்கிறவனென்று நீங்கள் சொல்லுகிறீர்களே, அதுவும் ஒரு பரியாசமாகக் காணப்படுகின்றது.

சகோதரரே, இந்தக் காரியங்களை நாங்கள் சொல்லுவது உங்களைத் தூஷணிக்கிறதாகவல்ல. அப்படிப்பட்ட நினைப்பு எங்கள் நெஞ்சிலே இல்லை. உலகத்திலே மெய்யும் உண்டு: பொய்யும் உண்டு. மெய்யானதை ஸ்தாபிக்க வேண்டும். பொய்யானதைக் கவிழ்க்க வேண்டும். மும்மூர்த்திகளைக் குறித்து நாங்கள் இப்படி எடுத்துப் பேசும்போது, நாங்கள் யாதொன்றையும் நூதனமாய்க் கற்பிக்கவில்லை. உங்கள் சாஸ்திரத்தில் சொல்லியிருக்கிறதைத் தான் நாங்கள் எடுத்துக் காட்டுகிறோம். உள்ளதைச் சொன்னால் நொள்ளைக்கண்ணிக்கு நோப்பாளம், என்கிற பழமொழியை நினைத்து, எங்கள்மேல் விசனப்படவேண்டாம். ஆகையினாலே நீங்கள் மனநொந்தால், உங்கள் சாஸ்திரத்தின் மேலேயே மனநொந்துகொள்ளுங்கள். அதுவல்லவா, உங்கள் தேவர்கள் பொய்,

வீழ்பவன் கண்டாய்—வீழ்பவனாவானென்று. கருதுகென்றனன்—நினைப்பாயென்று சொன்னான். கண்களோர் மூன்றுடை — ஒப்பற்ற மூன்று கண்களையுடைய. கடவுள்—சிவன். எ-று.

கொலை, களவுமுதலான குற்றங்களைச் செய்ததாகச் சொல்லுகின்றது. அப்படிப்பட்ட சாஸ்திரம் உதவாதென்று அதின் மேல் கோபித்து, அதைக் கிழித்து, நெருப்பில் இட்டு, சாம்பலாக்கி, அதின்மேல் உங்கள் பகையைத் தீர்த்தால், அது நியாயமாயிருக்கும். இப்படி உங்கள் மனநோவ நாங்கள் சொல்லுகிறதெல்லாம் உங்கள் நன்மைக்காகவே. அழ அழச் சொல்லுகிறவன் பிழைக்கச் சொல்லுவான். சிரிக்கச் சிரிக்கச் சொல்லுகிறவன் கெடச் சொல்லுவான்.

இதெல்லாம் திருவிளையாடலென்று உங்களில் சிலர் சொல்லுவார்கள். அப்படிச் சொல்லுகிறது ஒரு வெறும் பிதற்றாயிருக்கிறதேயொழிய, வேறல்ல. உங்கள் வீடுகளில் ஒருவன் புகுந்து, வெண்ணெய் பால் மோர்களைத் திருடிக் கொண்டுபோனால், நீங்கள் அதைப் பார்த்து, ஓகோ இது நன்றாயிருக்கிறது, இது திருவிளையாட்டு; மெத்தவும் பிரியமாயிருக்கிறதென்று சொல்லுவீர்களா? உங்கள் ஊரில் ஒருவன் வந்து, வீட்டில் நுழைந்து, உங்கள் பெண்சாதிகளையும் குமாரத்திகளையும் மயக்கி, கற்பழித்து, கெடுத்தால்: நீங்கள் அதைக் கண்டு, ஆ ஆ இது நல்ல வேடிக்கை, இது மகா யோக்கியமாயிருக்கிறது, இதுவும் ஒரு திருவிளையாட்டுத்தான் என்று சிரித்து, சந்தோஷப்படுவீர்களா? அப்படிப்பட்ட நடத்தைகளை விளையாட்டென்று சொல்லமாட்டீர்கள். சகிக்கக்கூடாத துன்மார்க்கமென்றே சொல்லுவீர்கள்.

தேவர்கள் பெரியவர்களானபடியினாலே, அவர்கள் இப்படிச் செய்யலாமென்று வேறு சிலர் யோசனைபண்ணாமல் சொல்லுவார்கள். அதுவும் வியர்த்தமான வார்த்தை. சின்னவர்கள் பொய் சொல்லி, திருடி, விபசாரம் செய்யலாகாதென்றும், பெரியவர்கள் பொய் சொல்லி, திருடி, விபசாரம் செய்யலாகுமென்றும், விதி உண்டா? அந்த விதியை எவன் ஏற்படுத்தினான்? அப்படி ஏற்படுத்தினவன் ஒருவன் இருந்தால், அவனை மகா துஷ்டனென்றல்லவா நிதானிக்க வேண்

டியது? சிறுவனைப் பார்க்கிலும் பெரியவன் அதிக புத்தியுள்ளவன். ஆகையினாலே சின்னவன் செய்த குற்றத்தைப் பெரியவன் செய்தால் அவன் அதிக குற்றவாளியல்லவா? ஒரு பிச்சைக்காரன் திருடினால், அது தோஷந்தான்: இராசா திருடனாய்ப்போனால், அது அதிக தோஷமல்லவா? மேலும் நமக்கு மெய்யான சாஸ்திரத்தைக் கொடுத்து, நல்ல வழியைப் போதிக்கிறவர் தேவனல்லவா? நமக்குப் போதிக்கிற அவர் தாமே அந்த நல்ல வழியிலே நிற்காமல், கெட்ட வழியிலே சேர்ந்தால், அவனைத் தேவனென்று சொல்லுகிறதெப்படி?

* ஓதியுணர்ந்தும் பிறர்க்குரைத்துந்தானடங்காப்
பேதையிற்பேதையாரில்.

நல்ல நூலைப்படித்து, அதின் பிரயோசனத்தை அறிந்து, அதை மற்றவர்களுக்கு உபதேசித்தாலும், தானே அதின்படி நடவாதவனாயிருந்தால், அப்படிப்பட்ட மூடனைப் போலொத்த வேறே ஒரு மூடனும் இல்லை.

திருவள்ளுவர் இங்கே சொன்ன நியாயத்தின்படி உங்கள் தேவர்கள் மூடர்கள். மற்றவர்களுக்குப் போதித்தும், தாங்களே நல்ல வழியை விட்டு, சகலவிதமான பாவமார்க்கங்களிலே திரிந்தார்கள்.(உ.)

---

குறள், அ௪. அதி: ௪.

* இ-ள். ஓதி—(நல்ல நூல்களைக்) கற்றும். உணர்ந்தும்—அவற்றின் பயனை அறிந்தும். பிறர்க்கு—மற்றவர்களுக்கு. உரைத்தும்—சொல்லியும். தானடங்கா — தானவ்வழியில் அடங்கி நடவாத. பேதையின்—மூடன்போல். பேதையார்—மூடர். இல்—உலகிலில்லை. எ-று.

(உ.) இதை நிச்சயிக்கிற பாட்டையும் சுலோகத்தையும் ௱௪௯-ம் பக்கத்திலே காண்க.

நாங்கள் குற்றஞ் செய்தால் அது பாவந்தான்: தேவன் செய்தால், பாவமல்ல என்று சிலர் சொல்லுகிறார்கள். இது வும் ஒரு பைத்தியமான பேச்சு. யார் தின்றாலும், கரும்பு கரும்புதான், வேம்பு வேம்புதான். யார் செய்தாலும், தரு மம் தருமந்தான், பாவம் பாவந்தான்.

* தக்காருந்தக்கவ ரல்லாருந்தந்நீர்மை
எக்காலுங்குன்ற விலராவர்—அக்காரம்
யாவரேதின்னினுங் கையாதாங்கைக்குமாந்
தேவரேதின்னினும் வேம்பு.

நல்லவர்கள் தங்கள் நல்ல தன்மையை விடமாட்டார்கள். கெட்டவர்கள் தங்கள் கெட்ட தன்மையை விடமாட்டார் கள். வெல்லக்கட்டியை எவர்கள் சாப்பிட்டாலும், அது கசக்கமாட்டாது. வேம்பைத் தேவர்கள் சாப்பிட்டாலும், அது கசக்கும் என்று இந்தப் பாட்டிலே சொல்லியிருக் கிறது.

அப்படிப்போல, நல்லவராகிய தேவன் குற்றஞ் செய் தால், அது பாவந்தான்.

ஓ சனங்களே, தேவர்களென்று நீங்கள் சொல்லுகிற பிர மாவும் விஷ்ணுவும் சிவனும் ஆகிய இவர்களுடைய துர்க் கர்மங்களையும் நடத்தைகளையும் நாங்கள் பின்னும் விவ ரிக்க மனம் இல்லை. பஞ்சமா பாதகத்தில் எந்தப் பாவத் தைச் செய்யாமல் விட்டார்கள்? காம குரோத லோப

---

நாலடியார், யஉ. அதி: உ.

* இ-ள். அக்காரம்—சருக்கரை. யாவர் தின்னினும்—யார் தின் றாலும். கையாது—கசக்காது. வேம்பு—வேம்பானது. தேவர் தின்னினும்—தேவர்கள் தின்றாலும். கைக்கும்—கசக்கும். (ஆத லால்) தக்காரும் — மேலோரும். தக்கவரல்லாரும் — கீழோரும். தந்நீர்மை—தங்கள் தன்மை. எக்காலும்—எந்தக்காலத்திலும். குன் றல்—கெடுதல். இலராவர்—இல்லாராவர். எ-று.

மோக மத மாச்சரியமென்று சொல்லப்பட்ட ஆறு கெட்ட குணங்களில் எதை அனுசரியாமல் போனார்கள்?

இப்படியிருக்க, அவர்கள் தேவர்களல்லவென்பது உள்ளங்கை நெல்லிக் கனிபோல தெளிவாக இருக்கின்றது.

பாவமும் பகையும் பழியும் நிறைந்த இப்படிப்பட்டவர்களினாலே நாம் என்ன நன்மை அடையலாம்? ஒரு நன்மையும் இல்லை. தீமையே சம்பவிக்கும்.

* சான்றோரெனமதித்துச் சார்ந்தாய்மற்சார்ந்தாய்க்குச்
சான்றாண்மைசார்ந்தார்க ணில்லாயிற்—சார்ந்தோய்கேள்
சார்ந்தகத்துண்டென்று செப்புத்திறந்தொருவன்
பாம்பகத்துக்கண்ட துடைத்து.

இந்தப் பாட்டின் பொருளைக் கவனியுங்கள். துஷ்டனை நல்லவனென்று எண்ணி, அவனைச் சேர்வது எப்படியிருக்குமெனில், பரணியிலே சந்தனம் இருக்கிறதென்று நினைத்து, பரணியைத் திறந்து, அதிலே சந்தனத்தைக் காணாமல், கடித்துக் கொல்லும்படியான பாம்பைக் கண்டடைவது போல் இருக்கும். அப்படியே நீங்கள் திரிமூர்த்திகளைத் தேவர்களென்று எண்ணி, பூசைசெய்தால், மோசப்பட்டு நரகம் அடைவீர்களேயல்லாமல், நல்ல கதியைக் காணமாட்டீர்கள். ஆகையால், அவர்களையும், அவர்களுக்கு இதுவரையில் நீங்கள் பண்ணிவந்த பூசைகளையும் தள்ளிவிடுங்கள்.

---

நாலடியார், ௰௩. அதி: ௬.

* இ-ள். சான்றோரென—மேலோரென்று. மதித்து—எண்ணி. சார்ந்தாய்—சேர்ந்தாய். சார்ந்தாய்க்கு—(அப்படிச்) சேர்ந்தவனுக்கு. சான்றாண்மை — பெருந்தன்மை. சார்ந்தார்கண் — (உன்னாற்) சேரப்பட்டவர்களிடத்தில். இல்லாயின்—இல்லையாயின். சார்ந்தோய்—சேர்ந்தவனே. (அது எதையொக்குமெனில்) கேள்—நீ கேள். ஒருவன்—ஒருத்தன். சாந்து—சந்தனம். அகத்து—இதனுள்ளே. உண்டென்று—இருக்குமென்று (நினைத்து). செப்பு—பரணியை. திறந்து — திறந்து. பாம்பு — பாம்பை. அகத்து—அதனுள். கண்டதுடைத்து—பார்த்ததையொக்கும். எ-று.

ஓ சனங்களே, கேளுங்கள். ஒரு குருடன் வேறொரு குருடனுடைய தோளைப் பிடித்து நடந்தால், பள்ளமே இருவருக்கும் கதியாகுமேயல்லாமல், அவர்கள் ஊரிலே சேருவதில்லை. அதுபோல, பாவிகளாகிய நாம் பாவிகளாகிய அந்த மும்மூர்த்திகளைப் பற்றிக்கொண்டால், அவர்களோடேகூட நாமும் நரகத்தில் விழுவோமென்பது நிச்சயமே. ஆகையினாலே, அவர்களைத் தள்ளிப்போடுங்கள்.

*தீயாரைக்காண்பதுவும் தீதேதிருவற்ற
தீயார்சொற்கேட்பதுவுந் தீதே—தீயார்
குணங்களுரைப்பதுவுந் தீதேயவரோ
டிணங்கியிருப்பதுவுந் தீது.

ஓ சனங்களே, மெய்யான கடவுள் யாரென்று விசாரிக்க வேண்டியதல்லவா?

† என்னதான்கற்றாலெ னெப்பொருளும்பெற்றாலென்
உன்னையறியாதா ருய்வாரோபூரணமே.

எந்த கல்வி கற்றாலும் எந்தப்பொருளைச் சம்பாதித்தாலும், கர்த்தாவே, உம்மை அறியாதவர்கள் பிழைப்பார்களா?

---

வாக்குண்டாம்: ௩.

*இ—ள். தீயாரை — தீயவரை. காண்பதுவும் — காணுதலும். தீதே—தீயதே. திருவற்ற—சிறப்பில்லாத. தீயார்—தீயவருடைய. சொல்—சொற்களை. கேட்பதுவும்—கேட்பதுவும். தீது—தீயது. தீயார்—தீயவருடைய. குணங்கள்—(தீக்) குணங்களை. உரைப்பதுவும்—பேசுதலும். தீது — தீயது. அவரோடு — அத்தீயவரோடு. இணங்கி—கூடி. இருப்பதுவும்—இருத்தலும். தீது—கொடியது. எ—று.

†இ—ள். பூரணமே — பரிபூரணமான கடவுளே. உன்னை — உன்னை. அறியாதார்—அறியாதவர்கள். என்ன —எவ்வகையான நூல்களை. கற்றாலென்—கற்றதனாலென்ன பயன். எப்பொருளும்—எவ்விதமான பொருள்களையும். பெற்றாலென்—பெற்றதனாலென்னபயன். உய்வாரோ—மோட்சத்தை அடைவார்களோ. எ—று.

* கற்றதனாலாய பயனென்கொல்வாலறிவ
னற்றாடொழா அ ரெனின்.

பரிசுத்த ஞானமுள்ள கடவுளுடைய திருப்பாதத்தை வணங்காதவர்களானால், எவ்வளவு கல்வி கற்றாலும் பிர யோசனம் இல்லை.

† ஆதியந்தமில்லாத காலந்தன்னில்
அநாதியாய்நின்றதே பரமென்றாகும்.

அப்படி. முதலும் முடிவுமில்லாமல், என்றென்றுமுள்ள ஆதிகாரணக் கடவுள் எவர் என்று கேட்டால், கிறிஸ்தவர்கள் கைக்கொள்ளுகிற சத்திய வேதத்திலே சொல்லப்பட்டவர் அவரே. அவர் ரூபமில்லாமல் எங்கும் வியாபித்திருக்கிற பரமாத்துமா. அவர் சர்வஞானமும் சர்வவல்லமையுமுள்ள வர். அவர் மாசில்லாத பரிசுத்தர். அவர் தவறாத நீதி யோடிருக்கிறவர். அவர் நன்மையும் தயவும் நிறைந்தவர். அவர் பரிபூரண சத்தியமுடையவர். அவர் நித்தியரும், அளவில்லாதவரும், மாறாதவருமாயிருக்கிறவர். அவரே சர்வ சிருஷ்டி கர்த்தாவானவர். வானத்தையும் பூமியை யும் அவைகளிலுள்ள சமஸ்தமான பொருளையும் படைத் தார். நம்முடைய ஆத்துமாவையும் சரீரத்தையும் உண் டாக்கினார். அவர் எல்லாவற்றையும் பார்த்து, பரிபாலித்து,

---

குறள், க. அதி: உ.

* இ-ள். வாலறிவன்—மெய்யறிவினையுடைய கடவுளினது. நற் றாள்—நல்ல பாதங்களை. தொழா அ ரெனின்—வணங்காரானால். கற் றதனால்—(எல்லா நூல்களையும்) படித்ததினால். ஆய—உண்டாகிய. பயன்—பிரயோசனம். என்—என்ன. எ-று.

† இ-ள். ஆதி — உலகசிருஷ்டியும். அந்தம்—அதன் முடிவும். இல்லாத காலந்தன்னில்—இல்லாத காலத்தில். அநாதியாய்—தன க்கு ஒரு காரணமில்லாததாய். நின்றது — இருந்தது எதுவோ அதுவே. பரமென்றாகும்—கடவுளென்று சொல்லப்படும். எ-று.

விசாரித்துவருகிறார். அவர் செய்கிற விசாரணை அன்பும் நன்மையும் நீதியுமுள்ள திவ்விய விசாரணை.

அவனை எவ்விதத்திலே அறியலாமென்று கேளுங்கள். ஒரு ரூபத்தை நாட்டிவைத்து, அதினாலே கடவுளை அறியலாமென்றால், அது வீணான நினைவு. அவனைப் போலிருக்கிற ஒரு ரூபத்தை உலகத்திலே சம்பாதிக்கிறது கூடியதாயிருந்தாலும், அந்த ரூபத்தைப் பார்க்கிறதினாலே, நமக்கு என்ன நன்மை உண்டாகும்? ஒரு மனுஷனுடைய ரூபத்தை நாம் பார்த்தால், அதினாலே அவனுடைய காரியம் நமக்குத் தெரியுமா? அவனுடைய ரூபத்தை எவ்வளவு நோக்கிக்கொண்டிருந்தாலும், அவன் பிறந்த ஊரும், அவன் செய்கிற தொழிலும், அவன் பொருந்தியிருக்கிற குணாகுணங்களும், அவன் அனுபவிக்கிற சுபாசுபங்களும், அவன் படுகிற பெருமை சிறுமைகளும் நமக்குக் கொஞ்சமாவது தெரியமாட்டாதே. ஆனாலும் அந்த மனுஷன் தன்னைக் குறித்து அந்தச் சங்கதிகளையெல்லாம் ஆதியோடந்தமாக விவரித்து, ஒரு புஸ்தகத்தில் எழுதிவைத்து, நமக்குக் கொடுத்தனுப்பினால், அவனுடைய ரூபத்தை ஒருநாளும் காணாமலிருந்தாலும், அவனுடைய காரியமெல்லாம் நமக்கு நன்றாய் விளங்கும். அப்படிப்போலே, ரூபத்தினாலே நமக்கு ஒரு அறிவும் தோன்றாது. நாம் தேவனைக் குறித்து அறிய வேண்டிய காரியங்களை, தேவன் தாமே சாஸ்திரத்தின் வழியாய் நமக்கு வெளிப்படுத்தினால், அந்தச் சாஸ்திரத்தைக்கொண்டு நாம் அவனை அறியலாம்.

மேலும், தேவனைப் போலிருக்கிற ரூபமென்று சொல்லுவதே மூடத்தனம். சரீரக் கண்ணினாலே எவனும் அவனைக் காணக் கூடாது. அப்படியிருக்க, யார் அவனைப் போலே ஒரு ரூபத்தைப் பண்ணுவான்? தான் காணாத பராபரவஸ்துவை இப்படியென்று ஒருவன் எந்த யோசனையினாலே கற்பனை செய்து, ரூபம் ஏற்படுத்துவான்? நீங்கள் பலபல ரூபங்

களை ஸ்தாபித்திருக்கிறீர்கள். எதைத் தேவனுக்கொப்பான தென்று சொல்லத் துணிவீர்கள்? எந்தக் குளத்தங்கரையி லும், ஊரெல்லையிலும், தொழுதுகொள்ளும்படியாக, பிள்ளை யார் ரூபத்தை நாட்டியிருக்கிறீர்கள். அந்தப் பிள்ளையா ருக்கு இலம்போதரன் என்கிற பேரை நீங்களே வைத்திருக் கிறீர்கள். இலம்போதரன் என்றால், பெருத்த வயிறுள்ள வன் என்றே அருத்தம். வண்ணான் சாலைப் போல வீங்கியி ருக்கிற அவனுடைய வயிற்றையும், அவனுடைய யானைமு கத்தையும், உடைந்த கொம்பையும், தொங்குகிற தும்பிக்கை யையும், நீங்கள் எவ்வளவு பார்வையிட்டாலும், அதினாலே கடவுளைக்குறித்து உங்களுக்கு என்ன ஞானம் கிடைக்கப் போகிறது? கடவுள் அப்படிப்பட்டவரா? நீங்கள் பார்க்கப் பார்க்க, தப்பான எண்ணம் உங்கள் மனசிலே ஏறுமேயல் லாமல், மெய்யான ஞானம் உங்களுக்கு வரப்போகிறதில்லை.

இதுவுமல்லாமல், தேவன் அரூபியாயிருக்கிறாரே;(௧.) அரூ பமானவருக்கு ரூபம் வைப்பது எந்தப் பிரகாரத்திலே ஆகும்? நம்முடைய உடம்பிலே வாசம்பண்ணுகிற ஆத்துமாவைப் போலே எவனாவது ஒருவன் ஒரு ரூபத்தை ஏற்படுத்து வானா? ஆகாசத்திலே உலாவுகிற காற்றுக்கொப்பாக ஒரு ரூபத்தைச் செய்ய, யாரானாலும் துணிவானா? அப்படியிருக்க, ஆத்துமாவையும், காற்றையும், மற்றுமுள்ள யாவற்றையும் சிருஷ்டித்த கடவுளுக்கு எப்படி ரூபத்தை உண்டுபண்ண லாம்?

தேவன் எதிரே வந்து நின்று நம்மோடே பேசாவிட்டால், ஒன்றும் அறியக்கூடாதென்று சிலர் சொல்லுவார்கள். இது வும் புத்தியில்லாத வார்த்தை. இராசஸ்திரி இந்தத் தேசத் தை ஆளுகிறார். ஆனாலும், எதிரிலே வந்து நிற்கிறதில்லை. அவருடைய கட்டளை புறப்பட்டு, ஊர் ஊராய், கிராமங்

(௧.) ௱௪௯-ம் பக்கத்திலே இருக்கிற சுலோகத்தைக் காண்க.

கிராமமாய், தேசமெங்குஞ் செல்லுகின்றது. அதற்கு எல்லாரும் அடங்குகிறார்கள். அந்த இராசஸ்திரியவர்கள் பிரசித்தப்படுத்துகிற கட்டளையினாலும், அவர் பண்ணுகிற ஆளுகையினாலும், அவருடைய குண செய்கைகளைத் தெரிவிக்கிற புஸ்தகங்களினாலும், அந்த இராசஸ்திரியவர்கள் இப்படிப்பட்டவரென்றும், இன்னதைச் செய்கிறாரென்றும், அறிந்துகொள்ளுகிறோம். அப்படியே கடவுளும் எதிரே வந்து நின்று பேசவேண்டியதில்லை.

அவர் சத்திய வேதமாகிய சாஸ்திரத்தைக் கொடுத்திருக்கிறார். அது தேசங்கள்தோறும் செல்லுகின்றது. அந்தச் சாஸ்திரத்தினாலே அவனை இத்தன்மையானவரென்று யாவரும் அறியலாம்.

சரீரக்கண் தேவனைக் கண்டறிவது கூடுமா? ஒருபோதும் கூடாது.

* உளக்கண்ணுக்கல்லா லூன்கண்ணாலோருமதோ.

பாவ மார்க்கங்களில் அலைகிற நெஞ்சினாலேயும் அவனைக் காணலாகாது.

† பொய்வளருநெஞ்சினர்கள் காணாதகாட்சியே.

என்று உங்கள் நூல்களிலும் சொல்லப்பட்டது. கடவுளை அறியவேண்டுமென்று விரும்பினால், பாவமான மார்க்கங்களை விட்டுவிடுவதே அகத்தியமாயிருக்கிறது.

---

* இ-ள். உளக்கண்ணுக்கு—ஞானக்கண்ணுக்கு. அல்லாது—அல்லாமல். ஊன் கண்ணால்—மாமிசரூபமாகிய சரீரக்கண்ணினால். ஒருமதோ—அறியக்கூடுமோ. எ-று.

† இ-ள். பொய்—பொய்யாகிய உலகவாசை. வளர்—அதிகரிக்கின்ற. நெஞ்சினர்கள்—மனசையுடையவர்கள். காணாத—காணக்கூடாத. காட்சியே—ஞானசொரூபியே. எ-று.

உலகத்திலுள்ள விஷயங்களைக் காண்பதற்குக் கண்ணும் வெளிச்சமுமாகிய இரண்டும் தேவையாயிருக்கிறது எப்படியோ, அப்படியே கடவுளை அறிவதற்குத் தகுந்த கண்ணும் வெளிச்சமும் தேவையாயிருக்கிறது. பத்தியுள்ள ஆத்துமாவே அந்தக் கண். மெய்யான சாஸ்திரமே அந்த வெளிச்சம். ஆகையினாலே நீங்கள் பத்தியோடே கிறிஸ்து வேதத்தைப் படித்து நம்பி, அதின்படி நடந்தால், கடவுளை அறிந்து மனம் மகிழுவீர்கள்.

சாஸ்திரத்தைப் படிக்கத் தெரியாதவர்கள் என்ன பண்ணலாமென்றால், அவர்களும் எழுத்தைக் கற்றுக்கொண்டு, அந்தச் சாஸ்திரத்தை வாசிக்கலாம். அப்படியும் கூடாதேபோனால், காதினாலே கேட்டு அறியலாம்.

* கற்றிலனாயினுங் கேட்கவஃதொருவற்
கொற்கத்தினூற்றாந் துணை.

படிக்கத் தெரியாதவனாயிருந்தாலும், மற்றவர்கள் வாசிக்க, அவன் கேட்கட்டும். அப்படிக் கேட்கிறதே அவனுக்கு ஊன்று கோலாயிருக்கும். சத்திய வேதத்தின் பொருளைக் காதினாலே உட்கொண்டு, விசுவாசித்து, அதின்படி நடக்கிறவனும் புதிய கண்ணைப் பெற்றுக்கொண்டவனாயிருக்கிறான். கேட்கிற அவனுடைய காதே அவனுக்குக் கண்ணாயிருக்கிறது.

சகோதரரே, நாம் எல்லாரும் மெய்யான கடவுளை அறிந்து, அவருடைய கிருபையை அடைய வேண்டும். இல்லாவிட்டால் நரகத்திலே விழுந்து, அங்கே நித்தியமாகவே வேதனைப்

---

குறள், ௪௨. அதி: ௪.

* இ-ள். கற்றிலனாயினும்—(ஞானநூல்களைப்) படியாதவனானாலும். கேட்க—(படித்தவர் சொல்லக்) கேட்கக்கடவன். அஃது—அக் கேள்வி. ஒருவற்கு—ஒருவனுக்கு. ஒற்கத்தின்—தளர்ச்சிவந்தவிடத்து. ஊற்றாந்துணை—ஊன்றுகோலாகிய துணையாம். எ–று.

படுவோம். தேவனுடைய கிருபையைப் பெற்றுக்கொள்வ தற்கு நம்முடைய பாவமே தடை. அவர் பரிசுத்தர். நாம் பாவிகள். பாவிகளாகிய நாம் பரிசுத்தமுள்ள அவரிடத்தி லே எப்படிச் சேருவோம்? இதற்கு யார் உத்தரவு சொல்லு வார்கள்? கிறிஸ்துவேதம் ஒன்றுமாத்திரமே இதற்குச் சரி யான உத்தரவு சொல்லுகின்றது. நாம் தேவனிடத்திலே சே ருகிறதற்குத் தடையாயிருக்கிற நம்முடைய பாவத்தைத் தீர் க்கும்படி இயேசுக்கிறிஸ்து பூலோகத்திலே வந்தாரென்று சத் தியவேதம் தெரிவிக்கின்றது. சர்வ தயாபர கடவுளாயிருக் கிற தேவனே மனுஷர்கள்மேல் இரங்கினார். தம்முடைய குமாரனாகிய இயேசுக்கிறிஸ்துவை நமக்கு இரட்சகராக அ னுப்பினார். அந்த இயேசுநாதரே குருநாதர். அவரே பாவ நாசர். அவர் பூமியிலே வந்தார். மனுஷனாகப் பிறந்தார். இங்கே முப்பத்துமூன்று வருஷம் இருந்தார். பரிசுத்தராய் நடந்தார். மெய்யான உபதேசத்தைத் தந்தார். யாவருக்கும் கிருபை பண்ணினார். பெரிய அதிசயங்களையும் அற்புதங்க ளையும் செய்தார். தம்மை மெய்க் கடவுளென்றும், பரம குரு வென்றும், எல்லாரும் அறியும்படி அவர் வேண்டிய அடை யாளங்களைக் காட்டினார். பாவத்தில் முழுகியிருக்கிற உலகத் தாருக்காகப் புண்ணியஞ் செய்தார். பாவநிவாரண மார்க் கத்தை உண்டாக்கும்படி, அவர் தம்முடைய சீவனைப் பலி யாய் ஒப்பித்தார். அதற்காகச் சிலுவைமரத்திலே ஆணிக ளால் அறையப்பட்டார். பூமியிலே அடக்கம் பண்ணப்பட் டார். மூன்றும் நாளிலே மகிமையோடே அங்கிருந்து உயி ருடன் எழுந்தார். தாம் ஏற்படுத்தின சீஷர்கள் உலகமெங் கும் போய், பாவம் நிவிர்த்தியாகிற வழியைச் சகல சனங் களுக்கும் பிரசங்கிக்கக் கட்டளையிட்டார். பின்பு அவர் பூமியை விட்டு, திரும்பி, பரலோகத்துக்கு எழுந்தருளி னார். அங்கே சர்வலோகாதிபதியாய் ஆளுகிறார். அவர் வந் ததும், பிறந்ததும், பூமியிலே இருந்ததும், நடந்ததும், உப தேசந்தந்ததும், இறந்ததும், மறுபடி எழுந்ததும், முத்தியுல

கத்துக்கு உயர்ந்ததும், என்னத்துக்காக என்று கேட்டால், நமக்காகவே என்று அறியுங்கள். எங்கள் பாவத்தையும் உங்கள் பாவத்தையும் தீர்க்கவே அதையெல்லாம் செய்தார். பாவம் என்கிற தடையை நீக்குகிறவர் அவரே. அவரை விசுவாசித்து, அவருடைய வார்த்தையின்படி நடந்தால், அவராலே உங்கள் பாவமெல்லாம் தொலையும். அவராலே நீங்கள் தேவனிடத்தில் சேருவீர்கள். அப்போது தேவன் உங்களுக்குப் பரம தகப்பனாயிருப்பார். உங்களுக்குத் தயை செய்வார். உங்களைப் பிள்ளைகளென்று ஏற்றுக்கொள்வார். நித்திய மோட்சவாழ்வையும் பெறுவீர்கள்.

நம்முடைய தாயின் கர்ப்பத்தில் நம்மை உருவாக்கி, காத்து, இதுவரையிலும் நம்மைத் தாங்கி, நம்முடைய பாவத்தை நிவிர்த்தியாக்கும்படி தம்முடைய குமாரனை நமக்கு இரட்சகராகத் தந்தருளின அந்த அன்புள்ள கடவுளை யார்தான் நினையாமலும் ஸ்துதியாமலும் போகலாம்?



# உ ப கி ர ந் த ம்.

## APPENDIX TO No. V.

### முன் சொன்னவைகளுக்கு உதாரணங்கள்.

(க.) திரிமூர்த்திகளில் எவன் பெரியவனென்று ஆராய்ந்து பார்க்கிறதைக் குறித்துச் சொல்லியது.

பிரமா, விஷ்ணு, சிவன் என்கிற மூன்று தேவர்கள் இருக்கிறார்களென்கிறீர்கள். ஆனாலும் சர்வத்துக்கும் மேலான தேவன் ஒருவரே உண்டல்லவா? ஆகையினாலே அந்த மூவருக்குள் எவன் பெரியவனென்று ஆராய்ந்து நிச்சயிக்க வேண்டியது.

பிரமதேவன் பெரியவனோ என்று கேட்டால், அவன் பொய் சொன்னானென்றும், அதினாலே யாரும் தன்னை வணங்காதபடி சாபம் அடைந்தானென்றும், உங்கள் சாஸ்திரம் சொல்லுகிறதைக் கேளுங்கள்.

**அருணாசலபுராணம்: திருமலைச் சருக்கம்.**

சீதராக்கேட்டியென் வரவின்செய்கையைக்
காதலாருயிரங் கணத்திலேகடந்
தாதியான்முடியறிந் தனுகினேனென
ஓதினன்கைதையு முள்ளதென்றதே. (௩௫.)

ஆசையாலுருகுமவ் வரிதனன்புகண்
டீசனும்பலவர மினிதுநல்கினன்
வாசமாமலரவ னுக்குமண்ணின்மேல்
பூசையும்கோவிலும் போகவென்றனன். (௩௮.)

### இதன் பதவுரை.

சீதரா—விஷ்ணுவே. என்—என்னுடைய. வரவின் செய்கையை—வருகையாலான காரியத்தை. கேட்டி—கேட்பாயாக. (அதென்னவென்ருல்,) நூருயிரங்காதம்—அனேக காதவழியை. கணத்தில்—க்ஷண நேரத்திலே. கடந்து—சென்று. ஆதியான்—முதன்மையான சிவனுடைய. முடி—தலையை. அறிந்து—பார்த்து. அணுகினேனென—வந்தேனென்று. ஓதினன்—(பிரமன்) சொன்னன். கைதையும்—தாழம்பூவும். உள்ளதென்றது—நிசந்தானென்று சாட்சி சொன்னது.

### கருத்துரை.

பிரமன் சிவனுடைய சிரசை அறிந்துவந்தேனென்று சொல்ல, தாழம்பூவும் ஆமென்று சாட்சி சொன்னது, என்பதாம்.

### பதவுரை.

ஈசனும்—சிவனும். ஆசையால்—இச்சையால். உருகும்—(மனம்) உருகுகின்ற. அவ்வரி—அந்த விஷ்ணுவினுடைய. அன்பு—பக்தியை. கண்டு—பார்த்து. பலவரம்—அனேக வரங்களை. இனிது—சந்தோஷமாக. நல்கினன்—கொடுத்தான். (பின்பு பிரமனைப் பார்த்து,) வாசம் — வாசத்தையுடைய. மா — பெருமை பொருந்திய. மலரவ—தாமரையிலிருக்கின்ற பிரமனே. உனக்கு—(பொய் சொன்ன) உனக்கு. மண்ணின்மேல்—பூமியின்பேரில். பூசையும்—ஆராதனையும். கோவிலும்—கோவிலும். போக—(இல்லாமற்) போகக்கடவது. என்றனன்—என்று சபித்தான்.

### கருத்துரை.

சிவன் விஷ்ணுவுக்கு அனேக நன்மைகளை அனுக்கிரகித்து, பிரமனுக்குக் கோவிலும் பூசையுமில்லாமற் போகக் கடவதெனச் சபித்தான், என்பதாம்.

சிவனுடைய முடியைக் காணமலிருந்தும், கண்டே னென்று பொய் சொன்ன இந்தப் பிரமாவை எவர்களும் கும்பிடக் கூடாதென்று உங்கள் சாஸ்திரமே சொல்லுகின் றது. ஆகையினாலே அவன் பெரியவனல்ல.

விஷ்ணு பெரியவனோ, சிவன் பெரியவனோ, என்று விசா ரிக்கப் போனால், விஷ்ணு பெரியவனல்ல, சிவனே பெரிய வனென்று சிவபுராணமெல்லாம் பெருங்கூச்சல் இடுகின் றது. எப்படியென்றால்:

**கந்தப்புராணம்: தட்சகாண்டம்: ததீசிப்படலம்.**

மாலயன்முதலோர்யாரும் வரம்பிலித்திருவிலெய்த
மேலைநாளளித்தோன்றானும் விமலனுமினையோர்க்கெல்லாம்
மூலமுந்தனக்குவேறோர் முதலிலாதவனுமெங்கள்
ஆலமர்கடவுளன்றி யமரரில்யாவரம்மா. (௰௧.)

### இதன் பதவுரை.

மால் — விஷ்ணு. அயன் — பிரமன். முதலோர் — இவர்கள் முதலாகிய. யாரும்—எவர்களும். வரம்பு—அளவு. இல்—இல் லாத. இத்திருவில்—(இப்போதவர்களிருக்கிற) இந்தச் செல்வத் தில். எய்த — தங்கும்படி. மேலைநாள் — முற்காலத்தில். அளித் தோனும்—கிருபை செய்தவனும். விமலனும்—மலமில்லாதவனும். இனையோர்க்கெல்லாம் — இவர்களியாவர்க்கும். மூலமும் — மூல காரணமானவனும். தனக்கு—(அப்படிக் காரணமான) தனக்கு. வேறோர்—வேறொரு. முதலிலாதவனும்—காரணமில்லாதவனும். (யாரெனின்) ஆல்—கல்லால விருட்சத்தின்கீழ். அமர் — எழுந்த ருளிய. எங்கள்—எங்களுடைய. கடவுளன்றி — சிவனேயல்லா மல். அமரரில்—தேவர்களுக்குள். யாவர்—யாரிருக்கிறார்கள்.

### கருத்துரை.

சிவனே கடவுளன்றித் தேவர்களுக்குள் ஒருவருமில்லை யென்பதாம். சிவன் ஒருவனே கடவுளென்றும், பிரமா விஷ்ணு முதலான சகல தேவர்களுக்கும் அவனே ஆதி

காரணமாயிருக்கிறனென்றும், இந்தப் பாட்டிலே சொல்லி யிருக்கிறது.

விஷ்ணு புராணங்களைப் பார்க்கப் புகுந்தாலோ, சிவன் பெரியவனல்ல, விஷ்ணுவே பெரியவனென்று அவையெல் லாம் இரைச்சலோடே கூவுகின்றது. எப்படியென்றால்:

பாகவதம்: சுருதி கீதையுரைத்த அத்தியாயம்.

புனிதமற்றுன்னையல்லாப் பொருள்பரப்பிரமமல்ல
எனவெடுத்துரைப்பதல்லா லீறொடுதோற்றமின்றித்
தனிமுதலாகிநின்ற சச்சிதானந்தமூர்த்தி
நினைவருஞ்சுடரேநின்னை நிகழ்த்துமாறறிகிலேமால். (௰க.)

இதன் பதவுரை.

புனித—பரிசுத்தமான விஷ்ணுவே. ஈறொடு—நாசத்துடனே. தோற்றம்—உற்பத்தியும். இன்றி—இல்லாமல். தனி—ஒப்பற்ற. முதலாகி—(சர்வத்திற்குங்) காரணமாகி. நின்ற—இருக்கின்ற. சச்சிதானந்தமூர்த்தி—உண்மையறிவானந்த சொரூபியே. நினைவ ரும்—(பிறரால்) நினைத்தற்கரிய. சுடரே—ஞானப் பிரகாசமே. உன்னையல்லாப் பொருள்—உம்மையல்லாத (சிவன் பிரமன் முத லாகிய) பொருள்கள். பரப்பிரமமல்லவென—பரத்துவமல்லவெ ன்று. எடுத்து—(உம்மையே) உயர்த்தி. உரைப்பதல்லால்—சொல் லுவதல்லாமல். நின்னை — உம்மை. நிகழ்த்துமாறு — சொல்லும் வழி. அறிகிலேம்—தெரியவில்லை.

கருத்துரை.

விஷ்ணுவே பரத்துவமன்றி வேறில்லை யென்பதாம்.

விஷ்ணு ஒருவனே கடவுளென்றும், மற்றெல்லாத் தேவர் களுக்கும் அவனே ஆதிகாரணமாயிருக்கிறனென்றும், இந் தப் பாட்டிலே சொல்லியிருக்கிறது.

இவ்விதமாய் உங்கள் சாஸ்திரங்கள் ஒன்றோடொன்று போராடுகிறதைப் பார்க்கும்போது, அவைகள் மனுஷர்க

ளுடைய தந்திரத்தினாலே உண்டான கட்டுக் கதையென்று நினைக்க வேண்டியதேயல்லாமல், தேவனாலே வந்ததென்று எண்ணுவதற்கு இடம் கொஞ்சமும் இல்லை.

மேலும், சிலவேளை விஷ்ணு சிவனைச் செயித்தானென்றும், வேறு சிலவேளை சிவன் விஷ்ணுவைச் செயித்தானென்றும், உங்கள் புராணங்களில் சொல்லியிருக்கிறதைச் சிந்தனை செய்யுங்கள்: செய்யுமிடத்தில், அந்த இருவரில் ஒருவனும் பெரியவனாயிருக்கவில்லை என்று நிதானிக்க வேண்டியது. இப்படி ஒருவருக்கொருவர் உயர்ந்தும் தாழ்ந்தும் வருகிற செய்கை சண்டைபோடுகிற மனுஷர்களுடைய காரியமாகத் தோன்றுகின்றது. தெய்வத்தன்மை எவ்வளவும் தோன்றவில்லை.

**(உ.) சிவனை அனுசரிக்கிறவர்கள் நித்திய நரகத்துக்காளாவார்களென்பது.**

భవవ్రతధరాయేచ యేచతాన్ సమనువ్రతాః
పాషండినస్తేభవంతు సచ్ఛాస్త్రపరిపంథినః
ముముక్షవోఘోరరూపాన్ హిత్వాభూతపతీనథ
నారాయణకలాఃశాంతా భజంతిహ్యనసూయవః.

இதன் பதவுரை.

యేచ—எவர்கள். భవవ్రతధరాః—சிவவிரதத்தைத் தரித்திருக்கிறார்களோ. యేచ—எவர்கள். తాన్—அவர்களை. సమనువ్రతాః—அனுசரிக்கிறார்களோ. తే—அவர்கள். సచ్ఛాస్త్రపరిపంథినః—நல்ல சாஸ்திரங்களுக்கு விரோதிகளான. పాషండినః—பாஷண்டிகள். భవంతు—ஆகக்கடவர். ముముక్షవః—மோட்சத்தை விரும்புகிறவர்கள். ఘోరరూపాన్—பயங்கரமான ரூபமுள்ள. భూతపతీన్—

பூதாதிபதிகளை (சிவகணங்களை). హిత్వా—விட்டுவிட்டு. అథ—பின்பு. అనసూయవః—பொறாமையற்றவர்களாய். శాంతాః—சாந்தமுள்ள. నారాయణకలాః—விஷ்ணுவின் அம்சங்களை. భజంతి—அடைகிறார்கள். (హి—அசை.)

## கருத்துரை.

சிவபக்தியுள்ளவர்களும், அச்சிவ பக்தியுள்ளவர்களை அனுசரிக்கிறவர்களும், மோட்சத்தைக் கொடுக்கும் சாஸ்திரத்தை விட்டுவிட்ட பதிதர். ஆகையால், மோட்சத்தை அடைய விரும்புகிறவர்கள் பயங்கரமான உருத்திரர்களைச் சேவிக்காமல், பொறாமையை விட்டுவிட்டு, சாந்தமுள்ள விஷ்ணுவைச் சேவிக்கிறார்கள்.

**(௫.) விஷ்ணுவை அனுசரிக்கிறவர்கள் நித்திய நரகத்துக்காளாவார்களென்பது.**

విష్ణుదర్శనమాత్రేణ శివద్రోహః ప్రజాయతే
శివద్రోహాన్న సందేహో నరకం యాంతి దారుణం
తస్మాన్న విష్ణునామాపి నవక్తవ్యం కదాచన.

### இதன் பதவுரை.

విష్ణుదర్శనమాత్రేణ—விஷ்ணுவைத் தரிசிக்கிறதினாலேயே. శివద్రోహః—சிவதுரோகம். ప్రజాయతే—உண்டாகின்றது. శివద్రోహాత్—சிவனுக்குத் துரோகஞ் செய்வதினாலே. దారుణం—பயங்கரமான. నరకం—நரகத்தை. యాంతి—அடைகிறார்கள். నసందేహః—சந்தேகமில்லை. తస్మాత్—அதனால். కదాచన—ஒருபோதும். విష్ణునామాపి—விஷ்ணுவின் பெயரும். నవక్తవ్యం — சொல்லத்தகாது.

(న — அசை.)

## கருத்துரை.

விஷ்ணுவைத் தரிசிக்கிறதே சிவத்துரோகமாயிருக்கிறது. சிவத்துரோகத்தினாலே நரகம் கிடைக்கும். ஆதலால், விஷ்ணுவின் நாமத்தையாகிலும் ஒருபோதும் உச்சரிக்கக் கூடாது.

(௪.) விஷ்ணு தனது தொப்புளில் பிரமாவைப் பிறப்பித்து, உரலின்மேல் உளுக்கார்ந்து, தயிரைத் திருடினனென்பது.

### பாகவதம்: கடவுள்வாழ்த்து.

நந்தன்மைந்த னெனக்கறைநாட்டிமீக்
குந்தியண்ட ருறித்தயிர்கொள்ளைகொள்
ளெந்தையெண்க ணிரணியகர்ப்பன்வாழ்
உந்தியின்கிள ரொண்மலர்வாழியே.

### இதன் பதவுரை.

நந்தன் — நந்தகோபனுடைய. மைந்தனென—பிள்ளையென்று சொல்லும்படி பிறந்து. கறை—உரலை. நாட்டி—கீழேவைத்து. மீக்குந்தி—அதின்பேரில் உட்காந்து. அண்டர்—இடையர்களது. உறி—உறியிலிருக்கிற. தயிர் — தயிரை. கொள்ளைகொள் — திருடின. எந்தை—என் தகப்பனாகிய கிருஷ்ணனுடைய. எண்கண் — எட்டுக்கண்களையுடைய. இரணியகர்ப்பன் — பிரமன். வாழ் — வாழுகின்ற. உந்தி—கொப்பூழாகிய. கிளர் — விளங்குகின்ற. ஒண் — ஒள்ளிய. மலர் — தாமரை மலரானது. வாழி— வாழக்கடவது.

## கருத்துரை.

விஷ்ணுவின் உந்தியாகிய தாமரை வாழக்கடவது, என்பதாம்.

(ரு.) மற்றவர்களுக்கு நல்வழியைக் காட்டி, தாங்கள் அவ்வழியில் நில்லாதவர்களைக் குறித்துச் சொல்லியது.

நீதிநெறி விளக்கம்.

*கற்றுப்பிறர்க்குரைத்துத் தானில்லார்வாய்ப்படூஉம்*
*வெற்றுரைக்குண்டோர் வலியுடைமை—சொற்றநீர்*
*நில்லாததென்னென்று நாணுறைப்பநேர்ந்தொருவன்*
*சொல்லாமேசூழ்ந்து சொலல்.* (உக.)

இதன் பதவுரை.

*கற்று—(பலநூல்களை) வாசித்து. பிறர்க்கு—மற்றவர்களுக்கு. உரைத்து—உபதேசித்து. தாம்—தாங்கள். நில்லார்—(அவ்வழியில்) நில்லாதவர்களுடைய. வாய்—வாக்கில். படூஉம்—உண்டாகும். வெற்றுரைக்கு—வெறுவார்த்தைக்கு. ஓர்வலியுடைமை—ஒருவல்லமை. உண்டு—இருக்கின்றது. (அதென்னவென்றால்) சொற்றநீர்—(பிறர்க்கு)உபதேசித்த நீங்கள். நில்லாதது—(அந்நெறியில்) நில்லாதது. என்னென்று—என்னகாரணமென்று. நாணுறைப்ப—வருத்தும்படி. ஒருவன்—ஒருத்தன். நேர்ந்து—தங்களை எதிர்த்து. சொல்லாமே—பேசாதபடி. சூழ்ந்து—ஆராய்ந்து. சொலல்—சொல்லுதலாம்.*

கருத்துரை.

*நீதி சொல்லுவோன், தான் நடந்து சொல்லவேண்டும் என்பதாம்.*

(சூ.) சுத்தமான வழியைக் காட்டுகிற தேவர்கள் தீமையைச் செய்யப்படாதென்பது.

పథఃశుచేర్దర్శయితార ఈశ్వరాః
మలీమసాంఆదదతేనపద్ధతిం.

## இதன் பதவுரை.

ఈశ్వరాః—தேவர்கள். శుచేః—சுத்தமான. పథః—வழியை. దర్శయితారః—காட்டுகிறவர்கள். మలీమసాం—அழுக்குள்ள. పద్ధతిం—வழியை. నాదదతే—அங்கீகரியார்கள்.

## கருத்துரை

தேவர்கள் சுத்தமான வழியைக் காட்டுகிறவர்கள். ஆதலால் அசுத்தமான வழியை அங்கீகரியார்கள்.

**(எ.) கை கால் கண்முதலிய அவயவங்களில்லாமல், தேவன் சகலத்தையும் நடத்த வல்லவராயிருக்கிறரென்பது.**

**అపాణిపాదో జవనో గ్రహీతా పశ్యత్యచక్షుః**
**సశృణోత్యకర్ణః స వేత్తి వేద్యం నచ తస్య వేత్తా**
**తమాహురగ్ర్యం పురుషం మహాంతం.**

## இதன் பதவுரை.

సః—அவன். అపాణిపాదః—கையுங் காலுமில்லாதவனுயிருந்தும். జవనః—விரைவாய் நடப்பவனும். గ్రహీతా—கிரகிக்கிறவனும் (இருக்கிறான்). అచక్షుః—கண்ணில்லாதவனுயிருந்தும். పశ్యతి—பார்க்கிறான். సః—அவன். అకర్ణః—காதில்லாதவனுயிருந்தும். శృణోతి — கேட்கிறான். సః—அவன். వేద్యం—அறிய வேண்டியதை. వేత్తి—அறிகிறான். తస్య—அவனை. వేత్తా—அறிகிறவன். నచ—இல்லை. తం—அவனை. అగ్ర్యం—முதல்வனும். మహాంతం—மேன்மையுள்ளவனுமான. పురుషం—புருஷனாக. ఆహుః—சொல்லுகிறார்கள்.

## கருத்துரை.

கை கால்களில்லாமல் நடக்கிறவனும், கிரகிக்கிறவனும், கண்ணில்லாதவனாய்ப் பார்க்கிறவனும், செவியில்லாதவனாய்க் கேட்கிறவனும், அறியத்தக்கதை அறிந்துகொள்ளுகிறவனும், ஒருவனாலும் அறியப்படாதவனுமாயிருக்கிறவன் எவனோ, அவனைத் தேவனாகச் சொல்லுகிறார்கள்.

## (அ.) வெண்ணெய் திருடுகிற விஷ்ணுவுக்கு வாகனமாகிய கருடனை வணங்குகிறதைக் குறித்துச் சொல்லியது.

### பாகவதம்: கடவுள்வாழ்த்து.

திருடிவெண்ணெ யயின்றுசெயிருறு
முருடொடுங்க முரனைமுனிந்தவன்
புருடவுத்தமன் பொற்பதமேந்துகைக்
கருடராசன் கழலிணைவாழியே.

### இதன் பதவுரை.

வெண்ணெய்—வெண்ணெயை. திருடி—திருடி. அயின்று—சாப்பிட்டு. செயிருறு—குற்றம் பொருந்திய. முருடு—மாறுபாடு. ஒடுங்க—(உலகத்தில்) நீங்கும்படி. முரனை—முரனென்னும் அசுரனை. முனிந்தவன் — கொன்றவனாகிய. புருடவுத்தமன்—புருஷோத்தமனுடைய. பொன்—அழகிய. பதம்—பாதத்தை. ஏந்து—ஏந்துகின்ற. கை—கையையுடைய. கருடராசன்—(பட்சிகளுக்கரசாகிய) கருடனுடைய. கழலிணை—இரண்டுபாதமும். வாழி—வாழக்கடவது.

## கருத்துரை.

கருடனுடைய திருவடி வாழக்கடவது என்பதாம்.



# வேதவாக்கியம்.

(௧) தேவன் ஒருவரே.

ஏசாயா, ௪௪. அதி: ௬, ௮.
ஏசாயா, ௪௫. அதி: ௫, ௬, ௰௮, ௨௨.
மாற்கு, ௰௨. அதி: ௨௯, ௩௨.
க. கொரிந்தியர், ௮. அதி: ௪.

(௨) அவர் அரூபியாயிருக்கிறார்.

யோவான், ௪. அதி: ௨௪.
க. தீமோத்தேயு, க. அதி: ௰௭.

(௩) அவர் எங்கும் நிறைந்தவர்.

௱௩௯. சங்கீதம்: க—௰௨.
எரேமியா, ௨௩. அதி: ௨௩, ௨௪.

(௪) அவர் சர்வ ஞானமுள்ளவர்.

க. நாளாகமம், ௨௮. அதி: ௯.
ரோமர், ௰௧. அதி: ௩௩, ௩௪.
எபிரேயர், ௪. அதி: ௰௩.

(௫) அவர் சர்வ வல்லமையுள்ளவர்.

யோபு, ௪௨. அதி: ௨.
எரேமியா, ௩௨. அதி: ௰௭.
வெளிப். க. அதி: ௮.

(௬) அவர் நீதி நிறைந்தவர்.

௱௰௯. சங்கீதம்: ௱௩௭, ௱௩௮, ௱௪௨.
செப்பனியா, ௩. அதி: ௫.

(௭) அவர் பரிசுத்தம் நிறைந்தவர்.

ஏசாயா, ௬. அதி: ௩.
ஆபகூக், க. அதி: ௰௩.
வெளிப், ௰௫. அதி: ௪.

(௮) அவர் இரக்கம் நிறைந்தவர்.

யாத்திராகமம், ௩௪. அதி: ௬.
௱௩. சங்கீதம்: ௮, ௯, ௰.
யோவேல், ௨. அதி: ௰௩.
லூக்கா, ௬. அதி: ௩௫, ௩௬.

(௯) அவர் சத்தியம் நிறைந்தவர்.

உபாகமம், ௩௨. அதி: ௪.
எண்ணாகமம், ௨௩. அதி: ௰௯.

(௰) அவர் ஆதியந்தமில்லாதவர்.

௯௰. சங்கீதம்: ௨.
௧. திமோத்தேயு, ௧. அதி: ௰௭.
வெளிப், ௧. அதி: ௮.

(௰௧) அவர் மாறாதவராயிருக்கிறார்.

மல்கியா, ௩. அதி: ௬.
எபிரேயர், ௰௩. அதி: ௮.
யாக்கோபு, ௧. அதி: ௰௭.

(௰௨) அவர் சகலத்தையுஞ் சிருஷ்டித்துத் தாங்குகிறவர்.

ஆதியாகமம், ௧. அதி: ௧.
எபிரேயர், ௰௧. அதி: ௩.
நெகெமியா, ௯. அதி: ௬.

(௰௩) அவரைச் சரியாய் அறிந்துகொள்ளுகிறதற்குச் சத்திய வேதமே வேண்டியது.

௧. கொரிந்தியர், ௧. அதி: ௨௧.
ரோமர், ௰. அதி: ௰௪, ௰௫, ௰௬, ௰௭, ௰௮.
மத்தேயு, ௰௧. அதி: ௨௭.
௨. திமோத்தேயு, ௩. அதி: ௰௬, ௰௭.

(௰௪) தேவனுக்கு ரூபங்களை வைக்கப்படாது.

யாத்திராகமம், ௨௰. அதி: ௪, ௫.
லேவியராகமம், ௨௬. அதி: ௧.
உபாகமம், ௨௭. அதி: ௰௫.

(௰௫) பரிசுத்தர் மாத்திரம் தேவனைத் தரிசிப்பார்கள்.

மத்தேயு, ௫. அதி: ௮.



ஆறுவது.

# பாபநிவிர்த்தி.

No. VI.

# EXPIATION.

# பாபநிவிர்த்தி.



ஓ சனங்களே, பாவம் நிவிர்த்தியாக வேண்டுமென்றும்; அது நிவிர்த்தியாகாவிட்டால், நரக கதி கிடைக்குமேயல்லாமல், முத்தி அடைவது கூடாதென்றும்; யாவருக்கும் தெரிந்த காரியந்தான். பாவத்தை நிவிர்த்திசெய்கிற உபாயங்களைக் குறித்தோ மனுஷர்கள் மெத்தவும் சந்தேகித்து, மனமயங்கி, பல பல வீணான வழிகளை ஏற்படுத்தியிருக்கிறார்கள். பாவத்தைத் தொலைக்காத மார்க்கத்தை, தொலைக்கும் மார்க்கமென்று நம்பி, அனுசரித்தால், அதினாலே அதிகமான பாவமும் பழியும் கேடும் நேரிடுமேயொழிய, ஒரு நன்மையும் உண்டாகாது. ஆகையினாலே நன்றாய் ஆலோசித்துப் பார்க்கவேண்டியது. உதவாத உபாயங்களைத் தள்ளிவிடவேண்டும். உதவும்படியான வழி இன்னதென்று கண்டு, அதை உறுதியாய்ப் பற்றிக்கொள்ள வேண்டும்.



## யாத்திரைசெய்து புண்ணியஸ்தலங்களை மிதிக்கவேண்டுமென்று உங்களில் சிலர் சொல்லுவார்கள்.

அந்தச் சொல்லின்படியே, காசிக்கும் காஞ்சிக்கும் திருப்பதிக்கும் இராமேஸ்வரத்துக்கும் பின்னும் அனேக இடங்களுக்கும் வெகுபேர் கும்பு கும்பாகத் திரண்டு போகிறார்கள். ஆனாலும் அப்படிப் போவது ஒப்பா தப்பா என்று அவர்களுக்குள்ளே நிதானித்துப் பார்க்கிறவர்கள் யாரும் இல்லை.

ஓ சனங்களே, அந்த ஸ்தலங்களுக்கு ஏன் போகிறீர்கள்? அவ்விடத்திலே இருக்கிற கடவுள் இவ்விடத்திலேயும் இல்லையா? எங்கும் நிறைந்த பராபரவஸ்து நீங்கள் வாசம்பண்ணுகிற இந்த இடத்திலே மாத்திரமா இல்லாமல் போனார்? இதென்ன விபரீதமான வார்த்தை? மற்றெல்லா இடங்களிலும் இருக்கிறதுபோல, உங்கள் ஊரிலும் கடவுள் இருக்க, அவரை வேறு ஏதோ ஒரு ஸ்தலத்திலே தேடிக் கண்டுபிடிக்கலாமென்று எண்ணி, ஓடி, ஆடி, திரிகிறதென்ன புத்தியோ? கடவுள் இங்கே உங்கள் ஊரிலேயும் இருக்க, வேறே ஊர் ஊர்கள்தோறும் அவரைப் போய்த் தேடுவது எப்படியிருக்கிறது? விளக்கிருக்க நெருப்புத் தேடுகிறதுபோல இருக்கிறது அல்லவா? (க.)

*எங்கணுநீயென்ற விருந்தபடியெய்தாமல்
அங்குமிங்குமென்றலைய லாமோபராபரமே.

என்று உங்களிலும் ஒருவர் சொல்லவில்லையா?

ஓ சனங்களே, அந்த ஸ்தலங்களுக்கு ஏன் போகிறீர்கள்? அங்கே போவதினாலே உங்களுடைய சுபாவம் மாறுமா? காசிக்குப்போன திருடன், அதைக் கண்டதினாலே, யோக்கியனாகிறானோ? காஞ்சியில் சேர்ந்த மூர்க்கன், அதைத் தரிசித்ததினாலே சாந்தமுள்ளவனாய் விடுகிறானோ? இராமேஸ்வரத்தை அடைந்த பொய்யன் மெய்யனாய் மாறிப்போகி

தாயுமானவர்.

*இ-ள். பராபரமே—கடவுளே. நீர்—தேவரீர். எங்கணுமென்றல்—எவ்விடங்களிலும் பரிபூரணமாயிருக்கிறீரென்று வேதஞ் சொல்லுமானால். இருந்தபடி—இருந்தபடி (இருந்து). எய்தாமல்—(உம்மை) அடையாமல். அங்குமிங்குமென்று — அவ்விடத்திலுமிவ்விடத்திலுமிருக்கிறீரென்றெண்ணி. அலையலாமோ — அலையக்கூடுமோ. எ-று.

(க.) இதை நிச்சயிக்கிற பாட்டை ௱௭௧-ம் பக்கத்திலே காண்க.

ருனே? திருப்பதி மலையேறின துஷ்டன் நல்லவனுய் இருக்கிருனே? இதெல்லாம் இல்லையே. உலகத்திலுள்ள சமஸ்த ஸ்தலங்களைப் போய்ப் பார்த்தாலும், அதிலுைலே பழைய கெட்ட குணம் மாறுகிறதுமில்லை, புதிய நல்ல குணம் உண்டாகிறதுமில்லை.(உ.)

* காசிகாசியென்றுநீர் கால்கடுக்கவோடுநீர்
காசியோடியாடினுங் கறுப்புவெள்ளையாகுமோ.

ஓ சனங்களே, அந்த ஸ்தலங்களுக்கு ஏன் போகிறீர்கள்? உங்களுக்கு ஏதாவது ஒரு பலன் கிடைக்குமென்று எண்ணியா போகிறீர்கள்?(ஈ.) நீங்கள் எண்ணுகிறது ஒருவிதத்திலே சரிதான். ஒரு மாதிரியான பிரயோசனம் உங்களுக்கு நிச்சயமாய்க் கிடைக்கும். உடம்பு அலுத்து, இளைத்து, மெலிந்துபோகும். துணி கிழிந்துபோகும். கால் முள்ளிலும் கல்லிலும் பட்டு, நொந்து தேய்ந்துபோகும். கூடக்கொண்டுபோன பணம் அழிந்துபோகும். பல தேசத்து மண்ணும் தூசியும் தேகத்திலே படியும். புதிதான பல வியாதிகளும் வருத்தங்களும் சரீரத்திலே ஏறும். வழியிலே கள்ளர் பயம் கண்டாலும், காணும். பல நாசமோசங்கள் நேரிட்டாலும், நேரிடும். இப்படிப்பட்ட பலன்களெல்லாம் உங்களுக்குக் கிடைக்கும்.(ச.) ஆனாலும் இந்தப் பலனைத் தேடிக்கொள்ள தூரமான இடங்களுக்குப் போகவேண்டியதென்ன? இப்படிப்பட்ட நஷ்டங்களைச் செய்துகொள்ள

---

சிவவாக்கியர்.

*இ-ள். நீர்—(உலகத்தாரே) நீங்கள். காசி காசியென்று—காசியானது சிரேஷ்ட ஸ்தலமென்று. கால்—(உங்கள்) கால்கள். கடுக்க—நோவ. ஓடுநீர்—ஓடுகிறீர்கள். காசி—அக்காசிக்கு. ஓடி—ஓடி. ஆடினும்—(அங்கேயிருக்கிற கங்கையில்) ஸ்நானஞ் செய்தாலும். கறுப்பு—கறுப்பானது. வெள்ளையாகுமோ.—வெண்மையாகுமோ. எ-று.

(உ.), (ஈ.), (ச.), ஙஎஉ, ஙஎ௩-ம் பக்கங்களிலுள்ள பாட்டுகளைக் காண்க.

வேண்டுமென்றிருந்தால், இங்கே உங்கள் சொந்த ஊரிலே தான் செய்துகொள்ளலாமே. காலுக்குக் கடுப்பே தவிரக் கண்ட பலனொன்றுமில்லை என்னும் பழமொழியை நீங்கள் கேள்விப்பட்டதில்லையா?

ஓ சனங்களே, சமுத்திரத்தில் விழுந்த ஒரு துரும்பைப் போல வீணாய் அலைவது நல்லதா? ஸ்தலயாத்திரை செய்வதினாலே பாவம் நிவாரணமாகுமென்று நினைக்கிறது ஒரு பெரிய பைத்தியம். நீங்கள் புண்ணிய ஸ்தலமென்று சொல்லுகிறீர்கள், சரியாகச் சொன்னாலோ, அந்த இடங்களையெல்லாம் பாவஸ்தலமென்றே சொல்லத்தகும். அந்த ஸ்தலங்களிலே திருவிழா நடக்கும்போது, அங்கே அனேக துஷ்டரும், தூர்த்தரும், திருடரும், தந்திரக்காரரும் கூட்டமாய்க் கூடிவரவில்லையா? அவ்விடங்களிலே அனேக வேசிகள் போய் விழவில்லையா? அங்கே வெகு அசுத்தங்களும் அக்கிரமங்களும் பல கேடுகளும் நடக்கவில்லையா? ஓகோ இதைப் புண்ணியஸ்தலமென்று சொல்வது எந்த விதத்திலேயோ அது தெரியவில்லை. பாவமே மிகவும் விளையும் படிக்கு இடமாயிருக்கிறதேயொழிய, வேறல்ல. ஆனபடியினாலே அதற்குப் பாவஸ்தலமென்று பேர் வைக்கிறதே நியாயம். அப்படிப்பட்ட ஸ்தலங்களுக்குப் போகிறதினாலே உங்கள் பாவம் அதிகமேயாகுமல்லாமல், குறையாது. குளிக்கப் போய்ச் சேற்றைப் பூசிக்கொள்வதுபோல் இருக்கும்.



## தீர்த்தமாடுவதே காரியமென்று உங்களில் சிலர் சொல்லுவார்கள்.

கங்கை, யமுனை, காவேரி முதலான ஆற்றுச் சலம் புண்ணிய தீர்த்தமாயிருக்கிறதென்றும், அப்படிப்பட்ட புண்ணிய சலத்தில் படுவதெல்லாம் தெய்வலோகம் அடையுமென்றும்,

சொல்லி, மகத்துவம் கூறுகிறார்கள். இந்தப் பேச்சை ஒத்துக்கொள்வதற்கு இடம் உண்டா? அந்தப் புண்ணிய தீர்த்தங்களிலே தினந்தோறும் அனேக காக்கை இறங்கி, சிறகடித்து, ஸ்நானஞ் செய்கின்றது. அனேக எருமைமாடு மூக்கொன்றுமாத்திரமே தவிர, உடம்பெல்லாம் அந்த நீரிலே அமுங்க நாள்தோறும் ஸ்நானஞ்செய்கின்றது. அனேக நீர்ப்பூச்சிகளும் அந்தச் சலப்பரப்பை எக்காலத்தும் விடாமல், அதின்மேலேயே எப்போதும் ஆடிக்கொண்டு, நித்திய ஸ்நானஞ்செய்கின்றது. அந்தச் சலத்தில் பிறந்து வளர்ந்து வாழுகிற மச்சமும் தவளையும் அனேக திரளாய் அதிலேதானே முழுகிக்கொண்டிருந்து, ஒழியாத ஸ்நானஞ் செய்கின்றது. அந்தப் புண்ணிய சலத்தில் படுவதெல்லாம் தெய்வலோகம் அடைவதென்பது நிசமானால், இதுவரையில் அந்தச் சலத்தை விடாமல் அனுசரித்துக்கொண்டிருக்கிற ஒரு காக்கையாவது, ஒரு எருமையாவது, ஒரு நீர்ப்பூச்சியாவது, ஒரு மச்சமாவது, ஒரு தவளையாவது அப்படித் தெய்வலோகம் அடைந்ததில்லையே. அந்தச் சலத்தில் எப்போதும் இருக்கிற மீன் தெய்வலோகம் அடையாமலிருக்கிறதுமல்லாமல், தன் உடலில் இருக்கிற நாற்றத்தையானாலும் போக்கடித்ததுமில்லையே.

*நாறுமீனைப்பலதர நல்லதண்ணீரால்
நாளுங்கழுவினுமத னாற்றம்போமோ
கூறுமுடல்பலநதி யாடிக்கொண்டதால்
கொண்டமலநீங்காதென் றூடாய்பாம்பே.

---

பாம்பாட்டி சித்தர் பாடல்.

* இ-ள். நாறும்—துர்வாசனை வீசுகின்ற. மீனை—மீனை. பலதரம்—அனேகதரம். நல்லதண்ணீரால்—சுத்தசலத்தினால். நாளும்—தினந்தோறும். கழுவினும்—கழுவினாலும். அதன்—அம்மீனுடைய. நாற்றம் — துர்வாசனை. போமோ—நீங்குமா. (நீங்கமாட்டாதது போல) கூறும்—சொல்லுகின்ற. உடல்—சரீரம். பலநதி—அனேக நதிகளில். ஆடிக்கொண்டதால்—ஸ்நானஞ்செய்ததினால். கொண்ட—

மேலும், மனுஷர்கள் அந்தப் புண்ணிய சலத்தைத் தீண்டினால், பாவவிமோசனம் உண்டாகுமென்று சொல்லுகிறார்கள். அதுவும் பெரும் பொய்யாகவே இருக்கிறது. சலத்திலே உடம்பானது படுகிறதேயல்லாமல், ஆத்துமா அதிலே படவில்லையே. பாவம் உண்டாகிறது ஆத்துமாவிலே. சலமானது ஆத்துமாவுக்கு எட்டி, அதைச் சுத்திசெய்யுமா? அந்த ஆத்துமாவுக்கும், அதற்குப் புறம்பாயிருக்கிற சலத்துக்கும் என்ன சம்பந்தம் உண்டு? ஒன்றும் இல்லை.

* தீர்த்தமாடினாலுமகப்பேய் தீவினைதீராதே
ஊத்தைபோனாலுமகப்பேய் உள்வினைபோகாதே
ஆறுகண்டாயோவகப்பே யந்தவினைதீரத்
தேறித்தெளிவதெல்லாமகப்பேய் தீர்த்தமாமடியே.

அந்தச் சலத்திலே இறங்கி, ஸ்நானஞ்செய்து, தேகத்தை நன்றாய்த் தேய்த்தால், அதின்மேல் இருக்கிற அழுக்கு நீங்கினாலும், நீங்கும். அதுவும் சமுசயமாய்த்தான் இருக்கிறது. எப்படியென்றால், அந்தச் சலமானது பேர்பெற்றதானதினாலே, வெகு சனங்கள் அதிலே இறங்குகிறார்கள். அனேகர்

---

அது கொண்டிருக்கிற. மலம் — மலமானது. நீங்காதென்று — நீங்கமாட்டாதென்று. பாம்பே—மனமாகிய பாம்பே. ஆடாய்— ஆடுவாயாக. எ—று.

**அகப்பேய்சித்தர் பாடல்.**

* இ—ள். அகப்பேய்—பேயையொத்த மனமே. தீர்த்தமாடினாலும்—(பரிசுத்த நதியில்) ஸ்நானஞ்செய்தாலும். தீவினை—பாவம். தீராது—நீங்காது. அகப்பேய்—பேயையொத்த மனமே. ஊத்தை போனாலும்—(அதனால் சரீர) வழுக்குப் போனாலும். உள்வினை— ஆத்தும சம்பந்தமான பாவம். போகாது — நீங்கமாட்டாது. அகப்பேய்—பேயையொத்த மனமே. அந்த வினை—அப்பாவம். தீர— நீங்குதற்கு. ஆறு — வழியை. கண்டாயோ—பார்த்தாயா. அகப்பேய்—பேயையொத்த மனமே. தேறித்தெளிவதெல்லாம் — (கடவுளை யறிந்து மனம்) பரிசுத்தமாவதெல்லாம். அடியே—பெண்ணே. தீர்த்தமாம் — (பாவம்போக்கும் வழியாகிய) பரிசுத்த நதியாம். எ—று.

நாற்றமான சரீரத்தோடே இறங்குகிருர்கள். அனேகர் அசுத்தமான வியாதியோடே இறங்குகிருர்கள். அனேகர் கெட்ட இரணங்களோடும், ஆருத காயங்களோடும், சீழ்வடிகிற புண்களோடும் இறங்குகிருர்கள். இவ்விதமாக வெகு சனங்களுடைய அழுக்கும் நாற்றமும் கலந்த தண்ணீரைப் புண்ணிய சலமென்று கூவி, நீங்களும் இறங்குகிறீர்கள். இதினுலே உங்கள் உடம்பிலுள்ள அழுக்குத் தீருமோ, பெருகுமோ, அது ஒரு சந்தேகமாகவே தோன்றுகின்றது. அப்படிப்பட்ட சலத்திலே போய்க் குளிப்பதைப் பார்க்கிலும், உங்கள் சொந்த கிணற்றிலும் குளத்து நீரிலும் குளிப்பது நலமாயிருக்குமல்லவா?

ஓ சனங்களே, எந்தச் சலத்திலே ஸ்நானஞ் செய்தாலும், பாவம் நீங்கமாட்டாது. உங்களிலும் அப்படித் தெரிவித்தவர்களும் உண்டு.

* தீர்த்தமாடிக்கொள்வீர்
 தெளிந்தவர்போல்செபதபசாஸ்திரங்களோதிக்கொள்வீர்
யாத்திரைதீர்த்தங்களாடி
 நதிகள்தோறுமலைந்து அலைந்து சுற்றியலையுகிறீர்
மாற்றியேபிறப்பமென்று
 பொய்ப்பிரட்டுவாய்ச்சமத்துசாஸ்திரஞ்சொல்மடையர்களே
பாத்திராபாத்திரமறியா
 பாவிகள்தான்பாடுபட்டுங்கூறறியாமாடுகள்தான்.

---

* இ-ள். தீர்த்தமாடிக்கொள்வீர்—(ஓ உலகத்தாரே, நீங்கள்) தீர்த்தம் ஆடுகிறீர்கள். தெளிந்தவர்போல்—தேறினவர்களைப்போல. செபம்—செபத்தையும். தபம் — தவத்தையும். (சொல்லுகிற) சாஸ்திரங்கள்—நூல்களை. ஓதிக்கொள்வீர்-படிப்பீர்கள். யாத்திரை—ஸ்தலயாத்திரை (செய்து). தீர்த்தங்களாடி — தீர்த்தங்களாடி. நதிகள்தோறும்—(இவ்வாறே) எல்லா நதிகளிலும். அலைந்து அலைந்து—மிகவுமலைந்து. சுற்றி — சுற்றி. அலையுகிறீர் — அலைகிறீர்கள். (நீங்கள் ஏன் இப்படிச் செய்கிறீர்களென்று யாராவது கேட்டால்) மாற்றி—குணத்தைமாற்றி. பிறப்பமென்று — புண்ணிய தேகத்தை எடுப்போமென்று. பொய்—பொய்யும். புரட்டு—புரட்டுமான. வாய்ச்சமத்து-வாய்வல்லமையாற் கட்டின. சாஸ்திரம்-நூல்களை. சொல்—

கங்கையில் மூழ்கினாலுங் காக்கையன்னமாகுமா என்னும் பழமொழியையும் பாருங்கள்.(ங.)



## பிராமணர்களாலே பாவம் தீருமென்று சிலர் நினைக்கிறார்கள்.



ஆணவத்தாலழியாதே என்னும் பழமொழியைப் பாராமல் தன்னைத் தெய்வமென்று சொல்லுகிற துணிவு பிராமணனிடத்தில் உண்டு. உங்கள் சாஸ்திரமும் அப்படியே சாதிக்கின்றது.

நல்லாப்பிள்ளை பாரதம்: சாந்திபருவம்: வீடுமனைக் கண்ட சருக்கம்.

*செப்பமுடையசெழுந்தோன்றற் சிவன்மால்பிரமன்றேவரினும்
ஒப்பினதிகர்பூசுரரென் றுளங்கொண்டவர்க்கன்புறுத்துவனேற்
தப்பொன்றிலனாயுவொடு தருமம்விருத்திதருமுயிர்கள்
வெப்புமிடையாதேழ்முகிலும் விளக்குமழையுமகமீறும். (௰௧.)

பிரமா, விஷ்ணு, சிவன் முதலாகிய எல்லாத் தேவர்களிலும் பிராமணர் பெரியவர்களாயிருக்கிறார்களென்று எந்த

---

உதாரணமாகச் சொல்லுகின்ற. மடையர்களே — அறிவீனர்களே. (நீங்கள் யாரெனின்) பாத்திராபாத்திரம் — இது பாத்திரம் இது அபாத்திரமென்று. அறியா—தெரியாத. பாவிகள்—பாவிகள். (அன்றியும்) பாடுபட்டும்—இவ்வித வருத்தப்பட்டும். கூறு—நற்பகுதியை. அறியா—தெரியாத. மாடுகள்—மாடுகளாவீர்கள். எ—று.

* இ—ள். செப்பமுடைய—நடுவுநிலைமையையுடைய. செழும்—நல்ல. தோன்றல்—அரசனானவன். சிவன்—சிவன். மால்—விஷ்ணு. பிரமன்—பிரமா. தேவரினும் — முதலான தேவர்களிலும். ஒப்பின் — ஒத்துப்பார்த்தால். பூசுரர் — பிராமணர்கள். அதிகரென்று—உயர்ந்தவர்களென்று. உளங்கொண்டு—மனதில் நினைத்து.

(ங.) ௱௭௪-ம் பக்கத்திலுள்ள சுலோகத்தையும் பாட்டையும் காண்க.

அரசன் நினைத்து, அந்தப் பிராமணர்களுக்கு அன்பு செய்வானோ, அவனே குற்றமில்லாதவனாய் இருப்பான்: அவனே வெகுநாள் வாழுவான்: தருமம் அடைவான்: அவனுடைய தேசத்துப் பிரசைகளும் துன்பமில்லாமல் சுகப்படுவார்கள்: அந்த நாட்டிலே நல்ல மழையும் பெய்யும்: என்று இந்தப் பாட்டிலே சொல்லியிருக்கிறது.(௬.) பிராமணன் ஏன் தன்னைத் தெய்வமென்று பாராட்டுகிறான்? அது உங்களுக்குத் தெரியாதோ? தன்னைப் பெருமைப்படுத்தவும், மற்றவர்களைச் சிறுமைப்படுத்தவும், பணத்தைச் சேர்க்கவும், வயிற்றை வளர்க்கவும், அவன் அப்படிச் சொல்லுகிறான். அவ்விதமாய் அவன் சொல்லத் துணிந்தாலும், நீங்கள் அந்த வார்த்தையை ஒப்புக்கொண்டு, அவனை வணங்கி, அவனாலே பாவம் நிவிர்த்தியாகுமென்று நம்புவது ஒரு பெரிய அதிசயமல்லவா? பிராமணன் தெய்வமானால், சமஸ்த பொருளும் அவனுடையது: ஆனாலும் கச்சேரியிலே சம்பளத்துக்குச் சேவிக்கிறானே. அவன் தெய்வமானால், உயிரைக் கொடுக்கவும், காக்கவும், அழிக்கவும், அவனால் ஆகும்: ஆனாலும் தன் பிள்ளை செத்தால், அழுது மார் அடிக்கிறானே. அவன் தெய்வமானால், அவனுக்குச் சர்வ ஞானம் உண்டாயிருக்கும்: ஆனாலும், பிராமணனுக்குப் பின்புத்தியென்று ஒரு பழமொழி பூலோகத்தில் பிறந்திருக்கிறதே. இப்படியிருக்க, பிராமணன் தன்னைத் தெய்வமென்று சொல்லுவதெல்லாம் வீண் டம்பமாயிருக்கிறதென்று சொல்லவும்

அவர்க்கு — அப்பிராமணர்களுக்கு. அன்புறுத்துவனேல் — அன்பு செய்வானானால். (அவ்வன்பினால்) தப்பு—குற்றம். ஒன்றிலனாய்—யாதொன்றுமில்லாதவனாக இருப்பான். ஆயுவொடு—வாழ்நாளுடனே. தருமம்—தருமமானது. விருத்திதரும்—அதிகரிக்கும். உயிர்கள்—அவன் நாட்டில் வாழுமுயிர்களுக்கு. வெப்பும்—துன்பமும். மிடையாது—நெருங்காது. ஏழ்முகிலும்—சத்த மேகங்களும். மழையும்—மழையையும். விளக்கும்—விளங்கச்செய்யும். மகம்—யாகங்கள். மீறும்—அதிகரிக்கும். எ-று.

(௬.) ௱எ௫-ம் பக்கத்திலுள்ள சுலோகத்தைக் காண்க.

வேண்டுமோ? அவனைத் தெய்வமென்று உங்கள் சாஸ்திரம் பிதற்றுகிறபடியினாலே, அந்தச் சாஸ்திரமே பொய்யென்று நன்றாய் விளங்குகின்றது. அவன் தேவனல்ல. அவன் மற்றவர்களைப் போலவே பலவீனமும் பாவமுமுள்ள மனுஷனாயிருக்கிறான். பிராமணன் தன்னுடைய கர்வத்தினாலும், தான் செய்த மற்றனேக பாவங்களினாலும் நரகத்திலே விழும்படியானவனாயிருக்கும்போது, அவனாலே உங்கள் பாவம் எப்படித் தீருமோ, சொல்லுங்கள்.(எ.)



## வனவாசஞ்செய்கிறதினாலும், சந்நியாசிகளாய்த் திரிகிறதினாலும், பாவம் தொலையுமென்று சிலர் சொல்லுவார்கள்.



பாவம் நிவிர்த்தியாகிறதற்கு, காட்டிலே போயிருக்கிறதே வழியென்று சொன்னால், எல்லா மனுஷர்களுக்கும் பாவநிவிர்த்தி அவசரமானபடியினாலே, எல்லாரும் தாமசப்படாமல் உடனே காட்டுக்குள்ளே புகுந்து, அங்கே இருக்க வேண்டும். அப்போது அந்தக் காடே சனங்களால் நிறைந்து ஊராய்ப்போமல்லவா? மேலும் காட்டிலே நுழைந்து, சடையும் தாடியும் நகமும் வளர்த்து, காட்டுப்பழங்களையும் புஷ்பங்களையும் சருகுகளையும் வேர்களையும் சாப்பிடுவது மிருகத்துக்குச் சரியான நடத்தையாய்த் தோன்றுகிறதேயல்லாமல், அதினாலே பாவம் எப்படி நிவிர்த்தியாகும்?(அ.)

அல்லது பாவம் தீருகிறதற்குச் சந்நியாசமே வழியென்று சொன்னால்: அதுவும் பொருந்தாது. ஊரையும் வீடுவாசலையும் விட்டுவிட்டு, தண்டத்தையும் ஓட்டையும் கையிலே பிடித்துக்கொண்டு, தேசாந்தரம் புறப்பட்டு, இங்கும்

(எ.), (அ.), ௱௭௬-ம் பக்கத்தில் காண்க.

அங்கும் இச்சையின்படி அலைந்து பிச்சையெடுக்கிறதினாலே பாவம் எப்படி நீங்கும்? ஊர் ஊராய்த் திரிகிற சந்நியாசிகளுடைய நடத்தைகளைப் பார்த்தால், சந்நியாசத்தினாலே பாவம் அதிகரிக்கிறதென்று நினைக்கவேண்டியது. இந்தச் சந்நியாசிகள் கோபங்கொண்டு திட்டுவார்கள்: சபிப்பார்கள்: சிற்றின்பப் பாடல்களைப் பாடுவார்கள்: பெண்டுகளைக் கெடுப்பார்கள்: திருடுவார்கள்: எந்த அசுத்தமான நடத்தைக்கும் அஞ்சமாட்டார்கள். இதுதானோ பாவநிவாரண மார்க்கம்? இதுவா மோட்சவழி? வேலைசெய்ய மனசில்லாமல் மற்றவர்களாலே பிழைக்கலாமென்று புறப்படுகிற சோம்பேறிகளல்லவா இந்தச் சந்நியாசி வேஷத்தைப் போட்டுக் கொள்ளுகிறார்கள்?(க.)

இப்படியிருக்க வனவாசமாவது சந்நியாசமாவது பாவநிவாரணமார்க்கமல்ல என்று தெளிவாய்த் தெரிகின்றது. அது தேவனாலே ஏற்பட்டதல்ல. அது மனுஷருடைய பொய்த் தந்திரமாயிருக்கிறது.

---

இந்தத் தேசத்தார்கள் வேறே பலவிதமான வழிகளை ஏற்படுத்தி, அவைகளினாலே பாவம் தீருமென்று சொல்லுகிறார்கள். விளக்கு வைக்கிறதினாலும், விபூதி நாமம் இடுகிறதினாலும், காவடி சுமக்கிறதினாலும், அரிகண்டம் போடுகிறதினாலும், அங்கப்பிரதட்சணஞ் செய்கிறதினாலும், நெருப்பிலே குதிக்கிறதினாலும், தலைமொட்டை அடிக்கிறதினாலும், அனேக விரதங்களைக் கைக்கொள்ளுகிறதினாலும், தானதருமங்களைப் பண்ணுகிறதினாலும், பாவம் தீருமென்று மயங்குகிறார்கள். அவையெல்லாம் பாவத்தைத் தீர்க்கமாட்டாதவைகள். அவைகளில் எதையாவது நம்பி, அதினாலே நல்ல கதி அடையலாமென்று நினைத்தால்; ஆற்று வெள்ளத்திலே இறங்கி, ஒரு நாய்க் குட்டியின் வாலைப் பிடித்துக் கொண்டு அதினாலே ஆற்றைத் தாண்டி, அந்தக் கரை ஏறலா

(க.) ௩௭௭-ம் பக்கத்தில் காண்க.

மென்று நினைக்கிறதாக முடியும். அந்த நாயும், அதின் வாலைப் பிடித்த மூடனும் கூடவே ஆற்றுடன் அல்லவா அடிபட்டுப் போவார்கள்?

ஓ சனங்களே, மனுஷர்யாவரும் தேவனுடைய கட்டளைகளை மீறி, பாவஞ் செய்திருக்கிறார்கள். அவர் பரிசுத்தமும் நீதியுமுள்ளவரானதினாலே, பாவத்தைப் பகைக்கிறவரும் அதைத் தண்டிக்கிறவருமாயிருக்கிறார். அவர் இடுகிற தண்டனை நித்திய நரக தண்டனையே. நீங்கள் பாவஞ் செய்தபடியினாலே தேவ கோபத்துக்கும் நரக வேதனைக்கும் உரியவர்களானீர்கள். நீங்கள் எப்படிப்பட்ட கிரியை செய்தாலும், அதினாலே அவருடைய கோபத்தைத் தணிப்பீர்களா? அவர் விதிக்கிற ஆக்கினைக்குத் தப்புவீர்களா? அது உங்களாலே முடியாது.

* விரிநிறநாகம் விடருளதேனும்
உருமின்கடுஞ்சினஞ் சேணின்று—முட்கும்
அருமையுடைய வரண்சேர்ந்துமுய்யார்
பெருமையுடையார் செறின்.

நாக பாம்பு புற்றுக்குள் ஒளித்திருந்தாலும், தூரத்திலிருக்கிற இடியைக் கேட்டு நடுநடுங்கும். அருமையான கோட்டைக்குள் சேர்ந்திருக்கிறோமென்று பகைவர் நினைத்தாலும், பெரியோர்கள் கோபித்தால், பிழைக்கமாட்டார்க

நாலடியார், ௰௭. அதி: ௪.

* இ—ள். விரி—மிகுந்த. நிறம்—நிறத்தையுடைய. நாகம்—பாம்பானது. விடர்—மலைப்பிளப்பில். உளதேனும்—இருந்தாலும். உருமின்—இடியினது. கடும்—கொடிய. சினம்—கோபம். சேணின்றும்—ஆகாயத்தினின்றதிர்ப்பினும். உட்கும்—பயப்படும். (அதுபோல) அருமையுடைய—அருமையான. அரண்—கோட்டையை. சேர்ந்தும்—அடைந்தும். பெருமையுடையார்—மேன்மையுடையவர்கள். செறின்—கோபித்தால். உய்யார்—பகைவர் பிழைக்கமாட்டார்கள். எ-று.

ளென்று இந்தப் பாட்டிலே சொல்லியிருக்கிறது. இந்தப் பொருளைக் கவனித்துக்கொள்ளுங்கள். பாம்பானது இடிக்குத் தப்பலாமென்று எண்ணி, புற்றிலே புகுந்தாலும், அங்கேயும் இடி அதின் தலைமேல் இடித்து, அதைக் கொல்லுமல்லவா? பாவத்தின்மேல் புறப்படுகிற தேவனுடைய கோபத்துக்குத் தப்பலாமென்று நீங்கள் எண்ணி, ஸ்தலயாத்திரை தீர்த்தமாடல் முதலான பல பல கிரியைகளைச் செய்து, நமக்கு நரக தண்டனை வராதபடி அந்தக் கிரியையாகிய கோட்டையைக் கட்டிக்கொண்டோமென்று நீங்கள் நினைத்தாலும், நீதியும் சர்வவல்லமையுமுள்ள கடவுள் உங்கள் மேல் கோபமாயிருக்கிறாரே: உங்களுடைய கிரியை உங்களுக்குக் கோட்டையாகுமா? உங்களைத் தப்புவிக்குமா? ஒருபோதும் தப்புவிக்கமாட்டாது. கடல் கொதித்தால் விளாவ நீரெங்கே.

தேவன் நமதுமேல் கோபிக்கிறதற்குக் காரணம் என்ன என்று விசாரியுங்கள். நாம் செய்த பாவமே அதற்குக் காரணம். நம்முடைய பாவம் நிவிர்த்தியானால், அவருடைய கோபம் நம்மைப் பிடிக்காது. நம்மை நரகத்திலே தள்ளாது. நம்முடைய பாவம் நிவிர்த்தியானால், நாம் தேவனுக்குப் பிள்ளைகள் ஆவோம். அவருடைய வீடாகிய மோட்சலோகத்திலேயும் சேருவோம்.

சகோதரரே, நம்முடைய பாவத்தை நிவிர்த்திபண்ண நமக்கு எவ்வளவும் திராணி இல்லை. இப்படியிருக்க, பாவம் நிவிர்த்தியாகிறதற்கு ஒரு வழி உண்டோ என்று ஆசையோடே நாம் தேடி அறிந்து கொள்ளவேண்டும். அப்படிப்பட்ட வழி உண்டு. தேவன் மகா தயவுள்ளவரானபடியினாலே அவரே அந்த வழியை நமக்காக ஏற்படுத்தினார். அவர் தம்முடைய குமாரனாகிய இயேசுக்கிறிஸ்துவை நமக்காக பூலோகத்திலே அனுப்பினார். அந்த இயேசுக்கிறிஸ்து நம்மேல் அன்புவைத்து, நம்முடைய பாவம் நிவிர்த்தியாகிறதற்கு வழியை உண்டாக்கும்படிக்கே

பூமியிலே வந்தார். அவர் இன்னாரென்றும், அவருடைய திவ்விய செய்கை இன்னதென்றும், விவரித்துச் சொல்லுகிறோம்: கேளுங்கள்.

சகத்திரட்சகரான இயேசுக்கிறிஸ்துவானவர் தேவனுடைய குமாரனாயிருக்கிறார். அவர் சர்வ லோகத்துக்கும் அதிபதி. அண்டபகிரண்டங்களை உண்டாக்கினவர் அவரே. சூரிய சந்திர நட்சத்திரங்களையும், மோட்ச புவன் நரக லோகங்களையும் படைத்துத் தாங்குகிறவர் அவரே. மனுஷர் யாவரும் நரக மார்க்கங்களில் நடக்கிறதை அவர் பார்த்தார். மனமிரங்கினார். மோட்சலோகத்தை விட்டார். இவ்வுலகத்துக்கு வந்து மனுஷனாய் உற்பத்தியானார். அவர் தரித்திருக்கிற நாமமே நமக்கு நம்பிக்கையும் மகிழ்ச்சியும் தரத்தக்க நாமமாயிருக்கிறது. இயேசுக்கிறிஸ்துவென்பதே அவருடைய பரிசுத்த மகத்துவ நாமதேயம். இயேசுவென்றால், இரட்சிக்கிறவரென்று பொருள்படும். கிறிஸ்துவென்றால், சத்தியத்தைப் போதிக்கிற குருவும், பாவத்தைத் தீர்க்கிற ஆசாரியனும், உலகத்தை அரசாண்டு காக்கிற இராசாவுமாயிருக்கிறவரென்று தாற்பரியமாகும். அவர் சர்வஞானமும் தயவும் வல்லமையுமுள்ள நித்திய கடவுளாயிருக்கிறார். அவருக்கு நிகரில்லை. அவருக்கு ஒப்பும் உவமையும் சொல்ல எவர்களாலேயும் கூடாது. அவர் பூமண்டலத்துக்கு இறங்கிவந்தது நம்முடைய பாவத்தைப் போக்கடிக்கிறதற்காகவே. அவர் பூமியிலே முப்பத்து மூன்று வருஷம் தங்கினார். மனுஷருடைய கண்ணுக்கு முன்பாக அவர் மனுஷனாய் நடந்தாலும், பாவமில்லாமல் பரிசுத்தராகவே நடந்தார். அவர் தம்முடைய தேவவல்லமையையும், கிருபா கடாட்சத்தையுங் காட்டினார். அனந்த அற்புதங்களைச் செய்தார். தமது வாக்கினாலே மனுஷர்களுடைய வியாதிகளைத் துரத்தினார். குருடு, செவிடு, ஊமைத்தனம் முதலான ஈனங்களையும் ஊனங்களையும் ஒரு வார்த்தையினாலே நீக்கினார். வெளிச்சத்தைப்போலே தம்முடைய

அருளை எங்கும் வீசினார். துக்கப்பட்டோரெல்லாரும் அவரிடத்தில் சேர்ந்து, தங்கள் நெஞ்சு மகிழவும், முகம் மலரவும் பெற்றார்கள். கடைசியிலே அவர் மிகுந்த வேதனைகளையும் குரூரமான மரணத்தையும் அனுபவித்தார். சிலுவை மரத்தின்மேல் கையிலும் காலிலும் ஆணிகளினாலே அறையப்பட்டு, தம்முடைய சீவனை விட்டார். பின்பு பூமியில் ஒரு கல்லறைக்குள் அடக்கப்பட்டார். மூன்றும் நாளிலே அதிலிருந்து உயிருடன் எழுந்து மகிமையோடே வெளிப்பட்டார். தம்முடைய சீஷர்களுக்குத் தரிசனையானார். அவர்கள் எங்கும்போய், தம்மையும் தாம் மனுஷர்களுக்காக உண்டுபண்ணின பாவ நிவாரணமார்க்கத்தையும் யாவருக்கும் தெரிவிக்கவேண்டுமென்று அவர்களுக்குக் கட்டளையிட்டார். பின்பு அனேகர் பார்க்கவே, அவர், தாம் மீட்டுக்கொண்ட இந்தப் பூமியை விட்டெழுந்து, ஆகாசத்திலே உயர்ந்து ஏறி, மேகங்களுக்குள் மறைந்து, தாம் விட்டுவந்த மோட்சலோகத்துக்குப்போய்ச் சேர்ந்தார்.

அந்த மோட்சலோக கர்த்தாவாயிருக்கிற இயேசுக்கிறிஸ்து ஏன் இப்படி இவ்வுலகத்துக்கு வந்து பாடுபட்டாரென்று கேட்பீர்கள். அது நல்ல கேள்வி. அதற்கு உத்தரவு சொல்லுகிறோம்: உற்றுக் கேளுங்கள். பாவிகளாகிய நமக்குப் பாவநிவிர்த்தி உண்டாகும்படி அவர் வந்து பாடுபட்டார். வேறே காரணம் இல்லை. அவருடைய அன்பு அளவில்லாததாயிருக்கிறபடியினாலே, அவ்விதமாய்ப் பாடுபடுவதற்குச் சம்மதித்தார். நம்முடைய பாவத்தினிமித்தம் நாம் அடையவேண்டியது நித்திய நாகாக்கினை. அந்த ஆக்கினைக்கு நம்மைத் தப்புவிக்கும்படி அவர் பூலோகத்தில் நமக்காக ஆக்கினை அனுபவித்தார். பாவமில்லாத அவர் நம்முடைய பாவத்தைத் தமதுமேல் ஏற்றுக்கொண்டார். அதைச் சுமந்தார். அவர் நமக்காக அளவில்லாத புண்ணியங்களைச் செய்தார். அவர் ஒருவரே புண்ணியஞ்செய்ய வல்லவர். அவர்

பட்ட பாடுகளினாலும் அவர் செய்த புண்ணியங்களினாலும், பாவநிவாரண மார்க்கம் உண்டாயிருக்கிறது.

மனுஷர்களில் எவர்கள் தங்களைப் பாவிகளென்று கண்டு உணர்ந்து, ஐயையோ நல்ல கடவுளுக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்தோமென்று துக்கித்து, எல்லாப் பாவத்தையும் வெறுத்துவிட்டு, இந்த இயேசு இரட்சகரை நம்பிக்கொள்ளுகிறார்களோ, அவர்களுக்கே அவருடைய பாடுகளும் புண்ணியமும் உதவும். அப்படிப்பட்டவர்களை இயேசுக்கிறிஸ்து இரட்சிப்பார். அவர்களுடைய பாவங்களைத் துடைப்பார். அவர்களுடைய ஆத்துமத்தைச் சுத்திசெய்யும்பொருட்டு அவர்களுக்குத் தம்முடைய பரிசுத்த ஆவியைத் தருவார். அவர்களைத் தேவனுடைய பிள்ளைகளாக்குவார். அவர்கள் நரகத்திலே விழமாட்டார்கள். அவர்கள் கிறிஸ்துவுடன் மோட்சலோகத்திலே நித்தியமும் வாழுவார்கள். அவரைப் பற்றிக்கொள்ளாதவர்களோ நரகத்திலே தள்ளப்பட்டு, என்றென்றைக்கும் அங்கே வேதனையிலே முழுகுவார்கள்.

பிரியமானவர்களே, இந்த இயேசுக்கிறிஸ்துவை விசுவாசித்துக்கொள்ளுங்கள். இவர் செய்த வழியே வழி. வேறே இல்லை.



# உபகிரந்தம்.

## APPENDIX TO NO. VI.

### முன் சொன்னவைகளுக்குச் சில உதாரணங்கள்.

(க.) புண்ணிய ஸ்தலங்களுக்கு ஏன் போகிறீர்கள்? அவ்விடத்திலே இருக்கிற கடவுள் இவ்விடத்திலேயும் இல்லையா?

కాశికాశియనుచు కడువేడ్కతోఁ బోఁదు
రందుగలుగుదేవుడిందులేడె
యిందునందుగలడు హృదయంబులెస్సైన
విశ్వదాభిరామ వినరవేమ. வே., பா. ௩: ௨௫௭.

இதன் பதவுரை.

కాశికాశియనుచు—காசிகாசியென்றுசொல்லி. కడువేడ్కతో—மிகவும் சந்தோஷத்தோடே. పోదురు—போவார்கள். అందుగలుగు — அங்கேயிருக்கிற. దేవుడు—தேவன். యిందులేడె — இங்கேயில்லையா. హృదయంబు—மனசு. లెస్సైన—நல்லதானால். యిందునందుగలడు—இங்கேயும் அங்கேயும் இருக்கிறார். విశ్వదాభిరామ—ஆண்டவருக்குப் பிரியமான. వేమ—ஓ வேமனரே. వినర—கேள். எ-று.

**கருத்துரை.**

*தேவன் எங்குமிருக்கிறபடியினாலே அவனைத் தரிசிக்கும்படி காசிக்குப் போகவேண்டியதில்லை என்பதாம்.*

**(உ.) அந்த ஸ்தலங்களுக்கு ஏன் போகிறீர்கள்? அதினாலே உங்கள் குணம் மாறுமா?**

తిరుమలకునుబోవ తురకదాసరిగాడు
కాశిబోవలంజ గరితగాదు
కుక్కసింహమగునె గోదావరికిబోవ
విశ్వదాభిరామ వినరవేమ.  வே., பா. ௩: உ௫௩.

**இதன் பதவுரை.**

తిరుమలకును—*திருப்பதிக்கு.* పోవ—*போனால்.* తురక—*துலுக்கன்.* దాసరిగాడు—*தாஸனாகமாட்டான்.* కాశిబోవ—*காசிக்குப் போனால்.* లంజ—*வேசி.* గరితగాదు—*குலஸ்திரீயாகமாட்டாள்.* కుక్క—*நாய்.* గోదావరికిబోవ—*கோதாவரிக்குப் போனால்.* సింహమగునె—*சிங்கமாகுமா.* విశ్వదాభిరామ—*ஆண்டவருக்குப் பிரியமான.* వేమ—*ஓ வேமனரே.* వినర—*கேள்.* *எ-று.*

**கருத்துரை.**

*ஸ்தலயாத்திரை செய்கிறதினாலே குணம் மாறமாட்டாது என்பது இதின் கருத்து.*

**(௩.) அந்த ஸ்தலங்களுக்கு ஏன் போகிறீர்கள்? அதினாலே உங்களுக்குப் பிரயோசனம் உண்டாகுமா?**

కాశిమధురకాంచి గయప్రయాగయుసేతు
వాసతోడపీటి నాత్మజూచి
వాసనను దెలియడు వట్టివెట్టివిధంబు
విశ్వదాభిరామ వినరవేమ.  வே., பா. ௩: உஎஉ.

## இதன் பதவுரை.

కాశి—காசி. మధుర—மதுரை. కాంచి—காஞ்சீபுரம். గయ—கய. ప్రయాగయు—பிரயாகயு. సేతు—இராமேஸ்வரம். పీటిని—என்னும் இவைகளை. ఆసతోడ—ஆசையோடே. ఆత్మచూచి—தான் பார்த்து. వాసనను దెలియడు—ஞானத்தை அறியான். (அது) వట్టివెట్టివిధంబు—வெறுமையான காரியம். విశ్వదాభిరామ—ஆண்டவருக்குப் பிரியமான. వేమ—ஓ வேமனரே. వినర—கேள். எ-று.

## கருத்துரை.

காசி முதலான ஸ்தலங்களை ஆசையோடே போய்ப்பார்த்தாலும், பிரயோசனமில்லை யென்பதாம்.

(௪.) ஏன் போகிறீர்கள்? அதினாலே அனேக நஷ்டங்கள் உங்களுக்கு உண்டாகுமே.

తామునిలుచుచోట దైవములేదని
పామరజనులుతిరుపతులదిరిగి
జోముపీడిచేతి సొమ్మెల్లబోజేసి
చెడిగృహంబుతాను జేరువేమ. வே., பா. ௬: ௨௭௪.

## இதன் பதவுரை.

తామునిలుచుచోట — தாங்களிருக்கிற விடத்திலே. దైవములేదని—தேவனில்லையென்று. పామరజనులు—அறிவீனர்கள். తిరుపతులదిరిగి— விஷ்ணுஸ்தலங்களில் திரிந்து. జోముపీడి — விறைப்பு நீங்கி. చేతిసొమ్మెల్ల—கையிலிருக்கும் பணத்தையெல்லாம். పోజేసి—போக்கடித்துக்கொண்டு. తాను—தாங்கள். చెడి—கெட்டு. గృహంబు—வீட்டை. జేరు—சேர்வார்கள். వేమ—ஓ வேமனரே. எ-று.

கருத்துரை.

தாங்களிருக்குமிடத்தில் தேவனில்லையென்று நினைக்கிற மூடர்; ஸ்தலயாத்திரை செய்து, தங்கள் பணத்தை வீணாய்ச் செலவழித்து, தாங்களும் கெட்டு, வீட்டுக்குத் திரும்புவார்கள் என்பதாம்.

(ரு.) கங்காநதியிலே ஸ்நானம் பண்ணுகிறதினாலே மனசு சுத்தியாகமாட்டாதேன்பது.

గంగాతోయేనకృత్స్నేన మృద్భారైశ్చనగోపమైః
ఆమృత్యోస్స్నానకశ్చైవ భావదుష్టోనశుద్ధ్యతి.

இதன் பதவுரை.

కృత్స్నేన—சமஸ்தமான. గంగాతోయేన—கங்காசலத்தினாலேயும். నగోపమైః—மலைகளுக்கொப்பான. మృద్భారైశ్చ—மண் சுமைகளினாலேயும். ఆమృత్యోః—சாகுமளவும். స్నానకశ్చైవ — ஸ்நானம் பண்ணினாலும். భావదుష్టః — நினைப்பிற் குற்றமுள்ளவன். నశుద్ధ్యతి—சுத்தனாகமாட்டான்.

கருத்துரை.

மலையத்தனையான மண்ணைப் பூசிக்கொண்டு, கங்கா நதியிலே சாகிறபரியந்தம் ஸ்நானம் பண்ணினபோதிலும், துன்மார்க்கன் சன்மார்க்கனாகப் போகிறதில்லை.

(சு.) கால் நோவத் திரிந்தேனேன்பது.

காசிவரை போய்த்திரிந்து காலலுத்தேன்
கடமலை தோறுந்திரிந்து காலலுத்தேன்.

பட்டணத்துப் பிள்ளை.

## இதன் பதவுரை.

காசிவரை—காசிவரையிலும். போய்—போய். திரிந்து—சஞ்சரித்து. காலலுத்தேன்—கால் தளர்ந்துபோனேன். கடம்—காடுகளுடைய. மலைதோறும் — எல்லா மலைகளிலும். திரிந்து—சஞ்சரித்து. காலலுத்தேன்— கால் தளர்ந்துபோனேன்.

## கருத்துரை.

காசி முதலிய விடங்களிற் போய் கால் தளர்ந்ததேயன்றிப் பயனில்லை யென்பதாம்.

## (௭.) பிராமணன் தேவனாயிருக்கிறானென்பது.

దేవాధీనంజగత్సర్వం మంత్రాధీనంచదైవతం
తన్మంత్రోబ్రాహ్మణాధీనం బ్రాహ్మణోమమదైవతం.

## இதன் பதவுரை.

సర్వంజగత్—எல்லா உலகமும். దేవాధీనం—தேவனுடைய வசமாகயிருக்கின்றது. దైవతం—தேவம். మంత్రాధీనం—மந்திரத்துக்கு வசப்பட்டிருக்கின்றது. తన్మంత్రః—அந்த மந்திரம். బ్రాహ్మణాధీనం—பிராமணருடைய வசத்திலிருக்கின்றது. బ్రాహ్మణః— பிராமணன். మమ—எனக்கு. దైవతం—தெய்வமாயிருக்கிறான். (చ—அசை.)

## கருத்துரை.

உலகமெல்லாம் தேவனுக்குட்பட்டிருக்கிறது. தேவன் மந்திரத்துக்குட்பட்டிருக்கிறார். மந்திரம் பிமராணனுக்குட்பட்டிருக்கிறது. ஆகையினாலே, பிராமணன் எனக்குத் தேவன்.

(அ.) மற்றவர்களை நிந்திக்கிற பிராமணன் நரகத்திலே விழுவானென்பது.

శూద్రులనుచుభువిని శూద్రులబోనాడు
మాలకన్న చెడుగు మహిని లేడు
నరకమునకు నేగు నష్టమైనవెనుక
విశ్వదాభిరామ వినరవేమ. வே., பா. ௯: உஉ௯.

இதன் பதவுரை.

శూద్రులనుచు—சூத்திரரென்று. భువిని—பூமியில். శూద్రులబోనాడు—சூத்திரர்களை நிந்திக்கிற. మాలకన్న చెడుగు—சண்டாளனைப் பார்க்கிலும் கெட்டவன். మహిని లేడు—பூமியில் இல்லை. నష్టమైన వెనుక—இறந்துபோனபின்பு. నరకమునకు—நரகத்துக்கு. యేగు—போவான். విశ్వదాభిరామ—ஆண்டவருக்குப் பிரியமான. వేమ—ஓ வேமனரே. వినర—கேள். எ—று.

கருத்துரை.

மற்றவர்களைச் சூத்திரரென்று சொல்லி, நிந்திக்கிறவனைப் பார்க்கிலும் கெட்டவன் பூமியில் இல்லை. நரகமே அவனுக்குக் கதி.

(ஆ.) சகல பற்றுக்களை விட்டு நீங்கின துறவறம் எல்லாத்திலும் மேன்மையுள்ளதேன்பது.

கறையற்ற பல்லுங் கரித்துணி யாடையுங் கள்ளமின்றி
பொறையுற்ற நெஞ்சமும் பொல்லாத வூணும் புறந்திண்ணையுந்
தரையிற் கிடப்பு மிரந்துண்ணு மோடுஞ் சகமறியக்
குறைவற்ற செல்வமென் றேகோல மாமறை கூப்பிடுமே.

பட்டணத்துப் பிள்ளை.

### இதன் பதவுரை.

கறையற்ற—(தாம்பூலக்) கறையில்லாத. பல்லும்—(வெண்) பல்லும். கரித்துணி — அழுக்குத்துணியாகிய. ஆடையும் — வஸ்திரமும். கள்ளமின்றி — மோசமில்லாமல். பொறையுற்ற — பொறுமையுள்ள. நெஞ்சமும்—மனமும். பொல்லாத—(நாவுக்கு) இனிமையில்லாத. ஊணும் — போசனமும். புறந்திண்ணையும்—வெளித்திண்ணையும். தரையில்—பூமியில். கிடப்பும்—படுக்கையும். இரந்து — பிச்சையெடுத்து. உண்ணும் — புசிக்கின்ற. ஓடும் — பாத்திரமும். (ஆகிய இவைகளே) குறைவற்ற—குறைவில்லாத. செல்வமென்று — ஐசுவரியமென்று. சகமறிய—உலகமறியும்படி. கோலம்—அழகிய. மா—பெரிய. மறை — வேதங்கள். கூப்பிடும்—கூப்பிட்டுச் சொல்லும்.

### கருத்துரை.

சகல பற்றுக்களையும் விட்டதே குறைவற்ற செல்வமென்று வேதஞ் சொல்லும் என்பதாம்.

### (ய.) சன்னியாசம் உதவாதேன்பது.

ఇల్లునాలువిడిచి యనుపకచ్చులగట్టి
వంటకంబునీరు వాంఛలుడిగి
వంటినున్న యంత వచ్చునాతత్వంబు
విశ్వదాభిరామ వినరవేమ. வே., பா. ௯: ௱௭௯.

### இதன் பதவுரை.

ఇల్లును—வீட்டையும். ఆలు—பெண்சாதியையும். విడిచి—விட்டு விட்டு. యనుపకచ్చులగట్టి — இருப்புக் கோவணங்களைக் கட்டிக் கொண்டு. వంటకంబునీరు—போசனபானங்களின். వాంఛలుడిగి—ஆசைகளை விட்டுவிட்டு. వంటినున్నయంత—எவ்வளவாக ஒண்டியாயிருந்தாலும். తత్వంబు—மோட்சம். వచ్చునా—வருமா. విశ్వదాభి

ராம—ஆண்டவருக்குப் பிரியமான. வேம—ஓ வேமனரே. ஐநர—கேள். எ—று.

## கருத்துரை.

வீட்டையும் பெண்சாதியையும் விட்டுவிட்டு, இருப்புக் கோவணங்களைக் கட்டிக்கொண்டு, போசன பானங்களின் ஆவலை விட்டு நீங்கி, ஏகாங்கியாயிருந்தபோதிலும், மோட்சம் வருமா? என்பதாம்.



## வேதவாக்கியம்.



(௧.) தேவன் நீதியின்படி பாவத்துக்குத் தண்டனை செலுத்துவார்.

௭. சங்கீதம்: ௰௧.
௯. சங்கீதம்: ௰௭.
௰௧. சங்கீதம்: ௫.
ரோமர், ௧. அதி: ௰௮.
ரோமர், ௨. அதி: ௮, ௯.

(௨.) மனுஷர்கள் தங்கள் கிரியைகளினாலே தங்களை இரட்சிக்கமாட்டார்கள்.

கலாத்தியர், ௩. அதி: ௰, ௰௧, ௰௨, ௨௧.

(௩.) பலிகளினாலும் நைவேத்தியங்களினாலும் தங்களை இரட்சிக்கமாட்டார்கள்.

மீகா, ௬. அதி: ௬, ௭.
எபிரேயர், ௰. அதி: ௪.
ஏசாயா, ௧. அதி: ௰௧—௰௮.

(௪.) தேவன் பாவிகளை இரட்சிக்கும்படி தம்முடைய குமாரனை இவ்வுலகத்தில் அனுப்பினார்.

யோவான், ௩. அதி: ௰௬, ௰௭.
௧. யோவான், ௪. அதி: ௯, ௰௪.

(௫.) இயேசுக்கிறிஸ்து நம்முடைய பாவங்களைச் சுமந்தார்.

ஏசாயா, ௫௩. அதி: ௪, ௫, ௬.
௨. கொரிந்தியர், ௫. அதி: ௨௧.
௧. பேதுரு, ௨. அதி: ௨௪.

(௬.) அவர் பாவத்தை நீக்கும்படி தம்மைத் தாமே பலியிட்டு மரணம் அடைந்தார்.

எபிரேயர், ௯. அதி: ௨௬.
தீத்து, ௨. அதி: ௰௪.
௧. பேதுரு, ௩. அதி: ௰௮.

(௭.) அவர் நம்மை நீதிமான்களாக்கும்படி மறுபடியும் உயிர்த்தெழுந்தார்.

ரோமர், ௪. அதி: ௨௫.

(௮.) அவரை விசுவாசிக்கிறவர்கள் இரட்சிக்கப்படுவார்கள்.

யோவான், ௬. அதி: ௪௰. ௪௭.
அப்போஸ்தலர், ௰. அதி: ௪௩.
ரோமர், ௫. அதி: ௧, ௨.

(௯.) அவரை விசுவாசியாதவர்கள் இரட்சிக்கப்படமாட்டார்கள்.

யோவான், ௩. அதி: ௰௮, ௩௬.
மாற்கு, ௰௬. அதி: ௰௬.



# ம ந் தி ர ம்.



இந்தத் தேசத்திலே மனுஷர்கள் பலவிதமான மந்திரங்களை ஏற்படுத்தியிருக்கிறார்கள். அந்த மந்திரங்களைச் செபிக்கிறதினாலே பாவம் தீருமென்றும், புண்ணியம் சேருமென்றும், முத்தி கிடைக்குமென்றும், வீணாக நினைத்து, மெய்யான மோட்சமார்க்கத்தைத் தேடாமல், கெட்டுப்போகிறார்கள்.

அந்த மந்திரங்களை ஒரு இரகசிய பொருளாகவும் மறைத்துவைத்து, வெளிப்படையாகச் சொல்லாமல், காதிலே மெள்ள உபதேசிப்பார்கள். அந்த மந்திரம் நல்லதாயிருந்தால், அதை யாவருக்கும் தெரிய உபதேசிக்கலாமே. அது சத்தியமானால், அதை ஒளித்து வைக்கவேண்டிய முகாந்தரம் என்ன? பகலுக்கும் வெளிச்சத்துக்கும் பயப்படுகிறவன் யார்? கள்ளனல்லவா? வெளிக்கு வரமாட்டாமல், இருட்டிலே பதுங்குகிற மந்திரமும் கள்ளப் போதனையென்று நிதானிக்கவேண்டுமல்லவா?

மேலும், மந்திரத்தின் மேன்மை பெரிதானபடியினாலே, அதை வெளிப்படுத்தக் கூடாதென்று பிராமணர் முதலானவர்கள் போக்குச் சொல்லி, வெகு மயக்கத்தை உண்டாக்குகிறார்கள். ஆகையினாலே, அந்த மந்திரங்களின் தன்மையைக் கொஞ்சம் சோதிக்க வேண்டியது. அவர்கள் சொல்லுகிற மேன்மை அந்த மந்திரங்களுக்கு உண்டோ, இல்லை

யோ என்று பார்க்கவேண்டும். மோசக்காரன் ஒருவன் பித்தளையினாலே செய்த நகையை இருட்டிலே உபாயமாய்க் காட்டி, பொன்னென்று சாதிப்பான். அதை வெளிச்சத்திலே கொண்டுவருகிறதற்குப் பயப்படுவான். கொண்டுவந்தால், அது பித்தளையென்றும், உதவாததென்றும், எல்லாருக்கும் இலேசாகத் தோன்றும். அப்படியே பிராமணர் ஒளித்து வைத்து இரகசியமாய் உபதேசிக்கிற மந்திரத்தை வெளிக்கு இழுத்துவிட்டால், அப்போதுதான் அதினுடைய தன்மை செவ்வையாய் விளங்கும்.



## முதலாவது.



ஓம் என்கிற பிரணவமந்திரத்தை மகா பூச்சியமாகக் கைக்கொள்ளுகிறார்கள். ஓமங்களும், யாகங்களும், மற்ற வேத கிரியைகளும் கெட்டுப்போகுமென்றும், அதெல்லாம் போனாலும், ஓம் என்கிற மந்திரம் ஒருபோதும் கெடாமல், நிலைநிற்குமென்றும், அதுவே வேதமென்றும், அதுவே தெய்வமென்றும், மானவதருமசாஸ்திரம் சொல்லுகின்றது.(க) இதுவுமல்லாமல், அந்த ஓம் என்கிற மந்திரத்திலிருந்து நாலு வேதமும் முளைத்ததென்றும்,(உ) அதை உச்சரிக்கிறவன் எவனோ அவனே நாலு வேதத்தையும் உச்சரித்தவனென்றும், அந்த ஓம் என்கிற சொல்லே மனசுக்கு வெளிச்சமென்றும், அதுவே முத்தி தருமென்றும், உங்களுடைய பல சாஸ்திரங்களிலும் சொல்லியிருக்கிறது.

இது மெய்யானால், இனிமேல் வேதத்தைப் படிக்கவும், தேவனை வணங்கவும், சன்மார்க்கமாய் நடக்கவும், வேண்

(க), (உ), உ௱௯, உ௱௪-ம் பக்கங்களிலுள்ள சுலோகத்தையும் பாட்டையும் காண்க.

டியதில்லையே. ஓம் என்கிற ஒன்றே போதுமானால் மற்றதெல்லாம் வீணானதல்லவா? ஓ சனங்களே இப்படிப்பட்ட வார்த்தையை ஏன் நம்புகிறீர்கள்? நம்மைப் பிறப்பித்த கடவுளையும், அவர் இட்ட கட்டளைகளையும் தள்ளிவிட்டு, ஓம் என்கிற சொல்லைச் செபிக்கிறதினாலே, மோட்சம் கிடைக்குமென்று நினைக்கிறது மகா புத்திஹீனமல்லவா? கடவுளுக்கு விரோதமாய் நாம் அனேக பாவங்களைச் செய்தோம். அந்தப் பாவமெல்லாம் ஓம் என்கிற வார்த்தையை உச்சரிப்பதினாலே தொலைந்துபோகுமென்று சொல்லி உபதேசிக்கிறது தேவோபதேசமோ, மனுஷ தந்திரமோ, நீங்களே யோசித்துப் பாருங்கள். ஓம் என்கிற ஒரு சிறு சொல்லினாலே பாவம் தீருமென்று மனுஷர் நம்பினால், பாவஞ் செய்வதற்கு யார் அஞ்சுவார்கள்? உலகமே பாவத்தில் அமுழ்ங்கிப் போகும்.

பின்னும் ஆராய்ந்து பாருங்கள். ஓம் என்கிற மந்திரத்துக்குப் பொருள் என்ன?

**காஞ்சி புராணம்: தமாரகோட்டப்படலம்.**

* பல்கலைக்குமுதலாகப்புகன்றிடுவ
தோமென்னும்பதமாமந்தச்
சொல்விளைக்கும்பொருளயன்மாலீசனெனு
மூவரெனச்சொல்வார்மேலோர்
மல்குமறையுட்பொருளாய்ச்சுடரொளியா
யோகுடையார்மனத்தேதோன்றும்
அல்கியசீர்ப்பிரணவத்தையுணர்ந்தவரே
வீட்டின்பமடையவல்லார். (௰உ.)

* இ—ள். பல்—பல. கலைக்கும்—சாஸ்திரங்களுக்கும். முதலாக—காரணமாக. புகன்றிடுவது—சொல்வது. ஓமென்னும் பதமாம்—ஓமென்னுஞ் சொல்லாம். அந்தச் சொல்—அந்தச் சொல். விளைக்கும்—உண்டாக்கும். பொருள்—அருத்தம். அயன்—பிரமன். மால்—விஷ்ணு. ஈசனெனும்—சிவனென்கிற. மூவரென—மூவர்களுமென்று. மேலோர்—பெரியோர்கள். சொல்வார்—சொல்வார்கள். (அன்றியும்) மல்கு—நிறைந்த. மறை—வேதங்

ஓம் என்கிற சொல்லானது பிரமாவென்றும், விஷ்ணு வென்றும், சிவனென்றும், பொருள் கொடுக்குமென்று இந்தப் பாட்டிலே சொல்லியிருக்கிறது.

இதை விவரித்துக் காட்டுகிறோம். ஓம் என்பதற்கு மூன்று அவயவங்கள் உண்டென்பார்கள். அ என்கிறதும், உ என்கிறதும், ம் என்கிறதுமே அந்த மூன்று. அ என்பதையும், உ என்பதையும் கூட்டினால், ஓ என்று ஆகும். ஓ என்பதை ம் என்பதோடே சேர்த்தால், ஓம் என்று ஆகும். அ என்பது விஷ்ணுவைக் குறிக்கும். உ என்பது சிவனைக் குறிக்கும். ம் என்பது பிரமாவைக் குறிக்கும். அந்த மூன்று எழுத்தும் ஓம் என்கிற சொல்லாகக் கூடி, மும்மூர்த்திகளைக் காட்டும் என்பார்கள். ஆகையினால், ஓம் என்பது மும்மூர்த்திகளை நோக்கிவந்த மந்திரமாயிருக்கிறது. அந்த மும்மூர்த்திகளுடைய குண நடத்தைகளைப் பார்க்கப் போனாலோ, பிரமா பொய் சொன்னதாக, அருணாசல புராணம் சொல்லவில்லையா? விஷ்ணு களவெடுத்ததாக, பாகவதம் சொல்லவில்லையா? சிவன் இருஷிபத்தினிகளைக் கற்பழித்ததாக, கந்தப் புராணம் சொல்லவில்லையா? பொய்யும், திருட்டும், விபசாரமும் செய்த அந்த மும்மூர்த்திகளை நோக்கியிருக்கிற மந்திரமானது நம்மையும் பொய் திருட்டு முதலான பாவங்களில் இழுத்துக் கெடுக்குமேயல்லாமல், நம்முடைய பாவத்தைத் தீர்க்கவும், நம்மைக் காக்கவும் மாட்டாதென்று சொல்லவும் வேண்டுமோ?



களின். உட்பொருளாய் — இரகசியப்பொருளாய். சுடரொளியாய்—ஞானப்பிரகாசமாய். யோகுடையார் — யோகிகளுடைய. மனத்து—மனதில். தோன்றும்—தோன்றிக்கொண்டிருக்கும். சீர்—சிறப்பு. அல்கிய — தங்கிய. பிரணவத்தை — இப்பிரணவத்தை. உணர்ந்தவரே—அறிந்தவர்களே. வீட்டின்பம் — மோட்சவின்பத்தை. அடையவல்லார்—அடையத்தக்கவர்கள். **எ-று.**

# இரண்டாவது.

காயத்திரி மந்திரத்தை மிகவும் வல்லமையுள்ளதென்று சொல்லுகிறார்கள்.

*|| ஓம் ||

|| பூர் — புவர் — ஸ்வஃ ||

|| தத்சவிதுர்வரேண்யம் பர்கோ தேவஸ்ய தீமகிதியோ யோநஃ பிரசோதயாத் ||

( தெலுங்கு எழுத்திலே )

॥ ఓం ॥

† ॥ భూర్ — భువః — స్వః ॥

॥ తత్సవితుర్వరేణ్యం భర్గోదేవస్యధీమహిధియోయోనః ప్రచోదయాత్ ॥

பாப்பார் இதை நித்தமும் தப்பாமல் செபிக்கிறார்கள். ஆனாலும் அவர்களுக்குள்ளே ஆயிரம்பேரில் ஒருவருக்குத் தானும் இதின் அருத்தம் தெரியாது. கிளிப்பிள்ளையைப்

---

*பூர்—புவர்—ஸ்வஃ என்கிறது வியாகிருதி மந்திரமென்று சொல்லப்படும். ஆனாலும், காயத்திரி மந்திரத்தோடே அதைச் சேர்த்துச் செபிக்கிறது வழக்கம்.

† இ-ள். (ఓం என்கிற சொல்லைப் பிரித்தால், அ, உ, ம் ஆகும்.) அ, என்பது விஷ்ணு. உ, என்பது சிவன். ம் என்பது பிரமா.

భూర్—பூலோகம். భువః—புவர்லோகம் (பூமிக்கும் சூரியனுக்கும் நடுவே இருக்குமிடம்). స్వః—சுவர்லோகம் (கிரகங்களிருக்கும் இடம்).

యః—எவன். నః—நம்முடைய. ధియః—புத்திகளை. ప్రచోదయాత్—நடத்துவானோ. తత్—அந்த. దేవస్య—தேவனாகிய. సవితుః—சூரியனுடைய. వరేణ్యం—சிறப்பான. భర్గః—காந்தியை. ధీమహి—தியானிக்கிறோம். எ-று.

போல, வாயினாலே மாத்திரம் உச்சரிக்கிறார்கள். இதின் பொருளை இவ்விடத்திலே சொல்லுகிறோம்.

ஓம்—பூலோகம்—புவர்லோகம்—சுவர்லோகம்—எவன் நம்முடைய புத்திகளை நடத்துவானோ, அந்தத் தேவனாகிய சூரியனுடைய சிறப்பான பிரகாசத்தைத் தியானிக்கிறோம் என்பதே இதின் பொருள்.

இந்த மந்திரத்தைக் குறித்து மானவ தருமசாஸ்திரம் சொல்லுகிறதைக் கேளுங்கள். ஒரு மாசத்துக்குள்ளே இதை ஒருவன் ஆயிரம்விசை சொன்னால், ஒரு பாம்பானது தன் பழைய தோலை நீக்கி, தள்ளிவிடுவதுபோல, அவன் தன் பாவங்களை நீக்கி, பரிசுத்தமாவான்.(௧.) அவன் வேறே யாதொன்றைச் செய்தாலும், செய்யாவிட்டாலும் அக்கறையில்லை; இந்தக் காயத்திரி ஒன்றுமாத்திரமே செபித்தால், போதும்: அதுவே அவனுக்கு மோட்சத்தைக் கொடுக்குமென்று அந்தச் சாஸ்திரம் சொல்லுகிறது.(௨.)

இவ்வளவு பெருமையாக அவர்கள் புகழுகிற அந்த மந்திரத்தின் பொருளை நன்றாய் விசாரித்துப் பாருங்கள். அது சூரியனை நோக்கிச் செபிக்கிற மந்திரமாயிருக்கிறது. சூரியனே, உன்னுடைய பிரகாசத்தைத் தியானிக்கிறோம். நீயே எங்களை நடத்தக்கடவாய் என்கிறதே அதின் தாற்பரியம்.

இப்படிச் சூரியனைத் தேவனென்று சொல்லி அதைப் பூசிக்கிறது சரியா? சூரியன் தேவனாயிருக்கிறதென்று புத்திமான் எவனாவது சொல்லுவானா? நாம் வாசம்பண்ணுகிற வீட்டிலே வெளிச்சம் உண்டாகும்படி ஒரு தீபத்தை ஏற்றுகிறோம். வீடு சின்னது: அதற்குத் தகுதியாக, தீபமும் சின்னதாய் வைக்கிறோம். பூலோகமோ சகல மனுஷரும் வாசம்பண்ணுவதற்குச் சரியான பெரிய விசாலமான வீடு. அதற்கு ஒரு பெரிய தீபம் வேண்டியது. மச்சுவீட்டிலே

(௧.), (௨.), ௨௱௫, ௨௱௬-ம் பக்கங்களிலுள்ள சுலோகங்களைக் காண்க.

மச்சிலிருந்து கயிறுகட்டி ஒரு சரவிளக்கை எப்படி ஏற்றுகி றார்களோ, அப்படியே பூமியென்கிற பெரிய வீட்டுக்கு மச் சைப்போல மேல் விரிந்திருக்கிற ஆகாசத்திலே தேவன் சூரி யனை ஒரு தீபமாக வைத்திருக்கிறார். ஆகையினாலே அது பூமிக்கு விளக்கேயொழிய, அது தேவனல்ல. அந்த விளக் கை ஏற்றின கடவுளை வணங்கவேண்டுமேயல்லாமல், அவரை விட்டுவிட்டு, அவர் வைத்த தீபத்தைக் கும்பிடலாமா? துரையைக் கண்டு ஒரு மனுச் செய்துகொள்ளவேண்டு மென்று எவனாவது ஒரு ஏழை நினைத்து, அந்தத் துரை வீட் டுக்குப் போய் அவருடைய சமுகத்தைத் தேடாமல், அவ ருடைய வீட்டிலே தொங்குகிற விளக்கண்டை சேர்ந்து, அதைப் பார்த்து, கை கூப்பி வணங்கி, "துரையே, உம்மிடத் தில் வந்தேன்: நான் ஏழை: ஒரு மனுவிருக்கிறது: கேட்ட ருளும்" என்று பிரார்த்தித்தால், வீட்டு வேலைக்காரர் ஓடிக் கூடி, "யாரோ ஒரு பைத்தியக்காரன் இவ்விடம் வந்து விளக்கைத் துரையென்று மயங்கி, பேசுகிறான். இப்படிப் பித்தங்கொண்டவன் பின்னுக்கு என்ன செய்வானோ" என்று பயந்து, அவனைத் துரத்திவிடுவார்களல்லவா? அது போலவே, ஒரு சூரியனையல்ல, கோடாகோடி சூரிய சந்திர நட்சத்திரங்களை உண்டாக்கி, தாங்கி, நடத்துகிற மெய்யான கடவுள் ஒருவர் இருக்க, அவரை வணங்காமல், அவர் வா னத்திலே இந்தப் பூமிக்கு விளக்காகத் தொங்கவைத்த ஒரு சூரியனை நோக்கி, அதுவே தேவனென்று மயக்கங்கொண்டு, அதைப் பார்த்து, மந்திரம் செபித்து, பிரார்த்தனை செய்கிற வன் பைத்தியக்காரனேயல்லாமல், புத்திசாலியல்ல. சூரி யன் அசேதனவஸ்து. அதற்குப் புத்தியும், உணர்ச்சியும் இல்லை. ஞானசொரூபியான தேவனையல்லவா நாமெல்லா ரும் தொழுதுகொள்ளவேண்டியது? அவரை விட்டுவிட்டு, சூரியனை வணங்குவது நரக மார்க்கம். காயத்திரி மந்திரமா னது சூரிய பூசையைக் கற்பிக்கிறபடியினாலே, அது நரக மார்க்கத்தைப் போதிக்கிற கள்ள மந்திரமாயிருக்கிறது. அது

பாவத்தைத் தீர்க்குமென்றும், மோட்சத்தைக் கொடுக்குமென்றும், சொல்லுகிறது வீண் பாராட்டு. அதை நித்தமும் உச்சரிக்கிற பிராமணர்கள் மனமயங்கி, தேவனை விட்டு, ஒரு விளக்கைக் கும்பிடுகிறதினாலே, பாவத்தைச் சம்பாதித்து, நரக வழியில் ஓடுகிறார்கள்.

இந்தக் காயத்திரியானது பிரமாண்டமான பொய்யென்பதற்கு இன்னுமொன்று சொல்லுகிறோம்: கவனியுங்கள்.

ஒரு பாப்பான் காயத்திரி மந்திரத்தை, தினந்தினம், மூன்று வருஷமளவும் செபித்துவந்தால், அவன் தன் சொந்த ரூபம் மாறி, ஆகாச ரூபத்தைப் பெற்றுக்கொண்டு, காற்றைப்போலாகி, இஷ்டப்படி வானம் பூமியெங்கும் திரிய வல்லவனாவான், என்று மானவ தருமசாஸ்திரம் சொல்லுகின்றது.(௧.) ஆனாலும், மூன்று வருஷமல்லாமல், நாற்பது வருஷகாலமும் நாளுக்கு நாள் தப்பாமல் காயத்திரி மந்திரத்தைச் செபித்த வெகு பிராமணர்கள் நாட்டிலும் நகரத்திலும் இருக்கிறார்களே. அவர்களில் அனேகர் தெருத்தெருவாய் வருத்தத்தோடே பிச்சை எடுக்கிறதைக் காண்கிறோமேயொழிய, இதுவரைக்கும் அவர்களில் ஒருவனாவது காற்று ரூபம் அடைந்ததும், ஆகாசத்தில் சஞ்சரித்ததும் காணோமே. அந்த மந்திரம் சுத்த புளுகென்பதற்கு இதுவும் ஒரு நல்ல சாட்சிதானே.



## மூன்றாவது.



பஞ்சாட்சரமென்னும் மந்திரத்தை வெகுபேர் நம்புகிறார்கள் பஞ்சாட்சரமென்றால், ஐந்தெழுத்து, நமசிவாய என்கிறதே அது. சிவனுக்கு நமஸ்காரமென்பதே அதினுடைய அருத்தம். விபூதியிடுகிற சிவபத்திமான்கள் சிவனைப் பூசிக்கும்படி இந்த மந்திரத்தை உச்சரிக்கிறார்கள்.

(௧.) ௨௱௭-ம் பக்கத்திலுள்ள ஒரு சுலோகத்தைக் காண்க.

பிரமோத்திரகாண்டம்: பஞ்சாட்சரமகிமை.

*ஊனநீக்கியசிவமுன்னர் நமவினையுரைக்கின்
ஞானமெய்திடுமனைவர்க்கு நம்பனார்நயக்குந்
தானமெய்திநற்குரவராற் பெற்றவர்தங்கட்
கானசித்தியுமுத்தியு மக்கணத்தாமால். (யரு.)

பஞ்சாட்சரத்தைச் செபிக்கிறதினாலே ஞானமும் முத்தியும் உண்டாகுமென்று இந்தப் பாட்டிலே சொல்லியிருக்கிறது.

அந்தச் சிவனை நமஸ்காரம் பண்ணுகிறது கிரமமோ, அக்கிரமமோ, என்று யோசியாமல், சும்மா நம்புகிறது நல்லதோ? சிறுபிராயத்திலே பள்ளிக்கூடத்தில் திவாகரம் படித்தபோது சிவனுக்குப் பேயோடாடி என்கிற பேரையாவது நீங்கள் படித்ததில்லையோ? சடையிலே பாம்பை வைத்து, கழுத்திலே மண்டையோடுகளை மாலையாகக் கட்டி, மார்பிலே எலும்பையும் பன்றிப்பல்லையும் தரித்து, உடம்பிலே சாம்பலைப் பூசிக்கொண்டு, சுடுகாட்டிலே பேய்களோடும் பூதங்களோடும் கூடிக் கலந்து ஆடின சிவனைப் பூசிக்கிறதினாலே ஞானம் பிறப்பதெப்படி? அப்படிப்பட்டவனுடைய பேர்வழியாய் மந்திரம் செபிக்கிறதினாலே முத்தி உண்டாவதெப்படி? சிவனை நம்பி செபஞ் செய்கிறவர்களுக்கு நரகத்திலே விழுவது ஒன்றேயல்லாமல், வேறே ஒரு பலனும் கிடைக்கப்போகிறதில்லை. அது நிச்சயம்.

* இ-ள். ஊனம்—குற்றத்தை. நீக்கிய—அகற்றிய. சிவமுன்னர்—சிவவென்பதன்முன். நமவினை—நமவென்பதனைக் கூட்டி. உரைக்கின்—செபித்தால். அனைவர்க்கும்—அப்படிச் செபிக்கிறயாவருக்கும். ஞானமெய்திடும்—ஞானம் வரும். (அன்றியும்) நம்பனார்—சிவன். நயக்கும்—விரும்பும். தானம்—கோயில். எய்தி—சேர்ந்து. நல்—நல்ல. குரவரால்—ஆசாரியர்களால். பெற்றவர்தங்கட்கு—உபதேசம் பெற்றுக்கொண்டவர்களுக்கு. அக்கணத்து—அந்த க்ஷணத்திலே. ஆன—நன்மையான. சித்தியும்—அஷ்டமா சித்திகளும். முத்தியும்—மோட்சமும். ஆம்—உண்டாகும். எ-று.

**பாகவதம்: தசமஸ்கந்தம்: விருகாசூரனைக்கொன்ற அத்தியாயம்.**

* வாய்விரியெருக்கமலர் மாலைதலைசூடாக்
காயழல்பரந்தசுடு காடெழிலரங்காப்
பேயொடுநடிக்குமொரு பித்தனுரைமெய்யே
ஆயிரமுடித்தலை யனந்தனைநிகர்ப்பாய். (௰௨.)

விஷ்ணு விருகாசூரனோடே சொல்லுகிறான்: ஓ அரசனே, எருக்கம் பூமாலையைத் தலையிலே தரித்து, சுடுகாட்டைத் தனக்குச் சபையாகக்கொண்டு, பேய்களோடே கூத்தாடின ஒரு பைத்தியக்காரனாகிய சிவனுடைய வார்த்தை உண்மையோ, அல்லவே, பொய்தான், என்றான்.



## நாலாவது.

அஷ்டாட்சரமென்னப்பட்ட மந்திரத்தை அனேக சனங்கள் விசுவாசிக்கிறார்கள். அஷ்டாட்சரமென்பதற்கு எட்டெழுத்து என்று அருத்தம். அதை ஓம் நமோ நாராயணாய என்று செபிப்பார்கள். விஷ்ணுவாகிய நாராயணனுக்கு நமஸ்காரமென்பதே அதினுடைய பொருள். நாமம் இடுகிற விஷ்ணுபத்திமான்கள் விஷ்ணுவைப் பூசிக்கும்படி இந்த மந்திரத்தை ஓதுவார்கள்.

* இ—ள். வாய்—வாய். விரி—விரிகிற. எருக்கமலர் — எருக்கமலரால் (கட்டின). மாலை—மாலையை. தலை—தலையில். சூடா—அணிந்து. காய்—சுடுகிற. அழல்—அக்கினி. பரந்த — பரவிய. சுடுகாடு—சுடுகாடானது. எழில்—அழகையுடைய. அரங்கா—நடனசாலையாக. பேயொடு—பேய்களோடே. நடிக்கும்—கூத்தாடுகிற. பித்தன்—பைத்தியக்காரனாகிய சிவனுடைய. உரை—வார்த்தை. மெய்யே—உண்மையா. ஆயிரமுடித்தலை—ஆயிரஞ் சிரசையுடைய. அனந்தனை — ஆதிசேடனை. நிகர்ப்பாய் — ஒப்பானவனே. எ—று.

இராமாயணம்: யுத்தகாண்டம்: இரணியன் வதைப்படலம்.

* காம மியாவதுந் தருவது மப்பொருள் கடந்தால்
சேம வீடுறச் செய்வதுஞ் செந்தழல் கொழித்த
ஓம வேள்வியி னுறுபத முய்ப்பது மொருவன்
நாம மன்னது கேணமோ நாராயணாய. (௪௩.)

இவ்வுலகத்திலே ஒருவன் ஆசைப்படுவதையெல்லாம் இந்த மந்திரம் கொடுப்பதுமல்லாமல், சுவர்க்கத்தையும் மோட்சத்தையும் கூடக் கொடுக்குமென்று இந்தப் பாட்டிலே சொல்லப்பட்டது. இது மெய்யோ, பொய்யோ, என்று வைஷ்ணவர்கள் கொஞ்சமும் விசாரணை செய்யாமல், இந்த வீணான பேச்சை நம்புகிறார்கள். அப்படி நம்பலாமா? அந்த மந்திரம் விஷ்ணுவை நோக்கிச் சொல்லப்பட்ட மந்திரமல்லவா? ஆனாலும், அந்த விஷ்ணுவானவன் கோபிகாஸ்திரீகளைக் கெடுத்த கதையும், தன் மாமனாகிய கஞ்சனைக் கொன்ற சங்கதியும், பாலும் மோரும் திருடின சமாசாரமும் யாவருக்கும் தெரியுமே. அப்படிப்பட்டவனைத் தேவனென்று சொல்லுவதற்கு வாய் எப்படி வருமோ, அது பெரிய அதிசயமாகவே இருக்கிறது. அந்த விஷ்ணு தேவனல்ல. அவனை நினைத்து மந்திரஞ் செபிக்கிறதும் உமியைக் குத்தி, கை சலிக்கிற வேலையாயிருக்கிறது.



* இ-ள். காமமியாவதும்—இச்சித்த பொருளெல்லாவற்றையும். தருவதும்—கொடுப்பதும். அப்பொருள் கடந்தால்—அது நீங்கினால். சேமம்—இன்ப சொரூபமாகிய. வீடுற—மோட்சமடைய. செய்வதும்—செய்வதும். செம்—சிவந்த. தழல்—அக்கினி. கொழித்த—வாரின. ஓம வேள்வியின்—யாகத்தினால். உறுபதம்—வருகிற நன்மையில். உய்ப்பதும்—செலுத்துவதும் (என்னவென்றால்). ஒருவன் — ஒப்பற்ற கடவுளின். நாமம்—பெயர். அன்னது—அதை. கேள்—கேட்பாயாக. நமோநாராயணாய—நமோ நாராயணாய. எ-று.

# ஐந்தாவது.

ராம என்கிறதையும் ஒரு மந்திரமாகச் சொல்லி, அதி னாலே சகல பாவமும், பழியும், தீமையும் தேய்ந்து தீரு மென்றும்; சகல புண்ணியமும், புகழும், நன்மையும் சேரு மென்றும்; வாய் வந்தபடியே வைஷ்ணவர் அலப்புகிறார்கள். அதை நம்புவதற்கோ ஏதுவில்லையே. இராமனை நினைத்து இந்த மந்திரத்தைச் செபிக்கிறார்களே; அந்த இராமனுடைய சரித்திரத்தை நீங்கள் கேட்டதில்லையா? அவன் தன்னு டைய பெண்சாதியாகிய சீதையைக் காப்பாற்றக் கூடாமல், இராவணனுக்குப் பறிகொடுத்து, அந்த இராவணன் அவ ளைப் பிடித்துக் கொண்டுபோய் வைத்த இடமும் தெரியாமல் மயங்கி, காட்டிலே தேடித்தேடி, அலைந்து, அழுதுகொண்டு திரிந்து, பின்பு அனுமான் என்கிற குரங்கினாலே சீதை இலங்கையிலிருக்கிறதை அறிந்து, பின்பு தானே அவளை மீட்கச் சக்தியில்லாமல், சுக்கிரீவன் முதலான அனேக குரங் குகளைச் சேர்த்துக்கொண்டுபோய் மீட்டானென்று நீங்கள், இராமாயணம் திண்ணையில் படிக்கப்படுங் காலங்கள்தோறும் கேள்விப்பட்டிருக்கிறீர்களே. குரங்குகளினாலே தன்னு டைய ஞானத்தையும் பெலத்தையும் அடைகிறவனும் தே வன்தானோ? தன் பெண்சாதியைக் காக்கக் கூடிய அறிவும் திராணியுமில்லாத இராமன் உங்களைக் காப்பானென்று நீங் கள் நம்பி, அவன் பேர்வழியாய் மந்திரஞ் சொல்லுவது விரு தாவான காரியமல்லவா? இலவு காத்த கிளிபோலே உங்க ளுடைய நம்பிக்கை முடியுமல்லவா?

ஓ சனங்களே, இந்தப் பல மந்திரங்களிலே எதைத் தான் மெய்யென்று நம்பலாம்? காயத்திரி மந்திரமே பெரிதென்று பாப்பான் சொல்லுவான். சீ சீ பஞ்சாட்சர மந்திரந்தான் மேன்மையானதென்று சைவன் சாதிப்பான். அதுவல்ல, அஷ்டாட்சரமே பெலனுள்ளதென்று வைஷ்ணவன் கூவு

வான். அதெல்லாம் வேண்டியதில்லை ஓம் என்கிறதே போதும்; அது ஒன்றுதான் முக்கியமென்று வேறொருவன் பிதற்றுவான். நியாயமாய்ப் பார்க்கப்போனால், அவையெல்லாம் வீணும் பொய்யுமாயிருக்கிறதென்று தீர்க்கவேண்டியது.

உங்களிலேயும் சிலர் அப்படிச் சொல்லியிருக்கிறார்கள்.

*நீற்றிற் பிறந்தென்ன நீராழப் போயென்ன நீமனமே
மாற்றிப் பிறக்க வகையறிந் தாயில்லை மாமறைநூல்
ஏற்றிக் கிடக்கு மெழுகோடி மந்திர மென்னகண்டாய்
ஆற்றிற் கிடந்து துறையறி யாம லலைகின்றையே.

ஓ சனங்களே, இந்த மந்திரங்களை நம்பவேண்டாம். அவைகளினாலே உங்களுக்குத் தீமையல்லாமல், நன்மை வராது. வியாதிஸ்தன் தகாத அவிழ்தம் சாப்பிட்டால், எப்படி வியாதி அதிகரிக்குமோ, அப்படியே இந்த மந்திரங்களினாலே உங்களுடைய பாவம் விருத்தியாகுமேயல்லாமல், ஒருபோதும் தீரமாட்டாது.

இந்தக் காரியத்தை நன்றாய் உணருங்கள். மந்திரங்களைச் சொல்லுகிறதினாலாவது, நாம் செய்யும் வேறெந்தச் செய்கையினாலாவது, நம்முடைய பாவம் தொலையப் போகிறதில்லை. நாம் எவ்வளவு கண்ணீர் விட்டழுதாலும், அது நிவிர்த்தியாகப் போகிறதுமில்லை.

---

*இ—ள். மனமே—மனதே. நீ—நீ. நீற்றில்—விபூதியில். பிறந்தென்ன — பிறந்ததுபோலதிகமாகப் பூசிக்கொள்வதினால் என்ன பயன். நீர்-பல தீர்த்தங்களில். ஆழப்போயென்ன—முழுகப்போவதினாலென்னபயன். மாற்றி — (குணத்தை) மாற்றி. பிறக்க—(நற்குணமுடையவனாய்ப்) பிறக்க. வகை—வழி. அறிந்தாயில்லை—நீ அறியவில்லை. மா—பெரிய. மறைநூல் — வேதத்தில். ஏற்றிக் கிடக்கும்—எழுதியிருக்கும். எழுகோடி—ஏழுகோடி. மந்திரம்—மந்திரங்களினால். என்ன — என்ன பிரயோசனம். ஆற்றில்—(உலகமாகிய) நதியில். கிடந்து — இருந்து. துறை—கடத்தேறும் வழியை. அறியாமல் — தெரியாமல். அலைகின்றை — அலைகிறாய். எ—று.

இடிவிழுந்த பின்பு மேகமானது தான் முன்விட்ட அந்த இடியைப் பின் விடுகிற மழையினாலே அவிக்குமோ, அவிக்க முடியாதே. அதுபோல, நாம் பாவஞ்செய்த பின்பு நமது கண்ணில் ஆறுகளாய் நீர் பெருக நாம் அழுதாலும், நாம் செய்த பாவத்தை அதினால் நீக்கமாட்டோமே.

பிரியமானவர்களே, கடவுள் நம்முடைய பாவத்தை மன்னித்துத் தீர்த்தாலொழிய, அந்தப் பாவம் தீராது. அதை அவர் மன்னிக்கிறதற்கு ஒரு பெரிய தடை உண்டு. தேவ நீதியே அந்தத் தடை. ஒரு திருஷ்டாந்தம் சொன்னால், இது உங்களுக்கு விளங்கும்.

ஒரு நாட்டிலே ஒரு அரசன் இருந்தான். அந்த அரசனுடைய மகன் ஒரு நாள் ஒருவனுடைய பொருளைத் திருடினான். இந்தத் திருட்டைச் செய்தவன் என் பிள்ளையல்லவா? இவனுடைய குற்றத்தை மன்னிக்கவேண்டும் என்று இராசா விரும்பினாலும், மன்னிக்கக் கூடுமா? கூடாதே. மன்னிக்கிறதற்குத் தடை என்ன? இராச நீதியல்லவா, அதற்குத் தடை? தன் பிள்ளையாயிருக்கிறதினாலே அந்த இராசா பட்சபாதம் பண்ணி, தன் மகனைத் தண்டிக்காமல் சும்மா மன்னித்துவிட்டால், எல்லாரும் அந்த இராசாவிடத்தில் நீதி இல்லை என்று தூஷிப்பார்கள். அப்போது அந்த இராசாவின் நீதி கெடும். அவருடைய பேரும் கெடும். அவருடைய கட்டளையும் கெடும். இந்த மூன்றும் கெடவே, இராசாங்கமும் கெடும். ஓ சனங்களே, தேவனுடைய கட்டளைகளை நாம் மீறினோம். பாவஞ் செய்தோம். குற்றவாளிகளாயிருக்கிறோம். தேவன் நம்முடைய குற்றங்களைச் சும்மா மன்னித்தால், நீதி விரோதம் உண்டாகும். நம்முடைய பாவங்களை மன்னிக்கிறதற்கு அவருடைய நீதியே தடை. தேவநீதியைச் சமாதானப்படுத்தி அந்தத் தடையை நீக்க

நம்மாலே ஆகுமா? ஓகோ, இதென்ன கேள்வி? ஒரு சின்ன ஊசியினாலே ஒரு பெரிய மலையைக் குத்தி, பேர்த்து, எடுத்து, நாசமாக்கலாமா என்று கேளுங்களேன்: அல்லது, ஒரு பூச்சி போகிற வழியிலே இமயமலை கிடந்தால், அந்தப் பூச்சி அந்தப் பர்வதத்தைத் தூக்கி, தன் முதுகின்மேல் ஏற்றி, ஆகாசத்திலே ஏறி, பறந்து, கொண்டுபோய், சமுத்திரத்திலே போட்டுவிடுமோ என்று கேளுங்கள். அது ஆகக்கூடியதானாலும், தேவ நீதியைச் சமாதானப்படுத்த நம்மாலே ஆகமாட்டாது.

நீதியின்படி தேவன் நமக்கு நரக கதி விதித்து, நம்மைத் தண்டிக்கவேண்டும். அப்படியிருக்க, அவர் எவ்விதத்திலே நம்மை இரட்சிக்கலாம்? நீதிதவறாதபடி நம்மை இரட்சிக்க வழி உண்டோ, உபாயம் உண்டோ, இருந்தால் அதிலேதான் அவருடைய ஞானமும் கிருபையும் தோன்றும்.

* கருமஞ்சிதையாமல் கண்ணோடவல்லார்க்
குரிமையுடைத்திவ் வுலகு

என்று திருவள்ளுவர் சொன்னது மெய்தான். ஒரு இராசா தான் நிறைவேற்ற வேண்டிய நீதி கெடாதபடியே தயவு காட்டக் கூடுமானால், அப்படிப்பட்ட இராசாவுக்கு உலகமானது உரியதாகுமென்று சொன்னார். தேவன் இராசாதிராசனாய் இருக்கிறார். அவர் நீதியை எப்போதும் குறைவில்லாமல் நிறைவேற்ற வேண்டியது. அவர் தம்முடைய நீதி கெடாதவிதமாய்ப் பாவத்தை மன்னிக்கிறதற்கு ஒரு

குறள், ௫௭. அதி: ௮.

* இ—ள். கருமம்—நீதியாகிய தமது தொழில். சிதையாமல்—கெடாமல். கண்ணோட — தாட்சணியஞ்செய்ய. வல்லார்க்கு—வல்லவரசர்களுக்கு. இவ்வுலகு—இந்தவுலகம். உரிமையுடைத்து—சொந்தமுடையது. எ—று.

வழி உண்டா? இதுதான் நமக்குத் தெரியவேண்டிய காரியம். அப்படிப்பட்ட வழி உண்டு. நம்மை இரட்சிக்கவேண்டுமென்று அவர் விரும்பி அந்த வழியை ஏற்படுத்தினார். அதற்காகவே தம்முடைய குமாரனாகிய இயேசுக்கிறிஸ்துவை இந்தப் பூமியிலே அனுப்பினார். அவர் வந்ததையும், செய்ததையும் காது கொடுத்துக் கேளுங்கள். தேவ நீதி அவராலேதான் சமாதானப்பட்டது. மன்னிக்கிறதற்கு உண்டாயிருக்கிற தடை அவராலேதான் நீக்கப்பட்டது. ஆத்தும ரட்சிப்பும் மோட்சபாக்கியமும் அவராலேதான் நேரிட்டது.

அந்த இயேசுக்கிறிஸ்துவானவர் மெய்த் தேவனாயிருக்கிறார். பூர்வகாலத்திலே அவர் இந்தப் பூமியில் இறங்கிவந்து மனுஷாவதாரமெடுத்தார். முப்பத்துமூன்று வருஷம் பூலோகத்திலே சஞ்சரித்தார். மெய்ஞ்ஞானத்தை உபதேசித்தார். லோகரட்சகராக விளங்கினார். சீஷர்களைச் சேர்த்தார். சர்வாத்துமாக்களுக்கும் நன்மை செய்தார். பரிசுத்தமாய் நடந்து, மனுஷர்கள் நடக்கவேண்டிய ஒழுங்கைக் காண்பித்தார். பின்பு அவர் மிகுந்த ஆக்கினை ஏற்றுக்கொண்டு அனுபவித்தார். அது என்ன என்று கேட்கிறீர்களா? அவர் சிலுவை மரத்திலே, கையிலும் காலிலும் ஆணிகளால் அறையப்பட்டார். அகோரமான அவஸ்தைகளைச் சகித்தார். தமது ஜீவனையும் விட்டார். ஜீவனை விட்ட மூன்றாம் நாளிலே மரணக் கட்டை அவிழ்த்து, மறுபடியும் ஜீவனோடே எழுந்து வந்து, பின்னும் பூமியை நாற்பது நாள் அளவும் மிதித்து, சீஷர்களுக்குச் ஜீவவாக்குகளை அருளி, பூலோகத்தை விட்டு, வானத்தின் வழியாக ஏறி, பரமண்டலத்துக்குத் திரும்பிச் சென்றார்.

அவர் ஏன் ஆக்கினைப்பட்டார் என்று நீங்கள் கேட்பீர்களேயானால், நாம் அடையவேண்டிய நாகாக்கினைக்குப்

பதிலாக அவர் பூமியிலே இப்படி ஆக்கினைப் பட்டார். தேவநீதியைச் சமாதானப்படுத்தும்படிக்கே அவர் அந்தத் தண்டனையை அனுபவித்தார். அதினாலே தேவநீதிக்குத் திருப்திசெய்தார். மனுஷருடைய பாவங்களை மன்னிக்கிறதற்கு உண்டான தடையை நீக்கினார். பாவிகளை இரட்சிக்கிறதற்கு வழியைத் திறந்தார். நாம் அடையவேண்டிய தண்டனையை அவர் சுமந்தபடியினாலே, தேவன் பாவமன்னிப்பை அருளலாம். இப்போது மன்னித்தாலும், தேவநீதிக்குப் பழுது இல்லை. ஆகையினாலே, இதைக் குறித்துத் தேவன் மனுபுத்திரருக்குக் கிருபையுள்ள வார்த்தையைச் சொல்லியிருக்கிறார். யார் பாவமார்க்கங்களை விட்டு, இயேசுக்கிறிஸ்துவை விசுவாசித்துக்கொள்ளுகிறார்களோ, அவர்களுடைய பாவம் அந்தக் கிறிஸ்துவினிமித்தம் மன்னிக்கப்படும். அவர்களுடைய குற்றமெல்லாம் தீர்க்கப்படும். அவர்களுக்கு மோட்சபாக்கியம் கொடுக்கப்படும். மாறாத நித்திய பரம சவுக்கியம் அருளப்படும்: என்று தேவன் தெரிவித்திருக்கிறார். இதுவே அமிர்த வாக்கு. இதைக் கேட்டு, இதை அனுசரிக்கிற யாவரும் முத்தி அடைவார்கள். மற்றவர்களெல்லாரும் நரகத்துக்காளாவார்கள்.

இன்னும் இந்தக் காரியம் உங்களுக்குத் தெளியும்படி உலகத்திலே நடந்த ஒரு சரித்திரத்தைச் சொல்லுகிறோம்.

அனேக வருஷங்களுக்குமுன்னே லோக்கிரியா என்னப்பட்ட தேசத்திலே நல்ல இராசா ஒருவர் வாழ்ந்து, பிரசைகளை நீதிசாஸ்திரப்படி நடத்தி, ஆண்டுவந்தார். அக்காலத்திலே விபசாரக் குற்றம் அவருடைய இராச்சியத்திலே மிகவும் பெருகிற்று. இராசா அதைக் கண்டு, அந்தக் குற்றத்தினாலே குடியும் நாடும் கெட்டுப் போகுமென்று துக்கித்து, அதை விலக்கும்படி ஒரு சட்டத்தை ஏற்படுத்தினார். இனிமேல் யாராகிலும் விபசாரஞ் செய்தால், இரண்டு கண்ணும் பிடுங்

கப்படுமென்கிறதே அவர் ஏற்படுத்தின சட்டம். சில நாள் சனங்கள் அந்தக் கட்டளைக்குப் பயந்து, அதின்படி நடந் தார்கள். பின்பு ஒருவன் அந்தக் குற்றத்தில் அகப்பட்டு, இராச சமுகத்திலே கொண்டுவரப்பட்டான். இராசா அவ னைப் பார்த்தபோது, இதோ இனிமேல் பட்டத்துக்கு வர வேண்டிய தன்னுடைய புத்திரனே தனக்குமுன் குற்றவா ளியாய் நிற்கிறதைக் கண்டார். அப்போது இராசா மனந் திடுக்கிட்டு, பயந்து, உடல் நடுங்கி, மயங்கி இருந்தார். "ஓ ஓ நான் பெற்று வளர்த்த என்னுடைய பிள்ளையல்லவா! என் அன்புக்குரிய என்னுடைய குமாரனல்லவா! என் கண்மணியல்லவா! எனக்குப்பின் இராசபட்டத்துக்குச் சே ரவேண்டிய என்னுடைய புத்திரனல்லவா! என்ன செய் வேன்? இவனுடைய கண்ணை எப்படிப் பிடுங்குவேன்" என்று தன்னுள்ளத்திலே நினைத்து, உருகி, சொல்லிமுடியாத துக்கம் அடைந்தார்.

பின்பு யோசிக்கத் தொடங்கினார். "மகன் என்று பார்த்து, கண் பிடுங்காமல் மன்னித்தால், உலகமெல்லாம் என்னு டைய நீதியானது நீதியல்லவென்று நிந்திப்பார்கள். என் னுடைய கோல் கொடுங்கோலேயல்லாமல் செங்கோலல்ல என்று பழிப்பார்கள்: குற்றஞ் செய்வதற்குப் பிரசைகளெல் லாரும் துணிவார்கள்: இராச்சியத்திலே கிரமங்களெல்லாம் அக்கிரமமாகக் கவிழ்ந்துபோகும்: ஆகையினாலே, நீதியை நான் விடலாகாது: தண்டிக்கவே வேண்டும்" என்று தன்னு டைய மனதிலே நினைவுகொண்டார்.

இப்படியே, மகனை இரட்சிக்கவேண்டுமென்கிற இரக்கமா னது அந்த அரசனுடைய நெஞ்சை ஒரு பக்கத்துக்கு இழுக் கவே, குற்றவாளியைத் தண்டிக்கவேண்டுமென்கிற நீதியா னது மறு பக்கத்துக்கு இழுத்தது. இரக்கமும் தப்பாமல், நீதியும் தப்பாமல், இரண்டும் நிறைவேறும்படியான ஒரு நடு வழி தோன்றுமோ என்று இராசா பின்னும் யோசித்தார்.

நீதியையும் காப்பாற்றி இவனை இரட்சிக்கக் கூடுமானால், ஒரு பெரிய நன்மை விளையுமே என்று எண்ணமிட்டார்.

பின்பு அவருக்கு ஒரு நல்ல உபாயம் தோன்றிற்று. அப்போது முகம் மலர்ந்தார். சிம்மாசனத்தில் ஏறினார். விசாரணை நடக்கும்படி கட்டளையிட்டார். விசாரணை நடந்தது. இராசாவின் புத்திரன் குற்றவாளியென்று சாட்சிகளாலே ரூபிக்கப்பட்டது. இராசா சட்டத்தைப் படிக்கச்சொன்னார். இரண்டு கண்ணும் பிடுங்கப்படுமென்று சட்டம் வாசிக்கப்பட்டது. அப்போது இராசா சொல்லுகிறார்: "மந்திரிமாரே, பெரியோரே, சனங்களே, கேளுங்கள்: சட்டம் நிறைவேறவேண்டும். நீதியானது காக்கப்படவேண்டும். இரண்டு கண் பிடுங்கப்படவேண்டும். ஆனாலும் ஒன்று கேளுங்கள். இவன் என் மகன். இவனையும் என்னையும் அன்பினாலே ஒன்றுதான் என்று நான் பாவனை செய்து, இவனுடைய கண் ஒன்று, என்னுடைய கண் ஒன்று பிடுங்குவேன்" என்று சொல்லி, மகனுடைய கண் ஒன்றைப் பிடுங்கப்பண்ணி, தன்னுடைய கண் ஒன்றைப் பிடுங்கிவைத்தார். பின்பு அந்த அரசன் சொல்லுகிறார்: "சனங்களே, கட்டளை நிறைவேறலாயிற்று. அதோ, தோண்டி எடுத்துவைத்த இரண்டு கண்களையும் பாருங்கள். நான் சட்டத்தை நிறைவேற்றினேன்: நீதியைக் காத்தேன்: இரக்கத்தையும் செய்தேன். மகனை இரட்சித்தாலும், சட்டத்துக்குக் குறைவில்லை. குற்றஞ்செய்ய, சனங்கள் துணிவதற்கு இடமும் இல்லை. என்னுடைய நீதி கண்டிப்பு: என்னுடைய இரக்கமும் பெரிது" என்று சொன்னார். அப்போது யாவரும் அந்த இராசாவை ஸ்துதித்து, நீதிகெடாத விதமாய் இரக்கத்தைக் காட்டினாரென்று கண்டு, அவருடைய ஞானத்தைப் புகழ்ந்து, அவருடைய கிருபையை மெச்சி, அவருடைய நீதிக்கும் அஞ்சி, அவருடைய சட்டத்துக்கு முன்னிலும் ஆயிரம் பங்கு அதிகமாய்ப் பயந்து அடங்கி நடந்தார்கள்.

அந்த இராசா ஏன் தம்முடைய கண்ணைப் பிடுங்கினார்? குற்றமில்லாத அவர் குற்றமுள்ள தன் மகனுக்காக ஏன் ஆக்கினைப் பட்டார்? தம்முடைய சட்டத்தைக் கனப்படுத்தவும், தம்முடைய நீதியைக் காக்கவும், தம்முடைய மகனை இரட்சிக்கவும் அப்படிச் செய்தாரல்லவா? அப்படியே இயேசுக்கிறிஸ்துநாதர் பூமியில் வந்து செய்தார். தேவ கட்டளையை மேன்மைப்படுத்தவும், தேவ நீதியைக் காக்கவும், பாவிகளாகிய மனுஷரை இரட்சிக்கவும், அவர் வந்து பாடுபட்டார். சனங்களே, அவரை நம்பி, அவராலே கரை ஏறுவீர்களாக.



# உ ப கி ர ந் த ம்.

## APPENDIX TO NO. VII.

### முன் சொன்னவைகளுக்குச் சில உதாரணங்கள்.

(க.) வைதீக கிரியைகள் அழியும், ஓம் என்கிற மந்திரமோ, அழியாது. அதுவே தேவனென்பது.

క్షరంతిసర్వావైదిక్యో జుహోతియజతిక్రియాః
అక్షరందుష్కరంజ్ఞేయం బ్రహ్మచైవప్రజాపతిః . மனு. உ: அச.

இதன் பதவுரை.

వైదిక్యః — வேதசம்பந்தமான. జుహోతియజతిక్రియాః—ஓமம் யாகம் முதலான கிரியைகள். సర్వాః—எல்லாம். క్షరంతి—அழிகின்றன. అక్షరం—பிரணவமானது. దుష్కరం—நாசமில்லாததாக. జ్ఞేయం—அறியத்தக்கது. (ஏனெனில் அது) ప్రజాపతిః—பிரசைகளுக்கு அதிகாரியான. బ్రహ్మ—பிரமமாயிருக்கின்றது.

(பிரணவம் பிரமமாயிருக்கிறதினாலே அதற்கு అక్షరం என்கிற பேர் வந்தது).

## கருத்துரை.

*வேத சம்பந்தமான கிரியைகளெல்லாம் அழியும். பிரணவமோ, அழியாது. அதுவே தேவன் என்பதாம்.*

**(உ.) ஓம் என்கிற மந்திரத்திலிருந்து நாலு வேதமும் முளைத்தது. அதை அறிகிறவன் எல்லாவற்றையும் அறிகிறான். ஸ்திரீகளும் சூத்திரரும் அதை உச்சரித்தலாகாதென்பது.**

*ஓமென்னும்பதமதனில்வேதமாதி*
*யுற்பவிக்குமாலம்வித்தினுதிக்குமாபோல்*
*ஓமென்னும்பதமதனையுரைத்தார்தாமே*
*யுரைத்தாரும்வேதாதியுரைகளெல்லாம்*
*ஓமென்னும்பதப்பொருளையுணர்ந்தார்தாமே*
*யுணர்ந்தாரும்வேதாதியொருமைகூர*
*ஓமென்னும்பதமொழித்தைந்தெழுத்துமாதர்க்*
*கொழுங்குடையசூத்திரர்க்குமுரைக்கலாமே.*

### இதன் பதவுரை.

*வித்தின்—(சிறிய) விதையிலிருந்தும். ஆலம்—(பெரிய) ஆலமரம். உதிக்குமாபோல்—தோன்றும் விதத்தைப் போல. ஓமென்னும் பதமதனில் — ஓமென்னுஞ் சொல்லிலிருந்து. வேதமாதி—வேதமுதலாகிய சாஸ்திரங்கள். உற்பவிக்கும் — தோன்றும். ஓமென்னும் பதமதனை — ஓமென்னுஞ் சொல்லை. உரைத்தாரே — சொன்னவர்களே. வேதாதி—வேதமுதலாகிய. உரைகளெல்லாம்—சாஸ்திரங்களெல்லாம். உரைத்தாரும்—சொன்னவர்களும். ஓமென்னும் பதம் — ஓமென்னுஞ் சொல்லின். பொருளை—அருத்தத்தை. உணர்ந்தாரே—அறிந்தவர்களே. வேதாதி—வேத முதலாகிய சாஸ்திரங்களை. ஒருமைகூர—நிச்சயமாக. உணர்ந்தாரும்—அறிந்தவர்களு (மாவார்கள். அன்றியும்) ஓமென்னும் பதம் — ஓமென்னுஞ் சொல்லை. ஒழித்து—நீக்கி. ஐந்தெழுத்தும் — பஞ்சாட்சரத்தையும்.*

மாதர்க்கு — ஸ்திரீகளுக்கும். ஒழுங்குடைய — (தன் சாதிக்குரிய) ஆசாரத்தையுடைய. சூத்திரர்க்கும் — சூத்திரர்களுக்கும். உரைக்கலாம்—உபதேசிக்கலாம். எ—று.

## கருத்துரை.

ஓம் என்கிற மந்திரத்திலிருந்து வேதம் முதலான சாஸ்திரங்கள் பிறந்தது. அதின் பொருளை அறிகிறவர்கள் எல்லா சாஸ்திரங்களையும் அறிவார்கள். அதை ஸ்திரீகளுக்கும் சூத்திரர்களுக்கும் உபதேசிக்கப்படாது என்பதாம்.

இந்தப் பாட்டிலே ஓம் என்கிற மந்திரத்திலிருந்து நாலு வேதமும் முளைத்ததென்று சொல்லியிருக்கிறது. இதற்கு முழுவதும் எதிர்ப்பேச்சாக மானவதரும சாஸ்திரத்திலே (உ-ம் அதி: எ௬-ம்) பிரமா ஓம் என்கிற மந்திரத்தை மூன்று வேதங்களிலிருந்து கறந்தானென்று சொல்லியிருக்கிறது.

(௩.) காயத்திரி மந்திரத்தை ஆயிரம் தரம் உச்சரிக்கிறதினால் ஒரு மாசத்துக்குள்ளே சமஸ்த பாவமும் தீருமென்பது.

సహస్రకృత్వస్త్వభ్యస్య బహిరేతత్త్రికం ద్విజః
మహతోప్యేనసో మాసాత్త్వచేవాహిర్విముచ్యతే.

மனு. உ: எ௯.

### இதன் பதவுரை.

ద్విజః—பிராமணன். ఏతత్త్రికం—(ஓம், வியாகிருதி, காயத்திரி என்னும்) இந்த மூன்றையும். బహిః—(சனங்களுக்குப்) புறம்பாக. సహస్రకృత్వః—ஆயிரம்தரம். అభ్యస్య—நன்றாய் அப்பியாசஞ்செய்து (செபித்தால்). మాసాత్—மாசத்துக்குள்ளாக. మహతః—பெரிய. ఏనసోపి—பாவத்தினின்றும். అహిః—பாம்பு. త్వచేవ—தோலினின்று (நீங்குவதுபோல). విముచ్యతే—நீங்குகிறான்.

### கருத்துரை.

*பிராமணன் ஓம், வியாகிருதி, காயத்திரி என்னும் மந்திரங்களை ஆயிரம் தரம் செபித்தால், அவன் செய்த பெரிய பாவங்கள் ஒரு மாசத்துக்குள் தீரும் என்பதாம்.*

**(௬.) ஒருவன் வேறொன்றைச் செய்தாலும் செய்யாவிட்டாலும் காயத்திரி மந்திரத்தை மாத்திரம் சொன்னால், மோட்சத்தைப் பெறுவானென்பது.**

జప్యేనైవతుసంసిధ్యేద్ బ్రాహ్మణోనాత్రసంశయః
కుర్యాదన్యన్నవాకుర్యాత్ మైత్రోబ్రాహ్మణఉచ్యతే.

*மனு. உ: அஎ.*

### இதன் பதவுரை.

*బ్రాహ్మణః—பிராமணன். జప్యేనైవతు—(காயத்திரி) செபிக்கிறதினாலேயே. సంసిధ్యేత్ — மோட்சத்தையடைகிறான். అత్ర— இதில். సంశయః — சந்தேகம். న—இல்லை. అన్యత్ — மற்றொன்றை. కుర్యాత్—செய்தாலும் செய்யட்டும். నవాకుర్యాత్—செய்யாமற்போனாலும் போகட்டும். మైత్రః—(அவன் யாவரிடத்திலும்) சினேகிதனாயிருந்தால். బ్రాహ్మణః—பிராமணனென்று. ఉచ్యతే— சொல்லப்படுவான்.*

### கருத்துரை.

*பிராமணன் வேறொரு காரியத்தைச் செய்தாலும், செய்யாவிட்டாலும், காயத்திரி மந்திரத்தை மாத்திரம் செபித்தால் மோட்சத்தைப் பெறுவான் என்பதாம்.*

(ரு.) மூன்று வருஷகாலமாக நாடோறும் காயத்திரி மந்திரத்தைப் படிக்கிற பிராமணன் தன் சொந்த ரூபம் மாறி, ஆகாச ரூபத்தைப் பெற்றுக்கொண்டு, காற்றைப்போலாகி, எங்கும் திரிய வல்லவனாவான் என்பது.

యోఽధీతేఽహన్యహన్యేతాం త్రీణివర్షాణ్యతంద్రితః
సబ్రహ్మపరమభ్యేతి వాయుభూతఃఖమూర్తిమాన్.

మனு. உ: அஉ.

இதன் பதவுரை.

యః—எவன். అతంద్రితః—சோம்பலில்லாதவனாய். త్రీణివర్షాణి—மூன்று வருஷகாலமாக. అహన్యహని—நாடோறும். ఏతాం—இதை (காயத்திரியை). అధీతే—ஓதுகிறானோ. సః—அவன். వాయుభూతః—காற்றுக்கொப்பானவனாகி. ఖమూర్తిమాన్—ஆகாசசரீரமுடையவனாய். పరంబ్రహ్మ—பரப்பிரமத்தை. అభ్యేతి—அடைகிறான்.

கருத்துரை.

மூன்று வருஷகாலமாக நாடோறும் காயத்திரி மந்திரத்தைப் படிக்கிற பிராமணன் காற்றுக்கொப்பானவனாகி, ஆகாச சரீரமுடையவனாய், பரப்பிரமத்தை அடைகிறான்.



# வேதவாக்கியம்.

(க.) தேவன் மந்திரவித்தையை வெறுக்கிறார்.

உபாகமம், ௰௩. அதி: ௰, ௰க, ௰உ.
ஏசாயா, ௪. அதி: ௰௯, உ௰.
மத்தேயு, ௬. அதி: ௭.

(௨.) சூரிய சந்திர நட்சத்திரங்களை வணங்கலாகாது.

உபாகமம், ௪. அதி: ௰௯.
உபாகமம், ௰௭. அதி: ௨—௫.
யோபு, ௩௧. அதி: ௨௬—௨௮.
எசேக்கியேல், ௮. அதி: ௰௫, ௰௬.

(௩.) தேவன் உண்மையானவர்களுடைய பிரார்த்தனைகளில் பிரியப்படுகிறார்.

சங்கீதம். ௱௪௫: ௰௮, ௰௯.
மத்தேயு, ௭. அதி: ௭—௰௧.
௧. பேதுரு, ௩. அதி: ௰௨.

(௪.) பிரார்த்தனை பண்ணவேண்டிய விதம்.

மத்தேயு, ௬. அதி: ௯—௰௩.
எரேமியா, ௨௯. அதி: ௰௩.
மாற்கு, ௰௧. அதி: ௨௫.
மத்தேயு, ௨௧. அதி: ௨௨.



# செ ன் ம ம்.



அனேக சென்மங்கள் உண்டென்று இந்தத் தேசத்துச் சாஸ்திரங்களில் சொல்லியிருக்கின்றது. சனங்களும் அதை நம்புகிறார்கள். மனுஷனுடைய ஆத்துமா ஒரு உடம்பை விட்டு வேறொரு உடம்பிலே புகுந்து, அப்படியே கோடா கோடி வருஷகாலமாகச் சன்மாந்தரமார்க்கமாய்த் திரிந்து அலையுமென்று நினைக்கிறார்கள்.

நல்லாப்பிள்ளை பாரதம்: ஆரணிய பருவம்:
கௌசிகச் சருக்கம்.

*புகலுந்தூயவினைவலிதேற் புத்தேளாக்கைதனைப்பொருந்து
மிகவும்வினைகளிரண்டுமெனின் மேவுந்திறன்மானுடயாக்கை
பகருந்தீயவினைபெரிதேற் பலதாபரசங்கமவுயிர்கட்
கிகலுமுடலம்பெறுமெனவே யியம்பாநிற்பராரியரே. (எக.)

நல் வினையை மிகுதியாய்ச் செய்கிறவனுடைய ஆத்துமா தேவனாய்ப் பிறக்குமென்றும், நல் வினையும் தீ வினையும்

---

* இ-ள். புகலும்—சொல்லுகிற. தூயவினை—நல்வினை. வலிதேல் — மிகுமானால். புத்தேளாக்கை — தேவ சரீரத்தை. பொருந்தும்—(ஆத்துமாக்க)ளடையும். வினைகளிரண்டும்—நல்வினை தீவினையாகிய இரண்டும். மிகவுமெனின்–மிகவும் கலந்திருக்குமானால். திறல் — கூறுபாடுடைய. மானுட யாக்கை — மனித சரீரத்தை.

மிகவும் கலந்து செய்கிறவனுடைய ஆத்துமா மனுஷனாய்ப் பிறக்குமென்றும், தீ வினையை மிகுதியாய்ச் செய்கிறவனுடைய ஆத்துமா மரமும் மிருகமுமாய்ப் பிறக்குமென்றும், இந்தப் பாட்டிலே சொல்லியிருக்கிறது.

மேலும், மானவ தருமசாஸ்திரத்திலே, பன்னிரண்டாம் அத்தியாயத்தில், மிகவும் அதிசயமான விவரங்கள் கண்டிருக்கிறது. மனுஷனானவன் நாயாகவும், பன்றியாகவும், கழுதையாகவும், ஒட்டையாகவும், எருதாகவும், ஆடாகவும், மானாகவும், புழுவாகவும், பூச்சியாகவும், ஈயாகவும், எட்டுக்கால் பூச்சியாகவும், பாம்பாகவும், முதலையாகவும், புல்லாகவும், செடியாகவும், கொடியாகவும், கழுகாகவும், சிங்கமாகவும், புலியாகவும், பூனையாகவும், கீரிப்பிள்ளையாகவும், தவளையாகவும், ஒணானாகவும், மயிலாகவும், குரங்காகவும், மீனாகவும், ஆமையாகவும், நரியாகவும், கொசுகாகவும், இன்னும் பலபல விதமாகவும் பிறப்பானென்று விஸ்தாரமாய்ச் சொல்லியிருக்கிறது.(க.)

ஓ சனங்களே, மனுஷனுடைய ஆத்துமா தன் மனுஷத்தன்மையைப் போக்கடித்து, இவ்விதமாகப் பிறக்கப் போகிறதா? இதென்ன விபரீதம்? ஒரு விதத்திலே பார்த்தால், சிறு பிள்ளைகளை மிரட்டுகிறதற்குச் சொன்ன கதைபோல இருக்கிறது. வேறொரு விதத்திலே பார்த்தால், சிறு பிள்ளைகள் சிரித்து, துள்ளி ஆடுகிறதற்குச் சொன்ன கதை

மேவும் — பொருந்தும். பகரும் — சொல்லுகிற. தீயவினை — தீவினை. பெரிதேல் — அதிகமானால். பல — அனேகம். தாபர சங்கமவுயிர்கட்கு—மரமும் மிருகமுமான வுயிர்களுக்கு. இகலும்— பலமாயிருக்கிற. உடலம் — சரீரத்தை. பெறுமென — அடையுமென்று. ஆரியர்—அறிவுடையோர். இயம்பாநிற்பர்—சொல்லுவார்கள். எ—று. (ஏ—அசை.)

(க.) உ௲க-ம் பக்கத்திலுள்ள சுலோகத்தைக் காண்க.

போல தெரிகிறது. எதுவோ நன்றாய் விளங்கவில்லை. கேட்கும்போது நகைக்கத்தான் வேண்டிவருகிறது. யோசிக்கும்போதோ, ஐயையோ மனுஷர்கள் இவ்விதமாகவும் மயங்கிக் கெட்டுப்போகிறார்களோ, என்று எண்ணமிட்டு, துக்கப்பட்டு, கண்ணீர்விட்டு, அழுகிறதே தகுதியாகத் தோன்றுகிறது.

மனுஷர்கள் பல பிறப்புகளாய்ப் பிறக்கிறார்களென்று சொல்லுகிறீர்களே, அதற்கு என்ன பிரமாணம் கூறுகிறீர்கள்? நீங்கள் சும்மா சொல்லவே, அப்படிப்பட்ட கதையை ஏற்றுக்கொள்ளலாமா? கூடாதே.

இதற்கு எங்கள் சாஸ்திரமே சாட்சி என்று உங்களில் சிலர் சொல்லுவார்கள். ஆனாலும் உங்கள் சாஸ்திரங்களில் அனேகம் புரட்டுகளும் பொய்களும் நிறைந்திருக்கிறது. இவ்விடத்தில் ஒன்றுமாத்திரம் எடுத்துக் காட்டுகிறோம்.

நல்லாப்பிள்ளை பாரதம்: ஆதிபருவம்: காருடச் சருக்கம்.

*அமுதந்தொட்டபேராற்றலா லருந்தவமியற்றி
விமலனால்வரம் பெற்றனர்விதுவொடுகதிரை
உமிழுமுண்ணுமென் றுரைப்பதிவ்வியற்கையாலும்பர்
தமதவாவறப் பருகினர்தண்ணமுதம்மா. (உயி.)

* இ-ள். (இராகு கேதுக்கள்) அமுதம்—அமுதத்தை. தொட்ட—புசித்த. பேர்—பெரிய. ஆற்றலால்—வல்லமையால். அருந்தவம்—அரிய தவத்தை. இயற்றி — செய்து. விமலனால் — சிவனால். வரம் — வரத்தை. பெற்றனர் — பெற்றுக்கொண்டார்கள். விதுவொடு—சந்திரனுடன். கதிரை — சூரியனை. உண்ணும் — புசிக்குமென்றும். உமிழுமென்று—கக்குமென்றும். உரைப்பது—(உலகத்தார்) சொல்வது. இவ்வியற்கையால்—இந்தத் தன்மையாலாம். உம்பர் — தேவர்கள். தமது — தங்களுடைய. அவாவற—ஆசை நீங்க. தண்—குளிர்ச்சிபொருந்திய. அமுது—அமுதத்தை. பருகினர்—புசித்தார்கள். எ-று.

சூரியனையும் சந்திரனையும் விழுங்கும்படிக்கும், மறுபடியும் கக்கும்படிக்கும், இரண்டு பாம்புகளுக்குச் சிவன் வரங் கொடுத்தானென்றும், அந்தப் பாம்புகள் அப்படியே விழுங்கிக் கக்குவதினாலே சூரிய கிரகணமும் சந்திர கிரகணமும் உண்டாகிறதென்றும், ஐந்தாம் வேதமென்று நீங்கள் புகழுகிற மகா பாரதத்திலே சொல்லியிருக்கிறது. பாம்பு ஆகாசத்திலே ஏறி, சூரியனை வாயிலே கவ்வி, பிடித்து, விழுங்கி, மறுபடியும் வாயாலே கக்குகிறதென்றால், யார்தான் சிரிக்க மாட்டார்கள்? இந்தக் கதை சுத்த புளுகென்று இக்காலத்திலே பள்ளிக்கூடத்தில் படிக்கிற உங்கள் பிள்ளைகளிலும் அனேகருக்கு நன்றாய்த் தெரியுமே. அத்திப் பழத்தைப் பிட்டுப்பார்த்தால் அத்தனையும் புழு என்பதுபோல, உங்கள் சாஸ்திரத்தை விசாரணை செய்யும்போது, இதைப்போல வேறு அனேக பொய்களும் அதில் உண்டென்றறியலாம். இப்படிப்பட்ட பலத்த அபத்தங்களைச் சுமக்கிற உங்கள் சாஸ்திரத்தையா நீங்கள் சாட்சியாகக் கொண்டுவரப் போகிறீர்கள்? அது ஒவ்வாத சாட்சி. சூரியனைத் தின்கிற பாம்பைக் குறித்து உங்கள் சாஸ்திரம் எப்படிப் பொய் பேசுகிறதோ, அப்படியே அனேக ஜென்மங்கள் உண்டென்கிற இந்த விஷயத்திலும் அது பொய் பேசுகிறதாயிருக்கலாமே. ஆகையால், இந்தச் சாட்சி உதவாது. புத்திசாலிகள் இதை ஒத்துக்கொள்ள மாட்டார்கள்.

வேறே எதாவது ஒரு சாட்சி சொல்லக்கூடுமா என்று உங்களைக் கேட்டால், உங்களில் சிலர் சொல்லுகிறார்கள்:

பாவத்துக்கும் புண்ணியத்துக்கும் பலனாகப் புனர்சென்மம் ஏற்பட்டது. இது நல்ல கிரமமானதினாலே, இது ஒரு சாட்சியாயிருக்கிறதென்பார்கள். மகா பாரதமானது அப்படியே கூறுகின்றது.

**நல்லாப்பிள்ளை பாரதம்: அஸ்வமேத பருவம்: கிருஷ்ணார்ச்சுன சம்வாதச் சருக்கம்.**

*பாரியல்வினையிரண் டென்பர்பாவமுஞ்
சீருறுதருமமுஞ் செறியுந்துக்கமும்
நேரிடுமகிழ்ச்சியு நிகழ்த்தும்வித்ததே
யாரியருடலதி னுவதென்பரே. (உஅ.)

தீவினைக்குத் தண்டனையும், நல்வினைக்கு நல்ல பலனும் கிடைக்கும்படியாக, சென்மங்கள் நியமிக்கப்பட்டிருக்கிறதென்று இந்தப் பாட்டிலே சொல்லப்பட்டது.(உ.)

இன்னவின்ன குற்றத்திற்கு இன்னவின்ன தண்டனை நேரிடுமென்று விவரமாயும் விதித்திருக்கிறது.

**நல்லாப்பிள்ளை பாரதம்: அனுசாசனிக பருவம்: ஆசார முறைத்த சருக்கம்.**

† கோவிலெண்ணெய்நெய்யோர்பொருள் கொண்டனனென்னில்
ஆவிநீங்கியேயாகுவாய் வராகமாயயர்ந்து
மேவிநாள்பலகழிந்தபின் சுணங்குடன்மீண்டும்
ஓவலின்றியேயுறுவனீ மனங்கொள்வாயுரவோய். (எக.)

---

* **இ-ள்.** பார்—பூமியில். இயல்—பொருந்திய. வினை—வினையானது. செறியும்—நெருங்கிய. துக்கமும்—துக்கத்தையும். நேரிடும் — வருகிற. மகிழ்ச்சியும் — சந்தோஷத்தையும். நிகழ்த்தும் வித்து—உண்டாக்கும் விதையாகிய. பாவமும்—பாவமும். சீருறு—சிறப்புபொருந்திய. தருமமும்—அறமும். (ஆகிய) இரண்டு—இருவிதமென்று. ஆரியர்—அறிவுடையோர். என்பர்—சொல்வார்கள். (அன்றியும்) அதின்—அவ்வினைகளால். உடல்—சரீரம். ஆவது—ஆத்துமாக்களுக்குண்டாவது. என்பர் — என்று சொல்லுவார்கள். எ–று.

† **இ-ள்.** கோவில்—ஆலயத்திலிருக்கிற. எண்ணெய்—எண்ணெயும். நெய்—நெய்யும். (ஆகிய) ஓர் — ஒரு. பொருள்—பொருளை. கொண்டனனென்னில் — (ஒருவன்) திருடினால். ஆவி நீங்கி —

(உ.) உ௬உ-ம் பக்கத்திலுள்ள சுலோகங்களைக் காண்க.

கோவிலிலிருந்து ஒரு மனுஷன் எண்ணெயாவது நெய் யாவது திருடினால், அவன் செத்த பின்பு பெருச்சாளியாய்ப் பிறப்பான்; அல்லது, பன்றியாய்ப் பிறந்து மெத்தவும் வருத் தப்படுவான். அப்படியே வெகுநாள் அவஸ்தைப்பட்ட பின்பு நாயாகவும் பிறப்பானென்று இந்தப் பாடலிலே சொல் லியிருக்கிறது.

பெருச்சாளியாய்ப் பிறந்த அந்த ஆத்துமா, தான் முன் னே மனுஷனாக இருந்ததென்றும், அப்போது நெய் திருடி னதென்றும், அதற்குத் தண்டனையாக இப்போது தான் பெருச்சாளியாய்ப் பிறந்திருக்கிறதென்றும், அதற்குத் தெரி யுமா? அதைக் குறித்து அந்தப் பெருச்சாளிக்கு யாதொன் றும் தெரியவே தெரியாது. ஐயையோ நான் மனுஷனாயி ருந்தபோது, நெய் திருடினேன் அதினாலே இப்போது பெ ருச்சாளியாய்த் திரிந்து தண்டனைப்படுகிறேன் என்று அது அறியவில்லையே. அப்படியிருக்க, இது ஒரு தண்டனை யென்று சொல்லலாமா? இது ஒரு கிரமமென்று சாதிக்க லாமா? ஒருவனைத் தண்டிக்கப்போனால், அவனுடைய குற் றத்தை அவனுக்குத் தெரிவித்தே தண்டிக்கவேண்டுமல்ல வா? குற்றத்தைத் தெரிவிக்காமல் தண்டிக்கிறது கிரமமல் லவே. இன்னின்ன குற்றஞ் செய்தேன், அதற்கு இது தான் பலன், என்று அந்த ஆத்துமா அறிந்துகொள்ளக் கூடாதபடி, அதைக் கொண்டுபோய் ஒரு பெருச்சாளியின் உடம்பிலே அடைத்துவைத்து, வீணாகத் தண்டிப்பது நீதி யோ? அது நீதியுமல்ல. அது ஒரு தண்டனையுமல்ல. அது

---

இறந்து. ஆகுவாய்—பெருச்சாளியாகவும். வராகமாய்—பன்றியா கவும். (பிறந்து) அயர்ந்து—மிகவும் வருத்தப்பட்டு. மேவி—(உல கத்தில்) இருந்து. நாள்பல—அனேக நாள்கள். கழிந்தபின்—நீங்கி னபின்பு. மீண்டும்—மறுபடியும். சுணங்குடன்—நாயுடல் முதலிய தேகங்களில். ஓவலின்றி—ஒழிவில்லாமல். உறுவன்—சேருவான். உரவோய் — அறிவுடையவனே. நீ—நீ. மனங்கொள்வாய்—அறி வாயாக. ஏ—று.

அந்த ஆத்துமாவுக்கு ஒரு பலனுமல்ல. இதைத்தானு நீங்கள் கிரமமென்று சொல்லுகிறது? ஆத்துமாவுக்குத் தேவன் இப்படிப்பட்ட தண்டனை ஏற்படுத்தமாட்டார். ஆத்துமாவைத் தண்டிக்கிற கர்த்தாவானவர் அந்த ஆத்துமாவுக்கு அதின் குற்றம் தோன்றவும், இதுதான் தண்டனையென்று விளங்கவும் தண்டிப்பாரேயல்லாமல், இப்படிப்பட்ட வீண் தண்டனையை நியமிக்கமாட்டார். ஆகையினுலே, சென்மாந்தரம் தண்டனையாக ஏற்பட்டிருக்கிறதென்று நீங்கள் சொல்லுகிறது வியர்த்தமான பேச்சு. அது புத்தியில்லாதவர்கள் பிதற்றின கட்டுக்கதை.

நல்ல வினைக்குப் பலனுக நல்ல பிறப்புண்டாகுமென்று சொல்லுகிறதும் வீணுனதே. நல்ல பிறப்படைந்த ஆத்துமா, தான் முன் நல்ல வினை செய்ததாகவும், அதினிமித்தம் இந்த நல்ல பிறப்புக் கிடைத்திருக்கிறதாகவும், அதற்குத் தெரியுமா? அந்தச் சங்கதி ஒன்றும் தெரியாது. தான் முன் இருந்ததாகவும், ஒரு ஞாபகம் இல்லையே. இன்னின்ன நல்ல செய்கைக்காக இந்த நல்ல பலனைப் பெற்றேமென்கிற அறிவும் இல்லையே. இல்லாமலிருக்க அது ஒரு பலனல்ல. இப்படிச் செய்தேன், அதினுலே இதை அடைந்தேன் என்று அறிந்தால்தான் பலனென்று சொல்லலாம். ஆகையினுல், புனர்சென்மம் நல்வினை தீவினைக்குப் பலனென்று சொல்வது அபத்தமே.

ஆத்துமா பாவமென்கிற அழுக்கோடே கூடியிருக்கிறது, அது சுத்தியாவதற்குப் புனர்சேன்மம் ஏற்படுத்தப்பட்டதென்று சிலர் சொல்லுவார்கள்.

மானவ தருமசாஸ்திரம், ௰உ-ம் அத்தியாயம், ருசு-ம் சுலோகத்திலே(க.) சொல்லியிருக்கிறதாவது. கள் குடித்த

(க.) உகங-ம் பக்கத்தில் காண்க.

பாப்பான் இனிமேல் புழுவாகவும், பூச்சியாகவும், வெட்டுக்கிளியாகவும், மலத்தைத் தின்கிற பட்சியாகவும், இமிசை செய்கிற சீவ செந்துவாகவும், பிறந்து நடமாடுவானென்று சொல்லியிருக்கிறது.

கள்ளு சாராயம் குடித்த பிராமணனுடைய ஆத்துமா இவ்விதம் பிறக்கிறதினாலே பாவக்கறை நீங்கி, பரிசுத்தமாகிறது எப்படியோ, தெரியவில்லை. அவனுடைய ஆத்துமா மலந் தின்கிற காக்கையாய்ச் சென்மித்து, கண்ட அசுத்தங்களையெல்லாம் சாப்பிடுவதினாலே, சுத்தமாகுமோ? மேலும் மலந் தின்கிறதற்கு ஏன் காக்கையாகவேண்டும்? இங்கே பாப்பானாயிருக்கும்போதே எப்படியும் மனசைக் கட்டாயம்பண்ணிக்கொண்டு, மலந் தின்று, ஆத்துமாவைச் சுத்தி செய்துக்கொள்ளலாகாதோ?

இன்னும் கொஞ்சம் கேளுங்கள். மானவ தருமசாஸ்திரம், ௰உ-ம் அத்தியாயம், ௬௨-ம் சுலோகத்திலே(௪.) ஒருவன் நெல்லைத் திருடினால், எலியாய்ப் பிறப்பான்; பித்தளை திருடினால், வாத்தாய்ப் பிறப்பான். சலத்தைத் திருடினால், தவளையாய்ப் பிறப்பான்; தேனைத் திருடினால், கொசுகாய்ப் பிறப்பான்; பாலைத் திருடினால், காக்கையாய்ப் பிறப்பான்; இரசத்தைத் திருடினால், நாயாய்ப் பிறப்பான்; நெய்யைத் திருடினால், கீரிப்பிள்ளையாய்ப் பிறப்பான்; என்று சொல்லப்பட்டது. பின்னொரு சுலோகத்திலே, காய் திருடினால், குரங்காய்ப் பிறப்பானென்றும் சொல்லியிருக்கிறது.

இது எப்படிப்பட்ட போதனையோ, நிதானித்துப் பாருங்கள். ஒருவன் பூமியிலே நெல்லைத் திருடினால், அவனுடைய ஆத்துமா அந்தத் திருட்டை நீங்கிச் சுத்தமாகும்படி, எலியாகப் பிறந்து நெல்லைத் திருடுவதை நித்திய வேலையாய்

(௪.) உ௬௪-ம் பக்கத்தில் காண்க.

எடுத்துக்கொள்ளவேண்டுமா? ஒருவன் காயைத் திருடினுல், அந்தக் குற்றம் நிவிர்த்தியாகும்படி, காயும் கனியும் ஓயாமல் திருடுகிற குரங்காகப் பிறக்கவேண்டுமோ? ஒருதரம் செய்த களவு நிவாரணமாகும்படி நித்திய கள்ளனுக வேண்டுமோ? இப்படிப்பட்ட உபதேசம் உலகத்திலே இந்தத் தேசத்திலேயல்லாமல், வேறு எங்கேயாவது கேட்டதுமுண்டோ? இப்படியிருக்க, ஆத்துமாவைப் பரிசுத்தமாக்குகிறதற்கு, கடவுள் சென்மங்களை ஏற்படுத்தினுரென்று சொல்லுகிறது ஒரு தேவதூஷணமாகத் தோன்றுகிறது.

பின்னும் உங்களிடத்திலே விசாரிக்கிறேம். புனர்சென்மம் உண்டென்பதற்கு என்ன சாட்சி இருக்கிறது. ஒரு சாட்சியும் இல்லையே. ஆலோசனை செய்யுங்கள். நீங்கள் இதற்கு முன்னே ஒரு சென்மம் எடுத்திருந்தால், அதைக் குறித்து இப்போது கொஞ்சமானுலும் ஞாபகம் இராதோ? எப்படியும், அதின் வாசனையானுலும் உங்களுக்கு உபாயமாயாவது தெரிந்திருக்குமே. முன்னே நீங்கள் சிங்கமாகப் பிறந்திருந்ததுண்டானுல், இன்ன காட்டிலே இருந்து சுற்றித் திரிந்து, கெர்ச்சித்து, மிருகசாதிகளை மிரட்டி, இரைபிடித்து, மகிழ்ந்தோமென்று ஒரு அற்ப கர்வமாவது மிஞ்சியிருக்குமே. முன்னே நீங்கள் கழுதையாகப் பிறந்தது மெய்யானுல், இன்ன ஊரிலே வண்ணுனுலே அடிபட்டு, துணிமூட்டைகளைச் சுமந்து வருத்தப்பட்டோமென்று ஒரு வெட்கமாவது தோன்றிநிற்குமே. முன்னே நாயாகச் சென்மித்தது நிசமானுல், இன்ன ஊரிலே இன்ன வீட்டிலே வாலாட்டிக் கொண்டிருந்தோமென்று கொஞ்சமாவது ஒரு பணிவு தங்கி இருக்குமே. முன்னே பாப்பானுய் உற்பத்தியானது உண்மையானுல், இன்ன நாட்டிலே வாழ்ந்து, அகங்கரித்து, ஏழைச் சனங்களை வஞ்சித்து, வயிறு வளர்த்தோமென்று ஒரு கபடமாவது பொங்கிக்கொண்டிருக்குமே. இதெல்லாம் இல்லையே. முன்னே ஒரு பிறப்பிலே இருந்

தேனென்றும், இன்ன விதமாய் வாழ்ந்தேனென்றும் எவன் சொல்லுவான்? ஒருவனும் சொல்லத் துணியவே மாட்டான். அப்படிப்பட்ட ஞாபகம் யாருடைய நெஞ்சிலும் எவ்வளவும் இல்லையே. குழந்தைப் பருவத்திலே நடந்த காரியங்களை மறந்துவிட்டதுபோல, அதையும் மறந்தோமென்று சொன்னாலும் பொருந்தாது. இந்தப் பிறப்பிலே குழந்தைப் பருவத்துக்குரிய காரியங்களை மறந்தீர்கள். அது மெய்தான். முன் பிறப்பிலே குழந்தைப் பருவத்துக்குரிய காரியங்களையும் மறந்திருக்கலாம். அது அதிசயமல்ல. ஆனாலும், முன்னே ஒரு பிறப்பு இருந்தது மெய்யானால், அந்தப் பிறப்பிலே நீங்கள் எப்போதும் குழந்தையாகவா இருந்தீர்கள்? அப்போது வாலிபராய் நீங்கள் வளரவில்லையா? புருஷர்களாகவில்லையா? கலியாணஞ் செய்யவில்லையா? கஷ்டப்பட்டு, சீவனம் பண்ணவில்லையா? பிள்ளை குட்டிகளோடே வாழவில்லையா? வியாதியும், நோவும், பசியும், தாகமும், அனுபவிக்கவில்லையா? பல சுக துக்கங்களை அடையவில்லையா? இதையெல்லாம் ஒருமிக்க எப்படி மறந்துவிட்டீர்களோ, ஓ சனங்களே, ஏன் இப்படிப்பட்ட பொய்யை நம்புகிறீர்கள்? முன் பிறப்பிருந்தால், அதின் நினைவும், பேச்சும், செய்கையும் ஒருசேர இப்படி மொத்தமாய் இல்லாமல் போய்விடுமா? புத்தியைச் சம்பாதித்துக் கொள்ளுங்கள். சத்தியத்தை அறியுங்கள். முன் பிறப்பும் இல்லை, பின் பிறப்பும் இல்லையென்று கண்டுணருங்கள்.

உலகத்திலே நடப்பதையும் ஒத்துப் பாருங்கள். உங்கள் தோட்டத்திலே நிற்கிற வாழை மரத்தை நோக்குங்கள். அதுவும் உங்களுக்கு உபதேசஞ் செய்யும். அது வளர்ந்து, இலைவிட்டு, காய்த்து, குலைநிறைந்து, பழுத்து, பின்பு வாடி உலர்ந்து சாகும். செத்தபின் அந்த வாழை தானே மறுபடியும் பூமியிலே வந்து உற்பத்தியாகுமா? இல்லையே. அது சாவதற்கு முன்னே, தன் அடியண்டைக் கன்றுகளைப் பிறப்பிக்கும். தாய் வாழை செத்தபின்பு, அது இருந்த இடத்

திலே அதின் கன்றுகள் நின்று பெருகிக் காய்க்கும். அந்தத் தாய் வாழையோ திரும்பி வரமாட்டாது. அதுபோல, மனுஷன் ஒருவன் பிள்ளைகளைப் பெறுவான். பின்பு சாவான். அவன் இருந்த இடத்திலே அவனுடைய பிள்ளைகள் இருந்து வாழுவார்கள். அவர்களாலே குடும்பம் விருத்தியாகும். அவனோ மறுபடி பூமியிலே வந்து செனமிக்கப் போகிறதில்லை.

இப்போது நாங்கள் சொல்லுகிற சில நியாயங்களைக் கேளுங்கள். அனேக செனமங்கள் உண்டென்று சொல்லுவது மகா கெட்ட போதனையாயிருக்கிறதென்று ரூபிக்கிறோம்.



## முதலாவது.

## செனமாந்தரம் நிச்சயமானால், மனுஷர் மோட்சம் அடைவதற்கு வழியே இல்லையென்று தீர்க்கவேண்டியது.

மானவ தருமசாஸ்திரம், ൧௨-ம் அத்தியாயம், ௫௮-ம் சுலோகத்தில்(ஓ.) ஒருவன் தன் குருவின் மனைவியோடே விபசாரஞ் செய்தால், புல்லாகவும், செடியாகவும், கொடியாகவும், பருந்தாகவும், துஷ்ட மிருகமாகவும், நூறு பிறப்பாய்ப் பிறப்பானென்று சொல்லியிருக்கிறது.

இதை நம்பக் கூடுமானால், பூமியிலுள்ள புல்லும், செடியும், கொடியும் மரமுமானவைகள் மனுஷனுடைய ஆத்துமாக்களேயல்லாமல், வேறல்ல. அப்படியானால், இலை கிளை

(ஓ.) உ௩௫-ம் பக்கத்தில் காண்க.

முதலானவைகளை எப்படித் தின்னலாம்? தின்னுகிற யாவரும் கொலைபாதகரல்லவா? நீங்கள் தினமும் தின்கிறீர்களே. தினமும் அந்த ஆத்துமாக்களைப் பிடித்து, பிடுங்கி, கொலைசெய்து, நீரிலே அமுக்கி, கீழே நெருப்பு வைத்து மூட்டி, வேவித்து, உங்கள் பல்லாலே கடித்து, நாக்காலே ருசிபார்த்து, தொண்டையாலே விழுங்கி, வயிற்றிலே சீரணிக்கிறீர்களே. இதென்ன மகத்தான பாவம்! மேலும், இது ஒரே ஒருநாள் செய்த பாவமல்ல. நித்தமும் செய்துக்கொண்டே வருகிற கொலைபாதகமாயிருக்கிறது. எத்தனை இலை, எத்தனை தண்டு, எத்தனை கீரை, எத்தனை காய், எத்தனை பழம், பறித்துச் சாப்பிட்டீர்களோ, அத்தனை ஆத்துமாக்களையல்லவா வதை செய்தீர்கள்.

ஆனாலும், இலையும், கீரையும், காயும், கனியும், சாப்பிடத்தான் வேண்டும். சாப்பிடாமலிருந்தால், உலகத்தாரெல்லாரும் செத்துப்போவார்களே. புனர்சென்மம் பொய்யென்று இதினாலே விளங்கவில்லையா? கீரையும் காயும் சாப்பிடும்படி யார் வைத்தார்? யார் கொடுத்தார்? ஆண்டவரல்லவா? அவைகள் மறுபடியும் பிறந்த மனுஷருடைய சீவன்களாயிருந்தால், சாப்பிடும்படி கொடுப்பாரா? அதைச் சாப்பிடும்படி நம்மையும் இப்படிச் சிருஷ்டித்துவைப்பாரா? அந்தக் கீரைகள் சீவன்களானால், அவைகளை நித்தமும் வதைத்து கொலைபாதகஞ் செய்கிற சகலமான மனுஷர்களிலும் ஒருவனானாலும் அந்தப் பாவத்தை விட்டு கடத்தேற வழி இல்லையே. இப்படிப்பட்ட அக்கிரமத்தைக் கடவுள் ஏற்படுத்துவாரா? ஏற்படுத்தவே மாட்டார். ஆகையால் மரம் முதலானவைகள் இறந்துபோன மனுஷருடைய ஆத்துமாக்களல்ல. அவைகளை நியாயமாய்த் தின்னலாம். தின்பதற்கே தேவன் கொடுத்தார். மறு பிறப்புண்டென்று சொல்லுவதோ பொய்யான வார்த்தை.

## இரண்டாவது.

## மறு செனனம் உண்டென்கிற போதனை மனுஷர்களைப் பாவத்திலே இழுக்கின்றது.

இந்தப் பிறப்பிலே ஒருவனுக்குள் உண்டாகிற எல்லா இச்சைகளும் நடத்தைகளும் முன் பிறப்பின் வினைவசத்தினாலே உண்டாகிறதென்று போதிக்கிறார்கள். இதை நம்புவதினாலே வெகு பாவம் விளையுமே. முன் பிறப்பில் செய்த வினையினுடைய கட்டாயத்தினாலே அல்லவா இந்த இச்சை உண்டானது, ஆகையினாலே, இது கெட்டதானாலும் இதின்படியே நடக்கலாமென்று அனேக சனங்கள் சொல்லிக்கொள்ளவும், பயமில்லாமல் பொல்லாப்பைச் செய்யவும் ஏது உண்டாகிறது. இவ்விதமாய் மனுஷர்களைப் பாவமார்க்கங்களிலே இழுத்து, கெடுக்கிற இந்தப் போதனையானது தேவனாலே உண்டாகாமல், கெட்ட மனுஷர்களினாலே உண்டான அபத்த போதனையாயிருக்கிறது நிச்சயமே.

---

## மூன்றாவது.

## இந்தப் போதனை மனுஷர்களைப் பாவத்திலே இழுக்கிறதுமல்லாமல், அதிலே பூட்டியும் வைக்கின்றது.

உடம்பு சாகிறபோது, நித்திய மோட்ச கதியாவது நித்திய நரக கதியாவது ஆத்துமாவுக்குக் கிடைக்குமென்று சத்தியவேதம் தெரிவிக்கின்றது. அதை மனுஷர்களுக்கு

உபதேசித்தால், அவர்கள் பாவஞ் செய்வதற்குப் பயந்து, அதை விட்டு, மோட்சமார்க்கத்தைத் தேடிக்கொள்ள ஏதுவிருக்கும். அப்படிப் போதியாமல், கோடாகோடி சென்மங்களாகப் பிறக்கவேண்டுமென்று சொன்னால், மனுஷர்கள் நல்ல கதியைக் குறித்து ஏனோதானோவென்றிருந்து, வருவது வரட்டும்; என்ன செய்வோம், என்ன செய்தாலும், ஏற்பட்டிருக்கிற சென்மங்களுக்குத் தப்ப, வழியில்லையே; ஆகையினாலே அதைக் குறித்து நினைத்தாவது என்ன; எப்படி நடந்தாலும் சரிதான்; என்று எண்ணிக்கொண்டு, பாவத்தை விடமாட்டார்கள். மோட்ச வழியை விசாரிக்கமாட்டார்கள். தேவனிடத்தில் பாவமன்னிப்பைத் தேடமாட்டார்கள். பாவ மார்க்கத்தில் தானே நிலைத்திருப்பார்கள். இப்படியே இந்த உபதேசம் மனுஷரைப் பாவத்திலே பூட்டிவைக்கிறபடியினாலே, இதைத் தேவன் அருளிச் செய்யவில்லை. இது துஷ்ட மனுஷரும் நரகப் பேய்களும் கூடிக் கலந்து, தேவதுரோகமாய்ப் பிறப்பித்த கள்ளப் போதனை என்று விளங்குகின்றது.

* இருவினைகடமையுரைத்தேயுலகத்தாசான்
  எழுந்தவுடல்விழுந்தாவிபோனபின்பு
மறுசனனம்புகுந்துடலமெடுத்துப்பாரில்
  வருமென்றுவேதத்தால்வகுத்துச்சொல்வான்
கருவடைந்துபுவியில்வந்துவயதுநூறு
  கழிந்ததன்பின்பொழிந்ததென்றுற்குழந்தையாமோ
அறிவில்லார்மறுபிறவிபிறப்பாரென்றே
  அமட்டிவெகுபொருள்பறிப்பானுண்டைமாரே.

* இ—ள். உலகத்தாசான்—உலக குருவானவன். இருவினை கடமை—இரண்டு வினைகளை. உரைத்து—உண்டென்று சொல்லி. எழுந்தவுடல்—அவ்வினைகளாலுண்டான சரீரம். விழுந்து—பூமியில் விழுந்து. ஆவி போனபின்பு—உயிர் நீங்கினபின். மறுசனனம்—வேறொரு சென்மத்தில். புகுந்து — நுழைந்து. உடலமெடுத்து—சரீரமெடுத்துக்கொண்டு. பாரில்—பூமியில். வருமென்று—வருமென்று. வேதத்தால் — வேதவாக்கியங்களினால். வகுத்து—பிரித்து. சொல்வான் — சொல்வான். கருவடைந்து — கருப்பத்

இந்தப் பல நியாயங்களை நீங்கள் உற்றுப் பார்ப்பீர்களே யானால், சென்மாந்தரம் இல்லையென்று உங்களுக்கு நன்றாய்த் தெரியவரும்.

அப்படியிருக்க, நல்வினை தீவினைகளுக்குப் பலன் இல்லையா என்று கேட்டால், அதையே உங்களுக்குச் சொல்ல ஆசையாயிருக்கிறோம். அப்படிப்பட்ட பலன் உண்டு. நல்வினைக்குப் பலனாக நித்திய மோட்சம் உண்டு. தீவினைக்குப் பலனாக நித்திய நரகம் உண்டு. மனுஷன் சாகிறபோது, அவனுடைய சரீரம் சாகிறதேயல்லாமல், அவனுடைய ஆத்துமா சாகிறதில்லை. ஆத்துமாவானது என்றென்றும் சாகாது. உடம்பு சாகும்போது, ஆத்துமா மோட்சத்திலேயாவது நரகத்திலேயாவது போய்ச் சேரும். சேர்ந்த இடத்திலே எப்போதும் நீங்காமலிருக்கும். மோட்சலோகத்திலே சேர்ந்தால், அங்கேயே நிலைத்திருந்து, நித்திய சுகத்தோடே கூடிக்கொண்டு ஆனந்தத்தை அனுபவித்துக்கொண்டேயிருக்கும். அங்கே ஒரு நோவும் ஒரு துக்கமும் ஒரு குறைவும் இல்லை. நரக லோகத்திலே சேர்ந்தால், அங்கேயே இருந்து, நித்திய துக்கத்தோடே கூடிக்கொண்டு, பேயோடும் பிசாசோடும் பூதத்தோடும் நரகாக்கினியிலே புரண்டு, தீராத வேதனையை அனுபவித்துக்கொண்டே இருக்கும். அங்கே ஒரு சுகமும் ஒரு சந்தோஷமும் இல்லை. பிரியமானவர்களே, அந்த நரகத்திலே விழாமல் தப்பி மோட்ச பாக்கியத்தையும் பரம சிலாக்கியத்தையும், பெற்

---

தைச் சேர்ந்து. புவியில் — பூமியில். வந்து — பிறந்து. வயது நூறு—நூறுவயது. கழிந்ததன்பின்பு—நீங்கினபின். ஒழிந்ததென்றால்—இறந்ததென்றால். குழந்தையாமோ—குழந்தையாய்ப் பிறக்குமா. அறிவில்லார்—புத்தியில்லாதவர்கள். மறுபிறவி — மறுசென்மம். பிறப்பாரென்று—எடுப்பாரென்று சொல்லி. அமட்டி—பயமுறுத்தி. வெகுபொருள்—மிகுந்த திரவியத்தை. பறிப்பான்—பிடுங்கிக்கொள்வான். ஆண்டைமாரே—எசமான்களே (இதை யோசித்துப் பார்ப்பீர்களாக). எ-று.

றுக்கொள்ளுகிறதற்கு நாமெல்லாரும் பெரிய ஆசையோடே பிரயாசப்படவேண்டியது நியாயமும் நன்மையுமான காரியமல்லவா?

அந்த நரகலோகத்துக்குப் போகாமல் தப்புவதெப்படி? அந்த மோட்சலோகத்தை அடைவதெப்படி? அது தெரிய வேண்டுமே. அதற்கு நல்வினை செய்யவேண்டுமென்று சிலர் சொல்லுவார்கள். அதைக் குறித்துக் கொஞ்சம் விவரித்துச் சொல்லுகிறோம். நன்றாய்க் கேளுங்கள். இவ்வுலகத்திலே ஒருவன் பிறந்த நாள் முதல், நினைவினாலும் பேச்சினாலும் செய்கையினாலும் தேவனுடைய கட்டளைகளை மீறாமல், பரிசுத்த குணமும் பரிசுத்த நடத்தையுமுள்ளவனாக இருந்தால், அப்படிப்பட்டவனைப் புண்ணியாத்துமாவென்று சொல்லலாம். அவன் மோட்சலோகத்துக்குத் தக்கவனாயிருப்பான். தடையில்லாமல் அங்கே சேரலாம். பூமியில் எந்தத் தேசத்திலாவது, எந்தச் சாதியிலாவது அப்படிப்பட்டவன் உண்டோ என்று விசாரித்தாலோ, அப்படிப்பட்டவன் ஒருவனும் இல்லை. நாமெல்லாரும் தீவினை செய்தோம். நாம் பாவிகளானதினாலே, நம்முடைய குணங்களெல்லாம் பாவசம்பந்தமாயிருக்கிறது. நம்முடைய ஆத்துமா பாபாத்துமாவே. மோட்சம் அடையத்தக்க நல்வினையானது பாபாத்துமாவிலிருந்து பிறக்குமோ? பிறக்கமாட்டாதே. அப்படிப்பட்ட நல்வினை செய்வதற்கு நம்மில் திராணி எவ்வளவும் இல்லை.

இப்படியே மனுஷரெல்லாரும் பாவத்திலே கெட்டுக் கிடக்கிறார்கள். சீக்கிரமாய் மரணம் வரும். அவர்களைக் கவ்வுகிறதற்கு எதிரே நரகமானது வாய் திறந்து நிற்கிறது. மனுஷர்கள் செய்த பாவம் அவர்களை அந்த நரகத்துக்குள்ளே தள்ளும்படியாக இருக்கிறது. அந்தப் பாவத்தைத் தீர்க்க, அவர்களுக்கு வல்லமை இல்லை. அந்த நரகத்துக்குத் தப்ப, அவர்களுக்குள்ளே வழி இல்லை. நல்ல உலக

மாகிய மோட்சம் உண்டானாலும், அதைச் சேர அவர்களுக்குப் புண்ணியம் இல்லை. அப்படிப்பட்ட புண்ணியத்தை உண்டாக்கிக் கொள்ளவும், அவர்களுக்குச் சக்தி இல்லை. இப்படியிருப்பது பெரிய கேடல்லவா?

ஓ சனங்களே, உங்களுக்கு நல்ல சமாசாரம் தேவகிருபையினாலே அருளப்பட்டது. அதைக் கவனித்துக்கொள்ளுங்கள். நம்முடைய பாவத்தைத் தீர்க்க வல்லவர் ஒருவர் இருக்கிறார். நமக்காகப் பூமியில் வந்து, புண்ணியஞ் செய்துவைத்துப்போனவர் ஒருவர் இருக்கிறார். அவருடைய புண்ணியம் நமக்குக் கிடைத்தால், அதுவே நமக்காக நரகலோகத்தின் கதவைச் சாத்தும். நரகத்தின் வாயை அடைக்கும். நரக மார்க்கத்துக்கு நம்மைத் தப்புவிக்கும். நம்மை நரகத்தில் தள்ளும்படியிருக்கிற நம்முடைய தீவினைகளை அழிக்கும். மோட்ச கதவை நமக்குத் திறக்கும். மோட்ச மார்க்கத்திலே நம்மைச் சேர்க்கும். நித்திய பேரானந்தத்திலே நம்மைக் கூட்டும். சகல பாவத்தையும் நாம் வெறுத்துவிட்டு, அவருடைய புண்ணியத்தை நாம் தேடிக்கொள்ள வேண்டும்.

அப்படிப்பட்டவர் ஆர்? அவருடைய பேர் என்ன? அவர் இருப்பெங்கே? அவர் நமக்காகப் புண்ணியஞ் செய்தது எந்தவகை? அவனை அறிவதெப்படி? அவனைச் சேருவது எவ்விதம்? என்று விசாரியுங்கள். அதை உங்களுக்குச் சொல்லுகிறோம்.

அவருக்குப் பேர் இயேசுக்கிறிஸ்து. கர்த்தாவும் குருவுமானவர் அவர் ஒருவரே. அவர் தேவனுடைய ஒன்றான குமாரன். திரிலோகத்துக்கும் அவர் அதிபதி. வானங்களின் வானத்துக்குள்ளும் அடங்கமாட்டாத அவருடைய இருப்பை நாம் விரிவாய்ச் சொல்லுவதெப்படி? அவர் எங்கும் வியாபித்திருக்கிறார். தம்மை விசுவாசிக்கிறவனுடைய இருதயத்திலும் அவர் வந்து அருளோடே வாசம்பண்ணு

கிறார். மனுஷர்களெல்லாரும் பாவஞ்செய்து கெட்டுப்போகிறார்களென்று தேவன் பார்த்து, மனமிரங்கி, தம்முடைய குமாரனாகிய அந்த இயேசுக்கிறிஸ்துவை இரட்சகராகப் பூலோகத்திலே அனுப்பினார். அனுப்பப்பட்டவராகிய அவர், அனேக வருஷங்களுக்கு முன்னே இவ்வுலகத்திலே வந்து சேர்ந்து, மனுஷத்தன்மையைத் தரித்துக்கொண்டு, அவதரித்தார். இதுவே மெய்யான அவதாரம். அந்த இயேசுக்கிறிஸ்து தேவனுமாய் மனுஷனுமாயிருக்கிற ஒருவராகப் பூமியிலே தோன்றினார். முப்பத்துமூன்று வருஷம் பூமியிலே வசித்தார். அவர் போன இடமெல்லாம் கிருபைசெய்தார். சத்தியோபதேசங்களை உரைத்தார். மெய் வேதப் பொருளை விரித்தார். தமது தயவைத் தேடின யாவரையும் ஆசீர்வதித்தார். குருடரும், செவிடரும், ஊமைகளும் அவரிடத்தில் வந்து பணிந்தார்கள். வந்து பணியவே, கண்ணும் செவியும் வாயும் புதிதாகப் பிறந்ததுபோல, அவர்கள் பார்வையும் கேள்வியும் பேச்சும் அடைந்து மகிழ்ந்தார்கள். முடவரும், சப்பாணிகளும், குஷ்டரோகிகளும் அவரை நோக்கிக் கூப்பிட்டு, சுகப்பட்டார்கள். செத்த பிணங்களையும் எழுப்பும்படி அவரை வேண்டிக்கொண்டார்கள். வேண்டிக்கொள்ளவே, செத்தவர்கள் உயிர் பொருந்தி, பிழைத்தார்கள். இப்படிப்பட்ட அற்புதங்களினாலே தம்மைத் தேவனென்று எல்லாரும் தெரிந்துகொள்ள, காட்டினார். அனேகர் அவரை விசுவாசித்து, ஸ்துதித்தார்கள். பின்பு அவர் மன்னுயிருக்காகத் தம்முயிரை விட்டார். அவர் மகா பரிசுத்தர். அவர் புண்ணியம் நிறைந்தவர். அப்படிப்பட்டவர் பாடுபட்டு, உயிரை விடலாமா என்று கேட்டால், அவர் நம்முடைய பாவத்தைத் தம்முடையதாயிருந்தாற்போலே எடுத்துக்கொண்டார். பாவமில்லாத அவர் நம்முடைய பாவப் பளுவைச் சுமந்தார். நாம் நரகாக்கினை அடையாமல், தப்பும்படி, அவர் நமக்காகப் பெரிய ஆக்கினை பூமியிலே பட்டார். நமதுமேலே வரவேண்டிய தண்

டனை அவர் தமதுமேல் ஏற்றுக்கொண்டார். அவர் தமது ஆத்துமாவிலும் சரீரத்திலும் அந்தத் தண்டனையைச் சகித்தார். நம்மை நரகத்திலே தள்ளத்தக்க கோபாக்கினை அவருடைய ஆத்துமாவின்மேல் பெருவெள்ளம்போலே பாய்ந்தது. அதினாலே மிகுந்த மனவேதனை அனுபவித்தார். அப்போது அவருடைய வேர்வை இரத்த வேர்வையாகி, பெருந்துளிகளாய்த் தரையிலே ஒழுகி விழுந்தது. அவர் சரீரத்திலும் ஆக்கினை அடைந்தார். சிலுவை மரத்திலே அறையப்பட்டார். அவருடைய நன்மையான கையிலும் காலிலும் ஆணி அடிக்கப்பட்டது. மரணம் அடைந்தார். அப்போது சூரியன் அதைப்பார்க்கத் தைரியமில்லாமல் இருண்டது. பூமியும் துக்கித்து அதிர்ந்தது. மலைகளும் துயரப்பட்டு, பயந்து பிளந்தது. அந்தப் பாடுகளையெல்லாம் நமதுமேல் வைத்த அன்பினாலே இயேசுக்கிறிஸ்து பட்டார். ஆக்கினைப்படுவதற்கு அவரிடத்திலே ஏதுவொன்றுமில்லை. அவர் பட்டது நம்முடைய ஆக்கினை. அவர் சுமந்தது நம்முடைய பாவம். நம்மை நரகத்துக்குத் தப்புவித்து மோட்சத்தில் சேர்க்கும்படி இவ்விதம் வேதனைப் பட்டார். இப்படி நமக்காகப் பாவ நிவாரணமார்க்கத்தை உண்டாக்கினார். அவர் இறந்து மூன்றும் நாளிலே மறுபடியும் மகிமையோடே உயிர்த்தெழுந்து வந்தார். மறுபடியும் உலகத்திலே நாற்பது நாள் நடந்தும் போதித்தும் வந்தார். பின்பு ஆகாசமே பாதையாக மோட்சலோகம் போனார். அங்கே வீற்றிருக்கிறார். இவ்வகையாக அவர் பூமியிலே வந்து பிறந்து, பரிசுத்தமாய் நடந்து, நமக்காக வேதனை அடைந்து, தமது உயிரைத் தந்து, உயிருடன் எழுந்து, உபதேசித்து, பரலோகம் சென்றாரே; இதுவே அவர் நமக்காகச் செய்து வைத்துப்போன புண்ணியம். இது நம்மை இரட்சிக்கத் தக்க புண்ணியம். இந்தக் கிறிஸ்துவை அறிவது சத்திய வேதத்தினாலே. இவருடைய புண்ணியத்தை அடைவது விசுவாசத்தினாலே.

ஓ சனங்களே, கிறிஸ்துவேதம் ஒன்றுதான் சத்தியவேதம். வேறெல்லாம் பொய். அதைக் கண்ணாலே வாசியுங்கள். காதாலே கேளுங்கள். மனசாலே தியானியுங்கள். அதின்படியே நடவுங்கள். அப்போது புண்ணிய குருவாகிய கிறிஸ்துவை அறிவீர்கள். அவரை விசுவாசித்துக் கொள்ளுங்கள். பாவ மார்க்கங்களை விட்டு விலகுங்கள். நீங்கள் இதுவரையிலும் பாவஞ்செய்ததைக் குறித்து விசனப்பட்டு, துக்கித்துக்கொள்ளுங்கள். உங்கள் இருதயத்தைக் கிறிஸ்துவினிடத்திலே காணிக்கையாக ஒப்புவியுங்கள். அவரைத் தேவனென்றும், புண்ணியம் தருகிற குருவென்றும் நம்பி, அவர்மேல் ஆசைவைத்து, அவரையே சார்ந்து, எக்காலத்திலும் அவரைப் பிரார்த்தித்து, அவருடைய திவ்விய வாக்குப் பிரகாரம் நடவுங்கள். அப்போது அவர் உங்களை நரகத்திலே விழவிடாமல், உங்களைத் தம்மோடே இருக்கும்படி மோட்சலோகத்திலே சேர்த்துக் கொள்ளுவார்.



# உபகிரந்தம்.

## APPENDIX TO NO. VIII.

### முன் சொன்னவைகளுக்குச் சில உதாரணங்கள்.

(௧.) மனிதன் சரீரதோஷத்தால் தாவரமாகவும் வாயின் தோஷத்தால் பட்சி மிருகங்களாகவும் மனதோஷத்தால் ஈனசாதியாகவும் பிறப்பான் என்பது.

శరీరజైఃకర్మదోషై ర్యాతిస్థావరతాంనరః
వాచికైఃపక్షిమృగతాం మానసైరంత్యజాతితాం.

மனு. ௰௨: ௯.

*இதன் பதவுரை.*

*నరః—மனுஷன். శరీరజైః—சரீரத்தினுலுண்டான. కర్మదోషైః—பாவங்களினுலே. స్థావరతాం — தாவரத்தன்மையை. యాతి — அடைகிருன். వాచికైః — வாயினுலுண்டான. కర్మదోషైః—பாவங்களினுலே. పక్షిమృగతాం—பட்சிகளின் தன்மையையும் மிருகங்களின் தன்மையையும். మానసైః—மனதினுலுண்டான. కర్మదోషైః—பாவங்களினுலே. అంత్యజాతితాం—சண்டாள சாதித்தன்மையையும். యాతి—அடைகிருன்.*

### கருத்துரை.

மனுஷன் சரீர குற்றங்களினாலே தாவரமாகவும், வாயின் குற்றங்களினாலே பட்சி மிருகங்களாகவும், மனதின் குற்றங்களினாலே சண்டாளனாகவும் பிறப்பான்.

## (உ.) பாவத்துக்கும் புண்ணியத்துக்கும் பலனாகப் புனர் சேன்மம் ஏற்பட்டதென்பது.

తేభ్యాసాత్కర్మణాం తేషాం పాపానామల్పబుద్ధయః
సంప్రాప్నువంతిదుఃఖాని తాసుతాస్విహయోనిషు.

మను. ౧౨: ౭౪.

### இதன் பதவுரை.

అల్పబుద్ధయః—அற்பமான புத்தியுள்ள. తే—அவர்கள். పాపానాం—பாவமுள்ள. తేషాంకర్మణాం — அந்தக் காரியங்களை. అభ్యాసాత్—அடிக்கடி செய்வதினாலே. ఇహ— இவ்வுலகத்தில். తాసుతాసుయోనిషు—அந்தந்தப் பிறப்புகளிலே (தோன்றி). దుఃఖాని—துக்கங்களை. సంప్రాప్నువంతి—அடைகிறார்கள்.

### கருத்துரை.

புத்தியீனமுள்ளவர்கள் அடிக்கடி பாவஞ்செய்வதினாலே, அனேக சென்மங்களெடுத்து, வருத்தப்படுவார்கள்.

## (௩.) திருட்டுத்தனத்தால் உண்டாகிற ஈன சென்மங்கள்.

వృకోమృగేభంవ్యాఘ్రోశ్వం ఫలమూలంతుమర్కటః
స్త్రీమృక్షఃస్తోకకోవారి యానాన్యుష్ట్రఃపశూనజః.

మను. ౧౨: ౬౭.

### இதன் பதவுரை.

మృగేభం—மானையாவது யானையையாவது (ஒருவன் திருடினால்). వృకః—கோணுயாகவும். అశ్వం—குதிரையைத் (திருடினால்). వ్యాఘ్రః—புலியாகவும். ఫలమూలంతు—கனிகிழங்குகளைத் (திருடினால்). మర్కటః—குரங்காகவும். స్త్రీం—ஸ்திரீயைத் (திருடினால்). ఋక్షః—கரடியாகவும். వారి—தண்ணீரைத் (திருடினால்). స్తోకకః—சாதகப்பட்சியாகவும். యానాని—வாகனங்களைத் (திருடினால்). ఉష్ట్రః—ஒட்டகமாகவும். పశూన్—பசுக்களைத் (திருடினால்). అజః—வெள்ளாடாகவும் (பிறப்பான்).

### கருத்துரை.

திருடுகிறவர்கள் ஈன சென்மங்களை அடைவார்கள்.

**(௪.) பாபாத்துமா சுத்தியாவதற்குப் புனர்சேன்மம் ஏற்படுத்தப்பட்டதென்பது.**

క్రిమికీటపతంగానాం విడ్భుజాంచైవపక్షిణాం
హింస్రాణాంచైవసత్త్వానాం సురాపోబ్రాహ్మణోవ్రజేత్.

மனு. ௰௨: ௫௬.

### இதன் பதவுரை.

సురాపః—சாராயங்குடிக்கிற. బ్రాహ్మణః—பார்ப்பான். క్రిమికీటపతంగానాం—புழு பூச்சி விட்டில் முதலானவைகளின் (பிறப்பையாவது). విడ్భుజాం—மலந்தின்னுகின்ற. పక్షిణాంచైవ—பட்சிகளின் (பிறப்பையாவது). హింస్రాణాం—கொல்லுந்தன்மையுள்ள. సత్త్వానాంచైవ—செந்துக்களின் (பிறப்பையாவது). వ్రజేత్—அடைவான்.

## கருத்துரை.

*பிராமணன் மதுபானஞ் செய்தால், பூச்சி புழு முதலிய கொடுமையும் இழிவுமான பிறப்பில் பிறப்பான்.*

(௫.) திருடர் எலி காக்கை முதலான செந்துகளாகப் பிறப்பார்களென்பது.

ధాన్యంహృత్వాభవత్యాఖుః కాంస్యంహంసోజలంప్లవః
మధుదంశఃపయఃకాకో రసంశ్వానకులోఘృతం.

మనుః ௰௨: ௬௨.

### இதன் பதவுரை.

ధాన్యం— *தானியத்தை.* హృత్వా— *திருடி.* ఆఖుః—*எலியும்.* కాంస్యం—*வெண்கலத்தைத் (திருடி).* హంసః—*அன்னப்பட்சியும்.* జలం—*நீரைத் (திருடி).* ప్లవః—*நீர்க் காக்கையும்.* మధు—*தேனைத் (திருடி).* దంశః—*கொசுகும்.* పయః—*பாலைத் (திருடி).* కాకః—*காக்கையும்.* రసం—*இரசவர்க்கத்தைத் (திருடி).* శ్వా—*நாயும்.* ఘృతం—*நெய்யைத் (திருடி).* నకులః—*கீரிப்பிள்ளையும்.* భవతి—*ஆகிறான்.*

## கருத்துரை.

*தானியந் திருடினால், எலியாகவும்; வெண்கலந் திருடினால், அன்னப் பறவையாகவும்; தண்ணீர் திருடினால், நீர்க் காக்கையாகவும்; தேன் திருடினால், கொசுகாகவும்; பால் திருடினால், காக்கையாகவும்; எண்ணெய் முதலானவற்றைத் திருடினால், நாயாகவும்; நெய் திருடினால், கீரிப்பிள்ளையாகவும் பிறப்பான்.*

(கூ.) குருவின் மனைவியோடே விபசாரஞ் செய்கிறவன் புல் செடி முதலானவைகளாய் நூறு பிறப்பாக பிறப்பான்.

తృణగుల్మలతానాంచ క్రవ్యాదాందంష్ట్రిణామపి
క్రూరకర్మకృతాంచైవ శతశోగురుతల్పగః. மனு. ௰௨: ௫௮.

### இதன் பதவுரை.

గురుతల్పగః—குருவின் மனைவியைச் சேருகிறவன். తృణగుల్మలతానాంచ—புல் செடி கொடிகளுடையதும். క్రవ్యాదాం—மாமிசம் தின்கிற செந்துக்களுடையதும். దంష్ట్రిణామపి— கொடிய பற்களுள்ள செந்துக்களுடையதும். శతశః—அனேகமான. క్రూరకర్మకృతాంచైవ—கொடுஞ் செய்கை செய்கிற செந்துக்களுடையதுமான (பிறப்பையடைவான்).

### கருத்துரை.

குருவினுடைய பெண்சாதியைச் சேர்ந்தால், புல் செடி கொடிகளாகவும்; துஷ்ட செந்துக்களாகவும்; பிறப்பான்.



# வேதவாக்கியம்.

(௧.) புனர்சென்மம் இல்லை.

எபிரேயர், ௯. அதி: ௨௭.
யோபு, ௭. அதி: ௯, ௰.
யோபு, ௰௪. அதி: ௰, ௰௨.
லூக்கா, ௰௬. அதி: ௨௨, ௨௩.
லூக்கா, ௨௩. அதி: ௪௩.
௨. சாமுவேல், ௰௨. அதி: ௨௩.

(௨.) தேவன் அவன் அவன் செய்த கிரியைகளுக்குத் தக்கதாக அவன் அவனுக்குப் பலன் அளிப்பார்.

௨. கொரிந்தியர், ௫. அதி: ௰.
ரோமர், ௨. அதி: ௫—௰௧.
கலாத்தியர், ௬. அதி: ௭, ௮.
வெளிப், ௨௰. அதி: ௰௨—௰௫.
மத்தேயு, ௨௫. அதி: ௩௧—௪௬.
வெளிப், ௨௧. அதி: ௮.



# விதி.



இந்தத் தேசத்திலே அனேகர் புத்தி கலங்கி, மனம் இருண்டு, விதிவசமென்கிற ஒரு பொய்யை ஏற்படுத்தி, நடப்பதெல்லாம் அந்த விதிவசத்தினாலேதானே நடக்கிறதென்று சொல்லி, தாங்களும் கெட்டு, மற்றவர்களையும் கெடுக்கிறார்கள்.

கயிறு கொடுத்துப் பொம்மைகளை ஆட்டுகிறதுபோல, விதியானது நம்மை ஆட்டுகிறதென்றும், நாம் நினைக்கிறதும் பேசுகிறதும் செய்கிறதுமெல்லாம் நம்முடைய நினைவாகவும் பேச்சாகவும் செய்கையாகவும் இராமல், அந்த விதியின் காரியமாகவே இருக்கிறதென்றும், போதிக்கிறார்கள்.

இந்துக்களில் வெகுபேர் அதை நம்புகிறார்கள். அப்படிப்பட்டவர்களை நோக்கி, அன்பர்களே, நீங்கள் நரகத்திலே விழாமல் மோட்சம் அடையும்படி முயற்சி செய்யுங்களென்று உபதேசித்தால், அதற்கு உத்தரவாக அவர்கள் சொல்லுவார்கள்: நாங்கள் என்ன செய்வோம்? விதி எப்படியோ அப்படியே எங்களுக்கு நேரிடுமென்கிறார்கள். விதிவசம் விதிவசம் என்றே கூவுகிறார்கள். அவர்கள் வாயிலே பிறக்கிற பலத்த போக்கு இதுவே.

இந்தக் கெட்ட போதனையை நம்புகிறவர்கள் ஆத்துமலாபத்தைத் தேடமாட்டார்கள். அப்படிப்பட்டவர்களுக்குப் புத்தி சொன்னால், கேட்பார்களா? அவர்களுக்குச் சத்திய வேதத்தைக் காட்டினால், அதை மதிப்பார்களா? விதி

யினாலே ஆத்தும லாபம் வந்தால், வரும்: விதியினாலே ஆத்தும நஷ்டம் வந்தால், வரும்: நாங்கள் பிரயாசப்படவேண்டியதில்லை; விதியை யார் தடுப்பான், அதை யார் மாற்றுவான்? என்று சொல்லிக்கொண்டு அவர்கள், நரகத்துக்குத் தப்பவும், மோட்சத்தைச் சேரவும் வழி தேடமாட்டார்கள்.

இதுவுமல்லாமல், இந்தத் துர்ப்போதனையினாலே மனுஷர்கள் பாவத்திலே முழுகிப் போகிறார்கள். எப்படி நடந்தாலும் சரிதான், எல்லா நடத்தையும் விதிவசத்தினாலே உண்டாகிறதென்று எண்ணி, அவர்கள் எந்தப் பாவத்தையும் செய்யத் துணிவார்கள். இப்படியே மனுஷர்கள் சன்மார்க்கத்தில் நடப்பதற்குத் தைரியம் இழந்துபோகவும், துன்மார்க்கத்தில் வெட்கமில்லாமல் விழுந்து புரளவும், பண்ணுகிற இந்தப் போதனை இவ்வளவு கெட்டதென்று யார்தான் அளவிட்டுச் சொல்லத்தகும்? இந்தப் போதனை சத்தியமானால்; இனிமேல் வேதம் என்னத்துக்கு? தேவாராதனை என்னத்துக்கு? தேவபத்தியும் சன்மார்க்கமும் என்னத்துக்கு? அந்தப் பிரயாசையெல்லாம் ஒருவன் எடுப்பானேன்? அதையெல்லாம் விட்டுவிட்டு, கொஞ்சமும் அடக்கமில்லாமல் இச்சையின்படி நடந்தாலும், அதுவும் விதிவசந்தானே. ஆகையினாலே, குடித்து, வெறித்து, அடித்து, பறித்து, எந்தத் தீவினையும் செய்யலாமே.

விதிவசத்தினாலே எல்லாம் சம்பவிக்கிறதென்று நீங்கள் சொல்லுகிறீர்களே. அதற்கு என்ன சாட்சி தருவீர்கள்? நியாயமிருந்தால், அதை எடுத்துக் காட்டுங்கள்.

தலையெழுத்து உண்டு: அதை எல்லாருடைய தலையிலும் பிரமா எழுதியிருக்கிறானென்று சொல்லுவீர்கள்.

மற்றவர்களுக்கு விதியை ஏற்படுத்துகிறதாக நீங்கள் சொல்லுகிற அந்தப் பிரமாவுக்கு நேரிட்டதை நீங்கள் கேள்விப்பட்டதில்லையா?

கந்தப்புராணம்: தட்சகாண்டம்: உத்தரப்படலம்.

* அளந்துமண்கொண்டமாய னகனகரடைதலோடும்
கிளர்ந்தெழுகாரிவேதாக் கேழ்கிளருச்சிச்சென்னி
களைந்துதன்னகத்தாலெய்திக் காலுறுகுருதிநீத்தம்
வளைந்ததுபுவியைத்துஞ்சி மலரயன்றானும்வீழ்ந்தான். (௬௭க.)

சிவனானவன் வைரவரூபமாய்த் தோன்றித் தன் நகத்தினாலே பிரமாவின் தலையொன்றைக் கிள்ளிப்போடவே, அப்படி உண்டான காயத்தினாலே இரத்தம் பெருவெள்ளமாய்ப் பாய்ந்தது. பிரமாவும் விழுந்து செத்தான், என்று இந்தப் பாட்டிலே சொல்லியிருக்கிறது.

அவனவனுக்கு வரப்போகிற கதியை அவனவனுடைய தலையிலே எழுத்தாக எழுதுகிறானென்று நீங்கள் சொல்லுகிற அந்தப் பிரமா தன்னுடைய தலைக்குமாத்திரம் நல்ல கதியை எழுதாமல் மறந்துபோனானோ? சர்வலோகத்தாருக்கும் தானே விதியை ஏற்படுத்துகிறவனாயிருக்க, எப்படியும் தன் சொந்த தலைக்கு நல்ல எழுத்து எழுதிக்கொள்வானேயல்லாமல், கெட்ட எழுத்து எழுதிக்கொள்ளமாட்டானே. தான் சாக மருந்து சாப்பிடுவார்களா? அப்படி எழுதிக்கொண்டாலும், தலை போய்விட்டதே. போய்விடுமென்று அவனுக்கு முன் தெரியாமல் போனதல்லவா?

---

* இ—ள். மண் — பூமியை. அளந்துகொண்ட — அளந்த. மாயன்—விஷ்ணு. அகல்—விசாலமான. நகர்—பட்டணத்தை. அடைதலோடும் — சேர்ந்தவுடனே. கிளர்ந்து—விளங்கி. எழு — எழுந்த. காரி—வயிரவன். வேதா—பிரமனுடைய. கேழ்—நிறம். கிளர்—விளங்குகிற. உச்சிச்சென்னி — நடுத்தலையை. தன்னகத்தால்—தனது நகத்தினால். களைந்து—கிள்ளி. எய்தி—அடைய. காலுறு—கக்குகிற. குருதிநீத்தம் — இரத்தப்பிரவாகம். புவியை — பூமியை. வளைந்தது — சுற்றிக்கொண்டது. மலர் — தாமரை மலரிலிருக்கிற. அயன்றானும்—பிரமனும். துஞ்சி—களைத்து. வீழ்ந்தான்—விழுந்தான். எ—று.

இப்படித் தனக்கே நடக்கப்போகிறதை அறியாத அந்தப் பிரமா மற்றவர்களுக்கு நடக்கப்போகிறதை எப்படி அறிவான்? தன்னுடைய தலைக்கு அவன் நியமித்துக்கொண்ட விதி மாறிப்போனால், மற்றவர்களுடைய தலைக்கு அவன் வைத்த விதி எப்படி நிலைநிற்குமோ?

விதிக்குக் கர்த்தாவென்று நீங்கள் சொல்லுகிற இந்தப் பிரமாவைக் குறித்து இன்னொரு காரியத்தைக் கேளுங்கள்.

**செவ்வந்திப்புராணம்: பிரமதேவன் அசத்தியந் தீர்ந்த சருக்கம்.**

* விடைக்குன்றுகைப்பான்வெகுண்டுரைப்பா
  னிதழாயிரமும்வெண்மதியம்
அடைக்குங்கமலத்திருப்போனே
  யாராதனையுமரிதாவாய்
படைக்குந்தொழிலுமுனக்கொழித்தோ
  மென்றானயனும்பயந்தயர்ந்தான்
சடைக்கொன்றையினான்றாளிணைமேல்
  வீழ்ந்தானெழுந்துசாற்றுவான். (௰௬.)

பிரமா சிவனுடைய முடியைக் காணாமல்போயும், கண்டதாகப் பொய் சொன்னதினாலே, சிவன் பிரமாவின்மேல்

* இ-ள். விடைக்குன்று—மலையையொத்த ரிஷபத்தை. உகைப்பான்—ஏறிச் செலுத்துகிற சிவன். வெகுண்டு—கோபித்து. உரைப்பான்—சொல்லுகிறான். வெண்—வெண்மையான. மதியம்—சந்திரனால். இதழாயிரமும்—ஆயிரமிதழ்களும். அடைக்கும்—மூடிக்கொள்ளும். கமலத்து—தாமரைப் புஷ்பத்தில். இருப்போனே—இருக்கின்ற பிரமாவே. ஆராதனையும்—பூசையும். அரிதாவாய்—இல்லாமற் போவாய். படைக்குந் தொழிலும்—சிருஷ்டித் தொழிலும். உனக்கு—உன்னிலிருந்து. ஒழித்தோம்—நீக்கினோம். என்றான்—என்று சபித்தான். அயனும்—பிரமனும். பயந்து—பயந்து. அயர்ந்தான் — சோர்ந்தவனாய். சடை — சடையில். கொன்றையினான் — கொன்றை மாலையைத் தரித்த சிவனுடைய. தாளிணை மேல்—இரண்டு பாதத்தில். வீழ்ந்தான்—நமஸ்கரித்து. எழுந்து—எழுந்திருந்து. சாற்றுவான்—சொல்லுவான். எ-று.

கோபித்து, இனிமேல் அவனுக்குப் பூசையும் சிருஷ்டித் தொழிலும் இல்லாமல் போகும்படி அவனைச் சபித்தானென்று இந்தப் பாட்டிலே கண்டிருக்கிறது.

பொய் சொல்லி அதினிமித்தம் சாபம் அடைந்தவன் உங்கள் தலையிலே எத்தனை எழுத்து எழுதினபோதிலும், அதை நம்புகிறதெப்படி?

மேலும், தலையிலே எழுத்து உண்டென்று நீங்கள் அறியாமையினாலே சொல்லுகிறீர்கள். தலையோட்டிலே தெரிகிற கீற்றும் கோடும் எழுத்தாயிருக்கிறதென்று நினைக்கிறீர்களா? எப்போதாவது கிட்டப்போய்ப் பார்த்துச் சோதித்தீர்களா? அது எலும்போடே எலும்பு சேர்ந்த சந்தேயல்லாமல், அது எழுத்தல்ல. தலையோடானது ஒரே ஒரு எலும்பல்ல. அது பல எலும்புகளின் சேர்க்கை. அந்த எலும்புகள் ஒன்றோடொன்று பொருந்துகிற இடங்கள்தோறும் சிறு சந்துகள் வரிசையாகத் தோன்றும். அதை நீங்கள் தூரத்திலே பார்த்து, இன்னதென்று தெரியாமல் மயங்கி, எழுத்தென்று சொல்லிப்போட்டீர்கள். இதென்ன புத்தியீனம்! ஒரு தச்சன் இரண்டு பலகைகளை எடுத்து அறுத்து ஒன்றோடொன்று இசைத்துத் தைத்தபின்பு, அந்த இரண்டு பலகையின் நடுவே தோன்றுகிற சந்துவரிசையை எழுத்தென்று ஒருவன் சொன்னால், நீங்கள் சிரிக்கமாட்டீர்களா? இப்படியிருக்க, விதிவசமென்பதற்குத் தலையெழுத்தே சாட்சியென்று நீங்கள் சொல்லும்போது, உலகமெல்லாம் நகைக்காதோ, சொல்லுங்கள்.

ஓ சனங்களே, நீங்கள் இப்படிக் காரணமில்லாமல் புகழ்ந்து பேசுகிற விதியானது என்ன? அது ஒரு தெய்வமா? நீங்கள் சொல்லுகிறதைப் பார்த்தால், அதை ஒரு தெய்வத்தைப் போலக் கொண்டாடுகிறீர்கள். நியாயத்தைப் பார்த்தாலோ, அது ஒரு வீணான கட்டுக்கதையாய்த்தான் இருக்கிறது. பிரமா விதிகர்த்தாவல்லவென்று மேற்சொன்ன நியா

யங்களினுலே தள்ளுண்டது. ஆனுலும், எப்படியும் விதி யொன்றிருக்கிறதென்றும், அது கடவுளாலே ஏற்பட்டதென் றும், சிலர் சாதிக்கிருர்கள். ஆகையினுலே அதுவும் தகுதி யல்லவென்று அனேக நியாயங்களினுலே ரூபிக்கலாம்.



## முதலாவது.



### விதியினுலே யாவும் நடக்கிறதென்று சொன்னுல், கடவுளே பாவத்துக்குக் காரணரா யிருக்கிருரென்று சொன்னதாக இருக்கும்.



கடவுள் எல்லா நடத்தைகளையும் விதிக்கிறவராளுல், மனு ஷருடைய கெட்ட நடத்தைகளையும் உண்டாக்கிவைக்கிறவ ராயிருக்கிருர். மனுஷருடைய கெட்ட நடத்தைகளை அவ ரே உண்டாக்கிவைக்கிறவராளுல், அவரே பாவத்துக்குக் காரணரேயல்லாமல், மனுஷர் பாவிகளல்ல என்று சொல்ல வேண்டிவரும். அப்படிச் சொல்லலாகுமா? அப்படிச் சொல் லுகிறவர்களே தேவனை நிந்திக்கிறவர்கள். அப்படிப்பட்ட வர்களே அளவில்லாத பாபிஷ்டர்கள். அப்படிப்பட்டவர் கள் தீ நரகத்தில் விழுவார்கள். தேவன் பாவத்துக்குக் கார ணரல்ல. அவர் பாவமில்லாதவர். அவர் மகா பரிசுத்தர். அவர் பாவத்தைப் பகைக்கிறவர். பாவமானது அவரிடத் திலே கிட்டலாகாது. அவர் இருக்கிற மோட்சலோகத்திலே அது அடிவைக்கவுமாகாது. அப்படிப்பட்ட பரிசுத்தமு டைய கடவுள் மனுஷர்களைப் பாவத்துக்குட்படுத்துவாரா? பாவஞ் செய்யவேண்டுமென்று மனுஷர்கள்மேல் கட்டாய

மாய்க் கெட்ட விதியை வைப்பாரா? வைக்கவே மாட்டார். ஆகையினாலே, விதிவசமென்பது பொய்.

மேலும், தேவனே பாவத்துக்குக் காரணரானால், மனுஷர்கள் பாவஞ் செய்ய வேண்டாமென்று அவர் எப்படிக் கட்டளைக் கொடுப்பார்? அப்படிப்பட்ட கட்டளையைக் கொடுத்திருக்கிறாரென்று நீங்களும் ஒப்புக்கொள்ளுகிறீர்கள். சமஸ்த மனுஷர்களுடைய புத்தியிலும் அந்தக் கட்டளைகளை எழுதி வைத்திருக்கிறார். தாமே பாவத்துக்கு மூலமானால், மற்றவர்களும் பாவஞ்செய்யப் பிரியப்படுவாரேயல்லாமல், பாவஞ்செய்ய வேண்டாமென்று கட்டளையிடமாட்டாரே. இப்படியிருக்க, மனுஷர்கள் பாவஞ் செய்கிறது அவருக்குச் சித்தமல்லவென்றும், பாவத்தை அவர் வெறுக்கிறாரென்றும், பாவத்தைச் செய்யும்படி ஒரு விதியை ஏற்படுத்தமாட்டாரென்றும், நிச்சயப்படுகின்றது. ஆகையினாலே, விதிவசமென்பது பொய்.

இதுவுமல்லாமல், தேவன் பாவத்துக்குக் காரணராயிருந்தால், மனுஷர்களுக்கு எப்படி நியாயந் தீர்ப்பார்? தீவினைக்கு நரகமே பலன். பாவஞ் செய்கிறவர்களைத் தேவன் நரகத்திலே தள்ளித் தண்டிப்பாரென்று நீங்களும் ஒப்புக்கொள்ளுகிறீர்கள். தேவனே விதியை ஏற்படுத்தி, மனுஷர்களைப் பாவஞ் செய்யும்படி பண்ணினால், அவர்களை எப்படித் தண்டிப்பார்? தண்டிப்பதற்கு நியாயம் இருக்கமாட்டாதே. ஆனாலும், பாபாத்துமாக்களை நீதிபராகிய கடவுள் தண்டிக்கிறது நிசமே. ஆகையினாலே, அவர் பாவத்துக்குக் காரணரல்ல. விதிவசமென்பது பொய்யே.

ஓ சனங்களே, நீங்கள் செய்கிற பாவங்களைத் தேவன் மேலே ஏற்றிவைக்கலாமென்று பார்க்கிறீர்கள். அதினாலே விதிவசமென்று ஒரு தந்திரோபாயத்தைக் கற்பித்தீர்கள். அது வீணான வேலை. நீங்கள் செய்கிற பாவம் உங்களுடைய சொந்த செய்கையாயிருக்கிறதேயல்லாமல், அது கட

வுளுடையதல்ல. பயப்படுங்கள். விதிவசத்தினுலே பாவஞ் செய்கிறேமென்று இனிமேல் போக்குச் சாக்குச் சொல்லாதேயுங்கள். சொன்னுல், உங்கள் போக்குகளைத் தேவன் ஒத்துக்கொள்ளுவாரா? அவனை நீங்கள் தூஷிக்கிற அந்தத் தூஷணத்தைப் பாராமல் விடுவாரா? அதைச் சகிப்பாரா? அதினிமித்தம் உங்களை எரிகிற நரகத்திலே அமிழ்த்தமாட்டாரா? நிதானித்து அறியுங்கள்.



## இரண்டாவது.



## விதியினுலே யாவும் நடக்கிறதென்று சொன்னுல், மனுஷனனவன் சுயாதீனமில்லாத ஒரு பொம்மையாயிருக்கிறனென்று சொன்னதாக இருக்கும்.



அப்படிச் சொல்லுவதினுலே, எவ்விதத்திலும் நியாய விரோதம் உண்டாகும். மனுஷன் பொம்மையல்ல என்கிறதற்கு, உங்கள் சொந்த மனமே சாட்சி. ஏதாவது ஒரு காரியத்தைச் செய்யவேண்டுமானுல், அதைச் செய்யவும் உங்களுக்குத் திராணி உண்டு. செய்யாமல் விடவும் உங்களுக்குத் திராணி உண்டு. உங்களிடத்திலே நான் வந்து, எனக்காக ஒரு பொய்யைச் சொல்லுங்கள்; சொன்னுல், நூறு ரூபாய் தருகிறேனென்று உங்களுக்குத் துர்ப்போதனை செய்தால், அந்த நூறு ரூபாயைப் பார்த்து இச்சித்து, பொய் சொல்வதற்கும் நீங்கள் வல்லவர்கள். பொய் சொல்வது ஆகாதென்று யோசித்து அந்தப் பொய்யைச் சொல்லாமலிருக்கிறதற்கும் நீங்கள் வல்லவர்கள். இந்த வல்லமை

உங்களுக்கு உண்டாயிருக்கிறதினாலே நீங்கள் பொம்மைகளல்ல. சுயாதீனமுள்ளவர்களாயிருக்கிறீர்கள். இது உங்களுடைய மனசுக்குத் தெரியும். உங்கள் நெஞ்சே சாட்சி. ஆகையினாலே, விதிவசமென்பது பொய்.

நூறு ரூபாயை விரும்பி, தேவ கட்டளையை மீறி, பொய் சொல்லி, பின்பு "என்னாலேயல்ல இந்தப் பொய் பேசப்பட்டது, இது விதிவசத்தின் காரியமே" என்று சொன்னால், அது ஒரு நியாயமோ, ஒரு சுத்த புளுகோ, நீங்களே சொல்லுங்கள்.

மனுஷன் பொம்மையல்ல என்பதற்கு, உங்கள் செய்கையும் சாட்சி. ஒரு இராத்திரியிலே திருடன் ஒருவன் உங்கள் வீட்டிலே கன்னமிட்டு, உங்கள் துணி மணிமுதலானவைகளை எடுத்துக்கொண்டு போகுந்தருணத்திலே, அவனை நீங்கள் பிடித்துக்கொள்ளவே, அந்தத் திருடன் உங்களைப் பார்த்துச் சொல்லுகிறான்: "ஓ தருமபிரபுவே, என்னைப் பிடிக்கவேண்டாம்; என்னாலேயல்ல இந்தத் திருட்டு வந்தது; இது விதிவசத்தினாலே உண்டானது; நானல்ல, அந்த விதிவசமே குற்றவாளி; அதைப் பிடித்து, போலீசுக்கு இழுத்து ஒப்புவித்து, நல்ல தண்டனை செய்வித்தால், அதுவே தருமமாயிருக்கும். அந்த விதிவசந்தான் பூமியிலேயிருக்கிற பெரிய கள்ளன். அது அகப்பட்டால், உலகத்துக்குப் பெரிய நன்மை உண்டாகும். தயவுசெய்து என்னை விட்டுவிடும்" என்கிறான். அப்படி அவன் கெஞ்சினாலும் நீங்கள் என்ன உத்தரவு சொல்லுவீர்கள்? "ஓ திருடா, திருடவேண்டாமென்று தேவ கட்டளையும் இருக்கிறது. திருடுவது குற்றமென்று நீயும் அறிவாய். தேவ கட்டளையையும் உன் மனச்சாட்சியையும் மீறி, என் வீட்டில் புகுந்து திருடினபின்பு, நீ செய்த குற்றத்தை விதிவசமென்று அலப்புகிறாய். இப்படிப்பட்ட போக்குச் சொல்லுகிறவன் நித்திய

மும் திருடுவான், உனக்கு இரட்டிப்பான ஆக்கினை இடு வதே நியாயமென்று சொல்லி, அவனைப் போலீசுக்கு இழுத் துக்கொண்டுபோய்ச் சேவகர் கையில் ஒப்புக்கொடுப்பீர்க ளல்லவா? அந்தத் திருடனை ஒப்புக் கொடுக்கிற அந்தச் செய்கையினாலே மனுஷன் பொம்மையல்லவென்று காண பிக்கிறீர்கள். ஆகையினாலே, விதிவசமென்பது பொய்.

* நன்னிலைக்கட் டன்னை நிறுப்பானுந்தன்னை
நிலைகலக்கிக் கீழிடு வானு—நிலையினு
மேன்மேலுயர்த்து நிறுப்பானுந்தன்னைத்
தலையாகச்செய்வானுந் தான்.

நல்ல நிலையினிடத்திலே தன்னை நிறுத்திக்கொள்ளுகிறவ னும், அந்த நல்ல நிலையைக் கெடுத்துத் தன்னைக் கீழாக்கிக் கொள்ளுகிறவனும், தானே என்று இந்தப் பாட்டிலே சொல்லியிருக்கிறது. அப்படியிருக்க, மனுஷன் பொம்மை யல்ல. அவன் சுயாதீனன். ஆகையினாலே, விதிவசமென் பது பொய்.



நாலடியார், உரு-ம் அதி: அ.

* இ-ள். தன்னை—(ஒருவன்) தன்னை. நன்னிலைக்கண்—நல்ல நிலையில். நிறுப்பானும்—நிற்கச் செய்கிறவனும். தன்னை—தன்னை. நிலை—நிலையிலிருந்து. கலக்கி—கெடுத்து. கீழிடுவானும்—தாழ்த் துகிறவனும். நிலையினும்—நிலையிலிருந்து. மேன்மேல்—அதிகமதி கமாக. உயர்த்து—உயரச்செய்து. நிறுப்பானும்—நிறுத்துகிறவனும். தன்னை—தன்னை. தலையாக—முதன்மையாக. செய்வானும்—செய் கிறவனும். தான்—தானேயாம். எ-று.

## மூன்றாவது.

### நீங்கள் வழக்கமாய் நடக்கிற நடத்தைகளைப் பார்த்தால், விதிவசமென்கிற பேச்சை நீங்கள் நம்புகிறதில்லையென்று தோன்றுகிறது.

உங்கள் முதுகிலே ஒரு கட்டி புறப்பட்டது. அதிலே சீழ் பிடித்து, நோவு நிறைந்தது. பகலிலே ஆறுதலில்லை. இராவிலே தூக்கம் இல்லை. "ஓகோ, விதிவசம் எப்படியோ, அப்படியே நடக்கட்டும். இது சுகப்படுகிறதானால், சுகப் படும். இல்லாவிட்டால், சுகப்படாது. ஆகையினாலே ஒன் றும் செய்யவேண்டியதில்லை" என்று சொல்லி, பல்லைக் கடித்து, சும்மா இருந்து விடுவீர்களா? விடமாட்டீர்கள். ஒற்றிடம் போடுவீர்கள். தைலம் பூசுவீர்கள். உள்ளுக்கு மருந்து சாப்பிடுவீர்கள். பத்தியம் காப்பீர்கள். ஆகை யால், விதிவசமென்கிற பேச்சை நீங்கள் நம்புகிறதில்லை யென்று தோன்றுகிறது.

நாங்கள் இன்னொரு திருஷ்டாந்தத்தைச் சொல்ல, உற் றுக் கேளுங்கள். நீங்கள் சமுசாரக்காரர். குடும்ப சம்ரட் சணை செய்யவேண்டும். பெண்சாதி, பிள்ளை குட்டிகளைக் காப்பாற்றவேண்டும். "விதிவசம் அப்படியானால், எனக் கும் என் வீட்டாருக்கும் அன்ன வஸ்திரம் கிடைக்கும். விதிவசம் அப்படியல்லாதே போனால், எனக்கும் அவர்க ளுக்கும் கிடையாது: ஆனதினாலே உழைக்க நிமித்தமில்லை. வீட்டு மூலையிலே குந்திக்கொள்ளுகிறதும் தூங்குகிறதுமே

சரியான காரியம்," என்று சொல்லுவீர்களா? அப்படிச் சொல்லமாட்டீர்கள். புறப்பட்டு வேலை செய்வீர்கள். ஒரு விதத்திலே சம்பாத்தியம் இல்லாமல் போனாலும், மனஞ் சோர்ந்துபோகமாட்டீர்கள். வேறொரு விதத்திலே கஷ்டப் படுவீர்கள். உங்களுடைய வாய்க்கும், உங்கள் பிள்ளை களின் வாய்க்கும் கஞ்சி கிடைக்கும் வரையிலும் சும்மா இருக்கமாட்டீர்கள். ஆகையினாலே, விதிவசமென்கிற பேச் சை நீங்கள் நம்புகிறதேயில்லையென்று தோன்றுகிறது.

ஆடிக்காற்றில் இலவம் பஞ்சு பறந்ததுபோல, நாங்கள் சொன்ன நியாயங்களுக்கு முன் விதிவசமென்பது துரத்தப் பட்டதை நோக்கிப் பாருங்கள்.

ஓ சனங்களே, உலக விஷயத்திலே விதிவசமென்று நீங் கள் போக்குச் சொல்லுகிறதில்லையே. ஆத்தும விஷயத் திலே ஏன் அந்தப் போக்கைக் கொண்டுவந்து வைக்கிறீர் கள். வேடன் குருவியைப் பிடித்துக் கொன்றுபோடும்படி எப்படிக் கண்ணிவைக்கிறானோ, அப்படியே விதிவசமென் கிற போதனையைக் கற்பித்தவர்கள் உங்கள் ஆத்துமாவைக் கெடுக்கத்தக்கதாக அதைக் கற்பித்தார்கள். அதின் சமீபத் துக்குப் போகாதேயுங்கள். அதிலே கால் சிக்கிக்கொள் ளாதேயுங்கள். அதிலே அகப்படுகிறவன் கெட்டுப்போ வான்.

பிரியமானவர்களே, இதைக் குறித்துச் சத்தியமான உப தேசத்தைத் தெரிவிக்கிறோம். அது உங்களுக்கு விளங் கும்படி நாலு காரியங்களை விவரிக்கிறோம்.



## முதலாவது.

## தேவன் சகலத்தையும் நடத்துகிருரென்று அறியுங்கள்.

தேவன் ஒருவர் இருக்கிருர். அவர் சர்வஞானமுள்ளவர். அவர் சர்வவல்லமையுடையவர். அவர் சர்வத்துக்கும் மேலானவர். நடக்கப்போகிற யாவற்றையும் முன் அறிந்தும் குறித்தும் இருக்கிருர். அவருடைய சித்தமில்லாமல், ஒன்றும் நடப்பதில்லை. அவருடைய சித்தத்தின்படியே சகலமும் நடந்தேறி முடியும். அவரே சர்வாதிபதி. இது மெய்யான வார்த்தை.



## இரண்டாவது.

## தேவன் மனுஷனைப் பொம்மையாக உண்டாக்காமல், அவனைச் சுயாதீனமுள்ளவனுக உண்டாக்கிருரென்று அறியுங்கள்.

சுயாதீனமான வஸ்து எப்படிப்பட்டது? தானே ஒன்றைச் செய்யவும், ஒன்றைச் செய்யாமலிருக்கவும் திராணியுள்ளது எதுவோ, அதுவே சுயாதீனமான வஸ்து. மனுஷன் அப்படிப்பட்ட வஸ்து. ஒன்றைச் சேரவும் விலகவும், ஒன்றைப் பண்ணவும் பண்ணுதிருக்கவும், தகுந்த வல்லமையைத் தேவன் அவனுக்குக் கொடுத்திருக்கிருர். ஆகையினுலே, மனுஷன் தேவனுலே உண்டாகி அவராலே

பிழைக்கிறவனுயிருந்தும், அவன் சுயாதீனன். அவன் பொம்மையல்ல.(௪.) மனுஷன் சுயாதீனனுயிருக்கிறதினுலே தான் தேவன் அவனுக்குக் கட்டளைகளை இட்டிருக்கிறுர். "தீமை செய்யாதே, நன்மை செய்" என்கிறதே அவரிட்ட கட்டளை. மனுஷன் பொம்மையானுல், இந்தக் கட்டளை அவனுக்கு இடுவதெப்படி? நன்மை தீமைகளைச் செய்ய வல்லமையுள்ளவனுக்கல்லவா அப்படிப்பட்ட கட்டளை இடலாம்?

தேவன் சகலத்தையும் முன்னதாகத் திட்டப்படுத்தி, தமது சித்தப்படி நடத்திஞல், மனுஷனுடைய சுயாதீனம் கெட்டுப்போகவில்லையோ என்றுல், கெட்டுப்போகவில்லை. அந்தச் சுயாதீனத்தைத் தாம் கெடுக்கிறதில்லையென்று தேவனே தெரிவித்திருக்கிறுர். தினந்தினம் சுயாதீனமாய்ப் பல பல காரியங்களைச் செய்கிறுமென்று நம்முடைய மனமும் சாட்சியிடுகின்றது. தேவன் சகலத்தையும் முன்னதாகத் தீர்மானித்து, தமது தீர்மானத்தின்படி யாவற்றையும் நடத்தி ஆண்டு முடிக்கிறுர். அது மெய்தான். ஆனுலும், அவர் மனுஷருடைய சுயாதீனத்தைக் கெடுக்கிறதுமில்லை. அவர்களைக் கட்டாயஞ் செய்கிறதுமில்லை. சர்வத்தையும் நடத்துகிற அவர் மனுஷருடைய சுயாதீனம் கெடாதவிதமாய்த்தான் நடத்துகிறுர். மனுஷருடைய சுயாதீனத்தைக் காப்பாற்றியே எல்லாவற்றையும் நிறைவேற்றுகிறுர்.

இப்படியிருக்க, "தேவன் சகலத்தையும் ஆளுகிறபடியினுலே, எனக்குச் சொந்த சக்தி இல்லாமல் போய்விட்டது, நான் ஒன்றும் செய்யவேண்டியதில்லை" என்று ஒருவன் சொல்லலாகாது. மனுஷர்களுக்கு எண்ணெய் கிடைக்கும்படி தேவன் திட்டப்படுத்தியிருக்கிறுர். ஆனுலும், மனுஷர்கள் எள்ளைச் சேர்த்து, செக்காடினுலல்லவா அந்த எண்

(௪.) உ௬௧-ம் பக்கத்திலுள்ள சுலோகத்தைக் காண்க.

ணை அவர்களுக்குக் கிடைக்கும். அப்படியிருக்க, "என்னுடைய செய்கையினாலே ஒன்றும் இல்லை" என்று ஒருவன் சும்மா இருக்கக் கூடாது. தேவனை நம்பி, அவருக்குக் கீழ்ப்படிந்து, நாமும் தகுந்த முயற்சிசெய்தால், அவர் தீர்மானித்ததெல்லாம் நமக்கு நன்மையாக முடியும்.



## மூன்றாவது.



## மனுஷன் பாவஞ்செய்தால், நரகத்துக்குப் போவானென்று அறியுங்கள்.

"நான் மோட்சஞ் சேருவதற்குத் தேவன் தீர்மானித்திருந்தால், அப்படியேயாகும், நான் எப்படி நடந்தாலும், அக்கறை இல்லை" என்று சொல்லுவாயானால் உன்னைப் பைத்தியக்காரன் என்றே தீர்க்கவேண்டியது. தேவன் சகலத்தையும் முன்னதாகத் தீர்மானித்தது சத்தியமே. ஆனாலும், நீ தகாதவிதமாய் நடந்தால், கெட்டுப்போகமாட்டாயா? அது எப்படியென்றால், நீ ஒரு புலியின் குகைக்குள் போகப் பிரயத்தனஞ் செய்யும்போது, ஒருவன் உன்னைப் பார்த்து, தடுத்து, "ஓ அப்பா, அங்கே போகாதே, உள்ளே புலி இருக்கிறது" என்று கூவவே, நீ அவனை நோக்கி, "பறவாயில்லை, புலி என்னைப் பிடிக்காதபடி விதிவசம் இருந்தால், என்னைப் பிடிக்கமாட்டாது". என்று சொல்லி, அந்தக் குகையிலே போனால், நீ அந்தப் புலியின் வாயிலே அகப்படுவாயல்லவா? அப்படிப்போல, நீ பாவமார்க்கங்களுக்குள்ளே போனால், மோட்சத்தைக் காணமாட்டாய், நீ நரகத்திலே விழுவாய்.



## நாலாவது.

## மனுஷன் ஆத்துமலாபத்தை, தேவன் சொன்ன வழிப்படியே தேடினால், அதை அடைவானென்று அறியுங்கள்.

சும்மா விரும்புகிறதினாலேயல்ல, காரியம் வாய்க்கிறது. நாடி, தேடி, முயற்சிசெய்யவேண்டியது. தூங்குகிற சிங்கத்தின் வாயிலே மான் வந்து விழுகிறதில்லை.(உ) அப்படியே நீங்கள் ஆத்துமலாபத்தைத் தேடாமல்போனால், உங்களுக்கு அது சித்தியாகப் போகிறதில்லை.

முயற்சியுடையார் இகழ்ச்சியடையார் என்கிற பழமொழியைக் கேட்டதில்லையா?

* உழைப்பின்வாரா வுறுதிகளுளவே
கழப்பின்வாராக் கையறவுளவே.

முயற்சியினாலே எல்லா நன்மைகளும், சோம்பலினாலே எல்லாத் தீமைகளும் வரும், என்று பட்டணத்துப்பிள்ளை சொல்லியிருக்கிறார்.

பூமியை உழுது, கொத்தி, வேலியடைத்து, கல்லுப்பொறுக்கி, பாத்திகோலி, விதை விதைத்து, நீர் பாய்ச்சி, களை

---

* இ-ள். உழைப்பின்—முயற்சியினால். வாரா — வராத. உறுதிகள்—நன்மைகள். உளவே — உண்டா. கழப்பின்— சோம்பலினால். வாரா—வராத. கையறவு—துன்பம். உளவே—உண்டா. எ-று.

(உ.) உகூஉ-ம் பக்கத்திலுள்ள சுலோகத்தைக் காண்க.

பறித்து, குருவிகளைத் துரத்தி, பயிரை அறுத்து, வீட்டோடே சேர்த்தால், நெல்லு கிடைக்கும். இல்லாவிட்டால் கிடையாது. அவ்விதமாகவே, ஆத்துமலாபத்துக்கு ஆண்டவர் காண்பித்த வழியை நாம் சேர்ந்து, அவர் சொன்ன முயற்சியைச் சாக்கிரதையாய்ச் செய்தால், நமக்கு மோட்சம் கிடைக்கும். இல்லாவிட்டால், நரகமே கதியாகும்.

ஆத்துமலாபத்தை எந்த விதத்திலே தேடினால், அகப்படும்? மோட்சலோகத்துக்கு ஏறுகிற வழி எப்படி? என்று கேட்பீர்களேயானால், அதைத் தேவனே சத்திய வேதத்தில் தெளிவாகத் தெரியப்படுத்தினார். உங்களுக்குச் சொல்லுகிறோம். பூலோகத்திலே பாவமில்லாத ஒரு மனுஷன் எவனும் இல்லை. சிலர் பொய்யான தேவதைகளைக் கும்பிடுகிறார்கள்: அது பாவம். சிலர் விக்கிரகங்களைப் பூசிக்கிறார்கள்: அதுவும் பாவம். சிலர் விபசாரம் முதலான அசுத்தங்களைச் செய்கிறார்கள்: அதுவும் பாவம். சிலர் சூதும் வஞ்சனையும் திருட்டும் செய்கிறார்கள்: அதுவும் பாவம். சிலர் பொய் சொல்லுகிறார்கள்: அதுவும் பாவம். நாமெல்லாரும் பாவஞ் செய்தோம். புண்ணியவான் ஒருவனும் இல்லை. ஆகையினாலே, நமது பாவத்தை நீக்கவும், நம்மை மீட்கவும், நமது இருதயத்தைச் சுத்தமாக்கவும், தகுந்தவர் ஒருவர் நமக்கு வேண்டும். அப்படிப்பட்டவர் இருந்தால், அவரிடத்திலே நாம் சேர்ந்து, ஆத்துமலாபத்தை அவராலே பெற்றுக்கொள்ளலாம். அவரைப் பற்றிக்கொண்டு நடப்பதே மோட்சலோகத்துக்கு ஏறுகிறதாயிருக்கிறது.

பிரியமானவர்களே, அப்படிப்பட்டவர் ஒருவர் இருக்கிறார். தேவனுடைய குமாரனாகிய இயேசுக்கிறிஸ்துவே அவர். அண்டபகிரண்டங்கள் யாவையும் படைத்து, தாங்கி, பரிபாலிக்கிறவர் அவரே. அவருடைய அன்பும் தயவும் வசனத்துக்கும் நினைவுக்கும் மேலாக எட்டாததாயிருக்கிறபடியினாலே, அதைச் செவ்வையாய் விவரித்துச் சொல்லுவ

தற்கு எப்படிக் கூடும்? சத்திய கடவுளாகிய அந்த இயேசுக்கிறிஸ்து இந்தப் பூமியிலே சேர்ந்து, மனுஷாவதாரம் எடுத்தார். மனுஷர்களை இரட்சிக்க, லோகரட்சகராய் வந்தார். அவர் இவ்வுலகத்தில் இருக்கும்போது அநேக தெய்வச் செயல்களைச் செய்தார். வியாதிஸ்தர்களை ஒரு வாக்கினாலே சொஸ்தப்படுத்தினார். குருடர் பார்க்கவும், செவிடர் கேட்கவும், சப்பாணிகள் நடக்கவும், ஊமைகள் பேசவும், செத்தவர் பிழைக்கவும், பண்ணினார். காற்றையும் கடலையும் தமது வார்த்தையினாலே அடக்கினார். மனுஷர்களுடைய இருதயத்தில் உள்ளதை எடுத்துச் சொன்னார். பாவத்தை மன்னித்தார். சூரியன் உதயமாகும்போது, பூலோகமெங்கும் வெளிச்சம் பரம்பி நிறைவதுபோல, இயேசுக்கிறிஸ்து வானவர் பூமியிலே உதித்த காலத்திலே ஞானவெளிச்சமும் தேவ கிருபையும் எங்கும் வீசிப் பிரகாசித்தது. அவர் யாவருக்கும் நல்ல உபதேசம் சொன்னார். நல்ல வழியைக் காண்பித்தார். பொல்லாதவர்களைக் கண்டித்தார். தம்மிடத்திலே மோட்சபாக்கியத்தைத் தேடினவர்களுக்கு அதை அருளினார். அவர் போதித்ததெல்லாம் அமிர்தவசனம். அவர் நடந்ததெல்லாம் பரிசுத்தம். அவர் செய்ததெல்லாம் கிருபை. முப்பத்துமூன்று வருஷம் வரையிலும் அவர் உலகத்திலே நன்மை செய்தபின், மனுஷர்களுக்காக மரித்தார். சிலுவைமரத்தில் அறையப்பட்டே தமது உயிரைத் தந்தார். அவர் அடைந்த மரணம் சாதாரணமான மரணமல்ல. சொல்வதற்கும் கூடாத பெரிய பாடுகளையும் அகோரமான வேதனைகளையும் அனுபவித்தார். மரித்தபின்பு மூன்றாம் நாளிலே மறுபடியும் உயிரோடே எழுந்து வந்தார். திரும்பவும் பூமியிலே வெளிப்பட்டார். சீஷர்களைத் திடப்படுத்தி, அவர்களுக்குக் கட்டளையிட்டு, அவர்களை ஆசீர்வதித்து, பின்பு பூலோகத்தை விட்டு, தமது வீடாகிய மோட்சலோகத்துக்குப் போனார்.

ஓ சனங்களே, இயேசுக்கிறிஸ்துநாதர் நம்மைப் பிறப்பித்த தேவனும், நமக்காகப் புண்ணியஞ் செய்த பரம குருவுமாய் இருக்கிறார். நம்முடைய பாவங்களை நீக்கும்படிக்கே அவர் பாடுபட்டார். அது உங்களுக்கு விளங்கும்படி, ஒரு திருஷ்டாந்தம் காட்டுகிறோம்: கேளுங்கள்.

நீ ஒருவனிடத்திலே ஆயிரம் வராகன்மட்டுக்கும் கடன் பட்டு, அந்தப் பணத்தை வீணாய்ச் செலவு செய்துவிட்டு, பின்பு அந்தக் கடனைத் தீர்க்கிறதற்குக் கொஞ்சமும் திராணி யில்லாமல் இருந்தாயென்று வைத்துக்கொள். அப்போது நீ கடன்காரனிடத்தில் போய், அழுது, என்ன சமாதானம் சொன்னாலும், கேட்பானா? உன்னை விடுவானா? கேட்கவும், விடவும் மாட்டானே. அவன் உன்னை நோக்கி, "உன் கடனைக் குறைவில்லாமல் செலுத்து: இல்லாவிட்டால், நான் உன்னைக் கச்சேரிக்கு இழுத்து, உனக்குத் தண்டனை செய்விப்பேன்" என்று உன்னை மிரட்டுவானல்லவா? அப்படி நீ அவஸ்தைப் படுங்காலத்தில், தரும பிரபுவாகிய ஒரு துரையானவர் வந்து, உன் துக்கத்தைக் கண்டு, உன்மேல் மனசுருகி, உன்னுடைய கடனைத் தன்னுடைய கடனாக ஏற்றுக் கொண்டு, தனக்குத் தரித்திரம் வந்தாலும், அந்த வருத்தத்தைப் பாராமல், தன் வீடுவாசலை விற்றுப் போட்டு, அந்தப் பணத்தைச் சேர்த்து, உனக்காகக் கொண்டுவந்து கொடுத்து, கடன்காரன் கையிலிருந்து உன்னைத் தப்புவித்து, மீட்டால், நீ அந்தத் துரையினிடத்திலே அன்புவைக்க மாட்டாயோ? அவருடைய பேரும் கிருபையும் நீ நாடெங்கும் ஊர்கள் தோறும் சொல்லமாட்டாயோ? உன் பிள்ளைகளுக்கும் அவருடைய நாமத்தைக் கற்றுக் கொடுக்கமாட்டாயோ? அவருடைய வார்த்தைப்படி நடக்கமாட்டாயோ?

பிரியமானவர்களே, இதின் கருத்தைத் தெரிந்துகொள்ளுங்கள். தேவனுக்கு விரோதமாய் நாமெல்லாரும் பாவஞ் செய்தோமே: அதுதான் தீராத கடனாயிருக்கிறது. அதைத்

தீர்க்காமல் போனால், நமக்கு நித்திய நரக தண்டனை நிச்சயமாகும். அதைத் தீர்க்கவோ, நமக்கு எவ்வளவும் திராணி இல்லை. அதைத் தீர்க்கும்படி வந்த தரும பிரபுவானவர் இயேசுக்கிறிஸ்துவே. பாவமில்லாத அவர் நம்முடைய பாவக்கடனைத் தம்முடையதாக ஏற்றுக்கொண்டார். நாம் படவேண்டிய நரக ஆக்கினைக்குப் பதிலாக அவர் உலகத்திலே ஆக்கினைப்பட்டார். அவர் பூமியிலே பிறந்த நாள் முதல் அவர் மோட்சலோகத்துக்குத் திரும்பிப்போன நாள்வரைக்கும், அவர் நமக்காகத் துன்பத்தையும் வேதனையையும் அநுபவித்தார். நம்முடைய பாவக்கடனை நிவிர்த்திசெய்து நம்மை மீட்கும்படிக்கே, அவர் சிலுவையிலே மரணமடைந்து மறுபடியும் உயிர்த்தெழுந்தார்.

யாருடைய பாவக்கடன் கிறிஸ்துவினாலே தீரும் என்றால், அவரை விசுவாசித்து, அவருடைய வார்த்தையின்படி நடக்கிறவர்களுடைய பாவமே அவராலே தீரும். தம்மை நம்பி அனுசரிக்கிறவர்களை அவர் இரட்சிப்பார். மற்றவர்களோ பாவநிவிர்த்தி அடையமாட்டார்கள். நித்திய எரிநரகத்திலே அமிழ்ந்திப் போவார்கள்.

ஓ சனங்களே, இது முதற்கொண்டு நீங்கள் விதிவசமென்கிற பொய்யான வார்த்தையை முழுதும் நீக்கிவிடுங்கள்.

நீங்கள் மோசமும் நாசமுமான ஒரு வழியிலே நடக்கும்போது, ஒருவன் உங்களைக் கண்டு, "ஓ ஐயா, அந்த வழி நடக்காதே: அது கெட்ட வழி: அது ஒரு பயங்கரமான காட்டுக்குள்ளே போகிறது: அங்கே இருக்கிற ஒரு பெரும் பள்ளத்திலே உன்னைக் கொண்டுபோய்விடும். ஆகையினாலே, சீக்கிரமாய் அதை விட்டு விலகு" என்று உங்களை எச்சரித்தால், நீங்கள் என்ன செய்வீர்கள்? "விதிவசம் எப்படியோ அப்படியே நடக்கும்" என்று சொல்லி, அந்த வழியே நடந்துகொண்டு இறந்துபோவீர்களா? இல்லை: அப்படிச் செய்யமாட்டீர்கள். அந்த வழியை விட்டு, நல்ல வழிக்குத் திரும்

புவீர்கள். அப்படியே இந்த விஷயத்திலும் செய்யுங்கள். நரகத்திலே உங்களைக் கொண்டுபோய் விடும் பாவமார்க்கத்தை உடனே விட்டு விடுங்கள். கிறிஸ்து காட்டின முத்தி வழியிலே சேருங்கள்.

நீங்கள் ஒரு ஆழமான கிணற்றிலே விழுந்து விட்டு, உடம்பெல்லாம் காயப்பட்டு, கிடந்தால், என்ன செய்வீர்கள்? "ஓ இது விதிவசமே" என்று நினைத்து, வாய் திறவாமல் சும்மா இருந்து சாவீர்களா? அப்படிச் செய்யமாட்டீர்களே. உங்களைத் தூக்கி எடுக்கும்படி மிகவும் சத்தமிட்டு, கூவி, கூப்பிடுவீர்கள். பாவமென்கிற கிணற்றிலே விழுந்து கிடக்கிறீர்களே: அதிலிருந்து உங்களை எடுத்து மோட்சத்திலே உங்களைச் சேர்க்க வல்லமையுள்ள கிறிஸ்துவை நினைத்துக் கூப்பிடுங்கள். அவரை நம்பிக் கூப்பிட்டால், உங்களுக்குச் செவிகொடுப்பார்.

நீங்கள் நடுச் சமுத்திரத்திலே விழுந்தால், மிகவும் பயப்படமாட்டீர்களா? காற்று அடிக்கிறதையும், அலை எழும்பிப் பொங்கிக் கெர்ச்சித்துப் புரண்டு மோதுகிறதையும், கரைதூரத்திலே மறைந்திருக்கிறதையும் நோக்கி மெத்தவும் பயப்படுவீர்கள். அப்போது ஒரு கப்பல் உங்கள் சமீபத்திலே வர, கப்பல்காரன் உங்களுக்கு கயிறு போட்டு, உங்களை அன்போடே பார்த்து, "கயிற்றைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொள், உன்னைக் கப்பலுக்குள்ளே இழுத்துச் சேர்த்து இரட்சிக்கிறேன்" என்று சொன்னால், என்ன செய்வீர்கள்? "விதிவசமே பெரிது: அது நிறைவேறட்டும். நான் கயிற்றைப் பிடிக்கமாட்டேன்" என்று சொல்லி, கடலிலே முழுகி, மாண்டுபோகும்படி சம்மதிப்பீர்களா? அப்படிச் செய்யமாட்டீர்களே. கயிற்றைப் பிடித்து, கப்பலில் ஏறி, கப்பல்காரனை ஸ்துதிப்பீர்கள். பாவமென்கிற சமுத்திரத்தில் விழுந்திருக்கிறீர்களே: இயேசுக்கிறிஸ்துவின் புண்ணியமே அந்தச் சமுத்திரத்தைத் தாண்டத் தக்க கப்பல், வேறே இல்லை.

இயேசுக்கிறிஸ்துநாதரே பாவிகளை அந்தக் கடலிலிருந்து எடுக்கத்தக்க கப்பல்காரன். அவருடைய திருவசனமே பாவிகளுக்கு அவர் விடுகிற கயிறு. உங்களைப் பார்த்துக் கூப்பிடுகிறார். "பாவியே, ஏன் கெட்டுப்போகிறாய்: என் வசனத்தை நம்பு: என்னிடத்திலே சேரு: என் புண்ணியத்தினாலே கரை ஏறு" என்கிறார். அந்த இயேசுக்கிறிஸ்துவின் வார்த்தையை விசுவாசத்தோடே பிடித்துக்கொள்ளுங்கள். அவரை நேசித்து அன்போடே சேருங்கள். அவருடைய புண்ணியமே உங்கள் பாவத்தைத் தீர்த்து உங்கள் ஆத்துமாவைத் தாங்குமென்று அதின்மேலே சார்ந்துகொள்ளுங்கள். அப்போது மோட்சகரை ஏறி, நித்திய சுகத்தை அடைவீர்கள்.



# உபக்கிரந்தம்.

---

## APPENDIX TO NO. IX.



### முன் சொன்னவைகளுக்குச் சில உதாரணங்கள்.

(க.) குசவன் தான் விரும்புகிற பாண்டங்களை எப்படிச் செய்கிறானோ, அப்படியே ஒரு மனுஷன் தனக்கு இஷ்டமான கிரியைகளைச் செய்கிறானென்பது.

యథామృత్పిండతఃకర్తా కురుతేయద్యదిచ్ఛతి
ఏవమాత్మకృతంకర్మ మానవఃప్రతిపద్యతే.

*இதன் பதவுரை.*

కర్తా—*செய்கிறவன்.* యద్యత్—*எதையெதை.* ఇచ్ఛతి—*விரும்புகிறானோ.* (*அதையதை*) మృత్పిండతః—*மண்பிண்டத்தினாலே.* యథాకురుతే—*எப்படிச் செய்கிறானோ.* ఏవం—*அப்படி.* మానవః—*மனுஷன்.* ఆత్మకృతం—*தன்னாலே செய்யப்பட்ட.* కర్మ—*கருமத்தின்* (*பலனை*). ప్రతిపద్యతే—*அடைகிறான்.*

### கருத்துரை.

குசவன் தான் விரும்புகிறதை மண்ணினாலே எப்படிச் செய்கிறானோ, அப்படியே ஒரு மனிதன் தனக்கு இஷ்டமான கிரியைகளைச் செய்து, அதின் பலனை அடைகிறான்.

(௨.) தூங்குகிற சிங்கத்தின் வாயிலே மானானது தானாய் வந்து விழாதென்பது.

ఉద్యమేనహిసిద్ధ్యంతి కార్యాణినమనోరథైః
నహిసుప్తస్యసింహస్య ప్రవిశంతిముఖేమృగాః.

### இதன் பதவுரை.

కార్యాణి—காரியங்கள். ఉద్యమేన—பிரயத்தனத்தினால். సిద్ధ్యంతి—சித்தியாகின்றன. మనోరథైః—ஆசைகளினாலே. నసిద్ధ్యంతి—சித்திக்கமாட்டாது. (எப்படியென்றால்) సుప్తస్య—தூங்கிக்கொண்டிருக்கிற. సింహస్య—சிங்கத்தினுடைய. ముఖే—வாயிலே. మృగాః—மான்கள். నప్రవిశంతి—பிரவேசிக்காது. (హి—அசை.)

### கருத்துரை.

பிரயத்தனஞ் செய்யாமல் தூங்கிக் கொண்டிருக்கிற சிங்கத்தின் வாயிலே மான்கள் எப்படிப் பிரவேசிக்காதோ, அப்படியே பிரயத்தனத்தினாலே காரியங்கள் சித்திக்குமேயல்லாமல், ஆசைகளினாலேமாத்திரம் சித்திக்கமாட்டாது.



# வேதவாக்கியம்.

(க.) தேவன் பாவத்திற்குக் காரணர் அல்ல.

யோபு, ௩௪. அதி: ௰.
௱௪௫. சங்கீதம்: ௰௭.
யாக்கோபு, க. அதி: ௰௩.
க. யோவான், க. அதி: ௫.

(உ.) தேவன் மனுஷனுடைய சுயாதீனத்தைக் கெடுக்கிறதில்லை.

உபாகமம், ௩௰. அதி: ௰௫, ௰௬, ௰௯, உ௰.
யோசுவா, உ௪. அதி: ௰௫.
நீதிமொழிகள், க. அதி: ௰, உ௯—௩க.
ஏசாயா, ௫௫. அதி: க.
எசேக்கியேல், ௰௮. அதி: உ௩, உ௪, ௩க, ௩உ.
எசேக்கியேல், ௩௩. அதி: ௰—௰௯.
ஏசாயா, ௪௮. அதி: ௰௮.
ஓசியா, ௰௩. அதி: ௯.
யோவான், ௫. அதி: ௪௰.
யோவான், ௩. அதி: ௰௯.



# துர்ப்பூசை.



ஓ சனங்களே, நீங்கள் விக்கிரகங்களை வைத்துப் பூசிக்கிறீர்கள். அப்படிப்பட்ட பூசை தேவதுரோகமென்றும், மகா பாவமென்றும், உங்களுக்குக் காண்பிக்கிறோம். அதைக் குறித்து ஆறு காரியங்களைச் சொல்லுகிறோம். நாங்கள் சொல்வதை நல்ல மனதோடே கவனித்துக் கேளுங்கள்.



## முதலாவது.



## கடவுள் ஒருவர் இருக்கிறார்.

அவருடைய தன்மையைப் பற்றி உங்களுக்குள்ளே ஒருவர் சொன்னதாவது:

* நித்தியமாய்நிர்மலமாய்நிஷ்களமாய்
நிராமயமாய்நிறைவாய்நீங்காச்
சுத்தமுமாய்த்தூரமுமாய்ச்சமீபமுமாய்த்
துரியநிறைசுடராயெல்லாம்
வைத்திருந்ததாரகமாயானந்த
மயமாகிமனவாக்கெட்டாச்
சித்துருவாய்நின்றவொன்றைச்சுகாரம்பப்
பெருவெளியைச்சிந்தைசெய்வாம்.

---

* இ—ள். நித்தியமாய் — அழியாததாய். நிர்மலமாய்—மலமில்லாததாய். நிஷ்களமாய்—ரூபமில்லாததாய். நிராமயமாய்—நோவில்லாததாய். நிறைவாய்—பரிபூரணமாய். நீங்கா — நீங்காத. சுத்தமுமாய் — பரிசுத்தமுடையதாய். தூரமுமாய் — தூரத்திலுள்ளதாய்.

தேவன் நித்தியரும், பரிசுத்தரும், ரூபமில்லாதவரும், குறைவற்றவரும், எங்கும் நிறைந்தவரும், இரட்சகரும், பரம சோதியும், ஆனந்த ரூபியும், சர்வஞானியுமாய் இருக்கிறாரென்று இந்தப் பாட்டிலே சொல்லப்பட்டது சத்தியமே. தேவன் அப்படிப்பட்டவராகவே இருக்கிறார். நீங்கள் கும்பிடுகிற விக்கிரகத்துக்கு அப்படிப்பட்ட குணங்கள் உண்டோ? உங்கள் கோவிலில் இருக்கிற பொம்மையானது நித்தனும், சுத்தனும், ஞானியும், சர்வவியாபியுமாயிருக்கிறதா? இல்லையே. அப்படிப்பட்ட மகத்தான குணங்களையுடைய தேவன் ஒருவர் இருக்கிறாரென்று உங்களிலும் அனேகர் சொல்லியிருக்கிறார்களே: ஏன் அவரை விட்டுவிட்டு, அம்மகத்தான குணங்களிலொன்றுமில்லாமல் கிடக்கிற கல்லை வணங்குகிறீர்கள்?

நீதிநெறிவிளக்கம், ௩௩.

*காக்கைவெளிதென்பா ரென்சொலார்தாய்க்கொலை
சால்புடைத்தென்பாரு முண்டு.

காக்கை கறுப்பல்ல, அது வெள்ளையாயிருக்கிறதென்று சொல்லுகிறவர்கள் எதைத்தான் சொல்லமாட்டார்கள்?

---

சமீபமுமாய்—சமீபத்திலுள்ளதாய். துரியம்—துரியாவஸ்தையில். நிறை—நிறைந்த. சுடராய்—ஞானவொளியாய். எல்லாம்—சகலத்தையும். வைத்திருந்த—தன்னிடத்தில் அடக்கிக்கொண்டிருக்கிற. தாரகமாய்—ஆதாரமாய். ஆனந்தமயமாகி—ஆனந்த சொரூபமாகி. மன—மனத்துக்கும். வாக்கு—வாக்குக்கும். எட்டா—அகப்படாத. சித்துருவாய்—ஞான ரூபமாய். நின்றவொன்றை—நிற்கிற ஒப்பற்ற கடவுளை. சுகாரம்ப—சுகோதயமாகிய. பெரு—பெரிய. வெளியை—சிதாகாசத்தை. சிந்தை செய்வாம்—தியானிப்போம். எ-று.

*இ-ள். காக்கை—காகமானது. வெளிது—வெள்ளை நிறமுடையது. என்பார்—என்று சாதிக்கிறவர்கள். என் சொலார்—மற்றென்ன சொல்லமாட்டார்கள். தாய்க் கொலை—தாயைக் கொல்லுதல். சால்புடைத்து—மேன்மையுடையது. என்பாரும்—என்கிறவர்களும். உண்டு—(உலகில் சிலர்) இருக்கிறார்கள். எ-று.

பெற்ற தாயைக்கொன்று போடுகிறது நல்ல காரியமே என்று சொல்லுகிற சிலரும் உண்டு. காகத்தை வெள்ளை யென்றும், தாய்க்கொலை நல்லதென்றும் சொல்லுகிற விபரீ தத்தைப் பார்க்கிலும், விக்கிரகமானது தேவனுயிருக்கிற தென்று சொல்லுகிற விபரீதமே பெரிது.

ஓ சனங்களே, சமஸ்த சற்குணங்களையுமுடைத்தான கட வுள் ஒருவர் இருக்க, அவரைக் கைவிட்டு, கல்லைத் தெய்வ மென்று பூசிக்கிறது என்ன? அது துர்ப்பூசையல்லவா?



# இரண்டாவது.



## கடவுள் சீவனுள்ள கடவுளாயிருக்கிருர்.

சீவனுள்ள அவரை விட்டுவிட்டு, சீவனில்லாத சிலையை ஏன் கும்பிடுகிறீர்கள்? நீங்கள் இதைக் குறித்து ஒரு போக் குச் சொல்லுகிறதுண்டு. ஆவாகன மந்திரம் உச்சரித்தபின்பு விக்கிரகத்துக்கு உயிர் வந்து சேருகிறதென்று சொல்லுகிறீர் கள். அந்த மந்திரத்தைச் செபிக்கிற பிராமணனே அப்படி உறுதியாய்ச் சாதித்துப் பேசுவான். தான் மந்திர சக்தியினு லே அந்தக் கல்லுக்கு உயிர் கொடுத்ததாகச் சொல்லுவான். ஆனாலும், அதற்குச் சீவன் வந்தது மெய்தானோ? சோதித்துப் பாருங்கள். உயிருள்ளதெல்லாம் ஆடுமல்லவா? இந்தத் தே சத்திலே எங்கே போனாலும், பிள்ளையார் விக்கிரகத்தைக் காணலாம். அந்தப் பிள்ளையாருக்கு உயிர் இருந்தால், அது சிலவேளை கைநீட்டும்: சிலவேளை காலூன்றி நடக்கும்: சில வேளை தன் தும்பிக்கையையாவது ஆட்டும்: யானைத்தும்பிக் கை சும்மா இருக்கிறதில்லையே. அல்லது அந்தப் பிள்ளை யாரின் வயிறு பெருத்திருக்கிறபடியினாலே, சிலவேளை அது குலுங்கும். அந்தப் பிள்ளையார் விக்கிரகத்துக்கு உயிர்வந்

தது உண்டானால், இப்படியெல்லாம் நடக்கும். இப்படி நடக்கிறதில்லையே. அந்தப் பிள்ளையார் எப்போதும் அசைவில்லாமல், மரத்தின் அடியிலும், குளத்தின் கரையிலும் குந்திக்கொண்டிருக்கிறார். நீங்கள் பண்ணிவைத்த மற்றெல்லா விக்கிரகமும் அப்படியே சீவனில்லாமல் கிடக்கிறது. நீங்கள் மந்திரம் சொல்லி ஸ்தாபித்த பொம்மைகளில் எதுவானாலும் எக்காலத்திலேயாவது வெளியே புறப்பட்டு, தெருவிலே உலாவுகிறதுண்டா? இல்லையே. நீங்களே சப்பரத்தில் ஏற்றி, கஷ்டத்தோடே தூக்கி, உடம்பெல்லாம் வேர்த்து, தெருச்சுற்றிவந்தால், அது உங்கள் சகாயத்தினாலே புறப்படுமேயல்லாமல், தானாய் வெளிப்பட்டு நடக்கமாட்டாதே. அதற்காக நீங்கள் பெரிய தேர்களைக் கட்டியிருக்கிறீர்கள். அது எப்போதானாலும் தேரின்மேல் ஏறினதுண்டா? இல்லையே. அதை நீங்களே ஏற்றுகிறீர்கள். ஏற்றினபின்பு விழாதபடி அதை நீங்களே கட்டுகிறீர்கள். இப்படியிருக்கும்போது, விக்கிரகத்துக்குச் சீவன் உண்டென்று சொல்லுவதற்கு வாய் வருவது எப்படியோ?

மேலும், பிராமணனல்லவா அதற்கு உயிர் கொடுக்கிறதாகச் சொல்லப்பட்டவன்? அப்படிக் கல்லுக்கு உயிர் கொடுக்கிறானே, தன் பிள்ளை செத்துப்போனால், ஏன் அதற்கும் உயிர் கொடுக்கிறதில்லை? ஏன் கையினாலே முகத்தை மூடிக்கொண்டு அழுது புலம்புகிறான்? கல்லைப் பிழைக்கச் செய்தவன் செத்த பிள்ளையையும் பிழைக்கச் செய்யலாகாதோ?

இதுவுமல்லாமல், பிராமணன் கல்லுக்கு உயிர் கொடுக்கிறவனானால், அவன் தேவனல்லவா? உயிரைக் கொடுக்கிறதும் வாங்குகிறதும் தேவனுடைய செய்கைதானே. பிராமணன் தேவனானால், ஏன் சீவனத்துக்குக் கஷ்டப்பட்டு உழைக்கிறான்? உயிரை உண்டாக்குகிறவன் தன் வயிற்றுப்பசி ஆறும்படி கொஞ்சம் பொன்னை உண்டாக்கத்தகாதோ? கல்லுக்கு உயிர் தருகிறவன் கொஞ்சம் அரிசிக்கும், கொஞ்சம் புளிக்கும், கொஞ்சம் நெய்க்கும், தெரு தெருவாய்த் திரிந்து, சனங்

களை மோசப்படுத்தி, பிச்சை எடுக்கவேண்டுமோ? கல்லுக்கு உயிர் கொடுக்கிற மேன்மையான செய்கையும், வீதிகள் தோறும் சாப்பாட்டுக்கு அலைகிற இழிவான செய்கையும் ஒன்றுக்கொன்று ஒவ்வவில்லையே. ஓகோ இதென்ன பேச்சு! கல்லுக்கு உயிர் கொடுக்கிற கதையெல்லாம் சுத்த பொய் யல்லவா? விக்கிரகமானது எப்போதும் உயிரில்லாததே.

* நட்டகல்லைத்தெய்வமென்று நாலுபுட்பஞ்சாத்துறீர்
சுட்டிவந்துமிணுமிணென்று சொல்லுமந்திரமேதடா
நட்டகல்லுபேசுமோ நாதனுள்ளிருக்குமோ
சுட்டசட்டிசட்டுவங் கறிச்சுவையறியுமோ.(க.)

பிரியமானவர்களே, தேவன் உங்களுக்குச் சீவனை அருளினார். சீவனுள்ள நீங்கள் சீவனில்லாத கல்லை நம்புகிறது நியாயமோ? கடவுள் உங்களுக்கு மூச்சும் பேச்சும் தந்தார். மூச்சும் பேச்சும் உள்ள நீங்கள் மூச்சும் பேச்சுமற்ற ஒரு பொம்மைக்கு எதிர் நின்று சுவாமீ, சுவாமீ, என்று கூப்பிடுகிறது தருமமோ?

ஓ சனங்களே, சீவனுடைய கடவுள் ஒருவர் இருக்க, அவரைக் கைவிட்டு, சீவனில்லாத சிலையைத் தெய்வமென்று பூசிக்கிறது என்ன? அது துர்ப்பூசையல்லவா?



* இ-ள். நட்டகல்லை—நட்டுவைத்த கல்லை. தெய்வமென்று—கடவுளென்று. நாலு—நாலுவிதமான. புட்பம்—பூவை. சாத்துறீர்—சாத்துகிறீர்கள். சுட்டி—அதை மேன்மையாக நினைத்து. வந்து—போய். மிணுமிணென்று—மிணுமிணென்னு மோசையுடன். சொல்லும்—உச்சரிக்கிற. மந்திரம்—மந்திரம். ஏதடா—அடே எங்கிருந்து வந்தது. நட்டகல்லு—நட்டுவைத்த கல்லானது. பேசுமோ—பேசுமா. நாதன்—கர்த்தா. உள்—அதனுள். இருக்குமோ—இருப்பாரோ. சுட்ட—பதார்த்தங்களைச் சுட்ட. சட்டி—சட்டியும். சட்டுவம்—அகப்பையும். கறி—அப்பதார்த்தங்களின். சுவை—இரசத்தை. அறியுமோ—அறியுமா. எ-று.

(க.) உ௩டு-ம் பக்கத்திலுள்ள பாட்டையும் காண்க.

## மூன்றாவது.

### கடவுள் சிருஷ்டி கர்த்தாவாயிருக்கிறார்.

அவர் வானத்தை விரித்தார். பூமியைப் படைத்தார். சர்வத்தையும் உண்டாக்கினார். எல்லாவற்றிற்கும் மேலாக, சர்வலோக சிருஷ்டிகராய் வீற்றிருக்கிற அவரை ஏன் விட்டு விட்டு, விக்கிரகத்தைத் தொழுதுகொள்ளுகிறீர்கள்? விக்கிரகமானது உங்களை உண்டாக்கினதேயானால், நீங்கள் அதைப் பூசிக்கவேண்டியதுதான். அது உங்களை உண்டாக்கவில்லையே. நீங்களே அதை உண்டாக்கினீர்கள். அந்த விக்கிரகம் சும்மா கல்லாய்க் கிடந்தபோது, அதற்குக் கண், வாய், மூக்கு, முதலான அவயவங்களொன்றும் இல்லை. அதெல்லாம் அதற்கு உண்டாகும்படி நீங்களே செய்வித்தீர்கள். நீங்களே அதற்குக் கண் இல்லாதபோது இரண்டு கண் குத்தினீர்கள். வாய் இல்லாதபோது ஒரு வாய் கிழித்தீர்கள். மூக்கில்லாதபோது முன்னுக்கு ஒரு மூக்கு நீண்டிருக்கும்படி இழுத்தீர்கள். கை, கால், காது முதலான அவயவங்களையும் ஏற்படச் செய்து வைத்தீர்கள். இப்படி நீங்கள் அதற்கு உருவுண்டாக்கினபின்பு அதைச் சுவாமியென்கிறீர்கள். இதென்ன மயக்கம்! நீங்கள் அதை உண்டாக்கினபடியினாலே, அது உங்கள் காலிலே வந்து விழுந்து உங்களை வணங்க வேண்டியிருக்க, நீங்கள் அதை வணங்குகிறீர்களா?

கல்லைக் கும்பிடுகிற மனுஷர்களே, நீங்கள் கும்பிடுகிற அந்தக் கல்லுக்குப் பேசுகிற வாய் இருந்தால், அது உங்களைப் பார்த்து என்னசொல்லும்? உங்களை நோக்கி, ஓ சனங்களே, நாங்கள் சுபாவமாகப் பிறந்திருந்த மலையிலே நீங்கள் ஏன் எங்களைத் தேடி வந்தீர்கள்? அங்கிருந்து எங்களை ஏன் எடுத்து, வண்டியின்மேல் போட்டு, ஓட்டி, ஊரிலே கொண்டு

வந்து, சேர்த்தீர்கள்? ஏன் எங்களைக் காலாலே தள்ளி, கையாலே புரட்டி, உளியாலே வெட்டி, துன்பப்படுத்தி, உருவேற்றி, கோவிலுக்குள்ளே நாட்டி, இருட்டிலே சாத்திவைத்தீர்கள்? என்று சொல்லி, உங்களைப் பழிக்குமல்லவா? அப்படியும் சொல்வதற்கு வாயில்லாத அதை ஸ்துதிக்கிறீர்களே; இது ஒரு பைத்தியமோ என்னமோ!(உ.)

ஓ சனங்களே, உங்களைச் சிருஷ்டித்த கடவுள் ஒருவர் இருக்க, அவரைக் கைவிட்டு, நீங்களே உண்டாக்கிவைத்த விக்கிரகத்தைத் தெய்வமென்று பூசிக்கிறது என்ன? அது துர்ப்பூசையல்லவா?



## நான்காவது.



## கடவுள் சகலத்தையும் தாங்கிக் காப்பாற்றுகிறார்.

தாம் பிறப்பித்த யாவற்றையும் விசாரிக்கிறார். உங்களையும் காத்து, பராமரிக்கிறார். தாயின் வயிற்றிலே சிசுவாய் உண்டான நாள் முதல் அவர் உங்களைப் போஷித்து வருகிறார். நீங்கள் ஒன்றும் தெரியாமல் தூங்கிக் கொண்டிருக்கிற காலத்திலும் மூச்சு வாங்குவதும் விடுவதும் அவருடைய கிருபையினாலேயல்லவா நடக்கிறது? இவ்விதமாய் உங்களைப் பாதுகாத்துத் தாங்குகிற தேவனை ஏன் விட்டுவிட்டு, ஒரு பொம்மையைப் பணிந்து கொள்ளுகிறீர்கள்?

நீங்கள் வைத்திருக்கிற விக்கிரகம் உங்களைக் காப்பாற்றுகிறதில்லை. அது தன்னைத் தானே காப்பாற்ற சக்தியில்லை.

(உ.) உ௩௬-ம் பக்கத்திலுள்ள பாட்டைக் காண்க.

திருடர் உள்ளே புகுந்து, அதின்மேல் இருக்கிற பூஷணங்களைப் பறித்துக்கொண்டு போகிறது எத்தனையோதரம் நடந்த காரியமாயிருக்கிறது. இது யாவரும் அறிவார்கள். அப்படி நடக்கும்போது அந்தத் திருடனைத் துரத்தி, தன்னைக் காப்பாற்றுகிறது நியாயந்தானே. ஏன் அப்படிச் செய்யவில்லை? தன்னைக் காப்பாற்றுவதற்குப் பலமில்லாமற் போனாலும், ஓகோவென்று ஒரு கூச்சலையாவது போடலாமே. அதுவும் இல்லை. தன்னைக் காக்க, எந்தவிதத்திலும் அதற்குச் சத்துவமில்லை.

நீங்களே அதைக் காப்பாற்றுகிறீர்கள். அதற்காகக் கோவிலென்று ஒரு வீடு கட்டுகிறீர்கள். உள்ளே கொண்டு போகிறதும் நீங்களே. கதவைப் பூட்டுகிறதும் நீங்களே. வெளியே மறுபடியும் எடுக்கிறதும் நீங்களே. அதைத் தூக்குகிறதும், ஊர் சுற்றிவருகிறதும், திரும்பப் பத்திரமாய் வைக்கிறதும் நீங்களே. அதற்காக நீங்கள் படுகிற கஷ்டம் கொஞ்சமா? அந்தக் கஷ்டத்தைப் பார்த்து, உங்களுக்கு எப்போதாவது அது ஒரு சலாமாகிலும் செய்ததுண்டா?

நித்தமும் அதை நீங்கள் காப்பாற்றவே, அது உங்களைக் காப்பாற்றுகிற சுவாமி என்று நீங்கள் நினைக்கிற நினைவு உங்களுக்கு எப்படிக் கிடைத்ததோ, அது எங்களுக்குப் பெரிய அதிசயமாயிருக்கிறது.

ஓ சனங்களே, உங்களை இரவும் பகலும் ஓயாமல் பாதுகாத்துவருகிற கடவுள் ஒருவர் இருக்க, அவரைக் கைவிட்டு, நீங்களே காப்பாற்றுகிற பொம்மையைத் தெய்வமென்று பூசிக்கிறது என்ன? அது துர்ப்பூசையல்லவா?



# ஐந்தாவது.

## கடவுள் சர்வோபகாரியாயிருக்கிறார்.

அவரே மழை பெய்யச் செய்து உங்கள் ஏரிகளை நிரப்புகிறார். அவரே வெயிலை வீசி, பயிர்களை விளைவிக்கிறார். அவரே உங்களுக்கு அன்னவஸ்திரங்களை அருளுகிறார். அவரே உங்களுக்குப் பலவிதமான சவுக்கியங்களைக் கொடுக்கிறார். தினந்தோறும் அவர் செய்துவருகிற கிருபைகள் அனந்தம். எண்ணப் போனாலும், முடியவே முடியாது. இவ்விதமான உபகாரமெல்லாம் செய்கிற தேவனை ஏன் விட்டுவிட்டு, ஒரு சித்திர ரூபத்தை நமஸ்காரம் பண்ணுகிறீர்கள்?

உங்களுடைய விக்கிரகம் உங்களுக்கு ஒரு உபகாரமும் செய்யமாட்டாது. நீங்கள் அதை எந்த இடத்திலே கொண்டுபோய்ப் போடுகிறீர்களோ, அந்த இடத்திலேதான் அது சாந்தமாய்ப் படுக்குமேயல்லாமல், வேறென்னத்தைச் செய்யப் போகிறது? அதற்கு நீங்கள் செய்கிற பூசையெல்லாம் ஆற்றிற் கரைத்த புளிபோலப் பிரயோசனமில்லாமலிருக்குமல்லவா?

*சுட்டுவைத்ததேவருஞ் சுடாதுவைத்ததேவரும்
நட்டுவைத்ததேவரும் நடாதுவைத்ததேவரும்
கட்டிவைத்ததேவருங் கட்டவிழ்க்கவல்லரோ
இட்டுவைத்திடத்திலே கிடப்பதன்றியென்செய்வார்.

---

*இ-ள். சுட்டுவைத்த — சுட்டுவைத்த. தேவரும் — தேவரும். சுடாது—சுடாமல். வைத்த—வைத்த. தேவரும்—தேவரும். நட்டுவைத்த — நட்டுவைத்த. தேவரும்—தேவரும். நடாது — நடாமல். வைத்த—வைத்த. தேவரும் — தேவரும். கட்டிவைத்த—

நீங்கள் அந்த விக்கிரகத்துக்கு வெகு உபகாரஞ் செய்கிறீர்கள். நீரால் அதைக் கழுவுகிறீர்கள். புளியிட்டும் தேய்க்கிறீர்கள். அதற்கு வஸ்திரம் கட்டுகிறீர்கள். ஆபரணங்களையும் மாலைகளையும் தரிக்கிறீர்கள். அதற்குத் தைலம் பூசுகிறீர்கள். பூவையும் சாத்துகிறீர்கள். இப்படிப்பட்ட உபகாரங்களை அதற்கு நீங்கள் செய்கிறீர்கள். அது உங்களுக்கு ஒரு உபகாரமும் செய்கிறதேயில்லை. ஆகையினாலே, அது உங்களுக்குத் தெய்வமோ, நீங்கள் அதற்குத் தெய்வமோ, யோசித்துச் சொல்லுங்கள்.

ஓ சனங்களே, தினந்தினம் உங்களுக்கு நன்மை செய்கிற கடவுள் ஒருவர் இருக்க, அவரைக் கைவிட்டு, உங்களுக்கு ஒருபோதும் ஒரு நன்மையும் செய்யாத ஒரு சித்திர ரூபத்தைத் தெய்வமென்று பூசிக்கிறது என்ன? அது துர்ப்பூசையல்லவா?



## ஆறுவது.

### கடவுள் தண்டிக்கிறவராயிருக்கிறார்.

தம்முடைய சித்தத்தின்படி நடக்கிறவர்களை அவர் ஆசீர்வதிக்கிறார். தம்முடைய சித்தத்துக்கு விரோதமாய் நடக்கிறவர்களை அவர் தண்டிக்கிறார். எல்லாரும் பயபத்தியோடே சேவிக்கவேண்டிய தேவனை நீங்கள் ஏன்

---

கட்டிவைத்த. தேவரும் — தேவரும். கட்டு — பாசத்தை. அவிழ்க்க — நீக்க. வல்லரோ — வல்லவர்களா. இட்டுவைத்திடத்திலே — போட்டுவைத்த இடத்திலே. கிடப்பதன்றி — இருப்பதல்லாமல். என் செய்வார் — என்ன செய்வார்கள். எ-று.

விட்டுவிட்டு, ஒரு கட்டைக்குப் பயந்து பிரார்த்தனை செய்கிறீர்கள்? உங்களுடைய விக்கிரகம் ஒரு தண்டனையும் செலுத்தமாட்டாது. தன்மேலே எச்சமிட்டு, தான் இருக்கிற இடத்தைத் துர்க்கந்தமாக்குகிற வவ்வாலையும் அது தண்டிக்காது. தன் மூஞ்சியிலேயும் ஏறி, நக்கி, எச்சில் படுத்தி, நெய் திருடுகிற எலியையும் அது தண்டிக்காது. அச்சமும் கூச்சமுமில்லாமல் தன்னை அசுசிப்படுத்துகிற நாயையானும் அது தண்டிக்காது. நாய்களையும், சிறு எலிகளையும் வவ்வாலையும் தண்டிக்கமாட்டாத அந்த விக்கிரகம் பெரிய மனுஷர்களாகிய உங்களை எப்படித் தண்டிக்கும்? அதற்குப் பயப்படவேண்டிய காரணம் என்ன இருக்கிறது?

ஓ சனங்களே, இரட்சிக்கவும், சிட்சிக்கவும் வல்லமையுள்ள கடவுள் ஒருவர் இருக்க, அவரைக் கைவிட்டு, ஒரு அற்பமான தண்டனையும் செய்யமாட்டாத கட்டையைத் தெய்வமென்று பூசிக்கிறது என்ன? அது துர்ப்பூசையல்லவா?

பிரியமானவர்களே, உங்கள் கோவிலுக்குள்ளே வைத்திருக்கிற கல்லுக்கும், வெளியிலே இருக்கிற மற்றெல்லாக் கல்லுக்கும் என்ன வித்தியாசம் உண்டு? ஒரு வித்தியாசமும் இல்லையே. தெருவிலும், மேட்டிலும், பள்ளத்திலும், கண்டவிடமெல்லாம் சிதறிக் கிடக்கிற சமஸ்த கல்லுகளையும் கும்பிடலாமா? கூடாதே. அப்படியே கோவிலில் இருக்கிற கல்லையும் கும்பிடக் கூடாது.

* ஓசைபெற்றகல்லைநீ ருடைத்துருக்கள்செய்கிறீர்
வாசலிற்புதைத்தகல் மழுங்கவேமிதிக்கிறீர்
பூசைபெற்றகல்லிலே பூவுநீறுஞ்சாத்துறீர்
ஈசனுக்குகந்தகல் லிரண்டுகல்லுமல்லவே.

* இ-ள். ஓசைபெற்ற—சத்திக்கிற. கல்லை—கல்லை. நீர்—(உலகத்தாரே) நீங்கள். உடைத்து—உடைத்து. உருக்கள்—விக்கிரகங்

ஒரு கல்லை இரண்டு துண்டாக உடைத்து, ஒரு துண்டை வாசற்படியிலே புதைத்து, காலினாலே மிதிக்கிறீர்கள். மற்றொரு துண்டைத் தூக்கிக் கொண்டுபோய், கோவிலிலே நட்டு, அதற்குச் சலத்தினாலே அபிஷேகஞ்செய்து, புஷ்பத்தினாலே அர்ச்சித்து, அதைத் தெய்வமென்கிறீர்கள். அந்தத் துண்டைப் பார்க்கிலும், இந்தத் துண்டு தேவனுக்குப் பிரியமல்ல. இரண்டும் கல்லேயல்லாமல், வேறல்ல, என்று இந்தப் பாட்டிலே கண்டிருக்கிறது.

கல்லை எதற்கு உபயோகமாக ஆண்டவர் ஏற்படுத்தினாரோ, அதற்கே அது உபயோகமாகட்டும். வண்ணான் அதின் மேல் உங்கள் அழுக்குத் துணிகளைத் தப்பட்டும். உங்கள் பெண்பிள்ளைகள் அதின்மேல் மசாலை அரைக்கட்டும். ஒட்டர் அதைக் கொண்டு கல்லுச் சுவர் கட்டட்டும். அதெல்லாம் சரிதான், அதற்கே உதவும்படி தேவன் அதை உண்டு பண்ணினார். அதை அப்படிப்பட்ட வேலையில் உபயோகப்படுத்தாமல் அதை எடுத்து வைத்து, அதிலே சுவாமி விளங்குகிறாரென்று சொல்லி, அதற்குப் பூசைபண்ணுகிறதைப் பார்க்கிலும் இவ்வுலகத்திலே வேறே என்ன பெரிய பைத்தியம் இருக்கிறது?

---

களை. செய்கிறீர்—செய்கிறீர்கள். வாசலில்—வாசலிலே. புதைத்த—புதைத்த. கல்—கல்லை. மழுங்க—தேய. மிதிக்கிறீர்—மிதிக்கிறீர்கள். பூசை—ஆராதனை. பெற்ற—பெற்றுக்கொண்ட. கல்லிலே—விக்கிரகத்தில். பூவும் — பூவையும். நீறும்—விபூதியையும். சாத்துநீர்—சாத்துகிறீர்கள். ஈசனுக்கு—கடவுளுக்கு. உகந்த கல்—சந்தோஷமான கல். இரண்டு கல்லுமல்ல—இந்த இரண்டு கல்லுமல்லவாம். எ-று.

* அண்டரண்டங்கடந்துநின்றசோதிதானே
அவனிதனிலுடைந்தகல்லிலமருமோதான்
எண்டிசையுமெங்கணுமாயிருந்தசோதி
ஈனமரங்கல்லதனிலிருக்குமோதான்
தொண்டர்களேயுங்களுக்கேனிந்தவார்த்தை
சொன்னவர்க்குங்கேட்டவர்க்குஞ்சொர்க்கமில்லை.
மண்டலத்திற்சற்குருவைவணங்கிநின்றால்
மாறுதபெருவாழ்வுவாழலாமே.(ரு.)

நாங்கள் இதுவரையிலுஞ் சொன்ன விவரங்களை ஒரு வாக்கியமாகக் கூட்டிச் சொல்லுகிறோம்: கேளுங்கள். கடவுள் மெய்ப்பொருளாயிருக்கிறார். அவர் சீவனுள்ளவர். அவர் சர்வ சிருஷ்டிகர்த்தர். அவர் சகலத்தையும் காப்பாற்றுகிறவர். அவர் உபகாரஞ் செய்கிறவர். அவர் தண்டனை செலுத்துகிறவர். அவரையே வணங்கி, ஸ்தோத்திரித்து, தொழுதுகொள்ளவேண்டும். விக்கிரகமோ பொய்ப் பொருளாயிருக்கிறது. அது சீவனில்லாதது. அது ஒன்றை உண்டாக்குகிறதுமில்லை; ஒன்றைக் காப்பாற்றுகிறதுமில்லை. அது

* **இ–ள்.** அண்டரண்டம் — சகல அண்டங்களையும். கடந்து நின்ற—தாண்டி நின்ற. சோதி—சோதிரூபமான கடவுள். அவனி தனில் — பூமியில். உடைந்த கல்லில் — உடைபட்ட விக்கிரகத்தில். அமருமோ — தங்குமா. எண்டிசையும் — எட்டுத் திக்கிலும். எங்கணும் — மற்றெவ்விடங்களிலும். ஆயிருந்த — ஆயிருக்கிற. சோதி—கடவுள். ஈனம்—இழிவான. மரம்—மரத்திலும். கல்லதனில்—கல்லிலும். இருக்குமோ–இருக்குமா. தொண்டர்களே—அடியார்களே. இந்த வார்த்தை—இந்தப் பேச்சு. உங்களுக்கு—உங்களுக்கு. ஏன்—என்னத்திற்கு. சொன்னவர்க்கும் — சொன்னவர்களுக்கும். கேட்டவர்க்கும் — கேட்டவர்களுக்கும். சொர்க்கமில்லை—மோட்சமில்லை. மண்டலத்தில்—பூமியில். சற்குருவை—ஞானசாரியனை. வணங்கிநின்றால் — வழிபட்டால். மாறுத — அழியாத. பெரு—பெரிய. வாழ்வு—மோட்ச வாழ்வில். வாழலாம்—சுகமாயிருக்கலாம். **எ–று.**

(ரு.) உசுஎ-ம் பக்கத்திலுள்ள பாட்டையும் காண்க.

ஒரு நன்மை செய்கிறதுமில்லை; ஒரு தீமைசெய்கிறதுமில்லை. மெய்யான கடவுளைக் கைவிட்டு, விக்கிரகங்களைப் பூசிக்கிறது எல்லா மூடத்தனத்திலும் மூடத்தனம். அதுவே துர்ப்பூசை. அதுவே தேவதுரோகம்.

விக்கிரகங்களைக் கும்பிடவேண்டாமென்று தேவன் கட்டளையிட்டிருக்கிறார். ஆகையினாலே, கல்லுகளையும் கட்டைகளையும் கும்பிடுகிறவர்கள் தேவகட்டளையை மீறுகிறார்கள். கடவுளை நிந்திக்கிறார்கள். பாவமென்கிற சமுத்திரத்திலே முழுகிப் போகிறார்கள்.

தேவன் பரமாத்துமாவாய் எங்கும் இருக்கிறார். அவரை நாம் நம்முடைய மனதினாலே தியானித்து, பணிந்து, வணங்கவேண்டும். அவரைச் சரியாய் வணங்கும்படியாக நாம் அவரை அறியவேண்டும். அவர் நம்முடைய சரீரக் கண்ணுக்குத் தென்படாதவர். அவரை அறிவதற்கு மெய்யான வேதம் வேண்டியது. மனுஷர்மேல் அவர் கடாட்சம் வைத்து, சத்திய வேதத்தை அருளிச் செய்திருக்கிறார். கிறிஸ்து வேதமே அந்த ஒன்றான சத்திய சாஸ்திரம். அதுவே நமக்கு நேத்திரம். அதில்லாவிட்டால், நாம் குருடர்களுக்குச் சமானமாயிருப்போம். அந்தக் கிறிஸ்துவேதத்தை நாம் படித்து, அதின் பொருளைக் கண்டு, அதை நம்பி, அதின்படி நடப்போமேயானால், மெய்யான கடவுளை அறிவோம். அந்தச் சத்திய வேதமென்கிற கண்ணினாலே அவரைக் காண்போம். மனதினாலே அவரைத் தொழுதுகொண்டு மகிழ்ச்சியாயிருப்போம்.

தேவனானவர் பரிசுத்தமும் நீதியுமுள்ளவர். அவரிடத்திலே பாவம் இல்லை. மனுஷர்களோ பாபாத்துமாக்களாயிருக்கிறார்கள். பொய், சூது, களவு, விக்கிரகாராதனை முதலான பாவங்களைச் செய்து, கெட்டுப்போனார்கள். தேவனுக்கு விரோதிகளும் துரோகிகளும் ஆனார்கள்.

மனுஷர் பாவஞ் செய்ததினாலே, நரக தண்டனைக்குச் சுதந்தராராயிருக்கிறார்கள். அவர்களுக்கு ஆகத் தக்க கதி அந்த நரகமே. பாவத்தினாலே அவர்களுடைய ஆத்துமா வும் அசுத்தப்பட்டிருக்கிறது. இவ்விதமாய் அவர்கள் நரக தண்டனைக்குப் பாத்திரவான்களும், பாவ அழுக்குள்ளவர் களுமாயிருக்கிறதினாலே, பரிசுத்த கடவுளிடத்திலே எப்ப டிச் சேருவார்கள்? மோட்சத்தை எப்படி அடைவார்கள்? அவர்களுடைய பாவம் நீக்கப்பட்டால் மாத்திரம் அவர்கள் தேவனிடத்திலே சேர்ந்து, முத்தி அடையலாம். தங்களு டைய பாவத்தை நீக்கவோ மனுஷர்களுக்கு எவ்வளவும் திராணி இல்லை. நரக தண்டனைக்குத் தப்ப, அவர்களுக்குள் ளே ஒரு வழியும் இல்லை. தங்கள் ஆத்துமாவைச் சுத்தம் பண்ண, அவர்களிடத்தில் ஒரு உபாயமும் இல்லை. என்ன செய்வார்கள்? ஐயையோ, வரப்போகிற நரக தண்டனை தீராத நித்தியமான தண்டனையாயிருக்கிறதே. அதற்குட்பட்டால், பின்பு தப்பிவருவதற்குக் கூடாது.

இப்படியிருக்கிறதினாலே, கடவுளுக்கும் நமக்கும் நடு வாக ஒரு மத்தியஸ்தர் வேண்டும். நம்முடைய பாவத்தை நீக்கி, நம்முடைய ஆத்துமாவைச் சுத்திகரித்து, நம்மைக் கடவுளிடத்திலே சேர்க்கத் தக்க பரமகுருவாகிய இரட்சகர் நமக்கு வேண்டும். அப்படிப்பட்டவர் நமக்குக் கிடைத் தால், பாவத்தாலே கெட்டுப்போன நாம் அவராலே சீர்ப் பட்டு, மோட்ச கதி சேரலாம்.

அப்படிப்பட்ட மத்தியஸ்தர் நம்முடைய பாவத்தைத் தீர்க்க ஏற்பட்டால், நம்முடைய பாவத்துக்கு ஏற்ற தண் டனையை அவர் தாமே சுமந்து தீர்க்க வேண்டும். இல்லா விட்டால், நம்முடைய பாவம் தீரமாட்டாது. கடவுள் நீதி யுள்ளவர். அவர் பாவத்தைப் பகைக்கிறவர். அவர் பா வத்தினிமித்தம் தண்டனை செலுத்துகிறவர். செலுத்தாமல் போனால், அவருடைய நீதிக்குக் குறைவு வரும். அவர்

செலுத்துகிற தண்டனை நமதுமேலே விழுந்தால், நம்மை நரகத்திலே அமிழ்த்திவிடும். அந்தத் தண்டனை நமக்கு வாராமல் தீர்க்கிறதற்கு ஒருவர் உடன்பட்டால், அதற்குப் பதிலான தண்டனையை அவர் தாமே அனுபவிக்கவேண்டும். அப்படிச் செய்தால், கடவுளுடைய நீதி திருப்தியாகும். அதற்குக் குறைவு வாராது. கடவுள் நம்முடைய பாவங்களை மன்னிக்கிறதற்கு வழி உண்டாகும்.

அப்படிப்பட்ட மத்தியஸ்தர் தேவத்தன்மையும் மனுஷத்தன்மையுமுள்ளவராயிருக்கவேண்டியது. அவர் மனுஷனுயிராவிட்டால், நம்முடைய பாவத்துக்காக எவ்விதமாய்ப் பாடுபடலாம்? அவர் தேவனுயிராவிட்டால், மனுஷருடைய பாவமென்கிற பெரிய சுமையை எவ்விதமாய்த் தாங்கி, தீர்க்கலாம்? பாவநிவிர்த்தியை உண்டாக்க வருகிறவர் தேவனும் மனுஷனுமான புண்ணிய குருவாய் வரவேண்டும்.

அப்படிப்பட்ட மத்தியஸ்தர் ஒருவரே உண்டு. அவரே இயேசுக்கிறிஸ்துநாதர். அவர் தேவனுயிருக்கிறுர். அவர் பூமியிலே மனுஷனுக அவதரித்தார். முப்பத்துமூன்று வருஷகாலம் பூலோகத்திலே தரித்திருந்தார். நமது பாவத்தைத் தீர்க்கவும், நமது அசுத்தத்தை நீக்கவும், நம்மைக் கடவுளிடத்தில் சேர்க்கவும், வந்த லோகரட்சகர் அவரே. பூமியிலே சத்தியப் பொருளை உபதேசித்தார். நல்ல வழியை ஏற்படுத்தினுர். யாவருக்கும் தயை செய்தார். தீராத வியாதிகளையும் ரோகங்களையும் தீர்த்தார். பேய்களையும் பிசாசுகளையும் ஓட்டினுர். தீமைகளை விலக்கினுர். நன்மைகளைச் சொரிந்தார். இவையெல்லாம் தமது வாக்கினுலே நடத்தினுர். இவ்விதமாய்ப் பூலோகத்திலே அவர் தம்மைத் தேவத்தன்மையும் பரிசுத்த மனுஷத்தன்மையுமுள்ளவரென்று அனேக அற்புதங்களினுலும் அதிசயங்களினுலும் காண்பித்தார். உலகம் தம்மை நம்பி நேசிக்கும்படியான காரணங்களை வெளிப்படுத்தினுர். பின்பு தம்மை மரணத்துக்கு ஒப்

புக்கொடுத்தார். சிலுவையிலே அறையப்பட்டார். தம்முடைய பரிசுத்த இரத்தத்தைச் சிந்தினார். மிகுந்த பாடுகளையும் அவஸ்தைகளையும் அனுபவித்தார். தமது சீவனையும் விட்டார். மறுபடியும் மூன்றாம் தினத்திலே சீவனோடே எழுந்து வந்து, உலகத்திலே அனேகருக்குத் தரிசனையாகி, தம்மை விசுவாசித்தவர்களை ஆசீர்வதித்து, பரமண்டலத்துக்குத் திரும்பிப் போனார். மகிமையுள்ள அந்த மத்தியஸ்தர் நமக்காகச் செய்த திவ்விய தொழில் இதுவே.

அவர் அவ்வகையாகப் பாடுபட்டது என்னத்துக்கென்று கேட்கிறீர்களா? சொல்லுகிறோம், உற்றுக் கேளுங்கள். நம்முடைய பாவச் சுமையை அவர் எடுத்து, நமக்காக அதைத் தாங்கினார். நாம் நித்திய நரக தண்டனை அடையாமல் தப்பும்படி, அவர் நமக்காகத் தண்டனை அடைந்தார். நித்திய நரக தண்டனைக்குச் சரியான தண்டனையை அவருடைய மனுஷத்தன்மையானது தாங்குமோ என்று கேட்டால், அவர் மனுஷனாக மாத்திரம் இருந்தால், தாங்காது. அவர் தேவனாகவும் இருக்கிறார். அவருடைய மனுஷத்தன்மை அந்தத் தண்டனையைச் சுமந்து தீர்க்கும்படிக்கு, இவருடைய தேவத்தன்மையுங் கூட இருந்து பெலன் கொடுத்தது. அவர் தேவனும் மனுஷனுமாயிருந்தபடியினாலே தான் நமது பாவத்தை நீக்க வல்லவரும் தக்கவருமாய்ப் பிரகாசித்தார். இயேசுக்கிறிஸ்து செய்த இந்த இரட்சிப்பு அவரை விசுவாசிக்கிற யாவருக்கும் பிரயோசனப்படும். பூலோகத்திலே எந்தத் தேசத்திலேயானாலும் எவர்கள் அந்தக் கிறிஸ்துவை நம்பி நேசித்து அனுசரிக்கிறார்களோ, அவர்களுக்கு நரக தண்டனை வராது. அவர்கள் தண்டனைப் படாதபடிக்கு, இயேசுக்கிறிஸ்து அவர்களுக்காகத் தண்டனைப்பட்டார். அவர்களுடைய பாவத்தை நிவிர்த்தி செய்தார். அப்படிப்பட்டவர்களுக்குத் தம்முடைய பரிசுத்த ஆவியையும் கொடுக்கிறார். அப்படிப்பட்டவர்களுடைய இருதயத்திலே அந்த ஆவியானவர் வாசம்பண்ணி, அவர்க

ளைப் பரிசுத்தப் படுத்துகிறார். அவர்களை மோட்சலோகத்துக்குப் பக்குவமாக்குகிறார். அப்படிப்பட்டவர்கள் கடவுளுக்குப் பிள்ளைகளாகிறார்கள். அவர்கள் மரணகாலத்திலே இயேசுக்கிறிஸ்துவினாலே மோட்சலோகத்தில் சேருவார்கள். நித்தியமும் அங்கே தேவ சமூகத்திலே வாழுவார்கள். ஓ சனங்களே, வீணான விக்கிரகங்களைத் தள்ளிப் போடுங்கள். வல்லமையும் அன்புமுள்ள லோகரட்சகராகிய இயேசுக்கிறிஸ்துநாதரை உங்கள் தேவனென்றும், ஆத்தும நேசரென்றும், பாவ நாசரென்றும் ஏற்றுக்கொண்டு, அவர் மார்க்கத்திலே சேருங்கள். அப்படிச் செய்தால், அவருடைய அருளினாலே முத்தியுலகத்திலே சேருவீர்கள். அப்படிச் செய்யாமல்போனால், தீ நரகத்திலே விழுவீர்கள்.



# உபகிரந்தம்.

## APPENDIX TO NO. X.



## முன் சொன்னவைகளுக்குச் சில உதாரணங்கள்.

(க.) நியம நிஷ்டை முதலானவைகளால் பலனில்லை என்பது.

*நேமங்கணிட்டைகள் வேதங்களாகம நீதிநெறி*
*ஓமங்கடர்ப்பணஞ் சந்திசெபமந்திர யோகநிலை*
*நாமங்கள்சந்தனம் வெண்ணீறுபூசி நலமுடனே*
*சாமங்கடோறு மிவர்செய்யும்பூசைகள் சர்ப்பனையே.*

பட்டணத்துப்பிள்ளை.

### இதன் பதவுரை.

நேமங்கள்—நியமங்களும். நிட்டைகள்—நிஷ்டைகளும். வேதங்கள்—வேதங்களும். ஆகமம்—ஆகமங்களும். நீதிநெறி—நீதிமார்க்கங்களும். ஓமங்கள்—யாகங்களும். தர்ப்பணம்—தர்ப்பணமும். சந்தி—காலைமாலையிற் செய்யுமனுஷ்டானங்களும். செபம்—செபங்களும். மந்திரயோகம்—கன்மயோகங்களும். நிலை—நிலைபெற்ற. நாமங்கள்—நாமங்களையும். சந்தனம்—சந்தனத்தையும். வெண்—வெண்மையான. நீறு—விபூதியையும். பூசி—தரித்துக்

கொண்டு. சாமங்கடோறும்—ஒவ்வொரு சாமங்களிலும். இவர்—இவ்வுலகத்தவர். செய்யும்—செய்கிற. பூசைகள்—ஆராதனைகளும். (ஆகிய இவைகள்) சர்ப்பனை—பொய்யாம்.

கருத்துரை.

நியமம் முதலிய இவைகளாற் பயனில்லையென்பதாம்.

(உ.) விக்கிரக பூசை புத்தியீனமேன்பது.

కట్టురాళ్ల దెచ్చి కాళ్ల చేతుల ద్రొక్కి
కాసెయులుల చేత గాసి జేసి
మొరపరాళ్ల కెరగు మొప్పల నేమందు
విశ్వదాభిరామ వినర వేమ. வேமனர். ஙூ: உஙூஅ.

இதன் பதவுரை.

కట్టురాళ్లదెచ్చి — மலையிலிருக்கும் கற்களைக் கொண்டுவந்து. కాళ్లచేతుల ద్రొక్కి—கை கால்களாலே புரட்டி. కాసెయులుల చేత—சிற்பாசாரிகளுடைய உளிகளினாலே. గాసిజేసి—துன்பபபடுத்தி. మొరపరాళ్లకు—கரட்டுக் கற்களை. మొరగు—கும்பிடும். మొప్పలను—மூடர்களைக் (குறித்து). యేమందు—என்ன சொல்லுவோம். విశ్వదాభిరామ — ஆண்டவருக்குப் பிரியமான. వేమ — ஓ வேமனரே. వినర—கேள்.

கருத்துரை.

மலையிலிருக்கும் கற்களைக் கொண்டுவந்து, கை கால்களினாலே புரட்டி, சிற்பாசாரிகளுடைய உளிகளாலே வருத்தப் படுத்தி, கரட்டுக்கற்களைக் கும்பிடுகிற மூடர்களைக் குறித்து என்ன சொல்லுவோம் என்பதாம்.

## (ரு.) இனி விக்கிரகாராதனை செய்யேனென்பது.

உளியிட்டகல்லையு மொப்பிட்டசாந்தையு மூத்தையறப்
புளியிட்டசெம்பையும் போற்றுகிலேனுயர் பொன்னெனவே
ஒளியிட்டதாளிரண் டுள்ளேயிருத்துவ துண்மையென்று
வெளியிட்டுடைத்துவைத் தேனினிமேலொன்றும் வேண்டிலனே.

பட்டணத்துப்பிள்ளை.

### இதன் பதவுரை.

உளியிட்ட—உளியாலடித்த. கல்லையும்—கல்லாலாகிய விக்கிரகத்தையும். ஒப்பிட்ட—(கடவுளுக்கு) ஒப்பாக. சாந்தையும்—சாந்திறுற் செய்த விக்கிரகத்தையும். ஊத்தை — களிம்பு. அற—நீங்க. புளியிட்ட—புளியிட்டுத் தேய்த்த. செம்பையும் — செம்பாலாகிய விக்கிரகத்தையும். போற்றுகிலேன்—துதிக்கமாட்டேன். உயர்—உயர்ந்த. பொன்னென — பொன்னைப்போல. ஒளியிட்ட — பிரகாசிக்கிற. தாளிரண்டு—இரண்டு பாதத்தையும். உள்ளே—மனதினுள்ளே. இருத்துவது—இருக்கச் செய்வது. உண்மையென்று—சத்தியமென்று. வெளியிட்டு—வெளியிற் கொண்டுவந்து. உடைத்து வைத்தேன் — பகிரங்கப்படுத்தினேன். (ஆகையால்) இனிமேல் — இனி. ஒன்றும் — ஒன்றையும். வேண்டிலன்—விரும்பமாட்டேன்.

### கருத்துரை.

விக்கிரகபூசை பூசையல்ல. மனோபூசையே பூசையென்பதாம்.



# வேதவாக்கியம்.

(௧.) விக்கிரகங்கள் தேவர்களல்ல.

௱௰௫. சங்கீதம்: ௪—௮.
௱௩௰௫. சங்கீதம்: ௰௫—௰௮.
ஏசாயா, ௪௪. அதி: ௯—௰௧, ௰௩—௨௰.
ஏசாயா, ௪௬. அதி: ௧—௮.
எரேமியா, ௰. அதி: ௰௪.
எரேமியா, ௫௧. அதி: ௰௭, ௰௮.
அபகூக், ௨ அதி: ௰௮, ௰௯.

(௨.) விக்கிரகங்களைக் கும்பிடவேண்டாமென்று தேவன் கட்டளையிட்டிருக்கிறார்.

யாத்திராகமம், ௨௰. அதி: ௪—௬, ௨௩.
லேவியராகமம், ௰௯. அதி: ௪.
லேவியராகமம், ௨௬. அதி: ௧.
உபாகமம், ௰௬. அதி: ௨௨.



பதினோராவது.

# நாசபூசை.

---

**No. XI.**

# IDOLATRY RUINOUS.

# நாசபூசை.



ஓ சனங்களே, நீங்கள் கல்லினாலும், மரத்தினாலும், மண்ணினாலும், பலபல விக்கிரகங்களை உண்டாக்கி, அந்த விக்கிரகங்களுக்குப் பலவிதமான பூசைகளை நடத்திவருகிறீர்கள். அப்படிப்பட்ட பூசையெல்லாம் கெடுதியுள்ளதென்று நீங்களும் நன்றாய் அறியலாம். அறியும்படி நாங்கள் சொல்லுகிற சில நியாயங்களைக் கேளுங்கள்.



## முதலாவது.

### விக்கிரகபூசை பெரிய மூடத்தனம்.

கண்ணினாலே தேவனைக் காண்பது கூடாதாகையால், அவனைப்போல ரூபத்தைப் பண்ணிவைக்கிறோமென்கிறீர்கள். ஆகிலும், நீங்கள் பண்ணிவைத்த ரூபத்தைப் பார்க்கிறதினாலே உங்களுக்கு என்ன ஞானம் உண்டாகும்? ஒரு மனுஷனுடைய ரூபத்தை எத்தனைதரம் பார்த்தாலும், அதினாலே அந்த மனுஷனுடைய காரியங்களை அறிவீர்களா? அவன் பிறந்த ஊரும், அவன் வளர்ந்த இடமும் அவனுடைய ரூபத்தை நோக்குகிறதினாலே, உங்களுக்குத் தெரி

யுமா? அவனுக்குரிய குணமும், அவன் நடந்த நடத்தை யும், அவனுடைய ரூபத்தைப் பார்க்கிறதினாலே, உங்க ளுக்கு விளங்குமா? அவனுடைய ஞானமும், வல்லமை யும், தொழிலும், கீர்த்தியும், அவனுடைய ரூபத்தைப் பார் வையிடுகிறதினாலே, உங்களுக்குத் தோன்றுமா? ஆயிரம் வருஷமட்டுக்கும் நீங்கள் அவனுடைய ரூபத்தின்மேலே உங்கள் இரண்டு கண்ணையும் விடாமல் செலுத்தினாலும், அவனைக் குறித்து உங்களுக்கு ஒரு அறிவும் உண்டாகமாட் டாது. அதைப்போலவே, நீங்கள் ஏற்படுத்தின விக்கிரக ரூபத்தைப் பார்க்கிறதினாலும், பூசிக்கிறதினாலும், கடவுளைக் குறித்து உங்களுக்கு ஒரு ஞானமும் பிறக்கப்போகிற தில்லை.

இன்னும் யோசித்துப் பாருங்கள். நீங்கள் ஒரு மனுஷனு டைய ரூபத்தை எந்நாளும் பாராதவர்களாயிருந்தும், அந்த மனுஷன் தன்னுடைய எல்லாக் காரியங்களையும் ஆதியோ டந்தமாக ஒரு புஸ்தகத்தில் தெளிவாய் எழுதிவைத்து, உங் களிடத்திலே அந்தப் புஸ்தகத்தை அனுப்பினால், நீங்கள் அதை நன்றாய்ப் படிக்கவே, அவனுடைய ஊரையும், இடத் தையும், குணத்தையும், நடையையும், புத்தியையும், திற மையையும், வேலையையும், பெருமையையும், அறிவீர்களல் லவா? அப்படியே தேவனைக் குறித்து நாம் அறியவேண்டி யது எதுவோ, அதையெல்லாம் தேவன் தாமே ஒரு சாஸ் திரத்திலே எழுதுவித்து நமக்கு அந்தச் சாஸ்திரத்தைக் கொடுத்தால், நாம் பத்தியோடும் கருத்தோடும் அதைப் படிக்கவே, அவரை அறிவோம். இப்படியிருக்க, அவர் கொடுத்த மெய்யான சாஸ்திரத்தைத் தேடாமல், ரூபத்தைப் பண்ணிவைத்துக் கும்பிடுவது மூடத்தனமென்று சொல்ல வும் வேண்டுமோ?

மேலும், கடவுளைப்போல ரூபத்தைப் பண்ணிவைக்கி றோமென்கிற வார்த்தை வீணான வார்த்தையாயிருக்கிறதே.

நீங்கள் தேவனைக் கண்ணினாலே கண்டதில்லையே. அவனைப்போலே ரூபம் பண்ணுகிறது எவ்விதம்? அவருடைய ரூபத்தைப் பார்த்தால் அல்லவோ, அதைப்போலே ஒன்று செய்துகொள்ளலாம்? நீங்கள் அனேக விதமான ரூபங்களைப் பண்ணி, தேசமெங்கும் ஸ்தாபித்திருக்கிறீர்கள். எது தேவனைப்போல் இருக்கிறதென்று சொல்லத் துணிவீர்கள்? பிள்ளையாரை நீங்கள் மேன்மையாக எண்ணி, கும்பிடுகிறீர்கள். அந்த ரூபம் தேவனைப்போல் இருக்குமா? வானத்தையும் பூமியையும் படைத்த கடவுளானவர் அதைப்போலே உடைந்த கொம்பும், யானைத் தும்பிக்கையும், வீங்கின வயிறும், பெருச்சாளி வாகனமும் உடையவராயிருப்பாரா? சொல்லுங்கள்.

நீங்கள் இந்த விஷயத்திலே கொஞ்சமும் சிந்தனையில்லாமல், பேசுகிறீர்கள். தேவன் ரூபமில்லாத பரமாத்துமாவாயிருக்கிறார். ரூபமில்லாதவனைப்போல ரூபம் பண்ணுவது எப்படி? அது யாராலே ஆகும்? இதைக் குறித்து ஒரு திருஷ்டாந்தம் சொல்லுகிறோம்.

சில காலத்துக்கு முன்னே தென்னாட்டில், ஒரு ஊரிலே, விக்கிரகம் வார்க்கிற ஒரு சில்ப்பி இருந்தான். அவன் மெத்தவும் கெட்டிக்காரன். பலவகையான சொரூபங்களையும் விக்கிரகங்களையும் செய்து விற்பான். அந்த இடத்திலே இருந்த ஒரு துரையானவர் அதை அறிந்து, ஒரு நாள் சில்ப்பியை அழைப்பித்து அவனை நோக்கி, "ஓ சில்ப்பியே, உம்முடைய சாமர்த்தியம் என் செவிக்கும் ஏற வந்தது. தெய்வத்தைப்போல ரூபங்களை நீர் செய்கிறவரென்று சொல்லக் கேள்விப்பட்டேன். நீர் எனக்காக ஒரு ரூபத்தைச் செய்து கொடுக்கவேண்டியது. அதைச் செய்யும்படி வேண்டிய அளவாய் உமக்குப் பொன் தருகிறேன். கூலியும் பேசவேண்டியதில்லை. நீர் என்ன கேட்டாலும், அதைக் கொடுக்கிறேன். நான் காட்டுகிற மாதிரிக்குமாத்திரம் ஒரு

மயிரளவாகிலும் பிசகாமல் சரியாய்ச் செய்யவேண்டும். அப்படிக்குச் சம்மதிக்கிறீரோ" என்று சொல்லவே, அந்தச் சில்ப்பி துரையைப் பார்த்து; "செய்வேன் துரையே, நீர் காண்பிக்கிற சாயலுக்குத் தப்பாமல் சரியாய்ச் செய்து கொடுக்கிறேன்" என்றான். அப்போது அந்தத் துரையானவர் ஒரு நாளைக் குறித்து, அந்நாளிலே ஆயுதங்களை எடுத்துவரும்படியாகச் சொல்லிக் கட்டளையிட்டு, அந்தச் சில்ப்பியை உபசரித்து அனுப்பிவிட்டார். நியமித்த தினத்திலே சில்ப்பியானவன் ஆயுதங்களைக் கொண்டுவந்தான். துரை அவனை உளுக்காரவைத்து, தாமும் அந்தச் சில்ப்பிக்கு எதிரே ஆசனத்திலிருந்து, அவனைப் பார்த்துச் சொல்லுகிறார். "ஓ சில்ப்பியே, நான் காட்டுகிற மாதிரிக்கு ரூபம் செய்து கொடுக்கச் சம்மதித்தீரே; இதோ, உம்முடைய கண்களை நன்றாய் விழித்துப் பரப்பி, என்னை நோக்கி உற்றுப்பாரும். என்னுடைய சரீரத்திலே வாசஞ்செய்கிற என் ஆத்துமாவைப்போல ஒரு ரூபத்தைப் பண்ணிக்கொடும். எத்தனை ஆயிரம் வராகன் கேட்டாலும், உமக்குத் தருவேன்" என்றார். அந்தப் பேச்சைக் காதாலே கேட்ட சில்ப்பி அதிசயப்பட்டு, பிரமித்து, தான் உளுக்காந்திருந்த இருப்பை விட்டெழுந்து, குதித்து, கையினாலே வாயைப் பொத்திக் கொண்டு, "அப்பா, அப்பா, உம்முடைய ஆத்துமாவை நான் கண்டதுண்டோ? காணவும் கூடுமோ? அது ரூபமில்லாததல்லவா? அதைப்போல ஒரு ரூபத்தைப் பண்ணுகிறது எவராலே ஆகும்? செலவு கொடுங்கள், போகிறேன், துரையே" என்று கூவினான். அப்போது துரையானவர் மறுபடியும் சொல்லுகிறார்: "ஓ சில்ப்பியே, நான் உமக்கு எதிரே இருந்து, உமக்குக் காணப்படுகிறேன்: ஆனாலும், எனக்குள்ளே இருக்கிற என்னுடைய ஆத்துமாவைப்போலே ஒரு ரூபத்தைப் பண்ணுகிறதற்கு உம்மாலே கூடாது. உமது கண்ணுக்கு எக்காலமும் காணப்படாத தேவன் இருக்கிறாரே; அவரைப்போல ரூபங்களைப் பண்ண, நீர்

எந்த விதத்திலே துணிகிறீர்?" என்று கேட்டார். அதற்குச் சில்ப்பி உத்தரவொன்றும் சொல்லாமல் வெட்கப்பட்டுப் போய்விட்டான்.

*பூவிற்கும்வான்கடையில் புல்விற்போர்போலவொன்றைப்
பாவிக்கமாட்டேன் பதியேபராபரமே.

பராபரனே, நீர் இதைப்போல் இருக்கிறீரென்று நான் யாதொன்றையும் ஏற்படுத்தி, பாவனை செய்யமாட்டேன். அப்படி நான் செய்தால், புஷ்பங்களை விற்கிற நல்ல கடையிலே புல்லைக் கொண்டுபோய் விற்கிற புத்தியீனமாயிருக்குமே என்று தாயுமானவர் சொன்னார்.

ஓ சனங்களே, ரூபங்களை ஏற்படுத்தி ஆராதனை செய்கிறது மூடத்தனமே. மனுஷரை மூடராக்குகிற விக்கிரக பூசை கெடுதியுள்ளதல்லவா? அதுவே நாசபூசை.



## இரண்டாவது.



## விக்கிரக பூசையினாலே ஒரு நன்மையும் இல்லை.

அது நம்முடைய ஆத்துமாவின் பசிதாகத்தைத் தீர்க்கமாட்டாது.

---

* இ—ள். பதியே—கர்த்தாவே. பராபரமே—கடவுளே. பூ—பூமாலையை. விற்கும்—விற்கிற. வான்—பெரிய. கடையில்—கடையிலே. புல் — புல்லை. விற்போர்போல — விற்பவர்களைப்போல. ஒன்றை — யாதொன்றையும். பாவிக்கமாட்டேன் — நீரென்றெண்ணமாட்டேன். எ—று.

கடவுள் வேறே, நம்முடைய ஆத்துமா வேறே; அவர் சிருஷ்டிகர்த்தர், நமது ஆத்துமா அவராலே சிருஷ்டிக்கப்பட்டது. நம்முடைய ஆத்துமாவானது கடவுளோடே ஒரே பொருளாயிருக்கிறதுமில்லை, இனிமேல் அப்படி ஆகப் போகிறதுமில்லை. அப்படியிருந்தும், நம்முடைய ஆத்துமா அவருடைய கிருபையைப் பெற்று அவரிடத்திலே சேர்ந்தால், நித்திய பேரின்ப முத்தி அடைந்து அவருடைய சமுகத்திலே வாழ்ந்து மகிழ்ந்துகொண்டிருக்கும். அதுவே மோட்சகதி. அதுவே நமக்கு வேண்டும். நம்முடைய ஆத்துமா இத்தன்மையானதினாலே, அது கடவுளை விரும்புவதற்கு உரியதாயிருக்கிறது. அவர் நமக்குப் பரம தகப்பனானவர். நாம் அவரை விட்டுவிட்டு, தூரமாகத் திரிந்து, பாவமார்க்கங்களில் அலைந்தோம்: ஆனாலும், அந்தப் பரம தகப்பன்மேலும் அவருடைய வீடாகிய மோட்சத்தின்மேலும் உள்ள ஆசை முழுவதும் நம்முடைய இருதயத்தை விட்டுப் போகவில்லை. அவரை அறிந்து அவருடைய அருளை அனுபவித்து முத்தியுலகத்தைச் சேரவேண்டுமென்கிற ஆசை இன்னும் கொஞ்சம் நம்முடைய நெஞ்சிலே மீந்திருக்கிறது. அந்த ஆசையானது நம்முடைய ஆத்துமாவுக்கு ஒரு பசிதாகம்போலிருக்கிறது.

*சொல்லாலடங்காச் சுகக்கடலில்வாய்மடுக்கின்
அல்லாலென்தாக மறுமோபராபரமே.

சொல்லுக்குள் அடங்காத ஆனந்த சமுத்திரம் என்கிற கடவுளிடத்திலே நான் வாய் வைத்துச் சாப்பிட்டாலேயல்

தாயுமானவர் பாடல்.

* இ-ள். சொல்லாலடங்கா — சொல்லுக்கடங்காத. சுகக்கடலில் — பரமானந்த சமுத்திரத்தில். வாய்மடுக்கினல்லால் — வாய் வைத்துக் குடித்தாலல்லாமல். என் தாகம் — எனது தாகமானது. அறுமோ—நீங்குமோ. எ-று.

லாமல், என்னுடைய ஆத்துமாவிலுள்ள ஆசையென்கிற தாகம் தணியுமோ, தணியாதே என்று இதிலே சொல்லப் பட்டது.

இது மெய். நம்முடைய ஆத்துமாவின் பத்திக்கு உரிய பொருள் தேவனே. அவனை அடையாமல்போனுல், நம க்கு என்றென்றைக்கும் திருப்தி இல்லை. அவனை அடைந் தால் நம்முடைய ஆசை தீரும். நமது சீவன் களிக்கும். அதுவே நன்மை. அந்த நன்மையை விக்கிரக பூசை தரு மோ? நமக்குத் தேவன்மேல் உண்டாயிருக்கிற ஆசை கல் லிலும், கட்டையிலும் நிறைவேறுமோ? ஆத்துமத்தின் பசி தாகத்தை அந்தச் சீர்கெட்ட பொம்மை தீர்க்குமோ? ஒரு போதும் தீர்க்கமாட்டாது. அந்தப் பசிதாகத்துக்குக் கட வுளே சரியான பொருள். விக்கிரகம் எப்படியென்ருல்,

* சின்னஞ்சிறியார்கள் செய்தமணற்சோற்றையொக்கும்.

சிறு பிள்ளைகள் தெருவிலே விளையாடும்போது, பொடிக் கல்லாலே ஒரு அடுப்புக் கட்டி, ஒரு குடுவையைப் பானை யென்று அதின்மேலே நிறுத்தி, மணலைச் சோறென்று உள் ளே இட்டு, ஆடுகிருர்களே: அந்த மணற்சோற்றினுலே அவர்களுடைய பசிதீருமா? தீராதே. அதைச் சாப்பிட் டால், அந்தப் பிள்ளைகளுக்கு வயிற்று நோவும் வியாதியும் கா ணும். பசியாற்றிக்கொள்ளவேண்டுமானுல், அந்த மணலை விட்டு, வீட்டிலே போய்த் தாயாரிடத்தில் அல்லவா உண்மை யான சோறு தேடிக்கொள்ளவேண்டியது? விக்கிரகபூசை யெல்லாம் மணற்சோற்றைத் தின்கிற வேலை. அது ஆத்து

தாயுமானவர் பாடல்.

*இ-ள். சின்னஞ்சிறியார்கள்—மிகவுஞ் சிறியவர்கள். செய்த—செய்து விளையாடுகிற. மணற்சோற்றை—மணலாலாகிய சாதத்தை. ஒக்கும்—ஒப்பாயிருக்கும். எ-று.

மாவைக் கெடுக்குமேயல்லாமல், அதின் பசியை ஆற்றமாட்டாது. அதைத் தள்ளிவிட்டு, தாயைப்பார்க்கிலும் அன்புள்ள மெய்க்கடவுளிடத்திலே நாம் சேரவேண்டியது.

இதுவுமல்லாமல், விக்கிரகபூசை மனுஷருடைய ஆபத்துக்கு உதவமாட்டாது. இவ்வுலகத்திலே நீங்கள் செய்த பாவங்களைக் குறித்து இனிமேல் தேவனிடத்தில் நீங்கள் கணக்கு ஒப்புவிக்கவேண்டும். அவர் அதற்காக ஒரு நாளை நியமித்திருக்கிறார். பூமியிலே நீங்கள் நடந்த நடத்தைகளை அவர் அந்த நாளிலே விசாரிப்பார். அப்போது நீங்கள் அவரை நோக்கி, "ஆண்டவரே, பொம்மைகளைக் கும்பிட்டோம்: அதினாலே எங்கள் பாவம் நிவிர்த்தியாய்விட்டது" என்று சொல்லத் துணிவீர்களா? துணியமாட்டீர்கள். அந்தப் பொம்மைகளைக் கும்பிட்டதே பெரிய பாவமென்று அப்போது அறிவீர்கள். நரகத்திலே தள்ளப்பட்டு விழுவீர்கள். நீங்கள் அப்படி விழப்போகிற அந்த ஆபத்துக் காலத்திலே நீங்கள் பூமியில் செய்த உங்கள் விக்கிரகபூசை உங்களுக்குச் சகாயஞ் செய்யுமோ, எவ்விதத்திலேயாவது உதவுமோ? அது உங்களை அதிக ஆழமான நரகத்திலே அமுக்கி நசுக்குமேயல்லாமல், எந்த விதத்திலும் உங்களுக்கு உதவாதே.

* அந்தரப்புஷ்பமுங் கானலினீருமோர்
அவசரத்துபயோகமோ.

ஆகாசத்திலே உண்டாகிற புஷ்பமும் இல்லை. மணற்காடுகளில் சலத்தைப்போல் தோன்றுகிற கானலும் சலமல்ல. அது வஞ்சிக்குமேயல்லாமல், அவசரத்துக்கு உபயோகப்

* இ-ள். அந்தரப் புஷ்பமும்—ஆகாயப் பூவும். கானலினீரும்—கானற்சலமும். ஓரவசரத்து—ஒரு அவசரமான காலத்தில். உபயோகமோ—பிரயோசனப்படுமோ. எ-று.

படாது. அதைச் சலமென்று நினைத்து, அந்த மணற் காட்டின் வழியே அதைத் தேடிக்கொண்டு போகிறவன் தாகத்துக்கு நீர் அடையாமல், இளைத்துக் களைத்து விழுந்து சாவான். அதுபோலவே விக்கிரகபூசை உங்களை வஞ்சிக்குமேயொழிய அவசரத்துக்கு உதவாது.

விக்கிரகபூசையினாலே ஒரு நன்மையும் இல்லையென்று உணர்ந்துகொள்ளுங்கள். ஆட்டுக்கடாவின் கழுத்திலே தொங்குகிற அலைதாடியை முலையென்றும், அதிலே பாலிருக்குமென்றும், நினைத்து, அதைப் பிடித்துக் கறக்கிறவனுக்கு எப்படிப் பால் கிடையாதோ, அப்படியே விக்கிரகபூசையினாலே ஒரு பிரயோசனமும் கிடையாது.(க.)

ஓ சனங்களே, ஒரு பிரயோசனத்தையும் தாராமல் வெகு நன்மைகளைத் தடுக்கிற விக்கிரகபூசை கெடுதியுள்ளதல்லவா? அதுவே நாசபூசை.

---

## மூன்றாவது.

## விக்கிரகபூசையானது வெகு தீமைகளை உண்டாக்கும், அது புத்தியைக் குருடாக்கும்.

ஒருவன் ஒரு துணியை எடுத்து, கண்ணிலே வெளிச்சம் புகாதபடி கண்ணின்மேல் அதைக் கெட்டியாய்க் கட்டிக்கொண்டால், அவன் குருடனைப்போல வழிதெரியாமல் தடவி, தள்ளாடி, பள்ளத்திலே விழுவான். தன் கண்ணின் மேல் அதை அவன் கட்டிக்கொண்டிருக்கும்வரையிலும்,

(க.) காகூ, காம, காமக-ம் பக்கங்களிலுள்ள பாட்டுகளைக் காண்க.

அவன் குருடனே. புத்தியென்கிற கண்ணைக் கட்டி மறைத்துக் குருடாக்குகிற கட்டானது எதுவென்றால், விக்கிரகாராதனைதான். விக்கிரகங்களைக் கும்பிடுகிறவன் மோட்சத்துக்குப் போகிற மார்க்கத்தைக் காணாமல், தடுமாறி, தடவி, இடறி நடக்கிறான். அந்தக் கட்டைப் பிடுங்கி எறிந்துவிட்டு நல் வழியைத் தேடாமல்போனால், அவன் நரகபள்ளத்திலே விழுவான். ஓ பொம்மைகளைப் பூசிக்கிறவர்களே, பூமியிலிருக்கிற குருடர் நீங்களே. நீங்கள் பண்ணுகிற பூசையே உங்களுக்குக் குருடு. அதை அனுசரிக்கிற மட்டுக்கும் சத்தியவேதத்தின் வெளிச்சம் உங்கள் மனசிலே பிரகாசிக்கமாட்டாது. கடவுளையும் அறியமாட்டீர்கள்.

விக்கிரகங்களைக் கும்பிடுவதினாலே இந்தத் தேசத்தாருடைய புத்தி மிகவும் கெட்டுப்போனதை யாரும் காணலாம். கல்லினாலே செய்த உயிரில்லாத எருதைக் கண்டால், கையெடுத்துக் கும்பிடுவார்கள். காலினாலே நடக்கிற உயிருள்ள எருதைக் கண்டால், அதை வண்டியிலே பூட்டி, குத்தி, அடித்து, வால் முறுக்கி ஓட்டுவார்கள்.(உ) உயிருள்ளதை அடிக்கிறதும், உயிரில்லாததைப் பூசிக்கிறதுமான புத்தி எப்படிப்பட்ட குருட்டுப் புத்தியோ, நீங்களே யோசியுங்கள். இப்படிப் புத்தியைக் குருடாக்குகிற பூசை கெடுதியுள்ளதல்லவா? அதுவே நாசபூசை.

## விக்கிரகபூசை ஆத்துமத்தைக் கெடுக்கும்.

மெய்யான கடவுள் சகல நன்மைக்கும் காரணராயிருக்கிறார். அவரைப் பற்றிக்கொள்ளுகிற ஆத்துமாவே செழித்து மலரும். அவரை விட்டு விக்கிரகங்களைப் பற்றிக்கொள்ளுகிற ஆத்துமாவோ கெட்டுப்போகும். அப்படிப்பட்ட ஆத்

(உ.) ௩௯-ம் பக்கத்திலுள்ள பாட்டைக் காண்க.

துமாவிலே பொல்லாத இச்சைகள் வளர்ந்து பெலன்கொள்ளும். அதிலேயிருந்து அனேகவிதமான துன்மார்க்கங்கள் தோன்றிப் புறப்படும். அந்த ஆத்துமா எல்லா நன்மையும் போக்கடிக்கும். எல்லாத் தீமையும் சம்பாதிக்கும். அன்னத்தை விட்டு விஷத்தைப் புசித்தால், எப்படி உடம்பு நாசப்படுமோ, அப்படியே கடவுளைக் கைவிட்டு, பொம்மைகளைக் கைக்கொள்ளுகிறவனுடைய ஆத்துமா கெட்டு, நரககதிக்குப் பக்குவப்படும்.(௩.)

இவ்விதமாய் ஆத்துமாவைக் கெடுக்கிற பூசை கெடுதியுள்ளதல்லவா? அதுவே நாசபூசை.

## விக்கிரகபூசை தேவனைக் கோபப்படுத்தும்.

ஒரு துரையிடத்திலே ஒரு வேலைக்காரன் சேவித்துக் கொண்டிருந்தான். அந்தத் துரை நல்லவர். அந்த வேலைக்காரனுக்குத் தப்பாமல், கிரமமாய் மாசத்துக்குப் பத்து ரூபாய் சம்பளம் கொடுத்துக்கொண்டுவந்தார். அந்தச் சம்பளத்தை வாங்கும்போதெல்லாம், அந்த வேலைக்காரன் துரையைப் பார்த்து, சலாஞ்செய்வான். ஒரு நாளோ முறைப்படி சம்பளம் பெற்றுக்கொள்ளும்போது, துரையிடத்திலே சலாஞ்செய்யாமலும், ஒரு வார்த்தை சொல்லாமலும் போய், ஒரு கல்லை எடுத்து, அதற்குக் கண் மூக்கு வாய் காது முதலான அவயவங்களை உண்டுபண்ணி, வீட்டில் ஒரு மூலையிலே அதை நிறுத்தி, அதற்குச் சலாஞ்செய்து, அதை நோக்கி, "ஓ கல்லே, நன்றாய் இருக்கிறீரா? நீரே என்னுடைய துரை. என் கையிலிருக்கிற இந்தப் பத்து ரூபாயைக் கொடுத்தவர் நீரே. என்னையும் என் குடும்பத்தையும் மாசந்தோறும் சம்ரட்சணைசெய்கிறவர் நீரே. ஆகையினாலே, கல்லே, நான்

(௩.) ௩௱௰௨-ம் பக்கத்திலுள்ள சுலோகத்தைக் காண்க.

உமக்குச் சலாஞ் சொல்லுகிறேன்" என்று உரத்த சத்தமாய்க் கூப்பிட்டான். துரை அதைப் பார்த்தார். மிகவும் கோபித்தார். அந்த வேலைக்காரனைக் கண்டித்தார். "ஓ வேலைக்காரனே, நானே உனக்குத் துரையும் சம்பளம் கொடுக்கிறவருமாயிருக்க, நீ இந்தக் கல்லை வைத்து, துரையென்று சொல்லி, சலாஞ்செய்கிறது எப்படி" என்று விசாரிக்க, அந்த வேலைக்காரன் மறுத்துப்பேசி: "நீரல்ல என்னுடைய துரை: அந்தக் கல்லுதான் எனக்கு எசமானன், அதின் கையைப்பார்த்து நான் பிழைக்கிறது" என்று சாதித்தான். அப்போது அந்தத் துரையானவர் யோசனைசெய்து, "இவனை இன்னும் வைத்துக்கொண்டால், இவனாலே மற்ற வேலையாள்களெல்லாரும் கெட்டுப்போவார்களே" என்று நிச்சயித்து, அவனை வெளியே துரத்திவிட்டார். அப்படிக் கோபிக்கிறதும் தள்ளுகிறதும் நியாயமல்லவா? ஓ சனங்களே, தேவனானவர் நம்மை ஆதரித்துக் காப்பாற்றி அன்னவஸ்திரம் முதலான சமஸ்த உபகாரங்களையும் தந்து போஷிக்கிற நம்முடைய ஒன்றான எசமானாகவே இருக்கிறார். நீங்கள் அவரை ஸ்துதிக்காமல் விட்டு, ஒரு கல்லை வைத்துத் தெய்வமென்று ஸ்துதிசெய்தால், அவர் உங்கள்மேல் கோபம் கொள்ளுவார். உங்களை நரகத்திலே தள்ளுவார். அது நிச்சயம்.

இராசாவின் கோபம் உங்கள்மேல் பிறக்கும்படியான நடத்தையாய் நீங்கள் நடந்தால், உங்களுக்குப் பெரிய பயமும் திகிலும் உண்டாகுமல்லவா? அவர் விலங்கிட்டு, சிறைச்சாலையிலே அடைப்பார்: அல்லது மண் சுமக்கவைப்பார்: அல்லது தூக்கிலே போடுவார்: என்று நினைத்து, நடுநடுங்குவீர்கள். உங்களைப்போல ஒரு மனுஷனாயிருக்கிற ஒரு இராசாவுக்கு இவ்வளவு அஞ்சுவீர்களேயானால், உங்களைப் படைத்த இராசாதிராசனாகிய தேவனுக்கு மாத்திரமா பயமில்லாமல் இத்தனை துணிகரத்தோடே நடக்கிறீர்கள்? அரசனுடைய கோபத்துக்கும், அவன் செய்யும் தண்டனைக்கும், ஒரு வேளை தப்பினாலும், தப்பிப்போகலாம். எங்

கும் நிறைந்து சருவ வல்லவராயிருக்கிற கடவுளுக்கு எப்படித் தப்புவீர்கள்?

ஓ சனங்களே, தேவனைக் கோபப்படுத்துகிற விக்கிரக பூசை கெடுதியுள்ளதல்லவா? அதுவே நாசபூசை.

## விக்கிரகபூசை எல்லாவிதத்திலும் ஆத்துமாவுக்கு நஷ்டத்தை உண்டாக்கும்.

* அண்ணலாம்பரமசோதி யற்புதமறியாதாலே
கண்ணிலேகண்டவெல்லாங் கதிதருங்கடவுளென்று
மண்ணுள்ளோர்வணங்குகின்ருர் வரன்முறைப்படியீதென்ன
எண்ணியேநடந்துமோட்ச மிழந்தெரிநரகில்வீழ்வார்.

பரம ஞான சொரூபியாயிருக்கிற கடவுளுடைய அதிசயமான குணங்களை அறியாமல், கண்ணாலே கண்ட ரூபங்களைச் சுவாமியென்று பூசிக்கிருர்கள். அந்தப் பூசையே கிரமமென்று மயங்குகிருர்கள். அவர்கள் மோட்சபாக்கியத்தை இழந்து, நரகத்திலே விழுகிருர்கள்.

இப்படி உங்களில் வேறனேகருஞ் சொல்லியிருக்கிருர்கள்.

* இ-ள். அண்ணலாம்—பெருமையாகிய. பரமசோதி—பரமசோதியின். அற்புதம் — குணதிசயங்களை. அறியாதாலே—தெரியாததினுல். கண்ணிலே கண்டவெல்லாம் — கண்ணுற் பார்த்த பொருள்களெல்லாம். கதி—மோட்சத்தை. தரும் — கொடுக்கும். கடவுளென்று — தெய்வமென்று. மண்ணுள்ளோர் — உலகத்தார். வணங்குகின்ருர் — நமஸ்கரிக்கிருர்கள். ஈது — இவ்வணக்கம். வரன்முறைப்படியென்ன—தலைமுறைதோறும் நடந்துவந்த கிரமத்தின்படியென்று. எண்ணி—நினைத்து. நடந்து—நடந்து. மோட்சமிழந்து—மோட்சத்தையிழந்து. எரி — எரிகிற. நரகில்—நரகத்தில். வீழ்வார்—விழுகிருர்கள். எ-று.

* எத்தனைதான்கல்லுகளைப்பூசித்தாலும்
　　ஈனர்களேஉங்களுக்குமோட்சமுண்டோ
சுத்தமுடன்தலைமுழுகித்தவஞ்செய்தாலும்
　　சொல்லரியபேரின்பந்தோன்றுமோதான்
பித்தர்களேகல்லுகளைவிலைக்குவாங்கி
　　பிரானென்றேசீலையிலேமுடிந்துகொண்டு
செத்தபின்புகைலாயஞ்சேர்வோமென்றால்
　　சேர்வதில்லையருநரகஞ்சேர்வீர்தாமே.

இவ்வகையாய் ஆத்துமாவை நரகத்துக்குட்படுத்துகிற விக்கிரகபூசை கெடுதியுள்ளதல்லவா? அதுவே நாசபூசை.

பெருக்கெடுத்து வெள்ளம் புரண்டு ஓடுகிற ஒரு பெரிய ஆற்றை நீங்கள் தாண்டவேண்டியதாயிருந்தால், நீங்கள் தெப்பம் ஏறாமல், உங்கள் வீட்டு அம்மிக்கல்லைத் துணையாகக் கொண்டு, அந்த ஆற்று வெள்ளத்திலே இறங்குவீர்களா? அம்மிக்கல்லானது உங்களை மிதக்கச் செய்யுமோ, ஆற்றின் அடியிலே உங்களை இழுத்துக்கொண்டு போய்க் கொல்லுமோ, சொல்லுங்கள். பாவமென்கிற பிரவாகத்தைக் கடக்கவேண்டியது. அதற்குத் தெப்பமானது பரமகுருவான இயேசுக்கிறிஸ்துவே. அந்தத் தெப்பத்தைச் சேராமல், உங்கள் கல்லுச் சுவாமியைத் துணையாகக் கொண்டு

* இ-ள். ஈனர்களே — அறிவீனர்களே (நீங்கள்). எத்தனை— எவ்வளவு. கல்லுகளை—விக்கிரகங்களை. பூசித்தாலும்—ஆராதனை செய்தாலும். உங்களுக்கு — உங்களுக்கு. மோட்சமுண்டோ— மோட்சமுண்டா. சுத்தமுடன் — சுத்தமாக. தலைமுழுகி—ஸ்நானஞ்செய்து. தவஞ்செய்தாலும்—தவத்தைச் செய்தாலும். சொல்லரிய—சொல்லக்கூடாத. பேரின்பம் — மோட்சவின்பம். தோன்றுமோ—தோன்றுமா. பித்தர்களே—பைத்தியக்காரர்களே. கல்லுகளை — கல்லுகளை. விலைக்குவாங்கி — விலை கொடுத்துவாங்கி. பிரானென்று — கடவுளென்று. சீலையில் — துணியில். முடிந்துகொண்டு—முடிந்துகொண்டு. செத்தபின்பு—இறந்தபின்பு. கைலாயம்—மோட்சத்தை. சேர்வோமென்றால் — சேருவோமென்று நினைத்தால். சேர்வதில்லை—(நீங்களதைச்) சேருகிறதில்லை. அரு— அரிய. நரகம்—நரகத்தை. சேர்வீர்—அடைவீர்கள். எ-று.

தாண்டும்படி பார்த்தால், அது உங்களை நரக பாதாளத்தி லே கொண்டுபோய் மாட்டுமேயல்லாமல், நீங்கள் ஒருபோ தும் கரை சேரமாட்டீர்கள்.

ஓ சனங்களே, உங்களை இரட்சிக்கமாட்டாத விக்கிரகங் களைப் பொய்யென்று கண்டு தள்ளிப்போடுங்கள். உங் களை இரட்சிக்கத்தக்க பரம குருவானவரைத் தேடி, அறிந் து, நம்பி, சேர்ந்து, அவராலே கடத்தேறுங்கள். அப்படிப் பட்டவர் ஒருவர் மாத்திரம் இருக்கிறார். அவர் இயேசுக் கிறிஸ்துவென்று சொல்லப்பட்டிருக்கிறார். அவரே ஆத்தும நேசரும் பாவநாசருமாயிருக்கிறார். அவர் சர்வலோகத்துக் கும் கர்த்தர். தேவனாகிய அவர் நம்மை நேசித்து, பூலோ கத்துக்கு வந்து, மெய்யான மனுஷ அவதாரத்தை எடுத் தார். இவ்வுலகமென்கிற காட்டிலே காணாமல்போன ஆடு களைப்போலே திரிகிற நம்மைத் தேடி இரட்சிக்கும்படி, அவர் நல்ல மேய்ப்பனாக வந்தார். அவருடைய மகத்து வத்தையும், கிருபையையுஞ் சொல்லுவதற்கு, எவ்வுலகத்தி லும் திராணியுள்ளவர்கள் இல்லையே. அவர் பூமியிலே தங் கினபோது, அமிர்தவசனமாகிய சத்திய போதகத்தைத் திரு வாய் மலர்ந்தருளினார். அவர் பரிசுத்தராய்ப் பிரகாசித்தார். பாவநிவாரண மார்க்கத்தையும், முத்திவழியையும் உண் டாக்கினார். தம்முடைய தேவவல்லமையைக் காட்டினார். அவரே பரமகுரு. அவரே உலகத்துக்கு ஒன்றான ஆசா ரியன். அவரே நம்முடைய ஆத்துமாவை ஆண்டு ஆதரி த்து நடத்தத்தக்க பரமராசா. தம்மைத் தேடிவந்த யாவ ருக்கும் அவர் அருள் செய்தார். குருடரும், செவிடரும், முடவரும் அவருடைய வாக்கினாலே கண்ணையும், காதை யும், காலையும் பெற்றார்கள். பேயும் பிசாசும் அவருடைய சமுகத்தைச் சகிக்கமாட்டாமல் ஓடிப்போய்விட்டது.

நம்முடைய புத்திக்கும் எட்டாமல் உயர்ந்த மேன்மை யோடிருக்கிற அந்த இயேசுக்கிறிஸ்து நமக்காக மிகுந்த சிறுமையும் தாழ்மையும் அடைந்தார். நமக்காகத் துன்

பத்தையும், குரூரமாணத்தையும், அனுபவித்தார். அது ஏன் என்று விசாரித்தால், அதை விவரித்துச் சொல்லுவோம். ஆசையுடன் கேளுங்கள்.

பாவிகளாயிருக்கிறோமென்கிற உணர்ச்சி எல்லாருக்கும் உண்டு. தான் பாவஞ்செய்யவில்லையென்று எவனாவது ஒருவன் சொன்னாலும், யார் அதை நம்புவார்கள்? மனுஷர் பொய் சொல்லுகிறதில்லையா? வஞ்சிக்கிறதில்லையா? கோபம், பகை, பொறாமை முதலான கெட்ட குணங்களுக்கு இடங்கொடுத்து நடக்கிறதில்லையா? அந்தப் பொல்லாத குணங்களை வளர்க்கிறதில்லையா? உதாசனங்களைப் பேசுகிறதில்லையா? இப்படிக் குணத்திலும், வாக்கிலும், செய்கையிலும் பாவிகளானார்களென்பது மெய்யல்லவா? மெய்தான். மனுஷர் யாவரும் பாபாத்துமாக்களாயிருக்கிறார்கள்.

நாம் செய்த பாவத்தை நாமே போக்கடிக்கமாட்டோம். பாவத்துக்குப் பலனாகிய நித்திய நரகத்துக்கு நாமே நம்மைத் தப்புவித்துக் கொள்ளமாட்டோம். மோட்சபாக்கியத்தையும் சம்பாதிக்கமாட்டோம். ஆகையினாலே நம்முடைய பாவத்தைப் போக்கடிக்கிறதற்குத் தகுந்த பலி வேண்டுமென்று இந்தப் பூமியிலே எந்தத் தேசத்திலும் மனுஷர்கள் சொல்லுகிறார்கள். அது நல்ல சொல். அப்படிப்பட்ட பலியே வேண்டியது.

நம்முடைய பாவத்தைத் தீர்க்கும்படி இயேசுக்கிறிஸ்துநாதர் தம்மைத் தாமே பலியாக ஒப்புக்கொடுத்தார். அவர் தாழ்வுபட்டதும், துன்பஞ்சகித்ததும், மாணமடைந்ததும் இதற்காகவே. நாம் சுமக்க வேண்டிய பாரத்தை அவர் சுமந்தார். பாவமில்லாத அவர் நம்முடைய பாவத்தைத் தம்முடையதாக எடுத்துக்கொண்டு, நாம் படவேண்டிய பாடுகளைத் தாமே பட்டார். நம்முடைய பாவம் நிவிர்த்தியாகும்படி அவர் சிலுவையிலே உயிரை விட்டார். கையிலும், காலிலும் ஆணிகளினாலே அறையப்பட்டு, அந்தச்

சிலுவையிலே அவர் வேதனை அனுபவித்து, மரித்ததே பாவபலி. மூன்றும் நாளிலே அவர் திரும்பவும் உயிரோடே புறப்பட்டுவந்து, மகிமையோடே பூலோகத்திலே காணப்பட்டு, தமது சத்தியவேதத்தைச் சகல தேசங்களிலும் உபதேசிக்க வேண்டுமென்று சீஷர்களுக்குக் கட்டளையிட்டு, ஆகாசவழியாய் அவர் பரலோகத்துக்குச் சென்றுர். அந்த நாள் முதல்கொண்டு, அவருடைய கிருபையும், பாவிகளுக்காக அவர் இட்ட பலியும், அதினாலே உண்டான முத்திவழியும், பூமியெங்கும் தெரிவிக்கப்பட்டு வருகிறது. அனேக தேசத்தார்கள் அவரைக் கடவுளென்றும், ஞான குருவென்றும், லோகரட்சகரென்றும், ஆத்தும மீட்பரென்றும், நம்பி, ஏற்றுக்கொண்டிருக்கிறுர்கள். அந்த நல்ல சமாசாரம் இத்தேசத்திலே உங்களிடத்திலும் வந்திருக்கிறது.

ஓ சனங்களே, இந்தப் பரிசுத்த உபதேசத்தைத் தள்ளிவிடாதேயுங்கள். உங்கள் பாவங்களை நீக்கி, உங்களை நரகத்துக்குத் தப்புவித்து, உங்களுக்கு மோட்சபாக்கியத்தைத் தருவதற்கு வல்லவர் இயேசுக்கிறிஸ்து ஒருவரே. வேறே இல்லை.

பிரியமானவர்களே, விக்கிரகாராதனை முதலான எல்லாப் பாவங்களையும் வெறுத்துவிட்டு, அவரை விசுவாசித்து, அவர் போதித்த வழியே நடவுங்கள். அப்போது நரகத்திலே விழாமல், நித்திய மோட்சத்தைச் சேருவீர்கள்.



# உ ப கி ர ந் த ம்.

## APPENDIX TO NO. XI.

### முன் சொன்னவைகளுக்குச் சில உதாரணங்கள்.

(க.) தேவன் பஞ்சலோகம் மரம் முதலானவைகளில் வாசம்பண்ணமாட்டாரென்பது.

మంటలోహమందుమ్రాకులశిలలందు
పటముగోడలందుప్రతిమలందు
తన్నుడెలుసుకొరకుతగలదాపరమాత్మ
విశ్వదాభిరామవినరవేమ. வேமனர். ரு: சரு.

#### இதன் பதவுரை.

మంట—மண்ணிலும். లోహమందు—பஞ்சலோகத்திலும். మ్రాకుల—மரங்களிலும். శిలలందు — கற்களிலும். ఘటముగోడలందు — படமுள்ள சுவர்களிலும். ప్రతిమలందు—விக்கிரகங்களிலும். తన్ను—தன்னை. తెలుసుకొరకు — அறியும்படியாக. ఆ పరమాత్మ — அந்தப் பரமாத்துமா. తగలదు—தோன்றுது. విశ్వదాభిరామ—ஆண்டவருக்குப் பிரியமான. వేమ—ஓ வேமனரே. వినర—கேள்.

## கருத்துரை.

தேவன், மண் மரம் கல் முதலானவைகளில், வாசம்பண்ணமாட்டார் என்பதாம்.

## (உ.) இலிங்கத்தைப் பூசிக்கிறது பாவமேன்பது.

எட்டுத்திசையும் பதினாறுகோணமு மெஙகுமொன்றாய்
முட்டித்ததும்பி முளைத்தோங்கு சோதியைமூடரெல்லாம்
கட்டிச்சுருட்டித்தங் கக்கத்தில்வைப்பர் கருத்தில்வையார்
பட்டப்பகலை யிரவென்றுகூறிடும் பாதகரே.

பட்டணத்துப்பிள்ளை.

### இதன் பதவுரை.

எட்டுத்திசையும்—எட்டுத்திக்கிலும். பதினாறு கோணமும்—பதினாறு மூலையிலும். எங்கும்—மற்றெவ்விடத்திலும். ஒன்றாய்—ஏகமாய். முட்டி—சேர்ந்து. ததும்பி—நிறைந்து. முளைத்து—தோன்றி. ஓங்கு—உயருகிற. சோதியை—ஞானப்பிரகாசத்தை. மூடரெல்லாம்—மூடரெல்லாரும். கட்டி—கட்டி. சுருட்டி— (சீலையில்) சுருட்டி. தம் — தங்களுடைய. கக்கத்தில் — கக்கத்திலே. வைப்பர் — வைப்பார்க (ளேயன்றி). கருத்தில்—மனதில். வையார்—வைக்கமாட்டார்கள். (இவர்கள் யாரெனின்) பட்டப்பகலை—நடுப்பகலை. இரவென்று—இராத்திரியென்று. கூறிடும் — சொல்லுகிற. பாதகர்—பாவிகளாம்.

## கருத்துரை.

சர்வபரிபூரணனாகிய கடவுளை ஓர் வடிவிலுண்டென்று பூசிப்போர் பாவிகள் என்பதாம்.

(௩.) விக்கிரகபூசையினாலே ஒரு நன்மையுமில்லையென்பது.

పలుగురాళ్లదెచ్చిపరగగుడులగట్టి
చెలగిశిలలసేవజేయనేల
శిలలసేవజేయఫలమేమిగల్గురా
విశ్వదాభిరామవినరవేమ. வேமனர். ௩: ௨௱௨.

### இதன் பதவுரை.

పలుగురాళ్ల — வெண்கற்பலகைகளை. తెచ్చి — கொண்டுவந்து. పరగ — கிரமமாக. గుడులగట్టి — கோவில்களைக் கட்டி. చెలగి — சந்தோஷப்பட்டு. శిలల — கற்களை. సేవజేయనేల — என் சேவிக்கிறீர்கள். శిలల — கற்களை. సేవజేయ — சேவிக்கிறதினாலே. యేమిఫలము — என்ன பிரயோசனம். గల్గురు — அடைவீர்கள். విశ్వదాభిరామ — ஆண்டவருக்குப் பிரியமான. వేమ — ஓ வேமனரே. వినర — கேள்.

### கருத்துரை.

வெண் கற்பலகைகளைக் கொண்டுவந்து, கோவில்களைக் கட்டி, சந்தோஷப்பட்டு, கற்களைச் சேவிக்கிறது என்னத்துக்கு? கற்களை வணங்குகிறதினாலே என்ன பிரயோசனம் உண்டாகும்?

(௪.) கல்லால் செய்யப்பட்ட எருதைக் கும்பிட்டு உயிருள்ள எருதை அடிக்கிறார்களென்பது.

రాతిబసువనిగనిరంగుగామ్రొక్కుచు
గునుకబసువనిగనిగ్రుద్దుచుండ్రు
బసునభక్తులెల్లపాపులుతలపోయ
విశ్వదాభిరామవినరవేమ. வேமனர். ௩: ௨௪௰.

### இதன் பதவுரை.

రాతిబసువనిగని—கல்லாற் செய்யப்பட்ட மாட்டைப்பார்த்து. రంగా—திவ்வியமாய். మ్రొక్కుచు—கும்பிட்டுக்கொண்டு. గుఱు కబసువనిగని—ஓடுகிற மாட்டைப்பார்த்து. గుద్దుచుండ్రు—அடிப் பார்கள். తలపోయ—விசாரிக்குமளவில். బసువభక్తులెల్ల—மாட்டின் மேல் பக்திவைக்கிற எல்லாரும். పాపులు—பாவிகள். విశ్వదాభి రామ—ஆண்டவருக்குப் பிரியமான. వేమ—ஓ வேமனரே. వినర—கேள்.

### கருத்துரை.

கல்லாற் செய்யப்பட்ட மாட்டைப்பார்த்துக் கும்பிட்டு, நடக்கும் மாட்டைப்பார்த்து அடிப்பார்கள். மாட்டின்மேல் பக்தியுள்ளவர்கள் மிகவும் பாவிகள்.

**(௫.) மண் கல் முதலான சுரூபங்களில் தேவன் இருக்கிருரேன்று நினைக்கிற மூடாத்துமாக்கள் மோட்சத்தை அடையமாட்டார்கள்.**

మృచ్ఛిలాధాతుదార్వాది మూర్తావీశ్వరబుద్ధయః
క్లిశ్యంతితపసామూఢాః పరాంశాంతింనయాంతి తే.

### இதன் பதவுரை.

మృత్—மண். శిలా—கல். ధాతు—பஞ்சலோகம். దారు—மரம். ఆది—இவை முதலியவற்ருல் (செய்யப்பட்ட). మూర్తౌ—சுருபத்திலே. ఈశ్వరబుద్ధయః—தேவனுண்டென்று நினைக்கிறவர்களாகிய. మూఢాః—மூடர். తపసా—தபசினுலே. క్లిశ్యంతి—வருந்துகிருர்கள். తే—அவர்கள். పరాం—பரம. శాంతిం—பாக்கியத்தை. నయాంతి—அடையமாட்டார்கள்.

## கருத்துரை.

மண், கல், செம்பு முதலான உருவங்களில் தேவனிருக்கிறரென்று நினைக்கிற மூடர்கள் தவசினுலே வருந்தப்படுகிறுர்களேயல்லாமல், பரம பாக்கியத்தை அடையமாட்டார்கள்.



## வேதவாக்கியம்.

விக்கிரக பூசை புத்தியைக் குருடாக்கும்.

ரோமர், க. அதி: உக—ஙக.

விக்கிரக பூசை தேவனைக் கோபப்படுத்தும்.

உபாகமம், உஎ. அதி: யச, யரு.
ஏசாயா, சஉ. அதி: யஎ.
எரேமியா, க. அதி: யசா.
எரேமியா, அ. அதி: யகூ.
உ. இராசாக்கள், உஉ. அதி: யரு.
எஅ. சங்கீதம்: ருஅ, ருகூ.
வெளிப். உக. அதி: அ.



# சாதி.



ஓ சனங்களே, நீங்கள் அனுசரிக்கிற சாதிபேதங்களெல்லாம் அபத்தமென்று மறுக்கக் கூடாத அனேக நியாயங்களினாலே காண்பிக்கிறோம்: காது கொடுத்துக் கேளுங்கள்.

நாலு சாதிகள் உண்டென்று சொல்லுகிறீர்கள்.

**சாதிநூல்: மனுவுற்பத்தி.**

* அன்னவூர்தி முகத்தினிலந்தணர்
துன்னுதோளிற் சுடர்முடிமன்னவர்
நன்னயம்பெறு மூருவினாய்கர்தாள்
தன்னிற்சூத்திரர் தாமுதித்தாரரோ.

பிரமாவினுடைய முகத்திலிருந்து பிராமணர்களும், அவனுடைய தோளிலிருந்து க்ஷத்திரியரும், அவனுடைய தொடையிலிருந்து வைசியரும், அவனுடைய காலிலிருந்து சூத்திரரும் பிறந்ததாக இந்தப் பாட்டிலே சொல்லியிருக்கிறது.

---

* இ-ள். அன்னவூர்தி—அன்ன வாகனனாகிய பிரமாவின். முகத்தினில்—முகத்திலிருந்து. அந்தணர்—பிராமணர்களும். துன்னு—பொருந்திய. தோளில்—தோளிலிருந்து. சுடர்—பிரகாசமுள்ள. முடி — கிரீடத்தையுடைய. மன்னவர் — அரசர்களும். நல் — நல்ல. நயம்—மேன்மையை. பெறும்—பெறுகிற. ஊருவில்—தொடையிலிருந்து. நாய்கர்—வைசியர்களும். தாள் தன்னில்—காலிலிருந்து. சூத்திரர்தாம் — சூத்திரர்களும். உதித்தார் — பிறந்தார்கள். எ-று.

உங்களுடைய பல சாஸ்திரமும் அப்படியே சாதிக்கின்றது.(௧.)

மனுஷர்கள் அப்படிப் பிறந்தது மெய்யாயிருக்குமேயானால், அவர்களை நாலு சாதியென்று சொல்லுவது எவ்விதமென்று எங்களுக்குச் சுத்தமாய்த் தோன்றவில்லை. மனுஷர்களெல்லாரும் பிரமாவென்கிற ஒருவனிடத்திலே பிறந்தால், அவர்கள் எப்படி நாலு சாதிகளாயிருக்கலாம்? எவனாவது ஒரு மனுஷன் நாலு புத்திரரைப் பெற்றால், அந்த ஒரே தகப்பனிடத்திலே பிறந்த அந்த நாலு பிள்ளைகளுக்குள்ளே சாதிபேதம் உண்டாயிருக்குமா? அந்த நாலு பிள்ளைகளைப் பார்க்கும்போது; இவன் பிராமணன், இவன் க்ஷத்திரியன், இவன் வைசியன், இவன் சூத்திரனென்று பிரித்துச் சொல்லுகிறதற்குக் கூடுமா? ஒருபோதும் கூடாதே. அப்படியே, பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரரென்கிறவர்களெல்லாரும் பிரமாவென்கிற ஒரே தகப்பனிடத்திலே பிறந்திருக்கிறதாகச் சொல்லுகிறீர்களே: அது நிசமானால், அவர்களெல்லாரும் ஒரே சாதியேயல்லாமல், நாலு சாதியல்ல.

இன்னும் கொஞ்சம் இதைச் சோதியுங்கள். ஒரே ஒரு மரத்தில் உண்டான பழங்களுக்குள்ளே சாதிபேதம் உண்டா? இல்லையே. பலாமரத்தைப் பாருங்கள். அதிலே சில பழம் மேலான கிளையில் உண்டாகிறது: சில பழம் கவைக் கொம்பில் உண்டாகிறது. சில பழம் நடுமரத்தில் உண்டாகிறது: சில பழம் அடியில் வேரண்டை உண்டாகிறது. இப்படி அந்தப் பழங்கள் ஒரு மரத்தில் வெவ்வேறான நாலு இடங்களிலே பிறந்தாலும், சாதிபேதம் ஏதாவது உண்டா? அந்தப் பழங்களைப் பார்த்து, மேல் கிளையில் பிறந்தது

(௧.) ௩௱௪௧, ௩௱௪௨-ம் பக்கங்களிலுள்ள பாட்டையும் சுலோகத்தையும் காண்க.

பிராமண பழமென்றும், கவையில் பிறந்தது க்ஷத்திரிய பழமென்றும், நடுமரத்தில் பிறந்தது வைசிய பழமென்றும், அடியில் பிறந்தது சூத்திர பழமென்றும், சொல்லத் தகுமா? சொன்னால் உலகம் நகைக்கமாட்டாதோ? அந்தப் பழங்கள் நாலு இடத்தில் பிறந்தாலும், எல்லாம் ஒரே மரத்தின் பழமானதினாலே, நாலும் ஒரு சாதிப்பழமேயல்லாமல், நாலு சாதியல்லவே. சில மனுஷர் பிரமாவினுடைய முகத்திலும், சிலர் அவனுடைய தோளிலும், சிலர் அவனுடைய தொடையிலும், சிலர் அவனுடைய காலிலும் உண்டானதாகச் சொல்லுகிறீர்களே: அது சத்தியமானால், அவர்கள் நாலு சாதியாயிருப்பதெப்படியோ, தெரியவில்லை. பலாமரத்தில் நாலு இடங்களிலேயும் பிறந்த பழங்களெல்லாம் ஒரு சாதிதானே. அப்படிப்போல பிரமாவென்கிற ஒருவனில் நாலு இடங்களிலேயும் மனுஷர்களெல்லாரும் பிறந்ததுண்டானாலும் ஒரு சாதியாகவே இருப்பார்கள். நீங்கள் அவர்களை நாலு சாதியென்று சொல்லுகிறது வெகு அதிசயமாயிருக்கிறது.

இது நிற்க, உங்களுடைய வேறு சில சாஸ்திரம் சாதியே தங்களைக் குறித்து வேறு விதமாய்ச் சொல்லுகின்றது.

**யசா-வது பாரதவெண்பா: சாந்திபர்வம்:**
**அறமுரைத்த சருக்கம்.**

* அரசர்க்கரசே யறம்வளர்குஞ்சேயே
முரசக்கொடிவேந்தே முன்னம்—பிரசமலர்ப்
புங்கவன்றன்கைத்தொழிலாற் போந்தமனுபூணூண்
தங்கருமத்தாற்சாதி தான்.

* இ—ள். அரசர்க்கரசே — இராசாதிராசனே. அறம் — தருமத்தை. வளர்க்கும் — வளர்க்கிற. சேயே — குழந்தையே. முரசக்கொடி—முரசமெழுதின கொடியையுடைய. வேந்தே—தருமனே. முன்னம் — முன்னாலே. பிரசம் — தேனையுடைய. மலர் — தாமரை மலரிலிருக்கிற. புங்கவன்றன் — பிரமாவின். கைத்தொழிலால்—சிருஷ்டியினால். போந்த—வந்த. மனு—மனிதர்களுக்கு.

ஓ அரசனே, ஆதியிலே பிரமாவினுடைய சிருஷ்டிப்பினுலே தோன்றின மனுஷர்களுக்குச் சாதிபேதம் உண்டானதெப்படியென்ருல், அவர்கள் வெவ்வேறு ஆபரணங்களைத் தரிக்கிறதினுலும், வேறே வேறே சாப்பாடு சாப்பிடுகிறதினுலும், வெவ்வேருன தொழில்களைச் செய்கிறதினுலும், சாதிபேதம் ஏற்பட்டதேயல்லாமல், வேறில்லை, என்று சொல்லப்பட்டது.(உ.)

ஆதியிலே மனுஷரெல்லாரும் ஒரே சாதியாயிருந்தார்களென்றும், பின்பு அவர்கள், தங்கள் இஷ்டப்படி, வேறே வேறே விதமாய் உடுத்து, சாப்பிட்டு, உழைத்து அப்படியே தங்களுக்குள்ளே வித்தியாசங்களை உண்டாக்கி, அந்த வித்தியாசங்களுக்குச் சாதிபேதமென்று பேர் வைத்துக்கொண்டார்களென்றும், இந்த நூலிலே கண்டிருக்கிறது.

இதை நன்ருய் யோசியுங்கள். ஆதியிலே மனுஷர் நாலு சாதியாகப் பிறந்தார்களென்று ஒரு சாஸ்திரம் சொல்லுகின்றது. அது அப்படியல்ல, ஆதியிலே ஒரு சாதியாகப் பிறந்தார்களென்று வேருெரு சாஸ்திரம் சொல்லுகின்றது. இப்படியே உங்கள் சாஸ்திரம் ஒன்றுக்கொன்று விரோதப்பட்டுக் கிடக்கின்றது. உங்கள் சாஸ்திரங்கள் தேவனுலே உண்டாகாமல், மனுஷருடைய தந்திரத்தினுலே உண்டானதென்பதற்கு இவ்வளவு சாட்சி போதாதா?

மனுஷர் நாலு சாதியாயிருக்கிருர்களென்றும், ஒரே சாதியாயிருக்கிருர்களென்றும், சொல்லப்பட்ட அந்த இரண்டு சங்கதியிலே எதைச் சரியென்று ஒத்துக்கொள்ளலாமென்று கேட்பீர்களேயாகுல், உலகத்திலே நடக்கிறதைப் பார்த்து

---

பூண்—ஆபரணத்தாலும். ஊண்—போசனத்தாலும். தம்—தங்களுடைய. கருமத்தால்—தொழிலினுலும். சாதி—சாதிபேதமுண்டாயிற்று. **எ-று.**

(உ.) ௩௪௩-ம் பக்கத்திலுள்ள சுலோகத்தைக் காண்க.

நிதானிக்கிறதினால், அது உங்களுக்குத் தெரியவரும். போதிக்கிறவர்களைப் பிராமண சாதியாகவும், யுத்தஞ்செய்கிறவர்களை க்ஷத்திரிய சாதியாகவும், *பயிரிடுகிறவர்களை வைசிய சாதியாகவும், மற்றத் தொழிலாளிகளைச் சூத்திர சாதியாகவும் கடவுளே படைத்து வைத்தாரென்கிறீர்கள். அந்த நாலு தொழில் செய்கிறவர்களை வெவ்வேறான நாலு சாதிகளாக கடவுள் ஏற்படுத்தினது நிசமானால், அப்படியே பூமியெங்கும் சகல தேசங்களிலும் இருக்குமே. அப்படி இருக்கவில்லை. அந்த நாலு தொழில்களைச் செய்கிறவர்கள் இந்தத் தேசத்திலே மாத்திரமல்ல, மற்றெல்லாத் தேசங்களிலும் இருக்கிறார்கள். ஆனாலும், அந்தப் பல பல தேசங்களிலேயும் அந்த நாலு தொழில்களைப் பண்ணுகிறவர்கள் நாலு சாதிகளாய் ஏற்பட்டிருக்கவில்லை. கறுப்பு மனுஷர் வாசம்பண்ணுகிற சீனா முதலான தேசங்கள் அனேகம் உண்டு. வெள்ளைக்காரர் வாசம்பண்ணுகிற தேசங்களும் அனேகம் உண்டு. அங்கங்கேயெல்லாம் சோதனை செய்யுங்கள். இந்தத் தேசத்திலே நடக்கிறதுபோல, அங்கேயும் அந்த நாலு தொழில் நடக்கிறது. நடந்தாலும், சாதிபேதம் கொஞ்சமும் கிடையாது. கொள்வனை, கொடுப்பனை, அன்னம், பானம், முதலானவைகள் பொதுவாக இருக்கிறது. இந்தத் தேசமொன்றுதவிர, உலகமெங்கும் அந்த நாலு தொழிலாளிகள் ஒரே சாதியாயிருக்கிறார்களேயொழிய, நாலு சாதிகளாயிருக்கவில்லை. கடவுள் மனுஷர்களை நாலு சாதியாகப் படைத்ததுண்டானால், அவ்விடங்கள்தோறும் நாலாகப் பிரிந்திருப்பார்கள். அப்படியில்லாமையினாலே, நாலு சாதியென்பது இத்தேசத்து மனுஷருடைய வஞ்சனையேயல்லாமல், தேவனுடைய நியமமல்லவென்று தெளிவாய்த் தெரிகின்றது.

* பயிரிடுகிறதும், வியாபாரஞ் செய்கிறதும், பசு காக்கிறதுமாகிய இந்த மூன்று தொழிலும் வைசியருக்குரியதாயிருந்தும், பயிரிடுதல் சிறந்ததானபடியினாலே அதைமாத்திரம் இவ்விடத்திலே எடுத்துச் சொன்னோம்.

உங்களில் மகா முனியாகிய கபிலரும் அப்படியே சொல்லியிருக்கிறார்.

* ஒட்டியர்மிலேச்சர் ஊணர்சிங்களர்
இட்டிடைச்சோனகர் யவனர்சீனத்தர்
பற்பலநாட்டிலும் பார்ப்பாரிலையால்
முற்படைப்பதனில் வேறுகியமுறைமைபோல்
நால்வகைச்சாதியிந் நாட்டினிர்நாட்டினீர்
மேல்வகைகீழ்வகை விளங்குவதொழுக்கால்.

ஒட்டிய தேசத்திலும், மிலேச்ச தேசத்திலும், ஊண தேசத்திலும், சிங்கள தேசத்திலும், சோனக தேசத்திலும், யவன தேசத்திலும், சீன தேசத்திலும், பிராமணர்கள் இல்லை. இந்த நாட்டிலுள்ள நீங்களே கடவுளுடைய சிருஷ்டிப்புக்கு விரோதமாக நாலு சாதிகளை ஸ்தாபித்தீர்கள். மேல்சாதியென்றும் கீழ்சாதியென்றும், விளங்குகிறது ஒருவனுடைய நடத்தையினாலேயல்லாமல், வேறல்ல என்று கபிலர் சொன்னார்.

ஓ சனங்களே, இந்தக் காரியத்தை நீங்கள் கொஞ்சமாவது யோசிக்கவில்லையென்று தோன்றுகின்றது. மனுஷர் நாலு சாதிகளாக ஏற்பட்டால், அந்தச் சாதி ஒன்றுக்கொன்று

---

* இ-ள். ஒட்டியர் — ஒட்டியரும். மிலேச்சர் — மிலேச்சரும். ஊணர் — ஊணரும். சிங்களர்—சிங்களரும். இட்டிடை—இடையில் சேர்க்கப்பட்ட. சோனகர்—சோனகரும். யவனர்—யவனரும். சீனத்தர் — சீனத்தரு (மாகிய இவர்களிருக்கிற). பற்பல—அனேகமான. நாட்டிலும்—தேசத்திலும். பார்ப்பார்—பிராமணர். இலை — இல்லை. (அப்படியிருக்க) முற்படைப்பதனில் — சிருஷ்டியின் முதலிலே. வேறுகிய—சாதிபேதமுண்டான. முறைமைபோல் — கிரமத்தைப்போல. நால்வகைச்சாதி — நான்குவிதமான சாதிகளை. இந்நாட்டினிர் — இத்தேசத்திலுள்ளவர்களே. நாட்டினீர்—ஸ்தாபித்தீர்கள். மேல்வகை—உயர்ந்த சாதியென்றும். கீழ்வகை—தாழ்ந்தசாதியென்றும். விளங்குவது—பிரகாசிப்பது. ஒழுக்கால்—ஆசாரத்தாலாம். எ-று.

பேதப்பட்டிருக்கிறதென்று யாவருக்கும் தெரியத்தக்கதாய்ப் பல வித்தியாசங்கள் காணுமே. மிருகசாதிகள் அனேகம் உண்டு. பட்சிசாதிகள் அனேகம் உண்டு. விருட்சசாதிகள் அனேகம் உண்டு. அவைகளுக்குள்ளே அனேக வித்தியாசங்கள் விளங்கும். ஆகையினாலே பல சாதிகளாய்ப் பிரிக்கிறோம். மனுஷர்களுக்குள்ளே அப்படி இல்லையே. இதை விவரித்துக் காட்டுகிறோம்: கேளுங்கள்.

மாடு, யானை, குதிரை, சிங்கம், புலி முதலான மிருகங்களுண்டே: அந்த மிருகங்களின் கால்களிலே பேதம் தோன்றும். அததற்கு வேறே வேறே விதமான கால் இருக்கிறது. சோதிக்கப் போனால், இது மாட்டினுடைய கால், இது யானையினுடைய கால், இது குதிரையினுடைய கால், இது சிங்கத்தினுடைய கால், இது புலியினுடைய கால், என்று அவைகளை ஒன்றொன்றாக பிரித்துச் சொல்லுகிறதற்குக் கூடும். பார்க்கும்போதே பேதம் நன்றாய்த் தெரியும். கால்களிலே அப்படிப்பட்ட பேதம் இருக்கிறபடியால், மாடு ஒரு சாதி, யானை ஒரு சாதி, குதிரை ஒரு சாதி, சிங்கம் ஒரு சாதி, புலி ஒரு சாதி, என்று அனேக சாதிகள் ஏற்பட்டிருக்கிறது. ஆனாலும், நாலு சாதியென்று நீங்கள் சொல்லுகிற பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்கிறவர்களைப் பார்க்கும்போது, அவர்களுடைய கால்களிலே அப்படிப்பட்ட வித்தியாசமொன்றும் காணோம். இது பிராமணனுடைய கால், இது க்ஷத்திரியனுடைய கால், இது வைசியனுடைய கால், இது சூத்திரனுடைய கால், என்று பிரித்துச் சொல்லும்படி ஏதாவது ஒரு பேதம் தெரிகிறதா? இல்லையே. அவர்களுடைய கால்கள் ஒன்றுக்கொன்று வித்தியாசப்பட்ட ரூபமாயிராமல், ஒரே விதமாயிருக்கிறபடியினாலே, அவர்களெல்லாரும் ஒரே சாதியேயொழிய நாலு சாதிகளல்லவே.

மேலும், மாடு, எருமை, குதிரை, யானை, கழுதை, குரங்கு, வெள்ளாடு, செம்மறியாடு, முதலான மிருகங்களிலே ஒவ்

வொன்றுக்கு, வேறே வேறே ரூபம், வேறே வேறே வாசனை, வேறே வேறே சத்தம் இருக்கிறது. ஆனாலும், நீங்கள் நாலு சாதியென்று சொல்லுகிற பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரரென்பவர்களுக்கு இப்படிப்பட்ட வித்தியாசங்கள் இல்லவே இல்லை. ரூபமும், வாசனையும், சத்தமும் அவர்களெல்லாருக்கும் ஒரே வகையாயிருக்கிறது. ஆகையினாலே எல்லாரும் ஒரே சாதிதான், நாலு சாதியல்ல.

கபிலரும் அப்படியே சொன்னார்.

*பெற்றமுமெருமையும் பேதமாய்த்தோன்றல்போல்
மாந்தரிற்பேதமாம் வடிவெவர்கண்டுளார்
வாழ்நாளுறுப்புமெய் வண்ணமோடறிவினில்
வேற்றுமையாவதும் வெளிப்படலின்றே.

எருதும் எருமையும் வித்தியாசமாய்க் காணப்படுதல் போல, மனுஷர்களுக்குள்ளே வித்தியாசமாகிய ரூபத்தைப் பார்த்தவர்கள் யார்? வயசும், அவயவமும், சரீரமும், நிறமும், புத்தியுமாகிய யாவற்றிலும் கொஞ்ச வித்தியாசமும் காணப்படவில்லையே என்றார்.

இதுமாத்திரமல்ல. அன்னப்பட்சி, புறா, குயில், கிளி, மயில் முதலான பட்சிகளுக்கு ரூபம், வர்ணம், மயிர், வால், மூக்கு, என்கிற இவைகளெல்லாம் மிகவும் வித்தியாசப் பட்டிருக்கிறது. ஆனாலும், நீங்கள் நான்கென்று பொய்யா

*இ—ள். பெற்றமும்—பசுவும். எருமையும்—எருமையும். பேதமாய்—வித்தியாசமாக. தோன்றல்போல் — தோன்றுகிறதுபோல். மாந்தரில்—மனிதர்களுக்குள். பேதமாம்—வித்தியாசமாகிய. வடிவு—ரூபத்தை. கண்டுளார் — பார்த்தவர்கள். எவர் — யார். வாழ்நாள்—ஆயுளும். உறுப்பு—அவயவமும். மெய் —சரீரமும். வண்ணமோடு — குணமும். அறிவினில் — அறிவுமாகியவிவைகளில். வேற்றுமை—வித்தியாசம். யாவதும்—கொஞ்சமேனும். வெளிப்படல்—தோன்றுதல். இன்று—இல்லை. எ—று.

கப் போதித்த பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்னப்பட்டவர்களுக்கு அப்படிப்பட்ட வித்தியாசங்கள் எவ்வளவும் கிடையாதே. அப்படிப்பட்ட வித்தியாசங்கள் இல்லாமையால், அவர்களெல்லாரும் ஒரே சாதியே யன்றி, நான்கல்ல.

பல பல சாதியான மரங்களையும் பாருங்கள். ஆலமரம், மாமரம், தென்னமரம், பனைமரம், மகிழமரம், முருக்கமரம், அசோகமரம், புளியமரம், செண்பகமரம், முதலானவைகள் உண்டே; அவைகளெல்லாம் ஒன்றுக்கொன்று வேறுபட்டிருக்கிறது. அவைகளுக்கெல்லாம் வேரும், அடியும், கிளையும், தளிரும், இலையும், மொக்கும், பூவும், பிஞ்சும், காயும், கனியும், பட்டையும், வயிரமும், விளையும், இரசமும், மணமும் வேறே வேறேயாகவே இருக்கிறது. ஆனாலும், நாலு சாதியென்று நீங்கள் வீணாய்க் குறிக்கிற பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரரென்கிறவர்களுக்கு இவ்வகையான வித்தியாசங்களில்லை. அவர்களெல்லாருக்கும் தோலும், சதையும், இரத்தமும், எலும்பும், மூளையும், நிறமும், ரூபமும் ஏதானாலும் வித்தியாசப்படாமலே இருக்கிறது. ஒரே தன்மையாக இருக்கிறது. ஆகையினாலே நாலு சாதியல்ல: ஒன்றே.

இதுவுமன்றி இரண்டு சாதி மிருகங்கள் ஆணும் பெண்ணும் சேர்ந்து, கர்ப்பந் தரித்து, குட்டி போடுகிறதுண்டா? அல்லது இரண்டு சாதியான பட்சிகள் ஆணும் பெண்ணும் கூடி, முட்டையிட்டு, குஞ்சு பொரிக்கிறதுண்டா? வேறே வேறே சாதியானதினாலே அது ஒருபோதும் நடக்கமாட்டாது. நீங்கள் சொல்லுகிற நாலு சாதிமனுஷர்களுக்குள்ளேயோ எந்தச் சாதியான ஆணும் பெண்ணும் விவாகஞ்செய்து கூடவாழ்ந்தால், பிள்ளை பிறக்குமே: ஆகையினாலே மனுஷர்களெல்லாரும் ஒரு சாதியாயிருக்கிறார்களென்பதற்குச் சந்தேகம் இல்லை.

உங்களில் பெரியவர்கள் அனேகர் இந்த நியாயத்தை எடுத்துக் காட்டினார்கள். கபிலர் சொன்னதாவது:

*பெற்றமுமெருமையும் பிறப்பினில்வேறே
அவ்விருசாதியில் ஆண்பெண்மாறி
கலந்துகருப்பெறல் கண்டதுண்டோ
ஒருவகைச்சாதியா மக்கட்பிறப்பிலீர்
இருவகையாகநீர் இயம்பியகுலத்துள்
ஆண்பெண்மாறி அணைதலுமணைந்தபின்
கருப்பொறையுயிர்ப்பதுங் காண்கின்றிலீரோ.

சாதியிலே வேறாயிருக்கிறபடியினாலே எருதும் எருமையும் சேர்ந்து கன்று பிறப்பிக்கிறதை யாரும் பார்த்ததில்லை. நீங்கள் பேதமாகச் சொன்ன சாதியிலே ஸ்திரிபுருஷர்கள் சேர்ந்து பிள்ளைப் பெறுகிறதை யாவரும் பார்த்திருக்கிறார்களே, என்றார்.

ஞானவெட்டியானும் அப்படியே சொன்னார்.

---

*இ-ள். பெற்றமும்—பசுவும். எருமையும்—எருமையும். பிறப்பினில்—சென்மத்தில். வேறு — வேறாமாகையால். அவ்விருசாதியில்—அவ்விரண்டு சாதிகளுக்குள். ஆண்பெண்—ஆணும் பெண்ணும். மாறி—மாறி. கலந்து—புணர்ந்து. கருப்பெறல்—கருப்பமடைதலை. கண்டதுண்டோ—(யாராவது) பார்த்தார்களா. ஒருவகை — ஒருவிதமான. சாதியாம் — சாதியாகிய. மக்கட்பிறப்பிலீர் — மனிதசென்மமில்லையென்று சொல்லுகிறவர்களே. இருவகையாக—இரண்டுவிதமாக. நீர்—நீங்கள். இயம்பிய—சொன்ன. குலத்துள்—சாதிக்குள். ஆண்பெண்—ஆணும்பெண்ணும். மாறி—மாறி. அணைதலும் — சேருதலும். அணைந்தபின் — சேர்ந்தபின். கருப்பொறை—கர்ப்பத்தை. உயிர்ப்பதும் — பெறுதலும். காண்கின்றிலீரோ—பார்க்கவில்லையோ. எ-று.

* பள்ளையாடுசெம்மறியின்குட்டியாமோ—நல்ல
பசுவைக்கடாமருவக்கிடாரியாமோ—பின்னும்
உள்ளமதிலென்குலத்திலுன்குலஞ்சேர்ந்தால்—புத்திரன்
உன்னதென்றோ என்னதென்றோ உணர்வீர்காணும்—இனி
துள்ளுஞ்சேவல்கொக்கைச்சேரஅண்டமாமோ—செழும்
நாரைக்கோழியைச்சேரகுஞ்சதாமோ—நல்ல
பள்ளப்பாகல்வித்ததுவுஞ்சுரையாமோ—இந்தப்
பட்சியிலும்பேதாபேதந்தோன்றுமாண்டே.

வெள்ளாடானது செம்மறியாட்டைச் சேர, கருப்பம் உண்டாகுமா? பசுமாட்டோடே எருமைக்கடா கூட, சினையாகுமா? கோழி கொக்குடன் கலந்தால், முட்டையாகுமா? நாரைப் பட்சி கோழியைச் சேர்ந்தால், குஞ்சாகுமோ? குழிப்பாகல் விரையை விரைத்தால், சுரைக்கொடி முளைக்குமோ? என்னுடைய சாதியில் உன்னுடைய சாதி சேர்ந்தால், அதினால் பிறந்த பிள்ளையை உன்னுடையதென்றும் என்னுடையதென்றும் பிரித்துச் சொல்ல அறிவீர்களா? என்றார்.

---

* இ—ள். பள்ளையாடு—வெள்ளாடு. செம்மறியின்—செம்மறியாட்டைச் சேர. குட்டியாமோ—குட்டி உண்டாகுமோ. நல்ல—நல்ல. பசுவை—பசுவை. கடா—எருமைக்கடா. மருவ—சேர. கிடாரியாமோ—கிடாரியுண்டாகுமா. பின்னும்—பின்னும். என் குலத்தில்—என் சாதிப்பெண்ணில். உன் குலம்—உன் சாதி ஆண். சேர்ந்தால்—கலந்தால். புத்திரன் — (அதினாலுண்டான) பிள்ளையை. உன்னதென்றோ—உன்னுடையதென்றோ. என்னதென்றோ—என்னுடையதென்றோ. உணர்வீர் — அறிவீர்கள். இனி—மேலும். துள்ளும்—குதிக்கும். சேவல்—ஆண்கோழி. கொக்கை—கொக்கை. சேர—சேர்ந்தால். அண்டமாமோ—முட்டையுண்டாகுமா. செழும்—செழுமையான. நாரை—நாரைப் பட்சி. கோழியை—கோழியை. சேர—சேர்ந்தால். குஞ்சதாமோ—குஞ்சுண்டாகுமா. நல்ல—நல்ல. பள்ளப்பாகல்—குழிப்பாகலினது. வித்ததுவும் — விதையும். சுரையாமோ—சுரைக்கொடியாகத் தோன்றுமோ. இந்தப் பட்சியிலும் — இந்தப் பட்சி சாதியிலும். பேதாபேதம்—வித்தியாசம். ஆண்டே—எசமானே. தோன்றும்—காணப்படும். **எ—று.**

மிருகங்களிலும், பட்சிகளிலும், செடிகளிலும், அப்படிப் பட்ட பேதங்கள் தோன்றும். ஆகையினாலே அவைகள் பலசாதிப்படும். மனுஷர்களுக்குள்ளே அப்படிப்பட்ட பேதங்கள் தோன்றாது: ஆகையினாலே மனுஷ சாதி ஒரே சாதி.

மேலும் மனுஷரெல்லாரும் பிறக்கிற விதத்தையும், அவர்கள் பிழைக்கிற விதத்தையும், அவர்கள் இறக்கிற விதத்தையும், அவர்கள் கை கால் நாக்கு முதலானவைகளை ஆட்டுகிற விதத்தையும், அவர்கள் மனம் புத்தி சித்தம் முதலானவைகளை அப்பியாசப்படுத்துகிற விதத்தையும், அவர்கள் உலகத்து விஷயங்களை அனுபவிக்கிற விதத்தையும், அவர்கள் சாப்பிடுகிற போசனபதார்த்தங்களையும், அவர்கள் தின்கிற அவிழ்தத்தையும், அவர்கள் படுகிற சுகதுக்கத்தையும் பார்த்தால், அவையெல்லாம் பிராமணருக்கும், க்ஷத்திரியருக்கும், வைசியருக்கும், சூத்திரருக்கும் பொதுவாயிருக்கிறது. ஆகையினாலே யாவரும் ஒரே சாதியேயல்லாமல், நாலு சாதிகளல்ல.

* மாரிதான்சிலரை வரைந்துபெய்யுமோ
காற்றுஞ்சிலரை நீக்கிவீசுமோ
மாநிலஞ்சுமக்க மாட்டேனென்னுமோ
கதிரோன்சிலரைக் காயேனென்னுமோ
வாழ்நான்குசாதிக் குணவுநாட்டிலும்
கீழ்நான்குசாதிக் குணவுகாட்டிலுமோ
தரணியோர்க்கே குலமுமொன்றே
குடியுமொன்றே இறப்புமொன்றே
பிறப்புமொன்றே

என்று கபிலமுனி சொன்னார்.

---

* இ—ள். மாரி—மழை. சிலரை—சிலபேரை. வரைந்து—தள்ளி. பெய்யுமோ—பெய்யுமா. காற்றும்—வாயுவும். சிலரை—சிலபேரை. நீக்கி—அகற்றி. வீசுமோ—வீசுமா. மா—பெரிய. நிலம்—பூமி. சுமக்கமாட்டேனென்னுமோ — தாங்கமாட்டேனென்று சொல்லுமா. கதிரோன்—சூரியன். சிலரை—சிலபேரை. காயேனென்னுமோ—காயமாட்டேனென்று சொல்லுமா. வாழ்—உயர

மழையானது சில மனுஷரை நீக்கி, மற்ற மனுஷர்களுக் காகப் பெய்யுமா? காற்றானது சில பேரைத் தள்ளி மற்ற வர்கள் மேல் வீசுமா? பூமியானது சிலரைத் தாங்கமாட்டே னென்று சொல்லுமா? சூரியனானது சில சனங்களுக்காகக் காயமாட்டேனென்னுமா? சாப்பாடானது உயர்ந்த சாதிக்கு நாட்டிலும், தாழ்ந்த சாதிக்குக் காட்டிலும் உண்டா? அப்ப டியெல்லாம் இல்லையே. ஆகையினாலே பூமியிலுள்ளவர்க ளுக்குச் சாதி ஒன்றே, குடியும் ஒன்றே, மரணமும் ஒன் றே, சென்மமும் ஒன்றே.

மனுஷர்களைச் சாதிகளாகப் பிரிக்கப் போனால், நல்லோர் தீயோர் என்னும் இரண்டு சாதிகள் ஏற்படுமேயல்லாமல் வேறில்லை என்று உங்களில் பெரியோர்கள் அனேகர் சொல் லியிருக்கிறார்கள்.

**நல்லாப்பிள்ளை பாரதம்: ஆதிபருவம்:**
**வாரணாவதைச் சருக்கம்.**

* கற்றவர்க்குநலனிறைந்த கன்னியர்க்கும்வண்மைகை
உற்றவர்க்கும்வீரரென் றுயர்ந்தவர்க்கும்வாழ்வுடைக்
கொற்றவர்க்குமுண்மையான கோதின்ஞானசரிதரா
நற்றவர்க்குமொன்றுசாதி நன்மைதீமையில்லையால். (அம்.)

---

வாழுகிற. நான்கு சாதிக்கு—சில சாதிகளுக்கு. உணவு—போச னம். நாட்டிலும்—தேசத்திலும். கீழ்—தாழ்ந்த. நான்கு சாதிக் கு—சில சாதிகளுக்கு. உணவு—போசனம். காட்டிலுமோ—காட் டிலுமா. (இல்லையே ஆகையால்) தரணியோர்க்கு — பூமியிலுள்ள வர்களுக்கு. குலமுமொன்று—சாதியுமொன்று. குடியுமொன்று— குடியுமொன்று. இறப்புமொன்று—இறப்புமொன்று. பிறப்புமொ ன்று—பிறப்புமொன்று. **எ-று.**

* **இ-ள்.** கற்றவர்க்கும் — படித்தவர்களுக்கும். நலனிறைந்த— அழகுநிறைந்த. கன்னியர்க்கும்—கன்னிகைகளுக்கும். வண்மை கையுற்றவர்க்கும்—கொடையாளருக்கும். வீரரென்று—சூரரென்று. உயர்ந்தவர்க்கும் — மேலானவர்களுக்கும். வாழ்வுடை — செல்வத்

கல்விமான்களுக்கும், நல்ல கன்னிகைகளுக்கும், கொடையாளருக்கும், வீரர்களுக்கும், அரசர்களுக்கும், இருஷிகளுக்கும், சாதியானது ஒன்றுதான். ஆகையினாலே உலகத்தில் உயர்ந்ததென்றும், தாழ்ந்ததென்றும் சொல்லப்பட்ட சாதி பேதங்கள் இல்லையென்று மகாபாரதத்திலே சொல்லியிருக்கிறது.

* நல்லகுலமென்றுந் தீயகுலமென்றுஞ்
சொல்லளவல்லாற் பொருளில்லைத்—தொல்சிறப்பின்
ஒண்பொருளொன்றோ தவங்கல்வியாள்வினை
என்றிவற்றானாகுங் குலம்.

நல்ல சாதியென்றும், கெட்ட சாதியென்றும் சொல்லுகிறது உதவாத வாய்ப்பேச்சேயல்லாமல், ஒரு பொருளல்ல. ஆஸ்தியும், தவமும், கல்வியும், முயற்சியுமாகிய இவைகளினாலே குலம் உண்டாகும், என்று நாலடியாரிலே சொல்லியிருக்கிறது.

---

தையுடைய. கொற்றவர்க்கும் — இராசர்களுக்கும். உண்மையான— சத்தியமான. கோது—குற்றம். இல்—இல்லாத. ஞானசரிதராம்— ஞானிகளாகிய. நல்—நல்ல. தவர்க்கும்—தவசிகளுக்கும். சாதி— சாதியானது. ஒன்று—ஒன்றுதான். நன்மை—உயர்ந்த சாதியென்றும். தீமை—தாழ்ந்த சாதியென்றும். இல்லை—பேதமில்லை. **எ—று.**

**நாலடியார், ௰௯—ம் அதி: ௫.**

* **இ-ள்.** நல்ல குலமென்றும்—இது உயர்ந்த சாதியென்றும். தீய குலமென்றும்—இது தாழ்ந்த சாதியென்றும். சொல்லளவல்லால்— சொல்மாத்திரமல்லாமல். பொருளில்லை—அருத்தமில்லை. தொல்— பழமையான. சிறப்பின் — சிறப்புடைய. ஒண் — நல்ல. பொருள்—திரவியமும். தவம்—தவசும். கல்வி — வித்தையும். ஆள்வினையென்றிவற்றான் — முயற்சியுமென்கிறவிவைகளால். குலமாகும் — சாதி உண்டாகும். (ஒன்றோவென்பது எண்ணிடைச் சொல்.) **எ—று.**

*சாதியிரண்டொழிய வேறில்லைசாற்றுங்கால்
நீதிவழுவா நெறிமுறையின்—மேதினியில்
இட்டார்பெரியோ ரிடாதாரிழிகுலத்தோர்
பட்டாங்கிலுள்ள படி.

இரண்டு சாதிகள் உண்டேயொழிய, வேறில்லை. நீதிதப்பாமல் சரியாய் நடந்து, எளியவர்களுக்குக் கொடுக்கிறவர்களே உயர்ந்த சாதியார். கொடாதவர்களே இழிந்த சாதியார், என்று நல்வழியென்கிற நூலிலே சொல்லப்பட்டது.(௧.)

பின்னும் வேமனர் சொன்னதைச் சிந்தியுங்கள். பறையனுகப் பிறந்தவனைப் பறையனென்று சொல்லாதே. அவனல்ல, பொய் சொல்லுகிறவனே பறையனுயிருக்கிறுன். பறைக்குலத்திலே பிறந்தவனைப் பறையனென்று நிந்திக்கிறவன்தான் சரியான பறையன், என்று சொன்னுர்.(௨.)

ஓ சனங்களே, உங்கள் பெரியோர்கள் சொன்ன மேற்படி பாடல்களைப் பாருங்கள். கல்விமான்களும், நல்ல ஸ்திரிகளும், தாராளமாய்க் கொடுக்கிறவர்களும், வீரர்களும், செங்கோல் செலுத்துகிற இராசாக்களும், ஞானிகளும், முயற்சியுள்ளவர்களும், நீதிமான்களும், சத்தியவாதிகளுமே மேலான சாதியென்றும்; கல்லாதவர்களும், கொடாதவர்களும், தைரியமில்லாதவர்களும், அஞ்ஞானிகளும், சோம்பேறிகளும், வஞ்சனைக்காரரும், பொய்பேசுகிறவர்களும், நிந்திக்

---

**நல்வழி.**

***இ-ள்.** சாதி—சாதியானது. இரண்டொழிய — இரண்டல்லாமல். வேறில்லை—வேறேயில்லை. சாற்றுங்கால்—சொல்லுங்காலத்தில். மேதினியில்—பூமியில். நீதி—நியாயம். வழுவா — தப்பாத. நெறிமுறையின்—கிரமத்தின்படி. இட்டார் — கொடுக்கிறவர்கள். பெரியோர்—உயர்ந்த சாதியார். இடாதார்—கொடாதவர்கள். இழிகுலத்தோர்—தாழ்ந்த சாதியார். பட்டாங்கில் — வேதத்தில். உள்ளபடி—(இது) இருக்கிறபிரகாரம். **எ-று.**

(௧.), (௨.) ௩௭௩, ௩௨௨, ௩௨௫-ம் பக்கங்களிலுள்ள பாட்டுகளைக் காண்க.

கிறவர்களுமே கீழான சாதியென்றும்; சொல்லியிருக்கிறார்கள்.

பிரியமானவர்களே, இந்தத் தேசத்தில் ஏற்பட்ட சாதி பேதங்களைக் குறித்து, சில வாக்கியங்களைச் சொல்ல விரும்புகிறோம். நல்ல மனசுடனே கேட்டு, ஆராய்ந்து அறிந்து கொள்ளுங்கள்.

## க—வது. சாதிபேதமென்பது பைத்தியமான எண்ணம்.

சாப்பிடுகிற அன்னம் என்ன செய்யும்? பிறந்த குலம் என்னபண்ணும்? சென்மித்த பூமி என்ன செய்யும்? சாதியைப் பற்றி மனுஷர் படுகிற பாடுகளைப் பார்த்தால், சிரிக்கத்தக்கதாயிருக்கிறதேயென்று வேமனர் சொன்னார்.(இ.) சூதர் சொன்னதையும் கவனியுங்கள்.

* முத்திவித்தக முனிவரேகேண்மின்மெய்யான்ம
தத்துவத்தனுபவ மின்றிச்சாதிகோத்திரத்திற்
சித்தம்வைத்தவச் சிதடன்வெம்பதடியாய்த்திரிவன்
பித்தமத்தமே பெறுவதேயன்றிவேறின்றாம்.

* இ-ள். முத்தி — மோட்சத்தை விரும்புகிற. வித்தகம்—ஞானத்தையுடைய. முனிவரே — முனிவர்களே. கேண்மின்—கேளுங்கள். மெய்—உண்மையான. ஆன்மதத்துவத்து — ஆத்துமதத்துவத்தில். அனுபவமின்றி — அனுபவமில்லாமல். சாதி — சாதியிலும். கோத்திரத்தில் — கோத்திரத்திலும். சித்தம் — மனதை. வைத்த—செலுத்தின. அச்சிதடன்—அந்தவறிவில்லான். வெம்—வெறுக்கத்தக்க. பதடியாய்—பயனில்லாதவனாய். திரிவன்—திரிவான். (அன்றியும்) பித்தம் — பித்தத்தினாலாகிய. மத்தம்—வெறியை. பெறுவதேயன்றி—அடைகிறதேயல்லாமல். வேறின்றாம்—வேறுபயனில்லை. எ—று.

(இ.) ௩௪௩—ம் பக்கத்திலுள்ள பாட்டைக் காண்க.

ஓ முனிவர்களே, மெய்யான ஞானத்திலே அனுபவமில்லாமல், சாதியின்மேலும் கோத்திரத்தின்மேலும் மனைசச் செலுத்துகிற மூடனானவன் பதராயிருக்கிறான். அவன் அடைகிற பலனாவது பித்தமும் வெறியுமே என்றார்.

## உ—வது. சாதிபேதமென்பது கர்வத்தினாலே உண்டானது.

பிராமணர் முதலான சிலர் தங்களைப் பெருமைப்படுத்த வேண்டுமென்றும், மற்ற யாவரையும் தாழ்மைப்படுத்த வேண்டுமென்றும் கருத்துக்கொண்டு, உயர்வும் தாழ்வும் கூறி, தங்களை மேலாக வைத்து, கர்வித்து, மற்றவர்களைக் காலாலே மிதிப்பதுபோல ஒடுக்கி, பெரிய ஆங்காரத்தோடே நடக்கிறார்கள். இப்படிப்பட்ட கட்டுப்பாடு கடவுளுடைய கிருபையினாலே உண்டாகுமா? உண்டாகாது. கடவுளுக்குத் துரோகஞ்செய்கிற கர்விகளுடைய துர்க்குணத்தினாலே தானே உண்டானது. இப்படியிருக்க, இது கெட்டதென்று சொல்லவும் அவசரமோ?

## ௩—வது. சாதிபேதமென்பது பெரிய வஞ்சனை.

தங்களைச் சாதியில் பெரியவர்களென்று பிராமணர் போதிப்பதினாலே, வெகு சனங்களை மோசப்படுத்துகிறார்கள். ஆளைப் பார்த்தான் வாயிலேப்த்தான் என்கிற பழமொழிப்படி வெகு பணங்களையும் பறிக்கிறார்கள். மற்றவர்கள் கஷ்டப்பட்டு, வேர்த்து, சேர்த்து, தங்களுக்குக் கொடுக்கவேண்டுமென்கிறதே அந்தப் பார்ப்பாருடைய நோக்கம். கொடுக்கமாட்டாதவர்களைச் சபிப்போமென்று மிரட்டுவார்கள்.

இதெல்லாம் ஏன் செய்கிறார்கள்? தாங்கள் உழைக்கா மல், மற்றவர்களுடைய பொருளை அபகரித்து, அதினாலே தங்கள் வயிற்றை வளர்த்து, கஷ்டமில்லாமல் சுகமாய்ப் பிழைக்கும்படிக்கல்லவா அப்படிச் செய்கிறார்கள்?

* இப்படியேகுறித் தெங்கும்பிரகாசமாய்
கற்பனையாய்மறை வேதங்களோதினார்
எப்போதுமேயுல கெங்கும்வழக்கமாய்
சொற்படிசொல்லிடுஞ் சூதுகளாண்டையே
பிர்மசத்திரியர் வைசியசூத்திரர்
கர்மசூத்திரங்கள் கட்டினார்நூல்விதி
துர்மவிசேஷசுய செகசாலமே
வர்மமறிந்தருள் வள்ளுவனோதினான்

என்று ஞானவெட்டியான் சொன்னான்.

பிராமணரும், க்ஷத்திரியரும், வைசியரும், சூத்திரருமா கிய நான்கு சாதிகளையும் அந்தந்தச் சாதிக்குரிய கருமங்க ளையும் சாஸ்திரவிதியென்று சொல்லி ஏற்படுத்தினது மிக வும் கெட்ட தந்திர மாயவித்தையாயிருக்கிறது. அந்தப்

---

* இ—ள். இப்படி—இவ்விதமாக. குறித்து—எண்ணி. எங்கும்—எவ்விடங்களிலும். பிரகாசமாய்—விளங்கும்படி. கற்பனையாய்—கட்டுப்பாடாக. மறைவேதங்கள்—மறையாகிய வேதங்களை. ஓதினார்—சொன்னார்கள். எப்போதும்—(அதை) எக்காலத்திலும். உலகெங்கும்—உலகெவ்விடத்திலும். வழக்கமாய்—வழக்கமாக. சொற்படி — முன்னோர் சொன்னபடி. சொல்லிடும் — பின்னோருஞ் சொல்லிவருகிற. சூதுகள்—மோசங்கள் (அன்றியும்). ஆண்டையே—எசமானே. பிர்ம—பிராமணரும். சத்திரியர்—சத்திரியரும். வைசிய—வைசியரும். சூத்திரர் — சூத்திரரும். (ஆகிய சாதிகள் நான்கென்றும்) கர்ம—(அவரவர்களுக்கு இன்னின்ன) கருமங்களென்றும். சூத்திரங்கள் — சூத்திரங்களை. கட்டினார்—ஏற்படுத்தினார்களாகையால். நூல்—அவர்கள் நூலிற் சொல்லுகிற. விதி—விதிகளெல்லாம். விசேஷ—அதிகமான. துர்ம—கெட்ட. சுய—சொந்தமாய் ஏற்படுத்தின. செகசாலம்—மாயம். வர்மம்—அவர்களுடைய இரகசியத்தை. அறிந்தருள் — தெரிந்த. வள்ளுவன்—திருவள்ளுவன். ஓதினான்—சொன்னான். எ—று.

பொல்லாத வஞ்சனையை அறிந்த வள்ளுவனுகிய நான் அதைச் சொல்லி வெளிப்படுத்தினேனென்றுன்.(க.)

## ௬—வது. சாதிபேதமென்பது மகா பாதகம்.

பூலோகத்தையும், அதிலுள்ள சகல தேசத்து மனுஷரை யும் சிருஷ்டித்த தேவன் ஒருவரே. எல்லாரும் அந்த ஒரே பரம பிதாவினுலே உண்டானபடியினுலே, சகோதர சம்பந்தமாயிருக்கவேண்டும். எல்லாரும் ஒருவரை ஒருவர் சினேகிக்க வேண்டும். அப்படியிருக்கவேண்டிய சகோதரக் கட்டும் சினேகமும், ஊணற்றபோதே உறவற்றது என்னும் பழமொழிப் பிரகாரம் சாதிபேதத்தினுலே நாசப்பட்டு இல்லாமற் போய்விடுகிறது. அதினுலே மனுஷர் ஒருவருக்கொருவர் பகையும் விரோதமுமாகிருர்கள். மனுஷர்களுக்குள்ளே அப்படிப்பட்ட பகையை உண்டாக்குகிற சாதிபேதமானது சரியென்று போதிக்கிறவர்கள் மகா அக்கிரமக்காரரல்லவா?

மேலும் அந்தக் கெட்ட போதனையைப் பெலப்படுத்தும்படி பிராமணர் முதலானவர்கள் அதைத் தெய்வத்தின்மேல் ஏற்றலாமென்று துணிந்து, பிரமாவினுடைய முகத்தினுலும், தோளினுலும், தொடையினுலும், காலினுலும் நாலு சாதி உண்டானதென்கிற வம்புக் கதையைக் கற்பித்தார்கள். இந்தத் தேசத்தார்கள் இப்படிப்பட்ட பொய்யிலேயும் மயக்கத்திலேயும் விழுந்து புரண்டு கெடும்படி செய்தார்கள். அப்படிச் செய்வது பெரிய பாவமல்லவா?

இதுவுமல்லாமல், பொய்யிலிருந்து பொய் முளைக்கிறதும், மயக்கத்திலிருந்து மயக்கம் பெருகிறதும் சுபாவமானபடியினுலே, இந்தத் தேசத்துச் சனங்கள் வரவர அதிகமான

(க.) ௩௪௩-ம் பக்கத்திலுள்ள பாட்டைக் காண்க.

இருளிலும் மருளிலும் அகப்பட்டு, நாலு சாதி போதாதபடி புதிய பேதங்களை உண்டுபண்ணி, எத்தனையோ சாதிகளை ஏற்படுத்தியிருக்கிறார்கள். இதை நிதானிக்கும்போது சாதி பேதமென்பது தேவதுரோகமும் மனுஷவிரோதமுமான மகா பாதகமாயிருக்கிறதென்று யாவருக்கும் இலேசாகத் தோன்றும்.

## ரு—வது. சாதிபேதமென்பது நரகமார்க்கம்.

நல்லமாதவமேது தங்குலம்புரிநடையே

என்று மகா பாரதத்திலே சொல்லியிருக்கிறது. ஒருவன் தன்னுடைய சாதிக் கட்டுப்பாடுகளைக் கைக்கொண்டால், அதுவே பிரதானமென்பதே அதின் அருத்தம். அதை அனேகர் நம்பி, கெட்டு, நரகத்துக்குப் போகிறார்கள். எப்படியென்றால், எந்தப் பாவஞ் செய்தாலும் அக்கறையில்லை, குலாசாரத்தைக் காப்பாற்றுகிறதே ஒன்றான தருமம், அதுவே போதும், மற்றப்படி எவ்விதமாய் நடந்தாலும் சரிதான் என்று அவர்கள் எண்ணி, தங்கள் இஷ்டப்படி பாவஞ்செய்வார்கள். குலாசாரம் வழியென்று மயங்கி, மோட்சமார்க்கத்தைத் தேடமாட்டார்கள். தங்கள் ஆத்துமாவுக்கு நல்வழியைக் காணமாட்டார்கள். தேவனுடைய கிருபையை அடையமாட்டார்கள். பாவத்தை அனுசரித்து நரகத்திலே விழுவார்கள்.

ஓ சனங்களே, மோட்சமார்க்கத்திலே சேருவதற்கு உங்கள் குலாசாரமே பெரிய தடையாயிருக்கிறது. ஆகையினாலே, சாதிபேதத்தைக் கைக்கொள்வது பெரிய பாவமாயிருக்கிறது. அது எவ்விதத்திலும் தருமமல்ல. அதை எவ்வளவு அதிகமாய் அனுசரிக்கிறீர்களோ, அவ்வளவு அதிகமான பாவங்களைச் சம்பாதித்துக் கொள்ளுவீர்கள். நீங்

கள் இந்தமட்டும் சம்பாதித்தது போதாதோ? சாதிபேதம் நல்லதென்று எதுவரைக்கும் பிர்மிப்பீர்கள்? அது நரகமார்க்கமாயிருக்கிறது நிச்சயமே.

ஓ சனங்களே, சத்திய வார்த்தையைக் கேளுங்கள். எங்கும் இருக்கிற மெய்யான கடவுளுடைய சமுகத்துக்கு முன்பாக இரண்டு சாதிகள் மாத்திரம் உண்டு. புண்ணியாத்துமாக்கள் ஒரு சாதி. பாபாத்துமாக்கள் வேறொரு சாதி. தேவமகிமை பிரகாசிக்கிற மோட்சலோகத்திலே புண்ணியாத்துமாக்கள் இருக்கிறார்கள். அங்கே பாவமே இல்லை. இந்தப் பூலோகத்திலேயோ எல்லாரும் பாவஞ் செய்திருக்கிறார்கள். பொய்யும், சூதும், களவும், விபசாரமும் எந்தத் தேசத்திலும் உண்டு. பகையும், பொறாமையும், கோபமும், லோபமும், மோகமும் எந்த இடத்திலும் உண்டு. ஆகையினாலே, பூமியிலே புண்ணியாத்துமா ஒருவனும் இல்லை. எல்லாரும் தேவனுடைய நல்ல கட்டளைகளை மீறி, பாபாத்துமாக்களாயிருக்கிறார்கள்.

இப்படியிருக்க, இந்தச் சாதி பெரிதென்றும், இந்தச் சாதி சிறிதென்றும் வழக்காடுகிறது என்னத்துக்கு? அந்த வீணான வாக்குவாதத்தை விட்டுவிட்டு, மனுஷர் யாவரும் பாபசாதியாய்ப் போனார்களென்று கண்டு, பாவம் போவதான வழி இன்னதென்றும், புண்ணியலோகத்தில் சேருவதான மார்க்கம் இப்படிப்பட்டதென்றும், விசாரித்து, அதை அடையும்படி ஒருவருக்கொருவர் உதவிசெய்ய வேண்டியதே நியாயமாயிருக்கிறது.

பிரியமானவர்களே, நாமெல்லாரும் பாவிகளானதினாலே நமது பாவத்தைத் தீர்க்கத்தக்க ஒரு புண்ணிய குருவானவர் நமக்குக் கிடையாமற்போனால், நாம் செத்தவுடனே, பாவத்துக்குப் பலனாகிய தீநரகத்திலே விழுவோமேயல்லாமல், புண்ணிய லோகமாகிய மோட்சத்திலே சேரமாட்டோம். அப்படிப்பட்ட குரு ஒருவர் இருக்கிறார். இயேசுக்கிறிஸ்து

வென்று நாமம் பெற்றவர் அவரே. புண்ணிய லோகத்துக்கு அவர்தான் கர்த்தாவாயிருக்கிறவர். அவரே மோட்சபதி. சர்வத்துக்கும் மேலான தேவனுயிருக்கிற அவர் நமதுமேல் இரக்கம் வைத்து, மோட்சலோகத்திலிருந்து புறப்பட்டு, பூமியிலே வந்திறங்கி, மனுஷனாக அவதாரமெடுத்தார். அன்பும் வல்லமையுமுள்ள குருவானவர் அவர் ஒருவரே. மூவுலகிலும் நம்மை இரட்சிக்கத்தக்கவர் வேறொருவர் இல்லை. அவர் பூமியிலே வந்து பிரகாசித்தபோது மகத்தான கிரியைகளைச் செய்தார். சனங்களின்மேல் அன்பும் அருளும் வீசினார். பொய் மதங்களைக் கண்டித்தார். மெய் மார்க்கத்தை விளக்கினார். அற்புதங்களைச் செய்தார். அவருடைய வாக்கு தேவவாக்கு. அது பூமியிலே அதிகாரத்தோடே சத்தித்தது. அதைக் கேட்ட குருடர் பார்வைப் பெற்றார்கள். செவிடர் கேள்வி அடைந்தார்கள். ஊமைகளும் வாய் திறந்து ஸ்துதித்தார்கள். வியாதிஸ்தர் குணமானார்கள். பிசாசுகள் மிரண்டு ஓடினது.

புண்ணியமில்லாத நமக்காக அந்த இயேசுக்கிறிஸ்து புண்ணியஞ் செய்தார். அவருடைய புண்ணியம் நமக்குக் கிடைத்தால், அது நாம் நரகத்தில் விழாதபடி நம்மைக் காக்கும். சாவியானது கதவைத் திறந்து விடுவதுபோலே அவருடைய புண்ணியம் நமக்காக மோட்சலோகத்தின் வாசலைத் திறக்கும். நம்முடைய பாவத்தை அந்தத் தயவுள்ள குரு தாமே சுமந்தார். அதினிமித்தம் அவர் சிலுவை மரத்திலே ஆணிகளினாலே அறையப்பட்டார். அங்கே மரணத்தையும் அனுபவித்தார். அது பெரிய தண்டனையல்லவா? பாவமில்லாத அவர் ஏன் அவ்விதமான தண்டனை சகித்தாரென்று கேளுங்கள். அது நல்ல கேள்வி. மகிழ்ச்சியுடன் அதற்கு உத்தரவு சொல்லுகிறோம். நாம் நித்திய நரகதண்டனை அடையாதபடி அவர் தண்டனைப்பட்டார். நாமே குற்றவாளிகள். நமக்கே தண்டனை வரவேண்டியது. அவரோ நமது தண்டனையை நீக்கவும், நம்மை இரட்சிக்கவும்,

விரும்பி நமக்காகத் தண்டனைப்பட்டார். அவர் மரணம் அடைந்த மூன்றும் நாளிலே திரும்பி உயிர்த்தெழுந்து, உலகத்திலே மறுபடியும் தோன்றி, சீஷர்களுக்குக் கட்டளையிட்டு, பரலோகத்துக்குப் போனார். அவர் போன அந்த இடமே புண்ணியலோகம். அவரே புண்ணிய குரு. அவரை விசுவாசித்து, அவருடைய வார்த்தைப்படி நடக்கிறவன் எவனோ, அவன் கெட்டுப் போகமாட்டான். நரகத்திலே விழமாட்டான். அப்படிப்பட்டவனுடைய பாவம் அந்தக் குருவினுடைய புண்ணியத்தினாலே தீர்ந்துபோகும். ஆத்தும சுத்தியும் உண்டாகும். நித்திய மோட்சகதியும் கிடைக்கும்.

ஓ சனங்களே, இதைக் குறித்து ஏனோதானோ என்றிருக்கவேண்டாம். இதுவே உங்களுக்குக் காலமும் சமயமும் ஆயிருக்கிறது. இப்போதே உங்களெல்லாப் பாவங்களையும் விட்டு, பொய்யான மதங்களையும் தள்ளி, வியர்த்தமான சாதி பேதங்களையும் நீக்கி, இயேசு இரட்சகரை உங்கள் தேவனென்றும், புண்ணிய குருவென்றும், ஏற்றுக்கொண்டு நம்பி, அவருடைய சத்திய வேதத்தை ஆசரித்து, அவர் ஏற்படுத்தின ஒன்றான கிறிஸ்து மார்க்கத்திலே சேர்ந்து, பேரானந்த கதியை அடைவீர்களாக.



# உ ப க் ர ந் த ம்.

## APPENDIX TO NO. XII.



## முன் சொன்னவைகளுக்குச் சில உதாரணங்கள்.



(க.) பிரமாவில் நாலு இடங்களிலேயும் நாலு சாதிகளும் பிறந்தார்களென்பது.

**பாகவதம்: மைத்திரேயர் விதுரற்குத் தத்துவமுரைத்த அத்தியாயம்.**

*முன்னுறுமுகத்தின் முந்நூலர்வந்தனர்*
*மன்னவர்வாகுவில் வந்துமன்னிஞர்*
*பொன்னுறுவணிகர் பூந்தொடையிற்போந்தனர்*
*பின்னவர்தாளினிற் பின்னர்த்தோன்றிஞர்.* (உ௰.)

### இதன் பதவுரை.

*முனனுறு—முதன்மையாகிய. முகத்தில்—முகத்திலிருந்து. முந்நூலர்—பிராமணர்கள். வந்தனர்—தோன்றிஞர்கள். வாகுவில்—தோளிலிருந்து. மன்னவர்—அரசர்கள். வந்துமன்னிஞர்—வந்து பிறந்தார்கள். பூம்—அழகிய. தொடையில்—தொடையிலிருந்து.*

பொன்னுறு—செல்வமிகுந்த. வணிகர்—வைசியர். போந்தனர்—வந்தார்கள். பின்னர்—பின்பு. தாளினில்—பாதத்திலிருந்து. பின்னவர்—சூத்திரர். தோன்றினர்—பிறந்தார்கள்.

### கருத்துரை.

நான்கு சாதிகளும் பிரமாவினுடைய முகம், தோள், தொடை, கால் என்னும் நான்கிடத்திலிருந்தும் பிறந்தார்கள், என்பதாம்.

## (உ.) இதுவும் அது.

లోకానాంతువివృద్ధ్యర్థం ముఖబాహూరుపాదతః
బ్రాహ్మణంక్షత్రియంవైశ్యం శూద్రంచనిరవర్తయత్.

### இதன் பதவுரை.

లోకానాం—உலகங்களுடைய. వివృద్ధ్యర్థం—விர்த்திக்காக. ముఖబాహూరుపాదతః—முகம் புஜம் தொடை கால் இவைகளினின்றும். బ్రాహ్మణం—பார்ப்பானையும். క్షత్రియం—க்ஷத்திரியனையும். వైశ్యం—வைசியனையும். శూద్రంచ—சூத்திரனையும். (பிரமா) నిరవర్తయత్—உண்டாக்கினான். (తు—அசை.)

### கருத்துரை.

உலக விர்த்திக்காக பிரமாவானவன் தன்னுடைய முகத்திலிருந்து பிராமணனையும், புஜத்திலிருந்து க்ஷத்திரியனையும், தொடையிலிருந்து வைசியனையும், பாதத்திலிருந்து சூத்திரனையும் சிருஷ்டித்தான்.

(௩.) ஆதியிலே மனுஷரெல்லாரும் ஒரே சாதியாயிருந்தார்கள். பின்பு கர்மக்கிரியா விசேஷத்தினாலே நாலு சாதிகள் உண்டானதென்பது.

ఏకవర్ణమిదంపూర్ణం విశ్వమాసీద్యుధిష్ఠిర
కర్మక్రియావిశేషేణ చాతుర్వర్ణ్యంప్రతిష్ఠితం.

இதன் பதவுரை.

*యుధిష్ఠిర—தருமராசனே. ఇదం—இந்த. పూర్ణంవిశ్వం—உலகமுழுமையும். ఏకవర్ణం—(முன்) ஒரே சாதியாகவே. ఆసీత్—இருந்தது. కర్మక్రియావిశేషేణ—கர்மக்கிரியா விசேஷத்தினாலே. చాతుర్వర్ణ్యం—நான்கு சாதி. ప్రతిష్ఠితం—ஏற்படுத்தப்பட்டது.*

கருத்துரை.

*தருமராசனே! ஆதியிலே உலகமெல்லாம் ஒரே சாதியாயிருந்தது. பின்பு, வெவ்வேறான வேலைகளை நடத்தும்படியாக, நாலு சாதிகள் ஏற்படுத்தப்பட்டது.*

(௪.) மற்றவர்களிலும் பிராமணர் உயர்ந்த குலத்தாரென்பது.

நல்லாப்பிள்ளை பாரதம்: அநுசாசனிக பருவம்: பூதேவர் மகிமையுரைத்த சருக்கம்.

*அந்தணர்கடவவலியா லரசர்செங்கோனிகழ்வதெல்லாம்*
*அந்தணர்களொழுக்கத்தா லாருயிர்கள்செறிவதெல்லாம்*
*அந்தணர்களுன்மறையா லருமாரிபொழிவதெல்லாம்*
*அந்தணரிலதிகருல கத்திலுண்டோபுகல்வாயே.* (அ.)

### இதன் பதவுரை.

அரசர்—இராசர்களுடைய. செங்கோல் — நீதி. நிகழ்வதெல்லாம்—நடக்கிறதெல்லாம். அந்தணர்கள்—பிராமணர்களுடைய. தவவலியால்—தபோ வல்லமையாலாம். ஆர்—நிறைந்த. உயிர்கள் — சீவன்கள். செறிவதெல்லாம் — நெருங்குவதெல்லாம். அந்தணர்கள்—பிராமணர்களுடைய. ஒழுக்கத்தால்—ஆசாரத்தாலாம். அரு—அருமையான. மாரி—மழை. பொழிவதெல்லாம் — பெய்கிறதெல்லாம். அந்தணர்கள்—பிராமணர்கள். நான்மறையால்—நான்கு வேத பாராயணத்தாலாம். (ஆகையால்) உலகத்தில் — உலகில். அந்தணரில்—பிராமணரைப்பார்க்கிலும். அதிகர் — உயர்ந்தவர்கள். உண்டோ—உண்டா. புகல்வாய்—சொல்லுவாய்.

### கருத்துரை.

பிராமணரைப் பார்க்கிலும் உலகில் உயர்ந்தோர் இல்லை என்பதாம்.

## (௫.) கல்விமான்களே உயர்ந்த சாதியாரென்பது.

జాతులందుమిగులజాతియేదెక్కువో
యెరుకలేకతిరుగనేమిఫలము
యెరుకగలుగువాడెహెచ్చైనకులజుండు
విశ్వదాభిరామవినరవేమ. வேமனர். ௨: ௱௨௮.

### இதன் பதவுரை.

జాతులందు—சாதிகளில். మిగుల—மிகவும். జాతియేదెక్కువో—எந்தச் சாதி உயர்ந்ததோ. యెరుకలేక—அறியாமல். తిరుగ—திரிகிறதினாலே. యేమిఫలము—என்ன பிரயோசனம். యెరుకగలుగువాడె—அறிவுள்ளவனே. హెచ్చైన—மேலான. కులజుండు—குலத்தான்.

విశ్వదాభిరామ—ஆண்டவருக்குப் பிரியமான. వేమ—ஓ வேமனரே. వినర—கேள்.

கருத்துரை.

எல்லாச் சாதிகளிலும் பெரிய சாதி எதுவோ, அறியாமல் திரிகிறதினால் என்ன பிரயோசனம்? வித்துவானே உயர்ந்த குலத்தான்.

(௩.) பறையராய்ப் பிறந்தவரல்ல, பொய்யரும் பறையரை நிந்திக்கிறவரும் பறையரே என்பது.

మాలమాలగాడుమహిమీదనెప్పుడు
మాటతిరుగువాడుమాలగాక
వానిమాలయన్నవాడెపోపెనుమాల
విశ్వదాభిరామవినరవేమ. வேமனர். உ: ௱௩௫.

இதன் பதவுரை.

మాల—பறையன். మాలగాడు—(பிறப்பினாலே) பறையனல்ல. మహిమీదను—பூமியில். యెప్పుడు—எப்போதும். మాటతిరుగువాడు—சொன்ன பேச்சைத் தவறுகிறவன். మాలగాక—பறையனேயன்றி. వాని—அந்தப் பறையனை. మాల—பறையன். అన్నవాడె—என்று சொல்லுகிறவனே. పెనుమాల—பெரும்பறையன். విశ్వదాభిరామ—ஆண்டவருக்குப் பிரியமான. వేమ—ஓ வேமனரே. వినర—கேள்.

கருத்துரை.

பறையனாய்ப் பிறந்தவன் பறையனல்ல. சொல் தவறுகிறவனே பறையன். பறையனைப் பறையனென்கிறவனெவனோ, அவனே பெரும் பறையன்.

(எ.) மனுஷர்கள் சாதியினிமித்தம் படுகிற பாடுகள் சிரிக்கப்படத்தக்கவைகளென்பது.

కూడదేమిజేసెకులమేమిచేసెను
భూమియేమిజేసెబొందికట్టె
నరుడుబడెడుపాట్లునగుబాట్లుచూడగా
విశ్వదాభిరామవినరవేమ. வேமனர். ௩: உ௱௰௮.

இதன் பதவுரை.

కూడదేమిజేసె—ஆகாரம் என்ன செய்தது. కులము—சாதி. యేమి చేసెను—என்ன செய்தது. భూమి — பூமி. యేమిచేసె — என்ன செய்தது. బొందికట్టె — சரீரமானது கட்டைதான். నరుడు—மனுஷன் (சாதி வித்தியாசங்களைக் குறித்து). పడెడు—படுகிற. పాట్లు—பாடுகள். చూడగా—ஆலோசிக்குமளவில். నగుబాట్లు—நகைக்கப்படத்தக்கவைகள். విశ్వదాభిరామ—ஆண்டவருக்குப் பிரியமான. వేమ—ஓ வேமனரே. వినర—கேள்.

கருத்துரை.

சாதிவித்தியாசங்களைக் குறித்து மனுஷன் படுகிற பாடெல்லாம் சிரிக்கப்படத்தக்கதாயிருக்கிறது.

(அ.) சாதிபேதம் உண்டென்பது மயக்கமாம்.

குலமென்றாய்நீபடைத்த குறியையறியாமல்நான்
மலபாண்டத்துள்ளிருந்து மயங்கினேன்பூரணமே.
பட்டணத்துப்பிள்ளை.

இதன் பதவுரை.

பூரணமே—பரிபூரணமான கடவுளே. நீ—தேவரீர். குலமொன்றாய்—ஒரே சாதியாக. படைத்த—சிருஷ்டித்த. குறியை—(உமது)

எண்ணத்தை. அறியாமல்—தெரியாமல். நான் — நான். மலபாண்டத்துள்—மலத்துக்குப் பாத்திரமாகிய சரீரத்தில். இருந்து-இருந்து. மயங்கினேன்—(பலவகைச் சாதியுண்டென்று) மயங்கினேன்.

## கருத்துரை.

மனிதர்களெல்லாரும் ஒரே சாதியென்றறியாமல், மயங்கினேன் என்பதாம்.



## வேதவாக்கியம்.



ஆதியாகமம், க. அதி: உ௭, உ௮.
ஆதியாகமம், ரு. அதி: உ௰.
ஆதியாகமம், கூ. அதி: ௰௮, ௰கூ.
மல்கியா, உ. அதி: ௰.
அப்போஸ். ௰௭. அதி: உசு.



# பிராமணன்.



ஓ பிராமணர்களே, சமஸ்த சாதிகளுக்கும் பிராமண சாதியே பிரதானமென்று நீங்கள் சொல்லுகிறீர்கள். நீங்கள் கட்டின சாஸ்திரங்களிலேயும் உங்களைக் குறித்து அப்படிப்பட்ட பெருமையான வார்த்தைகளை எழுதிவைத்திருக்கிறீர்கள்.

*மனிதர்நால்வருணமான வாறுதம்வினைகட்கீடாய்ப்
புனிதவேதியன்றன்பாதந் தொடைமார்புமுகத்திற்போற்ற
இனிதுடனுதித்தாரன்னா ரிடத்தினால்வருணமெய்திற்
றனகைகேளிழிந்தோர்பாதத் தானனத்துயர்ந்தோராகி. (எசு.)

சிவன் பார்வதியைப் பார்த்துச் சொல்லுகிறான்: ஓ குற்றமில்லாத ஸ்திரியே, மனுஷர் நாலு சாதியான விதத்தை நான் உனக்குச் சொல்ல, நீ கேளு. மனுஷர்கள் பிரமாவினுடைய பாதத்திலும் தொடையிலும் தோளிலும் முகத்திலுமிருந்து பிறந்தார்கள். அப்படிப் பிறந்த இட பேதத்தி

---

* இ-ள். அனகை—பாவமில்லாதவளே. மனிதர் — மனிதர்கள். நால் வருணம்—நான்கு சாதி. ஆனவாறு—ஆன விதத்தை. கேள்—கேட்பாயாக. தம்—தங்களுடைய. வினைகட்கீடாய்—வினைக்கொப்பாக. புனித—பரிசுத்தமாகிய. வேதியன்றன்—பிரமாவினுடைய. பாதம் — பாதமும். தொடை — தொடையும். மார்பு — தோளும். முகத்தில்—முகமுமாகிய நான்கிடத்திலிருந்தும். இனிதுடன்—சந்தோஷமாக. உதித்தார்—தோன்றினார்கள். அன்னார்—அவர்களுக்கு. இடத்தினால் — இடபேதத்தால். வருணம் — சாதி. எய்திற்று — அடைந்தது. (அவர்களுக்குள்) பாதத்து—பாதத்திற்றோன்றினவர்கள். இழிந்தோர்—தாழ்ந்தவர்களும். ஆனனத்து—முகத்திற்றோன்றினவர்கள். உயர்ந்தோராகி—உயர்ந்தவர்களுமாகி (இருப்பார்கள்). எ-று.

ளுலே அவர்களுக்குச் சாதி பேதம் வந்தது. அந்தப் பிரமாவின் காலிலிருந்து பிறந்த சூத்திரர்கள் தாழ்ந்தவர்களாயிருக்கிறார்கள். முகத்திலிருந்து பிறந்த பிராமணர்கள் உயர்ந்தவர்களாயிருக்கிறார்கள்.

ஒருவன் சாதிப் பிறப்பினாலே பிராமணனாகிறானென்றும், அதினாலே அவன் சகலத்துக்கும் மேலானவனாயிருக்கிறானென்றும், இதிலே சொல்லியிருக்கிறது.(க.)

இது முழுவதும் தப்பாயிருக்கிறதென்று வெளிச்சத்தைப் போலே பிரகாசமாய் விளங்கும்படி காட்டுகிறோம்: கவனித்துக் கேளுங்கள்.



## முதலாவது.



## ஒருவன் சாதிப்பிறப்பினாலே பிராமணனாகிறதில்லையென்று கபிலமாமுனியானவர் சாட்சி சொன்னார்.

*சேற்றிற்பிறந்த செங்கழுநீர்போலப்
பிரமற்குக்கூத்திவயிற்றிற் பிறந்தவசிட்டரும்
வசிட்டர்க்குச்சண்டாளி வயிற்றிற்பிறந்தசத்தியரும்
சத்தியர்க்குப்புலைச்சிதோள் சேர்ந்துபிறந்தபராசரரும்
பராசரருக்குமீன்வாணிச்சி வயிற்றிற்பிறந்தவியாசரும்
இந்நால்வரும்
வேதங்களோதிமேன்மைப்பட்டு மாதவராகிவயங்கினரன்றே.

*இ-ள். சேற்றில்—சேற்றிலே. பிறந்த—உண்டான. செங்கழுநீர்போல—செங்கழுநீர்புஷ்பத்தைப்போல. பிரமற்கு—பிரமனுக்கு. கூத்தி—வைப்பாட்டியின். வயிற்றில்—வயிற்றிலிருந்து. பிறந்த—பிறந்த. வசிட்டரும்—வசிட்டரும். வசிட்டர்க்கு — அவ்வசிட்ட

(க.) ௩௩௭-ம் பக்கத்திலுள்ள சுலோகத்தைக் காண்க.

வசிட்டரென்கிற மகா இருஷி வைப்பாட்டி வயிற்றிலே பிறந்தான். சத்தியரென்கிற மகா இருஷி புலைச்சி வயிற்றிலே பிறந்தான். பராசரரென்கிற மகா இருஷி பறைச்சி வயிற்றிலே பிறந்தான். வியாசரென்கிற மகா இருஷி வலைச்சி வயிற்றிலே பிறந்தான். இந்த நான்குபேரும் வேதங்களைப் படித்ததினாலே மேன்மைப்பட்டு, மகா இருஷிகளானார்களல்லவா என்று கபிலர் சொன்னார்.

மேலே சொல்லப்பட்ட மகா இருஷிகள் நாலுபேரும் பிராமண ஸ்திரியினுடைய வயிற்றிலே பிறக்கவில்லை. வைப்பாட்டியும் புலைச்சியும் பறைச்சியும் வலைச்சியுமே அவர்களுக்குத் தாயானவர்கள். அப்படியிருந்தும், அவர்களைப் பிராமணர்களென்று யாவரும் ஒப்புக்கொள்ளுகிறார்கள். ஆகையினாலே பிராமணனாகிறதற்குச் சாதிப் பிறப்புக் காரணமல்ல; சாதிப் பிறப்பினாலே ஒன்றுமில்லையென்று நன்றாய்த் தோன்றுகின்றது. அப்படியிருக்க, சாதிப்பிறப்பினாலே ஒருவன் பிராமணனாகிறானென்பது அபத்தமே.(உ.)

இதற்கு என்ன சொல்லுவீர்கள்? தாயைப்பற்றி அக்கறை இல்லை: ஒருவனுக்குத் தாயானவள் பாப்பாத்தியல்லாதேபோனாலும், போகட்டும்: அவனுக்குத் தகப்பன்மாத்

ருக்கு. சண்டாளி — பறைச்சியின். வயிற்றில்—வயிற்றிலிருந்து. பிறந்த—பிறந்த. சத்தியரும்—சத்தியரும். சத்தியர்க்கு — அச்சத்தியருக்கு. புலைச்சி—பறைச்சியின். தோள்—தோளை. சேர்ந்து—சேர்ந்ததினால். பிறந்த—பிறந்த. பராசரரும்—பராசரரும். பராசரருக்கு—அப்பராசரருக்கு. மீன்வாணிச்சி—வலைச்சியின். வயிற்றில்—வயிற்றிலிருந்து. பிறந்த — பிறந்த. வியாசரும்—வியாசரும். இந்நால்வரும்—ஆகியவிந்த நான்குபேரும். வேதங்கள்—வேதங்களை. ஓதி—வாசித்து. மேன்மைப்பட்டு—உயர்ந்தவர்களாய். மாதவராகி—மகாரிஷிகளாகி. வயங்கினர் — பிரகாசித்தார்கள். அன்றோ — அல்லவா. எ—று.

(உ.) ௩௯௮, ௩௯௯-ம் பக்கங்களிலுள்ள சுலோகங்களையும் பாட்டையும் காண்க.

திரம் பிராமணனாயிருந்தால், அது போதும்: தாய் யாராயிருந்தாலும், பிராமணனுக்குப் பிறக்கிற புத்திரரெல்லாரும் பிராமணர்களாகவே இருக்கிறார்களென்று சொல்லுவீர்களா? அப்படிச் சொன்னால், பாப்பார் வேசிகளோடே கூடி விபசாரம் பண்ணுவதினாலே அந்த வேசிகளுக்குப் பிறந்த புத்திரரும் பிராமணர்களாயிருக்கிறார்கள். அப்படிப்பட்ட வேசிப் பிள்ளைகளைப் பிராமணர்களென்று நீங்கள் ஏற்றுக்கொண்டு, உங்கள் பிராமண குலத்திலே சேர்க்கிறதுண்டா? இல்லையே. ஆதலால், தாய் யாரானாலும் சரி, தகப்பன் மாத்திரம் பிராமணனாயிருந்தால் போதுமென்று சொல்லுகிறது பொருந்தாது.

மேலும் பிராமணனுடைய புத்திரனாயிருக்கிறவன் மாத்திரம் பிராமணனென்று சாதித்தால், இப்போது உலகத்திலே யார் பிராமணர்களாயிருக்கிறார்களென்று ஒரு பெரிய சந்தேகம் உண்டாகும். பிராமணர்களுடைய குலஸ்திரிகள் அவிசாரிகளாய் இரகசியமாகச் சூத்திரர்களோடேயும் கூடிக் கலந்து சோரத்தனஞ் செய்கிறது எல்லாருக்கும் தெரியுமே. ஆகையினாலே அந்தப் பிராமண ஸ்திரிகளுடைய வயிற்றிலே பிறக்கிற புத்திரருக்குத் தகப்பன் பிராமணனோ, சூத்திரனோ, யாரோ, அது நிச்சயமாய்த் தெரியமாட்டாது. இக்காலத்தில் இருக்கிற பிராமணர்களுக்குள்ளே சூத்திரனுடைய புத்திரன் இன்னானென்றும், பிராமணனுடைய புத்திரன் இன்னானென்றும், கண்டு பிடிக்கிறது எப்படி? எல்லாரும் சரிசமானமாய்ப் பிராமண வேஷம் போட்டுக்கொண்டு திரிகிறார்கள். எல்லாருக்கும் பிராமணனென்கிற பேரும் வழங்குகிறதே.



## இரண்டாவது.

## சில செய்கையினாலே பிராமணத்துவம் கெட்டுப்போகுமென்று சொல்லப்பட்டது: ஆகையால், ஒருவன் சாதிப் பிறப்பினாலே பிராமணனாகிறதில்லை.

திருவள்ளுவர் சொன்னதாவது:

* மறப்பினுமோத்துக் கொளலாகும்பார்ப்பான்
பிறப்பொழுக்கங்குன்றக் கெடும்.

ஒரு பிராமணன் வேதங்களை மறந்தாலும், மறுபடியும் படித்துக்கொள்ளலாம். தன்னுடைய குலாசாரத்தை மீறினாலோ அவனுடைய சாதி கெட்டுப்போகும் என்பதே.

மகா பாரதத்திலேயும் சொல்லியிருக்கிறதைப் பாருங்கள்.

நல்லாப்பிள்ளை பாரதம்: அனுசாசனிக பருவம்: உமா மகேஸ்வர சம்வாதச் சருக்கம்.

† கோபமுமாசையுங் கோறலாற்றலும்
பாபமுமயக்கமும் படிறுரைத்தலுந்
தாபமுஞ்செருக்குமேற் றங்கவைகினோர்
தீபமேசூத்திரர் திறத்தினவரே. (அஉ.)

குறள், ௰௪. அதி: ௪.

* இ-ள். ஒத்து — வேதத்தை. மறப்பினும் — மறந்துபோனாலும். கொளலாகும்—மறுபடியும் வாசித்துக்கொள்ளலாம். பார்ப்பான் — பிராமணனுடைய. பிறப்பு—உயர்ந்த சாதியானது. ஒழுக்கம்—ஆசாரம். குன்ற—குறைந்தால். கெடும்—அழியும். எ-று.

† இ-ள். தீபமே — விளக்கையொத்தவளே. கோபமும்—கோபமும். ஆசையும் — இச்சையும். கோறலாற்றலும் — கொல்லுதலும்.

சிவன் பார்வதியை நோக்கிச் சொல்லுகிறான்: ஓ விளக்கை ஒத்தவளே, பிராமணர்களுக்குள்ளே யார் கோபிக்கிறார்களோ, யார் ஆசைப்படுகிறார்களோ, யார் கொலை செய்கிறார்களோ, யார் மயங்குகிறார்களோ, யார் பொய் சொல்லுகிறார்களோ, யார் காமமும் கர்வமும் கொள்ளுகிறார்களோ, அவர்கள் சூத்திரர் ஆவார்களென்றான்.

இதுவுமல்லாமல், ஒரு பிராமணன் மாமிசத்தையாவது, அரக்கையாவது, உப்பையாவது, விக்கிரயஞ் செய்தால், அதினாலே தட்சணமே சாதி கெட்டுப் போகிறானென்றும்; மூன்று நாள் பால் விற்பானேயானால் அவன் சூத்திரனாகிறானென்றும்; மானவ தர்ம சாஸ்திரத்திலே சொல்லியிருக்கிறது.(க.)

ஓகோ, இதென்ன ஆச்சரியம்! ஒரு குதிரையானது என்ன செய்தாலும், அது எப்போதாவது தன் சாதி கெட்டு, பன்றிச் சாதியாய்ப் போகுமா? பிறப்பினாலே அது குதிரையாயிருக்கிறபடியினாலே, அது எத்தனை துஷ்டத்தனமாய் நடந்தாலும், என்றைக்கும் குதிரையாயிருக்குமேயல்லாமல், பன்றியாகமாட்டாது. அப்படிப்போல ஒருவன் சாதிப் பிறப்பினாலே பிராமணனாயிருந்தால், அவன் என்ன செய்தாலும், எப்போதும் பிராமணனாயிருப்பானேயல்லாமல், அவன் ஒருபோதும் சாதி கெட்டு, சூத்திரனாகமாட்டான். ஆனாலும், ஒரு பாப்பான் கொஞ்சம் உப்பையாவது பாலையாவது விற்கவே, அவன் சூத்திரனாய் மாறிப்போகிறானென்று உங்கள் சாஸ்திரம் சொல்லுகின்றது. ஆனபடியினாலே ஒருவன் சாதிப் பிறப்பினாலே பிராமணனாகிறதில்லையென்று நிச்சயமாகின்றது.

---

பாபமும்—பாவமும். மயக்கமும்—மயக்கமும். படிறுரைத்தலும்—பொய்சொல்லுதலும். தாபமும்—காமமும். செருக்கும்—அகங்காரமும். மேல்—தங்களிடத்தில். தங்க—தங்கும்படி. வைகினோர்—இருப்பவர்கள். சூத்திரர் திறத்தின்—சூத்திர சாதிக்குள். ஆவர்—சேருவார்கள். எ-று.

(க.) ௩எ௰-ம் பக்கத்திலுள்ள சுலோகத்தைக் காண்க.

இதுவுமல்லாமல், மேற்சொன்ன பாடலைப் பார்த்தால், உலகத்திலே பிராமணர்கள் இல்லவே இல்லையென்று தீர்க்கவேண்டி வரும். காமமும் கோபமும் ஆசையும் பொய்யும் உள்ள பிராமணர்கள் சூத்திரராயிருக்கிறார்களேயொழிய, பிராமணர்களல்லவென்று அது சொல்லுகின்றது. ஆசையும் கர்வமும் இல்லாத பாப்பானை இதுவரையிலும் ஆர் கண்டிருக்கிறார்கள்?

---

## மூன்றாவது.

எந்தக் குலத்திலே பிறந்தாலும், நல்ல குணமுள்ளவனே பிராமணன்: கெட்ட குணமுள்ளவனே சூத்திரன்: என்று உங்கள் பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள். ஆகையினாலே ஒருவன் சாதிப் பிறப்பினாலே பிராமணனாகிறதில்லை.

---

சிறப்புஞ்சீலமுமல்லது பிறப்புநலந்தருமோ
பேதையீரே

என்று கபிலர் சொன்னார்.

பின்னும் விவரமாகக் கௌசிகமுனி சொல்லுகிறார்.

---

* இ—ள். பேதையீரே—மூடர்களே. சிறப்பும் — மேன்மையும். சீலமும்—ஆசாரமும். அல்லது—அல்லாமல். பிறப்பு—சென்மம். நலம்—நன்மையை. தருமோ—கொடுக்குமா. எ—று.

நல்லாப்பிள்ளை பாரதம்: ஆரணிய பருவம்:
கௌசிகச் சருக்கம்.

*நீதியுநெறியும்வாய்மையுமுலகி னிறுத்திஞேன்வேதியனன்றி
வேதியனேனுமிழுக்குறினவனை விளங்குசூத்திரனெனவேத
மாதவர்புகன்றாராதலாலுடல மாய்ந்தபின்பாவதோர்பொருளோ
கோதிலாயிந்தப்பிறவியில்வேதக் குரவனீயல்லையோகுறியாய்.
(௱உ௪.)

மகா முனியாகிய கௌசிகர் ஒரு வேடனைக் கண்டு விஞவினபோது, கேட்ட எல்லாக் கேள்விகளுக்கும் அந்த வேடன் தகுந்த உத்தரவு கொடுத்தபடியினாலே, அவனைப் பார்த்துச் சொல்லுகிறான்: குற்றமில்லாதவனே, நீதியையும் நல்வழியையும் உண்மையையும் காப்பாற்றி நடக்கிறவன் எவனோ, அவனே பிராமணன். ஒருவன் பிராமண குலத்திலே பிறந்தாலும், அந்த நல்ல குணங்களிலே தப்பினால், அவன் சூத்திரனேயல்லாமல், பிராமணனல்லவென்று வேதத்தைப் படித்த மகா இருஷிகள் சொல்லுகிறார்கள். ஆகையினாலே இந்தச் சரீரம் செத்தபின்பு, பிராமண குலத்திலே பிறக்கிறதாகச் சொல்லுகிறது மெய்யாகுமா? ஆகமாட்டாதே. நல்ல வேடனே! நீயே இந்தப் பிறப்பிலே பிராமணனாயிருக்கிறீரேயென்றார்.

*இ-ள். நீதியும் — நியாயத்தையும். நெறியும்—சன்மார்க்கத்தையும். வாய்மையும்—சத்தியத்தையும். உலகில்—உலகத்தில். நிறுத்திஞேன்—நிறுத்தினவனே. வேதியன்—பிராமணன். அன்றி — அல்லாமல். வேதியனேனும்—பிராமணனானாலும். இழுக்குறின்—இவைகளில் தப்பினால். அவனை—அவனை. விளங்கு—விளங்குகிற. சூத்திரனென—சூத்திர சாதியானென்று. வேதம்—வேதங்களை வாசித்த. மாதவர்—மகா ரிஷிகள். புகன்றார் — சொன்னார்கள். ஆதலால்—ஆகையால். உடலம்—சரீரம். மாய்ந்தபின்பு—இறந்தபின்பு. ஆவது—பிராமணனாவானென்பதில். ஓர்—ஒரு. பொருளோ—அருத்தமுண்டா. கோதிலாய்—குற்றமில்லாதவரே. நீ—நீ. இந்தப் பிறவியில்—இந்தச் சென்மத்தில். வேதக்குரவன்—வேதாசாரியன். அல்லையோ—அல்லவா. குறியாய்—யோசித்துப்பாரும். எ-று.

ஒருவன் பிராமண சாதியிலே சென்மித்தாலும், அவனிடத்திலே பொய்யும் வஞ்சனையும் இருந்தால், அவன் சூத்திரனே தவிர பிராமணனல்லவென்றும், ஒருவன் வேடசாதியிலே பிறந்தாலும், அவனிடத்திலே நல்ல குணமிருந்தால், அவனே பிராமணனாயிருக்கிறானென்றும்; கௌசிகர் சொன்னார். ஆகையினாலே பிராமணனுக்கு நல்ல குணம் இல்லாமற்போனால், அவனுடைய பிராமணத் தன்மை இல்லாமற்போகிறதென்றும், சூத்திரனுக்கு நல்ல குணம் உண்டானால், அவனுக்குப் பிராமணத் தன்மை உண்டாகிறதென்றும்; விளங்குகின்றது.(ச.)

உங்களில் பேர் பெற்ற வேறு அனேக வித்துவான்களும் சாஸ்திரிகளும் ஞானிகளும் அப்படியே சொல்லியிருக்கிறார்கள். வேமனர் சொன்னதைக் கேளுங்கள்.(ஞ.) ஒருவனுக்கு நல்ல குணமிருந்தால், அவனைச் சக்கிலியென்றும், பறையனென்றும் சொல்லாதே. வசிஷ்டமாமுனியானவர் சக்கிலிச்சியை விவாகஞ் செய்துகொள்ளவில்லையா? ஒருவனுக்குக் கெட்ட குணம் இருந்தால், அவனை எப்படிப் பிராமணனென்று சொல்லலாம்? அவனைப் பறையனென்றே சொல்லத் தகுமென்றார். இப்படியிருக்க, சாதிப் பிறப்பினாலே விசேஷம் ஒன்றும் இல்லை; ஒருவன் அதினாலே பிராமணனாகிறதில்லை என்பதே கிரமம்.

மேலும், பொய் சொல்லுகிற பிராமணன் பிராமணனல்லவென்று கௌசிகர் சொன்னாரே; அப்படியானால், உலகத்திலே பிராமணர்கள் இல்லையென்று நிதானிக்க வேண்டும். பொய் சொல்லாத பிராமணனை யார் கண்டான்? பிராமணர்களிலே பொய்யும் வஞ்சனையும் விஸ்தாரமாயிருக்கிறதென்று எல்லாரும் அறிவார்களே.

---

(ச.), (ஞ.) ௩௭௧, ௩௭௨-ம் பக்கங்களிலுள்ள சுலோகங்களையும் பாட்டையும் காண்க.

## நாலாவது.

### பிரமாவினுடைய முகத்திலிருந்து பிராமணன் பிறந்தானென்று சொல்லுகிறதற்கு ஒரு அடையாளமும் இல்லாததினலே, ஒருவன் சாதிப் பிறப்பினலே பிராமணனகிறதில்லை.

அப்படிப்பட்ட அடையாளத்தை எவ்வளவு தேடினலும், ஒன்றையும் காணேம். அனேக பிராமணரைப் பார்த்தால், பிராமணர்களென்று தெரியவே தெரியாது. வண்ணர், குசவர், முதலானவர்கள் பிராமணர்களைப்போலே வேஷம் போட்டுக்கொண்டு திரிந்தால், அவர்களும் சரியான பிராமணர்களைப் போலவே இருப்பார்களல்லவா? ஆகையினலே, பிராமணர்கள் பிரமாவினுடைய முகத்திலேயிருந்து பிறந்ததாக அடையாளம் எங்கே இருக்கிறது? அதெல்லாம் சும்மா வாய்ப் பேச்சல்லவா? அடையாளம் ஒன்றும் இல்லாதிருக்க, ஒருவன் சாதிப் பிறப்பினலே பிராமணனகிருனென்று சொன்னல், யார்தான் ஒத்துக்கொள்ளப் போகிருர்கள்? ஓ பிராமணர்களே, நீங்கள் மற்றவர்களைப் பார்த்து, நாங்கள் சுத்த சாதி, நீங்கள் அசுத்த சாதி; தீட்டுத் தீட்டு; எங்களைத் தீண்டாதே, அண்டாதே; என்று சொல்லுகிற கர்வம் என்னத்துக்கு? அது வீண் பெருமையும் அபத்தமுமாயிருக்கிறதல்லவா? நீங்கள் சொல்லுகிற தீட்டுக்கு மட்டு எது? அதற்குக் காரணம் எது? அதை எடுத்துக் காட்டுங்களேன். சரீரத்தின் ஒன்பது துவாரங்களுக்குள்ளே உண்டாகிற அழுக்கு எல்லா மனுஷர்களிடத்திலும் பொதுவாயிருக்கிறது. பிறக்கும்போதே அழுக்கும் தீட்டும் யாவ

ருக்கும் உண்டு, வேமனர் சொன்னது நிசமல்லவா?(௩.) மற்ற மனுஷர்களிடத்தில் இருக்கிற அசுத்தம் உங்களிடத்திலும் இருக்க, நீங்கள் ஏன் அவர்களைப் பார்த்து, பழித்து, தீட்டென்று கூவுகிறீர்கள்?

ஓ பிராமண குலத்தாரே, நீங்கள் உங்களை மற்ற மனுஷர்களிலும் பெரியவர்களென்று சொல்லிக்கொள்ளுகிறது உங்களுடைய கர்வத்துக்கும் ஆங்காரத்துக்கும் சரிவராமல் போனபடியினாலே, நீங்கள் உங்களைத் தேவர்களென்று சொல்லவும் துணிந்தீர்கள்.

நல்லாப்பிள்ளை பாரதம்: சாந்திபருவம்: வீடுமனைக் கண்ட சருக்கம்.

*தேசுபொருந்தும்வலிபொருந்துஞ் சேரார்த்துலைக்குமுறையுளவா
மாசுநீங்கும்புலனைந்துமுரைத்த வண்ணம்வழிபடுமால்
ஏசிலரசர்வாழ்வுவலி யெல்லாமுலகிலிருக்குணர்ந்த
பூசுரர்கடமாசிதரு புணர்ப்பென்றுணர்திபுகழ்மிக்கோய். (உம்.)

பிராமணர்கள் பூமிக்குத் தேவர்களாயிருக்கிறார்களென்றும்; அந்தப் பிராமணர் செய்கிற ஆசீர்வாதத்தினாலேதான்

* இ-ள். தேசு—புகழ்ச்சியும். பொருந்தும்—சேரும். வலி—வல்லமையும். பொருந்தும்—சேரும். சேரார்—பகைவர்களை. துலைக்கும் — அழிக்கும். முறை — கிரமமும். உளவாம் — உண்டாகும். மாசு — மனக்குற்றமும். நீங்கும்—போகும். புலனைந்தும்—ஐம்புலன்களும். உரைத்தவண்ணம்—சொன்னபடி. வழிபடும்—வேலையுஞ் செய்யும். (மேலும்) ஏசு—குற்றம். இல்—இல்லாத. அரசர்—அரசர்களுடைய. வாழ்வு — செல்வமும். வலியெல்லாம் — வல்லமையுமாகிய மற்றெல்லாம். உலகில்—உலகத்தில். இருக்கு-இருக்குவேதத்தை. உணர்ந்த — அறிந்த. பூசுரர்கள் தம்—பிராமணர்களுடைய. ஆசி—ஆசீர்வாதம். தரு—தருகின்ற. புணர்ப்பென்று—செய்கையென்று. புகழ்மிக்கோய்—மிகுந்த புகழையுடையவனே. உணர்தி—நீயறிவாய். எ-று.

(௩.) ௩௭௩, ௩௭௪-ம் பக்கங்களிலுள்ள பாட்டுகளைக் காண்க.

இராசாக்களுக்குக் கீர்த்தியும், வல்லமையும், சத்துருக்களை அழிக்கிற திறமையும், குற்ற நிவிர்த்தியும், பஞ்சேந்திரிய அடக்கமும், சமஸ்தமான வாழ்வும் உண்டாகுமென்றும்; இந்தப் பாட்டிலே சொல்லியிருக்கிறது.

ஓ பாப்பாரே, இதை வாசிக்கவே, மெத்தவும் அதிசயமா யிருக்கிறது. எல்லாச் சத்துருக்களையும் நாசப்படுத்துகிற திராணி உங்கள் கையில் இருந்தால், நீங்கள் வெகு வருஷ காலமாய், முதல் துலுக்கனுக்கும், பின்பு வெள்ளைக்காரனுக் கும், அடங்கிப்போனதெப்படி? மற்ற மனுஷர்களுக்குச் சகல வல்லமையும் உங்களாலே வந்தால், உங்களுக்குள்ளே அனேகர் பலவிதத்திலும் ஈனமும் ஊனமும் அடைந்து குறைவுபட்டுப் போவதெப்படி? இராசாக்களுக்கு மன அட க்கமும் குற்ற நிவிர்த்தியும் உங்களாலே உண்டானால், உங் களில் வெகுபேர் குற்றஞ் செய்து அந்த இராசாக்கள் செலுத் துகிற தண்டனைக்கு ஆளாகி, விலங்குக்கும் தூக்கு மரத்துக் கும் இரையாகிறதெப்படி? மற்ற மனுஷர்களுக்குச் சமஸ் தமான வாழ்வும் உங்களாலே கிடைத்தால், உங்களில் பலர் வயிற்றுக்குப் பிச்சை எடுக்கிறதெப்படி? உங்களில் அனே கர் குஷ்டரோகத்தையும் வேறு பல பல கெட்ட வியாதிக ளையும் அடைகிறதெப்படி? நீங்கள் பூமிக்குத் தேவர்களா யிருந்தால், உங்களில் அனேகம்பேர் துரைகளுடைய கச் சேரியிலே பணிவோடே சேவகம்பண்ணுகிறதெப்படி? இவ் விதமாய் நீங்கள் உங்களைப் பெருமையாகப் பாராட்டுகி றது பசியாமலிருக்க மருந்து கொடுக்கிறேன் பழையதிருந் தாற் போடென்பதுபோல, வீணான பிதுக்கல்லவா? இது எல்லாரும் நகைக்கத்தக்க சங்கதியல்லாமல், நம்பும்படியான தல்லவே. உங்களுக்கும் மற்ற மனுஷர்களுக்கும் பேதம் இல்லையே.

ஓ பிராமணரே, நீங்கள் கொண்டிருக்கிற மயக்கத்தை விட்டு மனந்தெளியுங்கள். சமஸ்தமான மனுஷர் ஒத்த

சாதியேயொழிய, பிறப்பினாலே சாதியுயர்வுமில்லை, சாதித் தாழ்வுமில்லையென்று அறியுங்கள்.(ஏ) மற்றெல்லா மனுஷ ரைப் போலவே, நீங்களும் பாபாத்துமாக்களாயிருக்கிறீர்க ளென்று உணருங்கள். உங்கள் பாவம் நிவாரணமாகாவிட் டால், நரகத்திலே விழுவீர்களென்று தெரியுங்கள். உங் கள் பாவம் தொலையவும், உங்களுக்கு மோட்சகதி கிடைக் கவும் தகுந்த சத்திய மார்க்கத்தைத் தேடுங்கள்.

பாவ நிவாரண மார்க்கம் உலகத்திலே ஒன்றே உண்டு. அந்த மார்க்கத்தை உண்டாக்கினவர் இயேசுக்கிறிஸ்து என்று சொல்லப்பட்டவர். அவரே சகல புவன கர்த்தரானவர். அவர் உங்களையும், மற்றெல்லா மனுஷர்களையும் சிருஷ்டித் தார். அவர் உங்களுக்காகவும், மற்றெல்லா மனுஷர்களுக் காகவும், பூமியிலே வந்து அவதரித்தார். முப்பத்து மூன்று வருஷம் இவ்வுலகத்திலே சஞ்சரித்தார். சனங்களுக்கு மெய் யுபதேசத்தைப் போதித்தார். தாம் போன இடங்கள் தோ றும் வியாதிகளையும் நோவுகளையும் தீர்த்தார். பேய்களையும் பிசாசுகளையும் பறக்கடித்தார். செத்தவர்களையும் பிழைப் பித்தார். பாவமில்லாத அவர் உலகத்தாருடைய பாவங்க ளைத் தமது மேலே எடுத்தார். அந்தப் பெரிய சுமையைச் சர்வவல்லவராகிய அவர் பொறுத்தார். மனுஷருடைய பா வங்களைத் தொலைக்கும்படி மிகுந்த அவஸ்தைகளைச் சகித் தார். அதற்காகச் சிலுவைமரத்திலே அறையப்பட்டு மரித் தார். மூன்றும் நாளிலே மறுபடியும் உயிர்த்தார். தம் மைப் பற்றிக்கொள்ளுகிறவர்களுடைய பாவங்களை இவ்வி தமாய்க் கழித்தார். அவர்கள் படவேண்டிய நரக தண்ட னைக்கு ஈடான தண்டனையை அவர் தம்மேலே தரித்தார். அவர் மரித்து, உயிர்த்து, திரும்பி மோட்சலோகத்துக்குப் போனார். அங்கே சர்வலோகாதிபதியாய் ஆளுகிறார். இவ் வுலகத்தில் உயிரோடே இருக்கும்போது எவன் தன்னு

(ஏ.) ௩௭௪-ம் பக்கத்திலுள்ள சுலோகத்தைக் காண்க.

டைய பாவ நடத்தைகளைத் தள்ளிவிட்டு, அந்த இயேசுக் கிறிஸ்துவை விசுவாசித்து, அவருடைய வார்த்தையின்படி நடக்கிறானோ, அவனை அந்த இயேசுக்கிறிஸ்து இரட்சித்து மோட்சலோகத்திலே தம்மோடே என்றென்றைக்கும் இருக்கும்படி சேர்ப்பார். யார் அவரை விசுவாசியாமற் போகிறார்களோ, அவர்களெல்லாரும் நித்திய நரகலோகத்திலே தள்ளப்படுவார்கள்.

ஓ பிராமணர்களே, உங்கள் குலத்தான் ஒருவனுடைய சரித்திரத்தை உங்களுக்குச் சொல்லுகிறோம். அது நல்ல சரித்திரம். நன்றாய் அதைக் கேளுங்கள்.

வடக்குத் தேசத்திலே சகநாதன் கோவில் என்று சொல்லப்பட்ட ஒரு ஸ்தலம் உண்டு. இந்த இந்தியா தேசத்திலே எந்தத் திக்கிலுமிருந்து வெகு சனங்கள் அந்த ஸ்தலத்துக்கு யாத்திரையாய்ப் போகிறார்கள். சில வருஷங்களுக்கு முன்னே அவ்விடத்திலே கங்காதரன் என்று பேர்கொண்ட ஒரு பிராமணன் வாசமாயிருந்தான். அந்தப் பெரிய கோவிலிலே இருக்கிற சகநாத விக்கிரகமே தெய்வமென்று அந்தப் பிராமணன், ஒரு சமுசயமுமில்லாமல், பூரணமாய் நம்பி, அதைப் பூசித்துக்கொண்டுவந்தான். ஒரு நாள், கிறிஸ்து மார்க்கத்தைத் தெரிவிக்கிற ஒரு சிறு புஸ்தகத்தை அவன் வாங்கிப் படித்தான். அதிலே சகநாத விக்கிரகம் தெய்வமல்லவென்றும், விக்கிரக பூசையெல்லாம் வீணென்றும், கண்டிருந்தது. அதைப் படிக்கவே, அந்தப் பிராமணனுக்குக் கோபம் மூண்டது. நானும் என் முன்னோர்களும் கும்பிட்ட இந்த விக்கிரகம் தெய்வமல்லவென்று சொல்லுகிறார்களா? அது எப்படிப்பட்ட பேச்சு? என்று மூர்க்கங்கொண்டான். ஆனாலும், அந்தச் சின்னப் புஸ்தகத்திலே சொல்லியிருந்த நியாயங்களை அவன் சிந்திக்க, சிந்திக்க, அவனுடைய மனசிலே சந்தேகம் பிறந்தது. பின்னும் அதை வாசித்தான்: பின்னும் அதை யோசித்தான். கடவுளே, எனக்குச் சத்தியத்தை வெளிப்படுத்தியருளுமென்று பிரார்த்தனையும் செய்தான். நாளுக்

குநாள் அவனுடைய நெஞ்சிலே சமுசயம் பெருகிக்கொண்டே வந்தது. மிகுந்த துக்கத்திலே அமிழ்ந்தினுன். ஆற்றிலே, துறை தெரியாமல், விழுந்து கரை காணுதவன்போலே இருந்தான். கர்த்தராகிய இயேசுக்கிறிஸ்து உலகத்திலே செய்த தயவையும் பாவிகளுக்காகப் பட்ட பாடுகளையும் அவன் நினைத்தான். அது அவனுடைய இருதயத்திலே தைத்த ஒரு அம்பைப்போல இருந்தது. நான் கும்பிட்ட விக்கிரகம் என் பாவத்தை நீக்கமாட்டாதே, என் ஆத்துமாவுக்கு ஒரு லாபமும் செய்யாதே, புண்ணிய குருவான இயேசுக்கிறிஸ்து என்னை நேசித்து வந்து, என் உயிருக்காகத் தம்முயிரைத் தந்த தயாளராயிருக்கிருரே என்று தினந்தோறும் எண்ணியெண்ணி வந்தான். இவ்விதமாய் அவன் அந்தப் பக்கத்திலும் இந்தப் பக்கத்திலும் ஒரு நிலையில்லாமல் ஆடி, சஞ்சலப்பட்டுக்கொண்டிருக்கும்போது ஒரு நாள் ஒரு நிச்சயம் பண்ணிக்கொண்டான். துப்பாக்கியின் இருப்புச் சலாகை ஒன்று அவன் வாங்கிக்கொண்டு, அதின் நுனியைக் கூராக்கி, தான் செய்யப் போகிறதை ஒருவனுக்கும் சொல்லாமல், சூரியன் அஸ்தமித்து இருண்ட பின்பு ஒருவரும் தன்னைக் காணுதபடி, ஒதுங்கி, பதுங்கி, இரகசியமாய் அந்தப் பெரிய கோவிலுக்குள்ளே மெள்ள புகுந்து, உள்ளுக்குள்ளான இடத்திலே நுழைந்து, அங்கே குந்தியிருக்கிற விக்கிரகத்துக்குப் பின் பக்கத்திலே சேர்ந்து நின்முன். இதினுடைய வல்லமையைச் சோதிப்போம்: இது தெய்வமோ கட்டையோ அறிவோம்: எல்லாச் சந்தேகத்தையும் அறுப்போம்; செத்தாலும் இந்தச் சமுசயத்தையும் விசனத்தையும் இனி சகிக்கமாட்டோமென்று உறுதியான எண்ணங்கொண்டான். பின்பு இருப்புக் கோலையும் தூக்கினுன். அப்போது பெரிய பயம் அவனைப் பிடித்தது. இந்தச் சகநாத விக்கிரகத்தைத் தெய்வமென்று நம்பி என் பெற்ருர், உற்ருர், பெரியோரெல்லாம் வணங்கினுர்களே; எனக்கும் அப்படிச் செய்யப் போதித்தார்களே; அவர்கள் சொன்னது

மெய்யானால், என்னை ஒரு நொடியிலே நாசப்படுத்துமே என்று நினைத்து, உடம்பெல்லாம் நடுநடுங்கி, வேர்த்து, சிலிர்த்து, மனமும் திடுக்கிட்டு, அச்சத்தோடே நின்றான். எப்படியும் சந்தேகம் நிவிர்த்தியாக வேண்டுமென்று தன்னைப் பின்னுந் தைரியப்படுத்திக்கொண்டு, சலாகையை ஓங்கி, சகநாதனுக்கு ஒரு பலத்த குத்து குத்தினான். சகநாதன் எப்போதும்போலே சும்மா இருந்தான். அசையவுமில்லை, கூச்சலிடவுமில்லை, ஏன் குத்துகிறாயென்று விசாரிக்கவுமில்லை. அப்போது அந்தப் பிராமணன் மயக்கந் தீர்ந்து, மனந்தெளிந்தான். சகநாதனை எந்தப் பக்கத்திலும் சுற்றிச் சுற்றி, குத்திக் குத்தி, அடித்துதைத்து, இது கட்டையல்லாமல் தெய்வமல்லவென்று மனரம்மியப்பட்டு, கோவிலை விட்டு வெளியே வந்து, இனிமேல் இயேசுக்கிறிஸ்துவே தேவனும் குருவுமாயிருக்கிறாரென்று புதிய பத்தி அடைந்து, பின்பு மகிழ்ச்சியுடன் கிறிஸ்துமார்க்கத்திலே சேர்ந்தான். கிறிஸ்து வேதத்தை எங்கும் பிரசித்தம்பண்ணி, அனேக சனங்களுக்குச் சத்தியத்தைக் காட்டி, அவர்களும் அஞ்ஞானத்தை விட்டு இரட்சகராகிய இயேசுவைப் பற்றிக் கொள்ளும்படி செய்தான்.

ஓ பிராமணர்களே, நீங்களும் அப்படியே உங்கள் விக்கிரக பூசைகளையும், பொய்யான மதங்களையும், வீணான குலாசாரங்களையும், பொல்லாத கர்வங்களையும், பதரென்றும் குப்பையென்றும் கைவிட்டு, லோகரட்சகராயிருக்கிற இயேசுக்கிறிஸ்துநாதரைப் பற்றிக்கொள்ளுவீர்களாக.



# உ ப க்ர ந் த ம்.

## APPENDIX TO NO. XIII.

### முன் சொன்னவைகளுக்குச் சில உதாரணங்கள்.

(க.) பிராமணன் முதன்மையுள்ளவனென்பது.

ఉత్తమాంగోద్భవాజ్ జ్యైష్ఠ్యాద్ బ్రాహ్మణశ్చైవధారణాత్
సర్వస్యైవాస్యసర్గస్య ధర్మతో బ్రాహ్మణఃప్రభుః.

மனு. க: கூ௩.

#### இதன் பதவுரை.

ఉత్తమాంగోద్భవాత్—உத்தம அங்கமான (முகத்திற்) பிறந்ததினுலும். జ్యైష్ఠ్యాత్—முந்திப் பிறந்ததினுலும். బ్రాహ్మణః—வேதத்தை. ధారణాచ్చైవ—தரித்திருப்பதினுலேயும். అస్య—இந்த. సర్వస్యైవ సర్గస్య—சிருஷ்டிக்கெல்லாம். బ్రాహ్మణః—பிராமணன். ధర్మతః—நியாயத்தின்படி. ప్రభుః—அதிபதியாயிருக்கிருன்.

#### கருத்துரை.

பிராமணன் முகத்தில் உற்பவித்ததினுலும், முந்திப் பிறந்ததினுலும், வேதத்தைத் தரித்திருப்பதினுலும், நியாயத்தின்படி உலகத்துக்கெல்லாம் பிரபுவாயிருக்கிருன்.

(உ.) பிராமணத்துவம் பிறப்பினுலாகிறதில்லை என்பதற்குச் சில திருஷ்டாந்தங்கள்.

చండాలీగర్భసంభూతో విశ్వామిత్రో మహామునిః
తపసా బ్రాహ్మణో జాత స్తస్మాజ్జాతిరకారణం
తాంబూలీగర్భసంభూతో నారదోహి మహామునిః
తపసా బ్రాహ్మణో జాత స్తస్మాజ్జాతిరకారణం
నచతే బ్రాహ్మణీపుత్రా స్తేచలోకస్య బ్రాహ్మణాః
శీలశౌచమయో బ్రహ్మ తస్మాజ్జాతిరకారణం
శీలంప్రధానం నకులంప్రధానం
కులేనకింశీలవివర్జితేన.

இதன் பதவுரை.

చండాలీగర్భసంభూతః — சண்டாளப்பெண்ணின் வயிற்றிற் பிறந்த. విశ్వామిత్రః — விசுவாமித்திரனென்கிற. మహామునిః—மகா முனிவர். తపసా — தவத்தினுல். బ్రాహ్మణః—பிராமணன். జాతః—ஆனுன். తస్మాత్—ஆதலால். జాతిః—சாதியானது. అకారణం—காரணமல்ல. తాంబూలీగర్భసంభూతః — வெற்றிலைக் கொடியின் வயிற்றிற் பிறந்த. నారదః — நாரதரென்கிற. మహామునిః — மகா முனிவர். తపసా—தவத்தினுல். బ్రాహ్మణో జాతః—பிராமணனுனுன். తస్మాత్—ஆதலால். జాతిః—சாதி. అకారణం—காரணமல்ல. తే—அவர்கள். నచబ్రాహ్మణీపుత్రాః—பார்ப்பாத்தியின் மக்களல்லாதவர்க (ளாயிருந்தும்). తేచ—அவர்களும். లోకస్య—உலகத்துக்கு. బ్రాహ్మణాః—பிராமணர்களாயிருக்கிருர்கள். శీలశౌచమయః—நற்குணமும் சுத்தியுமுள்ளவனே. బ్రహ్మ — பிராமணன். తస్మాత్ — ஆதலால். జాతిః అకారణం—சாதிகாரணமல்ல. శీలం—நன்னடக்கை. ప్రధా

నం—முக்கியமானது. కులం — குலமானது. నప్రధానం — முக்கிய மானதல்ல. శీలవివర్జితేన—நல்லொழுக்கமில்லாத. కులేన—குலத்தி னால். కిం—என்ன பயன்.

### கருத்துரை.

சண்டாளப் பெண்வயிற்றிற் பிறந்த விசுவாமித்திரனும், வெற்றிலைக் கொடியின் வயிற்றிலே பிறந்த நாரதனும், தவத்தின் மகிமையினாலே பிராமணரானார்கள். இப்படிப் பிராமணத்தியின் மக்களல்லாதவர்கள் பிராமணரானதனால் சாதி உயர்வுக்குக் காரணமாகமாட்டாது. நற்குண நற்செய்கைகளுள்ளவனே பிராமணன். ஒழுக்கம் முக்கியமேயன்றி, குலம் முக்கியமல்ல. ஒழுக்கமில்லாத குலம் உயர்வாக மாட்டாதென்பது தாற்பரியம்.

### (௩.) கபிலரும் திருவள்ளுவரும் பறைச்சிகளிடத்தில் பிறந்தார்களென்பது.

அருந்தவமாமுனி யாம்பகவற்குக்
  கருவூர்ப்பெரும்பதிக் கட்பெரும்புலைச்சி
ஆதிவயிற்றினி லன்றவதரித்த
  கான்முளையாகிய கபிலனும்யானே
தொண்டைமண்டலத்தில் வண்டமிழ்மயிலைப்
  பறையரிடத்தில் வள்ளுவர்வளர்ந்தனர்.

கபிலரகவல்.

### இதன் பதவுரை.

அரு—செய்தற்கரிய. தவம்—தவத்தையுடைய. மா—பெருமை பொருந்திய. முனியாம்—முனியாகிய. பகவற்கு—பகவனென்னும் பிராமணனுக்கு. கருவூர்—கருவூராகிய. பெரும்பதிக்கண்—பெரியவூரில் (இருந்த). பெரும்—பெரிய. புலைச்சி—பறைச்சியாகிய. ஆதி—ஆதியென்பவளுடைய. வயிற்றினில்—வயிற்றிலிருந்து. அன்று—அக்காலத்தில். அவதரித்த—பிறந்த. கான்முளை

யாகிய — பிள்ளையாகிய. கபிலனும் — கபிலனென்பவனும். யானே — நானே. தொண்டைமண்டலத்தில் — தொண்டைமண்டலமென்னும் தேசத்தில் (இருக்கிற). வண் — வளப்பம் பொருந்திய. தமிழ் — தமிழ்ப்பாஷைக்குரிய. மயிலை — மயிலாப்பூரில். பறையரிடத்தில் — பறையரிடத்திலே. வள்ளுவர் — திருவள்ளுவர். வளர்ந்தனர் — வளர்ந்தார்.

### கருத்துரை.

பறைச்சி வயிற்றிற் பிறந்த கபிலரும் திருவள்ளுவரும் உலகிற் சிறந்து விளங்கினார்கள் என்பதாம்.

## (௪.) மீன் உப்பு முதலானவைகளை விற்பதினாலே பிராமணத்துவம் அழியுமென்பது.

సద్యఃపతతిమాంసేన లాక్షయాలవణేనచ
త్ర్యహేణశూద్రోభవతి బ్రాహ్మణఃక్షీరవిక్రయాత్.

மனு. ௰: ௯௨.

### இதன் பதவுரை.

బ్రాహ్మణః — பிராமணன். మాంసేన — மாமிசத்தை விற்பதினாலேயும். లాక్షయా — இலாட்சை (யென்னும் ஒருவித சாயவஸ்துவை விற்பதினாலேயும்). లవణేనచ — உப்பு (விற்பதினாலேயும்). సద్యఃపతతి — அப்போதே விழுகிறான். క్షీరవిక్రయాత్ — பாலை விற்பதினால். త్ర్యహేణ — மூன்று தினங்களுக்குள்ளே. శూద్రోభవతి — சூத்திரனாகிறான்.

### கருத்துரை.

பிராமணன் மாமிசத்தையும், அரக்கையும், உப்பையும் விற்கிற மாத்திரத்திலேயே பதிதனாகிறான். பாலை விற்பானானால், மூன்று நாளுக்குள்ளே சூத்திரனாகிறான்.

## (ரு.) நல்லொழுக்கமே பிராமணத்துவமென்பது.

శూద్రోఽపిశీలసంపన్నో గుణవాన్ బ్రాహ్మణోభవేత్
బ్రాహ్మణోఽపిక్రియాహీన శ్శూద్రా త్ప్రత్యపరోభవేత్.

பாரதம்.

### இதன் பதவுரை.

శూద్రోఽపి—சூத்திரனும். శీలసంపన్నః — நன்னடக்கையுடையவனும். గుణవాన్— நற்குணமுள்ளவனும். (இருப்பானாகில்) బ్రాహ్మణః—பிராமணன். భవేత్—ஆவான். బ్రాహ్మణోఽపి—பிராமணனும். క్రియాహీనః—நற்கிரியைகளில்லாதவனானால். శూద్రాత్—சூத்திரனிலும். ప్రత్యపరః—தாழ்ந்தவன். భవేత్—ஆவான்.

### கருத்துரை.

சூத்திரனானாலும் நல்லொழுக்கமும் நற்குணமுமுள்ளவனானால், பார்ப்பானாவான். பார்ப்பானானாலும் நற்கிரியைகளைச் செய்யாமற்போனால் சூத்திரனிலும், தாழ்ந்தவனாவான்.

## (௬.) இதுவுமது.

నకులేననజాత్యావా క్రియాభిర్బ్రాహ్మణోభవేత్
చండాలోఽపిహివృత్తస్థో బ్రాహ్మణస్సయుధిష్ఠిర. பாரதம்.

### இதன் பதவுரை.

యుధిష్ఠిర — ஓ தருமராசனே. కులేన — குலத்தினாலே. బ్రాహ్మణః—பிராமணன். నభవేత్— ஆகமாட்டான். జాత్యావా—சாதியி

னாலேயாவது. నభవేత్ — பிராமணனாகமாட்டான். క్రియాభిః— செய்கைகளினால். బ్రాహ్మణో నభవేత్ — பிராமணனாகமாட்டான். చండాలోఽపి—சண்டாளனானாலும். వృత్తస్థః—நல்லொழுக்கமுள்ளவ(னாயிருந்தால்). సః—அவன். బ్రాహ్మణః—பிராமணன்.

### கருத்துரை.

குலத்தினாலும், சாதியினாலும், கிரியைகளினாலும், ஒருவன் பிராமணன் ஆகமாட்டான். சண்டாளனானாலும், நல்லொழுக்கமுள்ளவனாயிருந்தால் பிராமணனாவான்.

## (எ.) ஒருவனுக்கு நல்ல குணமிருந்தால் அவனைச் சக்கிலியென்று சொல்லலாகாதென்பது.

మాదిగయనవద్దుమరిగుణమొనరిన
మాదిగనివసిష్ఠుమగువదేడె
మాదిగగుణమున్న మరిద్విజుడగునయా
విశ్వదాభిరామవినరవేమ. வேமனர். ௩: ௨௨௧.

### இதன் பதவுரை.

మరిగుణమొనరిన—(ஒருவனிடத்தில்) நல்லகுணம் இருந்தால். మాదిగయనవద్దు—(அவனை) சக்கிலியென்று சொல்லவேண்டாம். వసిష్ఠు—வசிஷ்டன் (என்னும் பிராமணன்). మాదిగని — சக்கிலிச்சியான. మగువ—ஸ்திரீயை. దేడె — கொள்ளவில்லையா. మాదిగ— சக்கிலியின். గుణమున్న — குணம் (ஒருவனிடத்தில்) இருந்தால். మరిద్విజుడగునయా.— (அவன்) பாப்பானாவான். విశ్వదాభిరామ — ஆண்டவருக்குப் பிரியமான. వేమ—ஓ வேமனரே. వినర—கேள்.

## கருத்துரை.

நல்ல குணமுள்ளவர்களே உயர்ந்த குலத்தாராயிருக்கிறார்கள்.

(அ.) பிறக்கும்போதே சமஸ்த சாதியாரும் சரிசமானமுள்ளவர்களென்பது.

కులము హెచ్చుతగ్గు లెంచవలపనిలేదు
సానుజాతమయ్యె సకలకులము
హెచ్చుతగ్గుమాటలెట్లెరుంగగవచ్చు
విశ్వదాభిరామ వినర వేమ. வேமனர். ௩: ௨௨௫.

## இதன் பதவுரை.

కులము—குலத்தின். హెచ్చుతగ్గులెంచవలు—மேன்மையும் தாழ்மையும் குறித்து உண்டாகிற தர்க்கங்கள். పనిలేదు—வேண்டியதில்லை. సకలకులము — எல்லாச் சாதிகளும். సానుజాతమయ్యె — சரிசமானமாகவே பிறந்தன. హెచ్చుతగ్గుమాటలు—மேல் கீழ் என்கிற பேச்சுகளை. యెట్లెరుంగగవచ్చు—எப்படியறியலாம். విశ్వదాభిరామ—ஆண்டவருக்குப் பிரியமான. వేమ—ஓ வேமனரே. వినర—கேள்.

## கருத்துரை.

சாதி வித்தியாசங்களைக் குறித்து விசாரிக்கத் தேவையில்லை. எல்லாச் சாதிகளும் சரியாகவே பிறந்தன. இது உயர்ந்ததென்றும் இது தாழ்ந்ததென்றும் எப்படிப் பகுத்தறியலாம்?

(௯.) பிறக்கும்போதே அழுக்கும் தீட்டும் யாவருக்குமுண்டென்பது.

ముట్టుముట్టనుచునుముట్టరాదందురు
ముట్టుకుదరియేమిమూలమేమి
నవబిలములమురికినరులకందరకును
పుట్టగానెపుట్టుముట్టువేమ. வேமனர். ௩: ௱௰௧.

இதன் பதவுரை.

ముట్టుముట్టనుచును—தீட்டு தீட்டு என்று சொல்லி. ముట్టరాదు—தீண்டாதே. అందురు—என்பார்கள். ముట్టుకు—தீட்டுக்கு. దరియే మి—அந்தமென்ன. మూలమేమి—ஆதி என்ன. నరులకందరకును—மனுஷரெல்லாருக்கும். నవబిలములమురికి — நவத்துவாரங்களிலிருக்கிற அழுக்கு (என்னும்). ముట్టు— தீட்டு. పుట్టగానె—(அவர்கள்) பிறக்கும்போதே. పుట్టు—கூடப்பிறக்கும். వేమ — ஓ வேமனரே.

கருத்துரை.

தீட்டு தீட்டென்று தீண்டக் கூடாதென்பார்கள். தீட்டுக்கு ஆதியென்ன? அந்தமென்ன? நவத்துவாரங்களிலிருந்து வரும் அழுக்கானதே தீட்டு, பிறக்கும்போதே அதுவும் பிறக்கும்.

(௰.) பிராமணத்துவம் சாஸ்திரம் சடங்கு முதலானவைகளால் உண்டாகிறதில்லை என்பது.

బ్రాహ్మణత్వంనశాస్త్రేణ నసంస్కారైర్నజాతిభిః
నకులేననవేదేన కర్మణానభవేత్తతః.

### இதன் பதவுரை.

తతః—ஆதலால். బ్రాహ్మణత్వం — பிராமணத் தன்மையானது. శాస్త్రేణ — சாஸ்திரத்தினால். నభవేత్—ஆகிறதில்லை. నసంస్కారైః—சடங்குகளினால் ஆகிறதில்லை. నజాతిభిః—பிறப்புகளினால் ஆகிறதில்லை. నకులేన—குலத்தினால் ஆகிறதில்லை. నవేదేన—வேதத்தினால் ஆகிறதில்லை. నకర్మణా—கருமத்தினால் ஆகிறதில்லை.

### கருத்துரை.

பிராமணத்தன்மையானது சாஸ்திரத்தினாலாவது, சடங்குகளினாலாவது, பிறப்புகளினாலாவது, குலத்தினாலாவது, வேதத்தினாலாவது, கருமத்தினாலாவது ஆகிறதில்லை.



பதினுன்காவது.

# பலபொருள் மஞ்சரி.

---

## No. XIV.

# VARIOUS TOPICS.

# பலபொருள் மஞ்சரி.



## STREET OPPONENTS.

### குதர்க்கம் பண்ணுகிறவர்களைக் குறித்துச் சொல்லியது.



### க—வது. பயனற்ற சோற்களோடே தருக்கமாடுகிறவன்.

*சொல்லுகசொல்லிற் பயனுடையசொல்லற்க*
*சொல்லிற்பயனிலாச் சொல்.* குறள். உ௰: ௰.

இதன் பதவுரை.

*சொல்லில்—சொற்களிலே. பயனுடைய—பிரயோசனமுடைய சொற்களை. சொல்லுக—சொல்லக்கடவர். சொல்லில்—சொற்களில். பயனிலா—பிரயோசனமில்லாத. சொல்—சொற்களை. சொல்லற்க—சொல்லாதிருக்கக்கடவர்.* எ—று.

கருத்துரை.

*பயனுள்ள சொற்களைச் சொல்லி, பயனில்லாத சொற்களை விடவேண்டும் என்பதாம்.*

## ௨—வது. வீம்போடே தருக்கமாடுகிறவன்.

**அறிவுள்ளவனுயிருக்கிறேனென்கிற அகங்காரமே அறிவின்மை.**

*வெண்மையெனப்படுவ தியாதெனினொண்மை*
*யுடையம்யாமென்னுஞ் செருக்கு.* குறள். அ௫: ௪.

### இதன் பதவுரை.

வெண்மையெனப்படுவது—அறியாமையென்று சொல்லப்படுவது. யாதெனின்—எதுவென்ருல். யாம்—நாம். ஒண்மையுடையம்—அறிவுடையவர்களாயிருக்கிறோம். என்னும்—என்று நினைக்கிற. செருக்கு—அகங்காரமாம். எ—று.

### கருத்துரை.

அறிவுள்ளவர்களாயிருக்கிறோமென்கிற அகங்காரமே அறியாமையாம்.

**பெரியோர் தாழ்ந்து நடப்பார்கள்: சிறியோர் தங்களைச் சிறப்பித்துக்கொள்வார்கள்.**

பணியுமாமென்றும் பெருமைசிறுமை
யணியுமாந்தன்னை வியந்து. குறள். ௯அ: அ.

### இதன் பதவுரை.

பெருமை—பெரியோன். என்றும்—எப்போதும். பணியும்—தாழ்ந்து நடப்பான். சிறுமை—சிறியோன். தன்னை—தன்னை. வியந்து—மெச்சி. அணியும்—சிறப்பித்துக்கொள்வான். எ—று.

### கருத்துரை.

பெரியோர் எப்போதும் அடங்கி நடப்பார்கள். சிறியோர் கர்வித்து நடப்பார்கள் என்பதாம்.

## ௩—வது. கோபத்தோடே தருக்கமாடுகிறவன்.

### (க.) கோபத்தினலே தீமைகளுண்டாகும்.

#### அது மகிழ்ச்சியைக் கெடுக்கும் பகை.

*நகையுமுவகையுங் கொல்லுஞ்சினத்திற்*
*பகையுமுளவோ பிற.* குறள். ௩௧: ௪.

#### இதன் பதவுரை.

*நகையும்—முகமலர்ச்சியையும். உவகையும் — மனமகிழ்ச்சியையும். கொல்லும்—கெடுத்துவருகிற. சினத்தின்—கோபத்தைப்பார்க்கிலும். பிற — வேருகிய. பகையும்—பகையும். உளவோ — உண்டோ.* எ-று.

#### கருத்துரை.

கோபத்தைப்பார்க்கிலும் பகை வேறில்லை என்பதாம்.

#### அது உன்னைக் கொல்லும்.

*தன்னைத்தான்காக்கிற் சினங்காக்ககாவாக்காற்*
*றன்னையேகொல்லுஞ் சினம்.* குறள். ௩௧: ௫.

#### இதன் பதவுரை.

*தன்னை—(ஒருவன்) தன்னை. தான்—தான். காக்கில்—துன்பம் வராமற் காக்க நினைத்தானகில். சினம்—கோபத்தை. காக்க—வராமற் காக்கக்கடவன். காவாக்கால்—காக்காமற்போனல். சினம்—அக்கோபமானது. தன்னையே—தன்னையே. கொல்லும் — கெடுக்கும்.* எ-று.

#### கருத்துரை.

*தன்னைக் காக்க விரும்புகிறவன் கோபம் வராமற் காக்கக்கடவன் என்பதாம்.*

அதினாலே குணம் கெடும்: நரகமும் கிடைக்கும்.

కోపముననునరకకూపముజెందును
కోపముననుగుణముకొంచెమగును
కోపముననుబ్రతుకుకొంచెమైపోవును
విశ్వదాభిరామవినరవేమ. வேமனர். ௩: ௬௰.

## இதன் பதவுரை.

కోపమునను—கோபத்தினாலே. నరక—நரகமென்கிற. కూపము—குழி. జెందును—கிடைக்கும். కోపమునను—கோபத்தினாலே. గుణము—குணம். కొంచెమగును—குறையும். కోపమునను—கோபத்தினாலே. బ్రతుకు—ஆயுள். కొంచెమైపోవును — குறைந்துபோகும். విశ్వదాభిరామ—ஆண்டவருக்குப் பிரியமான. వేమ—ஓ வேமனரே. వినర—கேள். எ—று.

## கருத்துரை.

கோபமாவது நரகத்தை அடையச் செய்யும், குணத்தையும் ஆயுளையும் குறைக்கும் என்பதாம்.

## (உ.) கோபம் கொள்ளாதே என்கிற எச்சரிப்புகள்.

பகைவர் சொல்லும் இனிய சொல்லைப்பார்க்கிலும், சிநேகிதர் சொல்லும் கடுஞ்சொல்லே நன்மை.

*காதலார்சொல்லுங் கடுஞ்சொல்லுவந்துரைக்கு*
*மேதிலாரின்சொல்லிற் றீதாமோ—போதெலா*
*மாதர்வண்டார்க்கு மலிகடற்றண்சேர்ப்ப*
*வாவதறிவார்ப் பெறின்.* நாலடி. அ: ௩.

### இதன் பதவுரை.

போதெல்லாம் — புஷ்பங்களெல்லாவற்றிலும். மாதர்—அழகிய. வண்டு — வண்டுகள். ஆர்க்கும் — சத்திக்கும். மலி — நிறைந்த. கடல்—கடலினது. தண்—குளிர்ந்த. சேர்ப்ப—துறையையுடைய வனே. ஆவது — ஆகவேண்டிய நன்மையை. அறிவார்—தெரிகிற வர்களை. பெறின்—பெற்றால். காதலார்—அன்புடையவர்கள். சொல் லும் — சொல்லுகிற. கடுஞ்சொல் — கொடிய சொல்லானது. ஏதி லார்—பகைவர். உவந்து—சந்தோஷமாக. உரைக்கும்—சொல்லும். இன்சொலில்—இனிய சொல்லைப்பார்க்கிலும். தீதாமோ—குற்றமா குமோ. எ-று.

### கருத்துரை.

பகைவர் சொல்லும் இனிய சொல்லைப்பார்க்கிலும், சினே கிதர் சொல்லுங் கடுஞ்சொல் தீதோ? என்பதாம்.

### கோபங்கொள்ளாதே: அது பல தீமைகளுக்குக் காரணம்.

மறத்தல்வெகுளியை யார்மாட்டுந்தீய
பிறத்தலதனான் வரும். குறள். ௩௧: ௩.

### இதன் பதவுரை.

யார்மாட்டும்—யாவரிடத்திலும். வெகுளியை—கோபத்தை. மறத் தல்—மறக்கக்கடவர். (ஏனென்றால்) தீய—(ஒருவருக்குப்) பொல் லாங்கெல்லாம். பிறத்தல்—உண்டாகுதல். அதனால்—அக்கோபத்தி னால். வரும்—வரும். எ-று.

### கருத்துரை.

சகல தீமைகளையும் உண்டாக்கும் கோபத்தை நீக்கவேண் டும் என்பதாம்.

## உன் நாவைக் காத்துக்கோள்.

யாகாவாராயினு நாகாக்ககாவாக்காற்
சோகாப்பர்சொல்லிழுக்குப் பட்டு. குறள். ௰௩: ௭.

### இதன் பதவுரை.

யா — காக்கவேண்டிய யாவையும். காவாராயினும் — காக்கமாட்டாராகுலும். நா—நாவொன்றை. காக்க—காக்கக்கடவர். காவாக்கால்—அதைக் காக்கமாட்டாராயின். சொல்லிழுக்குப்பட்டு—சொற்குற்றத்திலகப்பட்டு. சோகாப்பர்—தாமே துன்பப்படுவார். எ-று.

### கருத்துரை.

நாவைமாத்திரமாயினும் காக்கவேண்டும் என்பதாம்.

## கோபிக்காமல் கருத்தோடே கேட்டு ஆலோசனை செய்.

వినవలెనెవ్వరుచెప్పిన
వినినంతనెతమకపడకవివరింపవలెఁ
వినికనివివరముదెలసిన
మనుజుడుపోనీతిపరుడుమహిలోవేమా.

வேமனர். க: ௱௬௩.

### இதன் பதவுரை.

యెవ్వరుచెప్పిన—எவனுகிலுஞ் சொன்னுலும். వినవలెను—கேட்கவேண்டும். వినినంతనె—கேட்கும்போதே. తమకపడక—ஆத்திரப்படாமல். వివరింపవలెఁ—ஆலோசிக்கவேண்டும். విని—கேட்டு. కని—பார்த்து. వివరముదెలసిన—விவரத்தைத் தெரிந்துகொண்ட. మనుజుడుపో—மனுஷனே. మహిలో—பூமியிலே. నీతిపరుడు—நீதிமான். వేమా—ஓ வேமனரே. எ-று.

### கருத்துரை.

யார் சொன்னாலும், அவருடைய பேச்சைக் கேட்கவேண்டும். கேட்டமாத்திரத்திலே ஆத்திரப்படாமல் ஆலோசித்துப்பார்க்கவேண்டும். கேட்டு, பார்த்து, சத்தியத்தைத் தெரிந்துகொண்ட மனுஷனே நீதிமான் என்பதாம்.

## ௪—வது. உரத்த சத்தத்தோடே தருக்கமாடுகிறவன்.

అల్పుడెపుడుబల్కు నాడంబరముగాను
సజ్జనుండుబలుకుచల్లగాను
కంచుమోగినట్లుకనకంబుమోగునా
విశ్వదాభిరామవినరవేమ. வேமனர். க: ௩ம.

### இதன் பதவுரை.

అల్పుడు—அற்பன். ఎపుడు—எப்போதும். ఆడంబరము గాను—டம்பமாக. బల్కు ను—பேசுவான். సజ్జనుండు—நல்லவன். చల్ల గాను—மிருதுவாக. బలుకు—பேசுவான். కంచుమోగినట్లు—வெண்கலமானது சத்தமிடுவதுபோல. కనకంబుమోగునా—பொன்னானது சத்தமிடுமோ. విశ్వదాభిరామ—ஆண்டவருக்குப் பிரியமான. వేమ—ஓ வேமனரே. వినర—கேள். எ-று.

### கருத்துரை.

அற்பன் உரக்கப் பேசுவான். நல்லவன் சாந்தத்தோடே பேசுவான். வெண்கலம் சத்திக்கிறதுபோல், பொன் சத்திக்குமா? என்பதாம்.

**காவோலை கலகலவென்றேலிக்கும்: பச்சோலைக்குச் சத்தமில்லை.**

கற்றறிந்தநாவினர் சொல்லார்தஞ்சோர்வஞ்சி
மற்றையராவார் பகர்வர்—பனையின்மேல்
வற்றியவோலை கலகலக்குமெஞ்ஞான்றும்
பச்சோலைக்கில்லை யொலி. நாலடி. உ௬: ௬.

### இதன் பதவுரை.

பனையின்மேல்-பனைமரத்தின்பேரிலிருக்கிற. பச்சோலைக்கு-பச்சோலைக்கு. எஞ்ஞான்றும் — எக்காலத்திலும். ஒலி — சத்தம். இல்லை — இல்லை. வற்றிய — காய்ந்த. ஓலை — ஓலையானது. கலகலக்கும்—கலகலவென்று சத்திக்கும். (அவைபோல) கற்று — நூல்களை வாசித்து. அறிந்த — உணர்ந்த. நாவினர் — நாக்கையுடையவர்கள். தம்—தங்களுடைய. சோர்வு—சொற்சோர்வுக்கு. அஞ்சி—பயந்து. சொல்லார்—ஒன்றுஞ் சொல்லமாட்டார்கள். மற்றையராவார்—படியாதவர்கள். பகர்வர்—சொல்வார்கள். எ-று.

### கருத்துரை.

படித்தவர்கள் பதறிப் பேசார்கள். படியாதவர்களோ யோசியாமல் கலகலவென்று பேசுவார்கள் என்பதாம்.

## ௫-வது. தூஷண வார்த்தைகளோடே தருக்கமாடுகிறவன்.

**நிந்திக்கிறவர்கள் நீசரேயல்லாமல், யோக்கியரல்ல.**

அருளினறமுரைக்கு மன்புடையார்வாய்ச்சொற்
பொருளாகக்கொள்வர் புலவர்—பொருளல்லா
வேழையதனையிகழ்ந் துரைக்கும்பாற்கூழை
மூழைசுவையுணரா தாங்கு. நாலடி. ௩௩: க.

### இதன் பதவுரை.

பாற்கூழை—பாற்சாதத்தின். சுவை—ருசியை. மூழை—அகப்பை. உணராதாங்கு — அறியாததுபோல. அருளின்—அருளினால். அறம்—தருமத்தை. உரைக்கும்—சொல்லும். அன்புடையார்—அன்புள்ளவர்களுடைய. வாய் — வாயிலிருந்து வருகிற. சொல் — சொல்லை. பொருளல்லா — பொருளல்லாத. ஏழை — அறிவில்லான். இகழ்ந்துரைக்கும் — தூஷிப்பான். அதனை — அச்சொல்லை. புலவர் — அறிவுடையோர்கள். பொருளாக — நற்பொருளாக. கொள்வர்—ஏற்றுக்கொள்வார்கள். எ-று.

### கருத்துரை.

அறிவில்லாதவன் அன்புடையார் சொல்லை இகழ்வான். அறிவுடையோர் ஏற்றுக்கொள்வார்கள் என்பதாம்.

### தூஷண வார்த்தைகள் தூஷிக்கிறவனையே சுடும்.

காவாதொருவன்றன் வாய்திறந்துசொல்லுஞ்சொல்
ஓவாதேதன்னைச் சுடுதலா—லோவாதே
ஆய்ந்தமைந்தகேள்வி யறிவுடையாரெஞ்ஞான்றும்
காய்ந்தமைந்தசொல்லார் கறுத்து. நாலடி. எ: ௩.

### இதன் பதவுரை.

ஒருவன் — ஒருத்தன். தன்—தன்னுடைய. வாய் — வாயை. காவாது — காக்காமல். திறந்து — திறந்து. சொல்லும்—சொல்லுகிற. சொல்—சொற்கள். ஓவாது—ஒழியாமல். தன்னை—தன்னை. சுடுதலால் — சுடுகிறதினால். ஓவாது — ஒழியாமல். ஆய்ந்து—ஆராய்ந்து. அமைந்த—நிரம்பிய. கேள்வி—கேள்வியாலுண்டான. அறிவுடையார்—புத்தியுடையவர்கள். எஞ்ஞான்றும்—எக்காலத்திலும். காய்ந்து—கோபித்து. அமைந்த—(கொடுமை) நிறைந்த சொற்களை. கறுத்து—சீறி. சொல்லார்—சொல்லமாட்டார்கள். எ-று.

### கருத்துரை.

கடுஞ்சொற்கள் வைதவனையே சுடுமாதலால், அறிவுடையோர் கோபித்துக் கடுஞ்சொற்களைச் சொல்லார்கள் என்பதாம்.

### தூஷிக்கிறவர்களுக்கு வரும் நரகதண்டனையைக் குறித்துப் பெரியோர் விசனப்படுவார்கள்.

*தம்மையிகழ்ந்தமை தாம்பொறுப்பதன்றிமற்*
*றெம்மையிகழ்ந்த வினைப்பயத்தா—லும்மை*
*யெரிவாய்நிரயத்து வீழ்வர்கொலென்று*
*பரிவதூஉஞ்சான்றோர் கடன்.* நாலடி. ௬: அ.

### இதன் பதவுரை.

தம்மை—தங்களை. இகழ்ந்தமை—தூஷித்தவைகளை. தாம்—தாங்கள். பொறுப்பதன்றி — பொறுக்கிறதுமன்றி. எம்மை — எங்களை. இகழ்ந்த — தூஷித்த. வினைப்பயத்தால் — தீவினைப்பயனால். உம்மை—மறுமையில். எரிவாய்—அக்கினிபொருந்திய. நிரயத்து—நரகத்தில். வீழ்வரென்று—வீழ்வார்களென்று. பரிவதூஉம்—விசனப்படுகிறதும். சான்றோர்-அறிவால் நிறைந்தோர்களின். கடன்-முறைமையாம். எ-று.

### கருத்துரை.

பெரியோர், பிறர் தங்களைத் தூஷித்தவைகளைப் பொறுப்பதுமல்லாமல், அப்பாவத்தால் நரகத்தில் விழுவார்களே என்று விசனத்தையுமடைவார்கள் என்பதாம்.

## ௬—வது. உதாசனத்தோடே தருக்கமாடுகிறவன்.

**பெரியோர் தீச்சொற்களைச் சொல்லுகிறவனுடைய தாயாருக்கு வரும் வெட்கத்தை அறிந்து விசனப்படுவார்கள்.**

*பாடமேயோதிப் பயன்றெரிதறேற்றூத*
*மூடர்முனிதக்க சொல்லுங்காற்—கேடருஞ்சீர்ச்*
*சான்றோர்சமழ்த்தனர் நிற்பவேமற்றவரை*
*யீன்றூட்கிறப்பப் பரிந்து.* நாலடி. ௩௨: ௬.

### இதன் பதவுரை.

*பாடம்—பாடத்தை. ஓதி—சொல்லி. பயன்—அதன் பொருளை. தெரிதறேற்றூத—அறியாத. மூடர்—மூடர். முனிதக்க—வெறுக்கத் தக்க சொற்களை. சொல்லுங்கால்—சொல்லும்போது. கேடு—கெடு தல். அரும்—இல்லாத. சீர்—சிறப்பையுடைய. சான்றோர்—அறி வுடையோர். சமழ்த்தனர்—வெட்கமுடையராய். அவரை—அம்மூ டர்களை. ஈன்றூட்கு—பெற்றவளுக்காக. இறப்ப—மிகவும். பரி ந்து—இரங்கி. நிற்ப—நிற்பார்கள். எ-று.*

### கருத்துரை.

*அறிவிலார் வெறுக்கத்தக்க சொற்களைச் சொல்லும்போது, அறிவுடையார் அவர்களைப் பெற்றவளுக்கு வருத்தம் வரு மென்று மறுத்துப் பேசமாட்டார்கள் என்பதாம்.*

## எ—வது. சத்தியத்தை நிந்தித்துத் தள்ளுகிறவன்.

*பொழிந்தினிதுநாறினும் பூமிசைதல்செல்லா*
*திழிந்தவைகாமுறூஉ மீப்போ—லிழிந்தவை*
*தாங்கலந்தநெஞ்சினூர்க் கென்னுகுந்தக்கார்வாய்த்*
*தேன்கலந்ததேற்றச்சொற் றேர்வு.* நாலடி. உ௬: ௬.

## இதன் பதவுரை.

பொழிந்து—தேனைச் சொரிந்து. இனிது நாறினும்—நல்ல வாசனை வீசினாலும். பூ—பூவின் தேனை. மிசைதல் செல்லாது—உண்ணப்போகாமல். இழிந்தவை—இழிவான துர்வாசனைகளை. காமுறூஉம்—இச்சிக்கும். ஈப்போல்—ஈயைப்போல. இழிந்தவை—தாழ்ந்த செய்கைகள். கலந்த—சேர்ந்த. நெஞ்சினார்க்கு—மனதையுடையவர்களுக்கு. தக்கார்—பெரியோர். ' வாய்—வாயிலிருந்து வருகிற. தேன்—தேனை. கலந்த—கலந்தாற்போலும். தேற்ற—தெளிந்த. சொற்றேர்வு—சொற்களினாராய்ச்சி. என்னாகும்—என்னபயனைச் செய்யும். எ–று.

## கருத்துரை.

தாழ்ந்தோருக்கு உயர்ந்தோர் வார்த்தை என்ன பிரயோசனம் செய்யும் என்பதாம்.



## ON BECOMING A CHRISTIAN.

## கிறிஸ்துமார்க்கத்தில் சேருவதைக்குறித்துச் சொல்லியது.



கிறிஸ்துமார்க்கத்திலே சேருவதற்குச் சனங்கள் சில ஆட்சேபங்களைச் சொல்லுகிறார்கள்.

### க–வது. எப்படிச் சேருவேன்? சேருவது அரிதாயிருக்கிறதே.

செயற்கரியசெய்வார் பெரியர்சிறியர்
செயற்கரியசெய்கலா தார். குறள். ௩: ௬.

### இதன் பதவுரை.

பெரியர் — பெரியோர். செயற்கு — செய்கிறதற்கு. அரிய— அரியகாரியங்களை. செய்வார்—செய்வார்கள். சிறியர்—சிறியோர். செயற்கு—செய்கிறதற்கு. அரிய—அரியகாரியங்களை. செய்கலா தார்—செய்யமாட்டார்கள். எ—று.

### கருத்துரை.

பெரியோர் செய்கிறதற்கு அரியவைகளைச் செய்வார்: சிறியோர் அதைச் செய்யார் என்பதாம்.

## உ—வது. எப்படிச் சேருவேன்? சேருவதினால் துன்பம் உண்டாகுமே.

முடிவில் இன்பத்தைத் தருந் தொழிலைச் செய்.

துன்பமுறவரினுஞ் செய்கதுணிவாற்றி
இன்பம்பயக்கும் வினை. குறள். ௬எ: ௯.

### இதன் பதவுரை.

துன்பம்—(முதலிலே) துன்பமானது. உறவரினும்—மிகவும் வந் தாலும். இன்பம்—சுகத்தை. பயக்கும்—(முடிவிலே) கொடுக்கும். வினை — தொழிலை. துணிவாற்றி — வல்லமையுடையவர்களாய். செய்க—செய்யக்கடவர். எ—று.

### கருத்துரை.

முதலிலே வரும் துன்பத்தை நோக்கி, முடிவிலே இன் பந்தரும் தொழிலை விடக்கூடாதென்பதாம்.

### லோக நன்மையைப் பெற்றுக்கொள்ளும்படி மனுஷர்கள் கஷ்டப்படுகிறதில்லையா?

மெய்வருத்தம்பாரார் பசிநோக்கார்கண்டுஞ்சார்
எவ்வெவர்தீமையு மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும்பாரா ரவமதிப்புங்கொள்ளார்
கருமமேகண்ணாயினார். நீதிநெறிவிளக்கம். ௫௩.

இதன் பதவுரை.

கருமமே—காரியமே. கண்ணாயினார்—கண்ணாகவுடையவர்கள். மெய்வருத்தம் — சரீரவருத்தத்தை. பாரார் — பார்க்கமாட்டார்கள். பசி—பசியை. நோக்கார்—பார்க்கமாட்டார்கள். கண்டுஞ்சார்—நித்திரை செய்யார்கள். எவ்வெவர்—எவரெவர்களாலுண்டாகிய. தீமையும் — தீங்கையும். மேற்கொள்ளார் — மதிக்கமாட்டார்கள். செவ்வி—காலத்தின். அருமையும்-அருமையையும். பாரார்-பார்க்கமாட்டார்கள். அவமதிப்பும்—அவமானத்தையும். கொள்ளார்—மேற்கொள்ளார்கள். எ-று.

க ரு த் து ரை.

காரியத்தை நிறைவேற்றும் கருத்தையுடையவர்கள சரீரவருத்தமுதலியவைகளை நினைக்கமாட்டார்கள் என்பதாம்.

## ௯—வது. சேர்ந்தால், எப்படிப் பிழைப்பேன்?

కడుపు కేలమనసకళవళపడియెదు
కడుపు కేడత్రొ పికలుగుచుండు
కడుపురాతిలోనికప్పకుగలుగదా
విశ్వదాభిరామవినర వేమ. வேமனர். உ: கூ௫.

இதன் பதவுரை.

కడుపుకు — வயிற்றினிமித்தம். మనస — ஓ மனசே. యేల — என்னத்துக்கு. కళవళపడియెదు — விசனப்படுகிறாய். కడుపుకు —

வயிற்றிற்கு. ఏడ—எங்கேயாவது. తృప్తి కలుగుచుండు—திருத்தியாகும். కడుపు — வயிருனது. రాతిలోని — கல்லிலேயிருக்கிற. కప్పకు గలుగదా—தவளைக்கில்லையா. విశ్వదాభిరామ—ஆண்டவருக்குப் பிரியமான. వేమ—ஓ வேமனரே. వినర—கேள். எ-று.

**கருத்துரை.**

ஓ மனசே! வயிற்றிற்கு ஏன் விசனப்படுகிருய்? எப்படியாவது வயிற்றிற்குத் திருத்தியாகும். கல்லிலேயிருக்கிற தவளைக்கும் வயிறில்லையோ? என்பதாம்.

## ௪—வது. சேருவதினுல் பிரயோசனமென்ன?

கதாமஞ்சரி, ௫௨-ம் கதை.

ஓர் ஏரிக்கரையில் உட்காந்திருந்த ஒரு கொக்கானது அங்கே வந்த அன்னப்பட்சியைப் பார்த்து, உனக்குக் காலும் மூக்கும் கண்ணும் மிகவும் சிவந்திருக்கின்றன. நீ யார், எங்கிருந்துவருகிருய்? என்றது. அன்னம்: நான் அன்னப்பறவை; தேவலோகத்திலிருந்து வருகிறேன், என்றது. கொக்கு: அங்கே நீ எங்கே வாசம்பண்ணுகிருய்? அதெப்படிப்பட்டது? சொல், என்றது. அன்னம்: நான் மிகவும் தித்திப்பும் தெளிவுமுள்ள தண்ணீரையுடையதாயும் மானசமென்னும் பெயரையுடையதாயுமிருக்கின்ற பெரிய தடாகத்தில் வாசம்பண்ணுகிறேன். அது, பொன்மயமான தாமரைப் புஷ்பங்களாலும், நல்ல இரத்தினங்களால் பண்ணப்பட்ட கரையினுலும், கற்பகமென்கிற மரங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருக்கிறதென்று சொல்லினது. கொக்கு: நல்லது, அதிலே நத்தைகளுண்டா? என்று ஆசையோடு கேட்டது. அன்னம்: நத்தை அதில் இல்லையென்றது. கொக்கு: சீ, நத்தையில்லாதது என்னதடாகம் போ என்றது.

அவ்விதமாகவே மனுஷர்கள் சிற்றின்பத்தை விரும்பி, பேரின்பத்தைத் தருகிற மார்க்கத்தை விரோதிக்கிறார்கள்.

———>>><<<———

## ON EATING MEAT.

## மாமிசம் சாப்பிடுவதைக் குறித்துச் சொல்லியது.

### க—வது. மாமிசம் சாப்பிடலாமென்பது.

నాత్తాదుష్యత్యదన్నాద్యాన్ ప్రాణినోహన్యహన్యపి
ధాత్రైవసృష్టాహ్యాద్యాశ్చ ప్రాణినోత్తారఏవచ.

மனு. ரு: ௩௰.

இதன் பதவுரை.

అహన్యహన్యపి—நாடோறும். ఆద్యాన్—தின்னத்தக்க. ప్రాణినః—செந்துக்களை. అదన్ అత్తా—தின்பவன். నదుష్యతి—பாவியாக மாட்டான். ఆద్యాః — சாப்பிடத்தக்க. ప్రాణినశ్చ — செந்துக்களும். అత్తారఏవచ—சாப்பிடுகிறவர்களும். ధాత్రైవ—பிரமாவினாலேயே. సృష్టాహి—சிருஷ்டிக்கப்பட்டார்களல்லவா.

கருத்துரை.

சாப்பிடத்தக்க செந்துக்களும் அவைகளைச் சாப்பிடுகிறவர்களும் பிரமாவினால் உண்டாக்கப்பட்டதினாலே அந்தச் செந்துக்களை நாடோறும் சாப்பிடுகிறவர்கள் பாவிகளாக மாட்டார்கள் என்பதாம்.

**௨—வது. யாகத்துக்கும் ஆகாரத்துக்கும் மிருகங்களை வதைக்கலாம்: அகஸ்தியன் அப்படிச் செய்தானென்பது.**

యజ్ఞార్థం బ్రాహ్మణైర్వధ్యాః ప్రశస్తా మృగపక్షిణః
భృత్యానాం చైవ వృత్త్యర్థ మగస్త్యో హ్యాచరత్పురా.

மனு. ௫: ௨௨.

இதன் பதவுரை.

ప్రశస్తాః—உத்தமமான. మృగపక్షిణః—மிருகங்களும் பட்சிகளும். యజ్ఞార్థం—யாகத்துக்காகவும். భృత్యానాం—தொண்டர்களுடைய. వృత్త్యర్థంచైవ—சீவனத்துக்காகவும். బ్రాహ్మణైః—பிராமணர்களினலே. వధ్యాః—வதைக்கத்தக்கவைகள். పురా—பூருவகாலத்திலே. అగస్త్యః—அகஸ்தியமுனிவர். ఆచరద్ధి—அப்படிச் செய்தானல்லவா.

கருத்துரை.

பலிக்காகவும் ஆகாரத்துக்காகவும் மிருகங்களைக் கொல்லலாம். பூருவகாலத்திலே அகஸ்தியர் அப்படியே செய்தாரென்பதாம்.

**௩—வது. உயிருள்ள வஸ்துக்களை வதைத்துச் சாப்பிடப்படாதேன்பவர்கள் தங்கள் போதனையின்படி எதையும் சாப்பிடாமலிருக்கவேண்டும்.**

காய் கனி கிழங்கு முதலானவைகள் ஓரறிவுயிரானதினலே அவைகளைச் சாப்பிடப்படாது.

சருகு சாப்பிடலாமென்ருல், அது உயிர் விட்ட பிணத்தைச் சாப்பிடுகிறதற்குச் சரியாயிருக்குமல்லவா?

சலமும் சீவசெந்துக்களால் நிறைந்திருக்கிறபடியினாலே அதையும் சாப்பிடப்படாது. ஆகையினாலே இவ்விதமாய்ப் போதிக்கிறவர்கள் நியாயத்தின்படி போசனபானம் பண்ணாமல் பசிதாகத்தினால் சாகவேண்டியது.

இந்து சாஸ்திரங்களை உண்டாக்கினவர்கள் தண்ணீரிலே சீவசெந்துக்களுண்டென்பதை அறியாமல், உயிருள்ள வஸ்துக்களை வதைக்கப்படாதென்கிற கட்டளையை ஏற்படுத்தினார்கள். தண்ணீரிலே சீவசெந்துக்களை வைத்த மெய்யான தேவனே, தாம் அருளிச்செய்த சத்திய வேதத்திலே ஆகாரத்துக்காக உயிருள்ள வஸ்துக்களை வதைக்கலாமென்கிற உத்தரவு கொடுத்திருக்கிறார்.



## WE CANNOT LIVE WITHOUT LYING AND CHEATING.

## பொய்யும் களவுமில்லாமல் பிழைக்கக்கூடாதென்பதைக் குறித்துச் சொல்லியது.



### ௧—வது. பொய்யர் ஓட்டைப்பானைகளுக்கொப்பாயிருக்கிறார்களென்பது.

అరయతరుచుకల్లలాడెడువారిండ్ల
వెడలకేలలక్ష్మివిశ్రమించు
ఓటికుండనీరుపోసినచందాన
విశ్వదాభిరామవినరవేమ. வேமனர். ௧: ௭௰.

### இதன் பதவுரை.

అరయ—விசாரிக்கும்போது. తరుచు—மிகவும். కల్లలు—பொய்களை. ఆడెడు—சொல்லுகிற. వారిండ్ల — அவர்களுடைய வீட்டிலே. లక్ష్మి—பாக்கியம். వెడలక — விட்டுப்போகாமல். యేలవిశ్రమించు—எப்படி நிற்கும். (அது) ఓటికుండ—உடைந்தபானையிலே. నీరు—தண்ணீரை. పోసినచందాన—வார்ப்பதைப்போலாகும். విశ్వదాభిరామ—ஆண்டவருக்குப் பிரியமான. వేమ — ஓ வேமனரே. వినర—கேள். எ—று.

### க ரு த் து ரை.

பொய் பேசுகிறவனுடைய வீட்டிலே பாக்கியம் நிலைக்குமா? உடைந்த பானையிலே வார்த்த தண்ணீர் ஒழுகுமே தவிர நிற்குமா? என்பதாம்.

## உ—வது. ஒருவன் களவெடுத்த பொருள் கெடுமென்பது.

களவினாலாகிய வாக்கமளவிறந்
தாவதுபோலக் கெடும். குறள். ௨௯: ௫.

### இதன் பதவுரை.

களவினால் — திருட்டினால். ஆகிய — உண்டான. ஆக்கம் — செல்வம். ஆவதுபோல — வளர்வதுபோலத் (தோன்றி). அளவிறந்து—தனது எல்லையைக் கடந்து. கெடும்—அழியும். எ—று.

### க ரு த் து ரை.

திருட்டினாலான செல்வம் வளர்வதுபோலத் தோன்றிக் கெடும் என்பதாம்.

## ௬—வது. உண்மையானது பிரயோசனத்தைத் தரு மேன்பது.

வாணிகஞ்செய்வார்க்கு வாணிகம்பேணிப்
பிறவுந்தமபோற் செயின். குறள். ௱௨: ௰.

### இதன் பதவுரை.

பிறவும்—பிறர் பொருள்களையும். தமபோல்—தம்பொருள்களைப் போல. பேணி—காப்பாற்றி. செயின்—செய்தால். (அச்செய் கையானது) வாணிகஞ்செய்வார்க்கு — வியாபாரஞ்செய்கிறவர்க ளுக்கு. வாணிகம்—நல்ல வியாபாரமாம். எ-று.

### கருத்துரை.

பிறர் பொருள்களையும் தங்கள் பொருள்கள்போலக் காத் துக்கொள்வது நல்ல வியாபாரமாம்.



## AFFLICTIONS OF THE RIGHTEOUS.

## நீதிமான்களுக்கு உண்டாகுந் துன்பங்களைக் குறித்துச் சொல்லியது.

చాకివాడుకోకచీకాకుపడజేసి
మయిలబుచ్చిమంచిమడుపుజేయు
బుద్ధిజెప్పువాడుగుద్దిననేమయా
విశ్వదాభిరామవినరవేమ. வேமனர். ௨: ௭௨.

### இதன் பதவுரை.

చాకివాడు—வண்ணான். కోక—வஸ்திரத்தை. చీకాకుపడజేసి— வருத்தப்படுத்தி. మయిల — அழுக்கை. పుచ్చి — நீக்கி. మంచి —

நல்லதாய். మడుపుజేయు — மடிப்பான். (அப்படிப்போல) బుద్ధి జెప్పవాడు — புத்திசொல்லுகிறவன். గుద్దిన నేమయా — குட்டினால் என்ன. విశ్వదాభిరామ—ஆண்டவருக்குப் பிரியமான. వేమ—ஓ வேமனரே. వినర—கேள். எ–ம.

### கருத்துரை.

வண்ணான் துணியைத் தப்பி, அழுக்கை நீக்கி, சரியாய் மடிப்பான். அதுபோல புத்திசொல்லுகிறவன் அடித்தா லென்ன என்பதாம்.

---

## FOUR YUGAS.

---

## சதுர்யுகத்தைக் குறித்துச் சொல்லியது.

### வருஷங்கள்.

சத்தியயுக } வருஷங்கள்: = ௧எ,உஅ,000. (17,28,000) பதினேழு லட்சத்திருபத்தெண்ணாயிரம்.
கிரேதாயுக }

திரேதாயுக வருஷங்கள்: = ௰௨,௯௬,000. (12,96,000) பன்னிரண்டுலட்சத்துத்தொண்ணூற்றாறாயிரம்.

துவாபரயுக வருஷங்கள்: = அ,௬௪,000. (8,64,000) எட்டிலட்சத்து அறுபத்துநாலாயிரம்.

கலியுக வருஷங்கள்: = ௪,௩௨,000. (4,32,000) நாலிலட்சத்து முப்பத்திராயிரம்.

**சத்தியயுகம் பாவமில்லாததாயிருந்ததென்று சொல்லுகிறர்கள்: அந்த யுகத்தில்தானே மானவதரும சாஸ்திரமுண்டானது.**

అద్బానాందశకంసహస్రదశకంయాతంచసత్యే
యుగేభాద్రేమాసికృతామయాహిమనునాబ్రహ్మజయా.

*இதன் பதவுரை.*

సత్యేయుగే—சத்தியம் நிறைந்த யுகத்திலே (கிரேதாயுகத்திலே). అద్బానాం—வருஷங்களினுடைய. సహస్రదశకం—பதினாயிரமாகிய. దశకం—பத்து (நூறாயிரம் வருஷங்கள்). యాతంచ — சென்ற பின்பு. భాద్రేమాసి—ஆவணி மாசத்தில். బ్రహ్మజయా—பிரமாவி னுடைய கட்டளையினாலே. మనునామయా—மனுவாகிய என்னாலே. కృతాహి—(தருமசாஸ்திரம்) செய்யப்பட்டதல்லவா. எ—று.

**க ரு த் து ரை.**

பாவமில்லாத கிரேதாயுகத்திலே மானவ தருமசாஸ்திரம் எழுதப்பட்டதென்பதாம்.

**கலியுகத்தைப் பார்க்கிலும், மனு இருந்த யுகம் அதிக பாவமுள்ள தாயிருந்ததென்பதற்கு, மானவதரும சாஸ்திரமே சாட்சி.**

మాత్రాస్వస్రాదుహిత్రావా నవివిక్తాసనోభవేత్
బలవానింద్రియగ్రామో విద్వాంసమపికర్షతి.

மனு. உ: உ௱யசு.

*இதன் பதவுரை.*

మాత్రా—தாயோடேயாவது. స్వస్రా—உடன்பிறந்தவளோடே யாவது. దుహిత్రావా—மகளோடேயாவது. వివిక్తాసనః—ஏகாந்த

முள்ளவன். నభవేత్ — ஆயிருக்கப்படாது. బలవాన్ — வலிமையுள்ள. ఇంద్రియగ్రామః—இந்திரியங்களின் கூட்டமானது. విద్వాంసమపి—வித்துவானையும். కర్షతి—இழுக்கின்றது.

### கருத்துரை.

இந்திரியங்களின் வல்லமை வித்துவானையும்கூட இழுத்துக் கெடுக்கும். ஆதலால் ஒருவன் தாய், தங்கை, மகள் முதலான ஸ்திரீகளோடே தனித்திருக்கப்படாது.

இதினாலே சத்தியயுகம் பாவமுள்ளதாயிருந்ததென்றும், நாலு யுகங்கள் உண்டென்கிற பேச்சு பொய்யென்றும் அறிகிறோம்.

மேலும் சத்தியயுகத்திலேதானே தேவரும் அசுரரும் பாற்கடலைக் கடையும்போது, சண்டை செய்ததாகவும்; பிரமாவானவன் தன் சொந்த மகள்மேலே மோகங்கொண்டதாகவும்; சிவனானவன், பெண்ரூபத்தை எடுத்த விஷ்ணுவின்மேல் ஆசை வைத்ததாகவும் இந்து சாஸ்திரங்களிலே சொல்லியிருக்கிறது.



## MARRIAGE.

## விவாக நிலைமையைக் குறித்துச் சொல்லியது.

### க—வது. துறவறத்தைப் பார்க்கிலும் இல்லறம் மேன்மையுள்ளதேன்பது.

அறத்தாற்றினில்வாழ்க்கை யாற்றிற்புறத்தாற்றிற்
போஒய்ப்பெறுவ தெவன். குறள். ரு: சு.

இதன் பதவுரை.

(ஒருவன்) இல்வாழ்க்கை—இல்லறத்தை. அறத்தாற்றின்—தர்ம வழியில். ஆற்றின்—நடத்துவானானால். புறத்தாற்றில் — (அவன்

அதற்குப்) புறமாகிய வழியில். போய் — போய். பெறுவது— பெறும்பயன். எவன்—என்ன. எ-று.

### கருத்துரை.

தர்மவழியில் இல்லறத்தை நடத்தினால் துறவறத்தால் பயனில்லை என்பதாம்.

இயல்பினானில்வாழ்க்கை வாழ்பவனென்பான்
முயல்வாருளெல்லாந் தலை. குறள். ரு: எ.

### இதன் பதவுரை.

இல்வாழ்க்கை—இல்லறத்திலிருந்து. இயல்பினான்—அதற்குரிய வியல்போடு கூடி. வாழ்பவனென்பான்—வாழ்பவனென்று சொல்லப்பட்டவன். முயல்வாருளெல்லாம்—(ஐம்புலன்களை விட்டு நீங்கும்படியாக) முயற்சிசெய்கிற எல்லாரிலும். தலை — முதன்மையாவான். எ-று.

### கருத்துரை.

தர்மத்தோடில்லறத்திருப்பவன் துறவறத்தாரெல்லாரிலும் சிரேஷ்டன் என்பதாம்.

## உ—வது. மனைவியில்லாத வீடு காடாம்.

மழைதிளைக்குமாடமாய் மாண்பமைந்தகாப்பா
யிழைவிளக்குநின்றிமைப்பி னென்னும்—விழைதக்க
மாண்டமனையாளை யில்லாதானில்லகங்
காண்டற்கரியதோர் காடு. நாலடி. ருஎ: க.

### இதன் பதவுரை.

விழைதக்க—விரும்பத்தக்க. மாண்ட—நற்குண நற்செய்கைகளையுடைய. மனையாளை—மனைவியை. இல்லாதான்—இல்லாதவனுடைய. இல்லகம்—வீடு. மழை—மேகம். திளைக்கும்—தவழும். மாடமாய்—மாளிகையாய். மாண்பு—பெருமை. அமைந்த—பொருந்திய. காப்பாய்—காவலையுடையதாய். இழை—ஆபரணங்கள்.

விளக்கு—விளக்கைப்போல. நின்று—இருந்து. இமைப்பின்—பிரகாசிக்கப்பெற்றாலும். என்னும்—என்ன பிரயோசனம். காண்டற்கு—பார்க்கிறதற்கு. அரியது—கூடாததாகிய. ஓர்—ஒரு. காடு—காட்டுக்கொப்பாம். எ—று.

### கருத்துரை.

மிகுந்த சிறப்பையுடையதாயினும் மனைவியில்லாத வீடு காடாம்.

### மனைவியில்லாதவனுக்குப் பாக்கியமில்லை.

நல்லஞாலமும் வானமும்பெறினும்
எல்லாமில்லை யில்லில்லோர்க்கே. வெற்றிவேற்கை.

### இதன் பதவுரை.

இல்—மனைவி. இல்லோர்க்கு—இல்லாதவர்களுக்கு. நல்ல—நன்மையான. ஞாலமும்—உலகச்செல்வமும். வானமும்—தேவலோகச்செல்வமும். பெறினும்—கிடைத்தாலும். எல்லாமில்லை—(அவைகளால்) ஒரு பிரயோசனமுமில்லை. எ—று.

### கருத்துரை.

மனைவியில்லாதவர்களுக்கு எல்லாச் செல்வமுண்டானாலும் அவைகளால் பிரயோசனமில்லை என்பதாம்.



## DRUNKENNESS.

## வெறியைக் குறித்துச் சொல்லியது.

### க—வது. இதைப்பற்றிக் குறள் இடும் சாட்சி.

**மதுபானம் பண்ணல் பெற்ற தாய்க்கும் அருவருப்பா யிருக்கிறதென்பது.**

*ஈன்றாண்முகத்தேயு மின்னாதாலென்மற்றுச்*
*சான்றோர்முகத்துக் களி.* குறள். கரு: ரு.

இதன் பதவுரை.

*களி—கள்ளுண்டுகளித்தல். ஈன்றாண் முகத்தேயும்—தாய் முன்பாயினும். இன்னாது—துன்பந்தருவதாம். மற்று—பின்பு. (அக்களித்தல்) சான்றோர் முகத்து—பெரியோர்களிடத்து. என் — எப்படிப்பட்டதாயிருக்கும். எ—று.*

க ரு த் து ரை.

*தாயும் அருவருக்கத்தக்க கள்ளுண்டு களித்தல் பெரியோரிடத்து எப்படிப்பட்டதாயிருக்கும் என்பதாம்.*

**வெறிகொள்ளுதல் அவமானப்படுத்தும்.**

*உள்ளொற்றியுள்ளூர் நகப்படுவரெஞ்ஞான்றும்*
*கள்ளொற்றிக்கண்சாய்பவர்.* குறள். கரு: எ.

இதன் பதவுரை.

*கள்ளொற்றி—கள்ளை மறைத்துக் (குடித்து). கண்சாய்பவர்—அறிவுமயங்குகிறவர்கள். உள்ளொற்றி—உள்ளே நடக்கிற காரியத்தை ஆராய்ந்து அறிந்து. உள்ளூர்—ஊரில் வாழ்பவரால். எஞ்ஞான்றும்—எப்போதும். நகப்படுவர்—சிரிக்கப்படுவார்கள். எ—று.*

## கருத்துரை.

கள்ளுண்டு மயங்குவோர் பிறரால் சிரிக்கப்படுவோர்கள் என்பதாம்.

## வெறியனைச் சீர்ப்படுத்துதல் அரிதென்பது.

களித்தானைக்காரணங் காட்டுதல்கீழ்நீர்க்
குளித்தானைத்தீத்துரீ இயற்று. குறள். கூரு: க.

## இதன் பதவுரை.

களித்தானை—கள்ளுண்டு களித்த ஒருவனை. காரணங்காட்டுதல்—(இதுதகாதென்று) காரணங்காட்டி அறிவித்தல். கீழ்நீர்—சலத்தினுள். குளித்தானை—முழுகினவனை. தீ—விளக்கினால். துரீஇயற்று—தேடுகிறதையொக்கும். எ—று.

## கருத்துரை.

கள் குடித்தவனைத் தெளிவிக்கக் கூடாதென்பதாம்.

## வெறியர்க்கு ஓரெச்சரிப்பு.

கள்ளுண்ணாப்போழ்திற் களித்தானைக்காணுங்கா
லுள்ளான்கொலுண்டதன் சோர்வு. குறள். கூரு: ம.

## இதன் பதவுரை.

(குடியன்) கள்—கள்ளை. உண்ணாப்போழ்தில்—(தான்) குடியாதகாலத்தில். களித்தானை—(கள்ளைக்குடித்துக்) களித்தவொருவனை. காணுங்கால்—பார்க்கும்போது. உண்ட—தான் முன் குடித்ததினாலான. தன்—தன்னுடைய. சோர்வு—தளர்ச்சியை. உள்ளான்கொல்—நினையான்போலும். எ—று.

## கருத்துரை.

குடியன் பிறனொருவன் குடித்து மயங்கிக் கிடப்பதைக் கண்டு, நானுமிப்படித்தானிருப்பேனென்று நினைப்பானானால் குடிக்கமாட்டான் என்பதாம்.

## உ—வது. ஓர் பழமொழி.

காகங்கொக்குக் கனகிளியனுமான்
குடியன் குணம்.

### இதன் பதவுரை.

குடியன் — குடியனுடைய. குணம்—குணமானது. காகம்—காக்கையும். கொக்கு—கொக்கும். கன—பெரிய. கிளி—கிளியும். அனுமான்—குரங்கும். (ஆகிய இவைகளினுடைய குணத்தையொக்கும்). எ—று.

### கருத்துரை.

குடியன் குணம் காகமுதலியவற்றின் குணத்தையொக்குமென்பதாம்.

காக்கையானது பிணத்தைத் தான்மாத்திரஞ் சாப்பிடாமல் மற்றக் காகங்களையுங் கூப்பிட்டுக் கொடுத்துச் சாப்பிடும்.

கொக்கானது மீன்களுக்கு மரம்போல காட்டி, சமயங்கிடைத்தபோது மீனைப்பிடித்துச் சாப்பிடும்.

கிளி பயனில்லாமல் பலதரங் கத்தும்.

குரங்கு ஓரிடத்திலிருக்காமல் பயனின்றிப் பலவிடங்களில் அலையும்.

அப்படியே தனக்குணவான கள்ளைத் தான்மாத்திரஞ் சாப்பிடாமல், மற்ற மனிதர்களையும் கூப்பிட்டுக்கொடுத்துச் சாப்பிடுதலும்; மற்ற மனிதர்களுக்குத் தான் கள் குடியாதவன்போலக் காட்டி, சமையத்தில் குடித்தலும்; பயனில்லாமல் பிதற்றுதலும்; வீணாய் இங்குமங்கும் அலைதலும் குடியனுடைய குணமாம்.

## ௩—வது. வெறியினால் உண்டாகும் தீமைகள்.

(க.) அறிவை மயக்கும்.
(உ.) பொருளை யழிக்கும்.
(௩.) கீர்த்தியை நீக்கும்.
(௪.) குடியைக் கவிழ்க்கும்.
(ரு.) உடலை வதைக்கும்.
(௬.) ஆத்துமாவைக் கெடுக்கும்.

*இவ்விதம் இம்மை மறுமை இரண்டையும் நாசப்படுத்தும்.*



EXHORTATIONS.

## *சில புத்திமதிகள்.*

## க—வது. லோக ஆஸ்தி மெய்யான செல்வமென் றெண்ணாதே.

*ஈட்டலுந்துன்பமற் றீட்டியவொண்பொருளைக்*
*காத்தலுமாங்கே கடுந்துன்பங்—காத்தல்*
*குறைபடிற்றுன்பங் கெடிற்றுன்பந்துன்பக்*
*குறைபதிமற்றைப் பொருள்.* நாலடி. உஅ: ம.

*இதன் பதவுரை.*

*ஈட்டலும் — (பொருளைத்) தேடுதலும். துன்பம் — துன்பமாம். ஈட்டிய—தேடிய. ஒண்—ஒள்ளிய. பொருளை—பொருளை. காத் தலும்—காக்குதலும். ஆங்கே—அப்படியே. கடுந்துன்பம்—மிகுந்த*

துன்பமாம். காத்தல் — அவ்வாறு காக்கப்பட்ட பொருள். குறைபடில்—குறைந்தால். துன்பம்—துன்பமாம். கெடில்—கெட்டால். துன்பம் — துன்பமாகையால். மற்றைப்பொருள் — மேற்சொன்ன பொருள். துன்பக்கு — துன்பத்துக்கு. உறைபதி — இருப்பிடமாம். எ—று.

### கருத்துரை.

பொருளானது எப்போதும் துன்பத்துக்குக் காரணமாம்.

## உ—வது. நாசப்பட்டுப் போகாதபடி சாவதானமாயிரு.

கண்கூடாப்பட்டது கேடெனினுங்கீழ்மக்கட்
குண்டோவுணர்ச்சி மற்றில்லாகு—மண்டெரி
தான்வாய்மடுப்பினு மாசுணங்கண்டுயில்வ
பேராபெருமூச் செறிந்து. நீதிநெறிவிளக்கம்: ௬௯.

### இதன் பதவுரை.

மண்டு—நெருங்கின. எரி—நெருப்பு. வாய்மடுப்பினும்—தம்மைச் சூழ்ந்துகொண்டாலும். மாசுணம்—பெரும்பாம்புகள். பேரா—நிலைவிட்டு நீங்காமல். பெருமூச்செறிந்து — பெருமூச்சுவிட்டு. கண்டுயில்வ—நித்திரை செய்கின்றன. (அதுபோல) கேடு—நாசமானது. கண்கூடா—பிரத்தியட்சமாக. பட்டதெனினும் — தோன்றினும். கீழ்மக்கட்கு—தாழ்ந்தவர்களுக்கு. உணர்ச்சி—அறிவு. உண்டோ—உண்டா. இல்லாகும்—இல்லையாம். எ—று.

### கருத்துரை.

தாழ்ந்தவர்களுக்குத் துன்பம் சமீபித்தாலும் அறிவுண்டாகாதென்பதாம்.

## ௩—வது. பயப்படவேண்டியவைகளுக்குப் பயப்படு.

அஞ்சுவதஞ்சாமை பேதைமையஞ்சுவ
தஞ்சலறிவார் தொழில். குறள். ௪௨௮: அ.

### இதன் பதவுரை.

அஞ்சுவது — பயப்படவேண்டியவைகளுக்கு. அஞ்சாமை — பயப்படாமலிருக்கிறது. பேதைமை—அறியாமையாம். அஞ்சுவது—பயப்படவேண்டியவைகளுக்கு. அஞ்சல்—பயப்படுகிறது. அறிவார்—விவேகிகளின். தொழில்—தொழிலாம். எ—று.

### கருத்துரை.

அறிவுடையோர் பயப்படவேண்டியவைகளுக்குப் பயப்படுவார் என்பதாம்.

## ௪—வது. காலதாமதம் பண்ணுதே.

முன்னுறக்காவா திழுக்கியான்றன்பிழை
பின்னூறிரங்கி விடும். குறள். ௫௩௫: ௫.

### இதன் பதவுரை.

முன்னுற — (துன்பம் வருவதற்கு) முன்பாக. காவாது — காக்காமல். இழுக்கியான்—மறந்தவன். பின்—பின்பு. ஊறு—வந்த காலத்தில். தன்—தனது. பிழை — (அம்மறதியாகிய) பிழையை (நினைத்து). இரங்கிவிடும்—விசனப்படுவான். எ—று.

### கருத்துரை.

துன்பம் வருகிறதற்கு முன்னே காக்காமல் மறந்தவன் வந்தபின் அம்மறதியை நினைத்து விசனப்படுவான் என்பதாம்.

பெருங்கடலாடிய சென்றூரொருங்குட
ஞேசையவிந்தபின் ஞடுது—மென்றற்ரு
லிற்செய்குறைவினை நீக்கியறவினை
மற்றறிவாமென்றிருப்பார் மாண்பு.        நாலடி. ௬௪: ௨.

## இதன் பதவுரை.

இல்—சமுசாரத்திற்கு. செய்—செய்யவேண்டிய காரியங்களே. குறைவினை நீக்கி — குறைவில்லாமல் முடித்து. அறவினை — தருமத்தை. மற்றறிவாம்—பின்ஞலே செய்யலாம். என்றிருப்பார்—என்றிருக்கிறவர்களின். மாண்பு—பெருமையானது. பெரும் — பெரிய. கடல்—கடலில். ஆடிய—ஸ்நானஞ் செய்யும்பொருட்டு. சென்ருர் — போனவர்கள். ஒருங்குடன் — ஒருமிக்க. ஓசை— சத்தம். அவிந்தபின் — நீங்கினபின்பு. ஆடுதும்—ஸ்நானஞ்செய்வோம். என்றற்று—என்று காத்திருந்ததையொக்கும். எ-று.

## கருத்துரை.

தருமம் செய்வதில் காலதாமதம் பண்ணலாகாதென்பதாம்.

———»»««———

## SUPERSTITIONS.

## வீண்பத்தியைக் குறித்துச் சொல்லியது.

### க—வது. சோதிடசாஸ்திரம் பொய்யேன்பது.

తనదుమనసుచేతదర్కించిజ్యోతిష
మెంతజేసెననుచదెంచిచూడ
తనయదృష్టమెల్లదైవమునకుదెల్పు
విశ్వదాభిరామవినరవేమ.        வேமனர். ௬: அடு.

### இதன் பதவுரை.

తనమనసుచేత — தன் மனதினாலே. తర్కించి — (சோதிடத்தை) ஆலோசித்து. జ్యోతిషము — சோதிடம். యెంతజేసినను — எவ்வளவு செய்ததென்று சொல்லுவான். అది—அதை. యెంచిచూడ— ஆலோசித்துப் பார்த்தால். తనయదృష్టము—தன் அதிஷ்டம். యెల్ల— எல்லாம். దైవమునకు—தேவனுக்கு. తెల్పు—தெரியும். విశ్వదాభిరామ—ஆண்டவருக்குப் பிரியமான. వేమ—ஓ வேமனரே. వినర— கேள். எ—று.

### கருத்துரை.

சோதிடத்தை எவ்வளவு ஆலோசித்துப் பார்த்தாலும் அதினாலே பிரயோசனமில்லை. நம்முடைய அதிஷ்டம் தேவனுக்கே தெரியும் என்பதாம்.

### திஷ்டாந்தங்கள்.

(க.) இராசாவுக்கு இரண்டு வருஷத்திலும் எனக்கு இருபது வருஷத்திலும் ஆயுள் முடியுமென்று இராசாவை நோக்கி ஒரு சோதிடசாஸ்திரி சொன்னான். சொன்னவுடனே மந்திரி சோதிடசாஸ்திரியின் தலையை அறுத்துத் தள்ளிவிட்டான்.

(உ.) இராசாத்தி ஒரு புத்திரனைப் பிரசவிப்பாரென்று இராசாவை நோக்கிச் சொல்லிய ஒரு சோதிடசாஸ்திரி இரகசியத்தில் இராசாத்தியைக் கண்டு, புத்திரி பிறக்குமென்று சொல்லிவைத்தான். புத்திரியே பிறந்தது. ஆகையால் இராசாவுக்குக் கோபம் மூண்டது. அப்பொழுது சோதிடசாஸ்திரி "இராசாவுக்கு நான் உண்மையைச் சொல்லப் பயந்தேன். இராசாத்தியைத் தாங்கள் கேட்டுப்பார்க்கலாம். அவருக்கு அதை நான் இரகசியமாய்ச் சொல்லிவைத்தேன்" என்றான். இப்படியே சோதிடர் சனங்களை ஏமாற்றுகிறார்கள்.

## உ—வது. நிமித்தம் பார்க்கிறது வீணேன்பது.

கதாமஞ்சரி, எச-ம் கதை.

விடியற்காலத்தில் தூங்கி எழுந்திருக்கும்போது முன்னே சோடு காக்காய்களைப் பார்த்தவனுக்கு அன்றைக்கு நல்ல இலாபம் உண்டாகுமென்று ஒருவன் கேள்விப்பட்டான். பிறகு அவன் தன் வேலைக்காரனை அழைத்து, அடா நீ விடியற்காலத்தில் சோடு காக்காய்களைப் பார்த்துவந்து என்னை எழுப்பு என்றான். வேலைக்காரன் அப்படியே சோடு காகங் களிருக்கப் பார்த்துவந்து, எசமானனை எழுப்பினான். எசமா னன் எழுந்துபோய்ப் பார்க்கும்போது ஒரு காகம் ஓடிப் போய்விட மற்றொரு காகம் மாத்திரமிருந்தது. அப்போது எ சமானன் ஒன்று போகிறதற்கு முன்னேதானே என்னை எழுப் பாமல் போனாய் என்று கோபித்துக்கொண்டு, வேலைக்காரனை அடித்து உதைத்தான். அப்போது வேலைக்காரன்: ஐயா, இரண்டு காகத்தையும் பார்த்த எனக்கு வந்த லாபத்தை இதோ நீர் பார்க்கவில்லையா? என்றான். அது கேட்டு, எச மானன் வெட்கப்பட்டான்.



## WHY DO CHRISTIANS ATTEMPT IMPOSSIBILITIES.

## நல்லகாரியம் முடியாதென்று தோன்றினும், பெரியோர் முயற்சி செய்வார்கள்.



உறுதிபயப்ப கடைபோகாவேனும்
இறுவரை காறுமுயல்ப—விறுமுயிர்க்கும்
ஆயுண்மருந்தொழுக்க றீதன்றாலல்லனபோல்
ஆவனவுமுண்டு சில. நீதிநெறிவிளக்கம்: சக.

## இதன் பதவுரை.

இறுமுயிர்க்கும் — சாகுமுயிர்களுக்கும். ஆயுள் — வாழ்நாளைக் (கொடுக்கிற). மருந்து — மருந்தை. ஒழுக்கல் — கொடுத்தல். தீதன்று — குற்றமல்ல. (ஏனெனின்) அல்லனபோல்—முடியாதவைகளைப்போலத் (தோன்றி). ஆவனவும்—முடிகிறவைகளுமான. சில—சிலகாரியங்கள். உண்டு—உண்டாகையால். உறுதி—நன்மை. பயப்ப — கொடுக்க. கடைபோகாவேனும் — முடியாதானாலும். இறுவரைகாறும் — முடியும்வரைக்கும். முயல்ப — (பெரியோர்) முயற்சி செய்வார்கள். எ—று.

## கருத்துரை.

முடியாததானாலும் பெரியோர் இடைவிடாமல் முயற்சி செய்வார் என்பதாம்.

